# சிவானந்த திக்விஜயம்




திவ்ய ஜீவன சங்கம்
ஆனந்தகுடீரம்

# சிவானந்த திக் விஜயம்

## (அகில இந்திய-இலங்கை யாத்திரை வரலாறு)

★

தொகுத்தவர்கள் :—

ஸ்வாமி ஸதானந்தா
ஸ்வாமி ஸச்சிதானந்தா
ஸ்வாமி ராமானந்தா
ஸ்ரீ மு. ஸ்ரீனிவாசன், B. A.



சிவானந்தா பதிப்புக் கழகம்
ஆனந்த குடீரம், ரிஷிகேசம்
இமயமலை
1951



SRI SWAMI SIVANANDA
"ANANDA KUTIR"
HIMALAYAS

ஓம்

சுவாமிஜியின் அகில இந்திய யாத்திரையில் எல்லையற்ற
பக்தியுடனும் அளவிடற்கரிய அன்புடனும்
அன்னாரை வரவேற்று உபசரித்த
பொது மக்களுக்கு இந்நூல்
சமர்ப்பணமாகிறது

ஓம்

# பதிப்புரை

ஸ்ரீ சுவாமி சிவானந்தஜியின் தென் இந்தியா-கொழும்பு சுற்றுப்பிரயாணத்தின் விவரத்தைப்பற்றி பத்திரிகைகளில் வெளியாகி இருக்கும் வரலாறுகளைத் தவிர, அவரது விஜயத்தின் தொடர்ச்சியான வரலாறு ஒன்றும் இப்புத்தகத்தில் தரப்பட்டிருக்கிறது. இச்சுற்றுப்பிரயாணத்திற்குப் பதிப்பு ஆசிரியர்கள் கொடுத்திருக்கும் "திக் விஜயம்" என்ற பெயரே மிகப் பொருத்தமானது என்பதைச் சொல்லத் தேவை இல்லை. பல இடங்களிலும் சுவாமிஜிகளுக்குத் தமிழில் அளிக்கப்பட்ட வரவேற்புகளையும் பாட்டுக்களையும் இதில் காணலாம். ஆங்கிலத்தில் அமைந்துள்ள வரவேற்புகளும் பாட்டுக்களும் இதனிலும் விரிவான விவரங்களோடும் வெளியாகியிருக்கும் ஆங்கிலப் புத்தகத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அதில் யாத்திரையைப் பற்றிய வரலாறுகளும் ஸ்ரீ சுவாமிஜி ஆங்காங்கு நிகழ்த்திய பிரசங்கங்களும் செவ்விய முறையில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஒரு சரித்திர காலவரை என்று சொல்லும்படி முக்கியத்வம் அமைந்த சுவாமிஜியினுடைய யாத்திரையைப் பற்றி தமிழர்களுக்குச் சிறிதேனும் தெரியப்படுத்த வேண்டும் என்ற நோக்கமே இப்புத்தகம் வெளிவருவதற்குக் காரணம்.

ஸ்ரீ சுவாமிஜியின் விஜயத்தைப்பற்றிய வரலாறுகளைத் தொகுத்த ஸ்ரீ சுவாமி சதானந்தஜிக்கும் பத்திரிகைகளில் வெளியாகியிருக்கும் வரலாறுகளை ஒரு கோர்வையாக இணைத்து இப்புத்தகத்தைப் பிரசுரித்த ஸ்ரீ சுவாமி சச்சிதானந்தஜிக்கும், ஸ்ரீ ஸ்ரீனிவாஸனுக்கும் வெகு அழகாக முன்னுரை எழுதிய ஸ்ரீ சுவாமி ராமானந்தஜிக்கும் நமது நன்றி உரித்தாகுக.

ஆனந்தகுடீரம்
18—3—51

பதிப்பாளர்
சிவானந்தா பதிப்புக்கழகம்.

அண்ணாமலை நகர்

சுவாமி சிவானந்தா அவர்களின் விஜயத்தின்போது
அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து பட்டமளிப்பு
மண்டபத்தில் பாடிய இசைப்பாடல்

| | |
|---|---|
| இயல் | இசை |
| யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் | V. S. கோமதி சங்கர ஐயர் |
| பாண்டிச்சேரி | வீணை விரிவுரையாளர் |

இராகம்-காபி 22வது மேளத்தில

ஆ ரோ-சா, ரீ ம ப நீ ா சா

தாளம்-ஆதி ஜன்யம்

அவ-ச நி த நி ப ம க ரி ச நீ சா

சுத்த சச்சி தானந்தசு
சுயம் ப்ரகாச ஜோதி ஓம்
சத்திய ஸ்வரூப ஓமஸத—குருநாதா

புத்தி மீதமர்ந்தென ஆதம
போத மோங்கத் தூண்டுவாய்
உத்தமரின் உள்ளமான—பரமாத்மா

பக்தி ஞான கர்ம யோகப்
பாதை செல்லும் சாதகர்
கதி சேரச்சக்தி நல்கும—உமைநாதா

அத்தனே உன் அன்பிலென
அகங்கரை நருகியுன
பித்தனாக வேண்டுகின்றேன்—அடியேனே

சித்த மின்னும் வட்ட மிட்டுச
சீரழித்திடாமலுன்
பத்மபாதம பற்றி நிற்கும்—பதமீவாய்

கைத்தலக் கனியெனக
கருத்தினுன்னைக காணவே
மெய்த்திரு வழிதுலக்கி—யெனையாளாய்

பத்துபபேய்கள் வாழும் வெய்ய
பாசக்காட்டில் ஞானத்தீ
வைத்தெரித்துன் வாய்மையாகும்—வரந்தாராய்

இத்தலததுள யோக லீலை
எங்குமின்பந் தாண்டியே
நித்த நித்த மோங்கவருள்—பெருமானே,

—o—

# இப்புத்தகாசிரியர்களுடன்



ஸ்ரீ மு. சீனிவாஸன், B.A. ஸ்ரீ ஸ்வாமி சிவானந்தா ஸ்ரீ ஸ்வாமி ராமானந்தா

# முகவுரை

ஆத்மஞானத்தின் மகிமைக்கு ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் அகில இந்திய சுற்றுப் பிரயாணமே அத்தாக்ஷி. உலகத்தில் மனிதன் அடையும் வெற்றிகளுக்குள் ஆத்மஞானமே தலை சிறந்தது என்ற உண்மையை இந்த இருமாத சுற்றுப்பிரயாண காலத்தில் ஒவ்வொரு நிமிஷமும் நடந்த ஒவ்வொரு நிகழ்ச்சியும் ஊர்ஜிதப்படுத்துகிறது.

இத்தகைய பிரயாணம் ஒன்றை சரிவர முடிக்கும் விஷயத்தில் சிலர் சந்தேகமாகவே இருந்தனர். இது நடக்காது என்றே இவர்கள் எண்ணி இருந்தனர். இன்னும் சிலர் "இந்த உடம்பை வைத்துக்கொண்டு சுவாமிஜி எவ்வாறு போகமுடியும், இந்தக் கஷ்டத்தைத் தாங்க அவருக்குப் போதிய பலம் இல்லையே. ஒரே நாள் இரவில் இவர் இந்த சித்தியை எவ்வாறு அடைய முடியும்" என்று கவலைப் பட்டனர். யாத்திரை ஆரம்பமாவதற்கு சில மாதங்கள் முன்னர் சுவாமிஜியைப் பார்த்திருந்தவர்கள் "நாடு முழுதும் ஆவலோடு காத்திருக்கும் மக்களுக்கு சுவாமிஜி தரிசனம் அளித்தாலே போதுமானது; உபன்யாசங்களை அவர்கள் சிஷ்யர்கள் பண்ணிக்கொள்ளட்டும்" என்று அபிப்பிராயப்பட்டனர்.

இத்தகைய பயங்கள் எல்லாம் ஆதாரமற்றவை என்பதை சுவாமிஜி நிரூபித்துவிட்டார். அனைவரும் ஆச்சரியம் அடையும் அளவுக்கு சூக்ஷ்மமாக இருந்த தன்னுடைய சக்தியை சுவாமிஜி புலப்படுத்தினார். உற்சாகத்தையும் ஊக்கத்தையும் பூஷணமாகக் கொண்ட சுவாமிஜிக்குக் களைப்பு ஏது? களைப்பை அடைந்தவர்கள் சுவாமிஜியின்

தரிசனத்திற்காக வந்தவர்களே. சுவாமிஜியின் உபன்னி யாசங்கள் ஒவ்வொன்றும் வெகு உருக்கமாக இருந்ததால இவர்களுக்கு ஒரு உபன்னியாசத்தையும் தவறவிட மனம இல்லை. ஆகையால இவர்கள் சுவாமிஜியைப் பின் தொடாந்தே சென்றனா. எனினும் சுவாமிஜியின் உற்சாக ஊற்றுக குன்றவே இல்லை. கோசுவாமி கணேச தத்ஜி போன்ற தீவிர ஆத்மீக உபன்னியாச கர்த்தாக்களே சுவாமி ஜியின் ஊக்கத்தையும் சக்தியையும் கண்டு ஆச்சரியப்பட் டார்கள் என்றால் வேறு யாாதான் ஆச்சரியப்படமாட்டார் கள். உபன்னியாசம் செய்யும்பொழுது, சுவாமிஜி, தொணடை கட்டியதையும் பொருட்படுத்தாமல், தன்னையே மறந்து, இடிமுழக்கம்போல முழக்கினர். இவருடைய தொண்டை கட்டிய நிலையையும் களைப்பையும் கண்டு உபன்னியாசத்திற்கு ஏற்பாடு செய்தவர்களும், சுவாமிஜி யைச் சுற்றி கூடியிருந்தவர்களும கவலையால் பீடிக்கப்பட்டு பீதியை அடைநதார்கள். ஆனால் சுவாமிகருக் கவலை சிறி தேனும இல்லை. ஆண்டவனை தரிசித்த ஞானிக்கு எது தான முடியாத காரியம்! அவருடைய அசைக்கமுடியாத மன உறுதிக்கு முன் நிற்கக்கூடியது எது? அவருடைய தேகமும் இந்திரியங்களும் அவருக்கு அடிமைகளே. இக் களைபபின் ஒரு சிறு துளியை வேறு யாராவது அனுபவித் திருப்பாராகில் அவர் குறைநதது இருவாரங்கள் படுக்கை யோடு படுக்கையாய் கிடந்திருப்பார். சுவாமிஜியினுடைய இந்த மன உறுதியையுப், யாவரும் அதிசயிக்கும்படியான பொறுமையையும் என்னென்று உரைபபது! இநத சக்தியை அளிப்பது ஆத்மஞானமே. இநத ஆத்மஞானம் அல்லவா நம்மை ஆண்டவனிடம் கொண்டு சேர்க்கிறது. இதைத்தான் சுவாமிஜி அடிக்கடி வற்புறுத்துகின்றார்.

ஒவ்வொரு இடத்திலும் தகிக்கும் வெயிலையும், கொட்டும் மழையையும் பொருட்படுத்தாது, ஜனங்கள் லக்ஷக் கணக்கில் சுவாமிஜியின் தரிசனத்திற்காக ஆவலுடன் கூடி இருந்தனர். ஆவலும் உற்சாகமும் இருக்குமிடத்தில் வெயிலும் மழையும் என்ன செய்யும்? சுவாமிஜியின் ஆகர்ஷண சக்தி லக்ஷக்கணக்கானவர்களை அவர் பக்கம் இழுத்தது. இவ்வாறு இழுக்கப் பட்டவர்களில் அநேகர் பக்தர்கள், அநேகர் ஈஸ்வர நம்பிக்கை இல்லாதவர்கள், அநேகர் பணக்காரர்கள், அநேகர் குடியானவர்கள், அநேகர் ஏழைவர்கள், அநேகர் ஸ்திரீகள், அநேகர் வெவ்வேறு மதத்தினர்கள், அநேகர் வெவ்வேறு அரசியல் கக்ஷிகளைச் சேர்ந்தவர்கள். மதத்தைப்பற்றி பேசினால் பேசினவர்களை விரட்டி அடிக்கும் மனப்பான்மை யுடையவர்களே, சுவாமிஜியைக் கண்டதும், பெட்டிக்குள் அடங்கிய பாம்பைப் போல் அமைதியாக இருந்து, சுவாமிஜி கூறியதை நன்றாக மனதில் கொண்டு, தங்களையும் மறந்து, சுவாமிஜியின் கீர்த்தனத்தில் லயித்துவிட்டார்கள் என்றால் சுவாமிஜியின் சக்தியை என்னென்று உரைப்பது! அரசியல் தலைவர்களையும் தேசியப் போர் வீரர்களையும் அலக்ஷியம் செய்யக்கூடியவர்கள் சுவாமிஜிக்கு அன்பார்ந்த வரவேற்பு அளித்தார்கள் என்றால் சுவாமிஜியின் சக்தியை விரித்துரைக்கவேண்டிய அவசியம் இல்லை அல்லவா!

கூடி இருந்தவர்களில் வெகு சிலரைத் தவிர லக்ஷக் கணக்கானவர்கள் சுவாமிஜியை ஒருதடவைகூட தரிசித்தது கிடையாது. இவர்களுக்கு சுவாமிஜி கருணாமூர்த்தி என்றோ, அன்புக்களஞ்சியம் என்றோ, உலகமக்களைக் கைதூக்கி விட வந்த அவதார புருஷர் என்றோ தெரியாது.

அப்படியிருநதும் ஒருதடவையாவது தரிசிக்கவேண்டும என்ற ஆவல் அவர்களுக்கு ஏற்படுவானேன்? இதைத் தூண்டும சக்திதான் என்ன?

சுவாமிஜியின் கட்டுரைகள், புத்தகஙகள் முதலியவைகளைப் படித்து அதனால் இவர்கள் இழுக்கப்பட்டார்களா? ஆம, ஓரளவுக்கு இது உண்மைதான். சுவாமிஜியின துணடுப் பிரசுரஙகள் இநதியாவில் ஒவ்வொரு மூலையும் ஊடுருவிச் சென்றிருக்கின்றன. உலகம முழுவதிலும் சுவாமிஜியினுடைய புத்தகங்கள் பரவி இருககின்றன. இவவாறு பரவியிருந்தும் இதனால் பயன்பட்டவர்கள வெகு சிலரே. ஏனெனில் கூடியிருநதவர்களுள வெகு சிலரைத தவிர பெருமபாலோர் அதிகப் படிப்பு இல்லாதவர்களே.

மேலும் புஸ்தகஙகளைப் படித்த வெகு சிலரும அங்கு கூடுவானேன்? இவர்கள் புஸ்தகஙகளை எழுதிய ஆசிரியரை ஒரு முறை பார்த்துவிட்டுப் போகலாம என்ற நோககத்துடன் அங்கு கூடியிருநதார்கள். உளநோககத்துடன வநதிருப்பதாக வைததுக்கொண்டாலும இவாகள் தாஙகள வாசித்த புஸ்தகங்களின எலலா ஆசிரியர்களையும பார்ப்பதற்காகக் கச்சை கட்டிககொண்டு புறப்படுவார்களா? புறபபடமாட்டாாகள்; இவாகள் நோக்கம இது அல்ல. பின், அங்கு கூடிய காரணம் யாது?

அங்கு கூடியிருந்த அநேகருக்கு சுவாமிஜியின் நாமமகூடத தெரியாது. சுவாமிஜியைப் பார்த்ததும் கிடையாது அவரைப்பற்றிக் கேள்விப்பட்டதும் கிடையாது. என்ன அதிசயம்! எந்த சக்தி இவர்களை இழுத்ததோ

ஆத்ம ஞானத்தின் சக்தியே இவர்களை சுவாமிஜியின் பால் இழுத்தது. இதுவே சுவாமிஜியின் முன்பு இவர்களைத் தலைவணங்கச் செய்தது. சுவாமிஜியின் ஒவ்வொரு உபன்னியாசங்களிலும், சுவாமிஜி பாடிய ஒவ்வொரு பாட்டிலும் இந்த ஆத்மஞானம் ஒலித்தது. இவர்களை அங்கு இழுத்த சக்தியும், இவர்களைக் கொள்ளை கொண்டதும், இவர்களைத் தாலாட்டி பேரின்ப சாகரத்தில் மூழ்க வைத்ததும், ஞானிக்கு முன், அடக்கம் ஒடுக்கமாக இருக்கும்படி செய்ததும் சுவாமிஜியின் ஆத்மஞானத்தின் மகிமையே. கூட்டத்தின் நெருக்கடி சொல்லத்தரமன்று. இத்தகைய நெருக்கடியில் அவதிப்படும்பொழுதும், இவர்கள் எல்லையற்ற ஆனந்தத்தை அடைந்ததும் சுவாமிஜியின் ஆத்ம ஞானத்தின் மகிமையே. சுவாமிஜி அவர்களுக்கு உலக வாழ்க்கையின் நிலையற்ற தன்மையையும், அது ஈஸ்வரன் பால் கொண்டு செல்லாது என்றதையும் எடுத்துக்கூறி அதற்கு திருஷ்டாந்தமாக இவர்கள் ஒரு முதலையின்மீது உட்கார்ந்திருப்பதைத் தெரிந்து கொள்ளாமல், ஒரு மரக்கட்டையின்மீது உட்கார்ந்திருப்பதாக எண்ணி மோசம் போகிறார்கள் என்றும், உலக வாழ்க்கையின் பயனற்ற தன்மையை அறிந்து, ஈஸ்வரன்பால் செல்ல வழி தேட வேண்டுமென்றும் வற்புறுத்திக் கூறியபொழுது, இவர்கள் அடைந்த சாந்திக்கும் சுவாமிஜியின் ஆத்ம ஞானத்தின் மகிமையேதான் காரணம். இவ்வுபதேசம் இவர்களைச் சற்றுத் தாக்கியது. எனினும் இவர்கள் சந்தோஷத்தையே அடைந்தார்கள். ஏனெனில் சுவாமிஜியிடமிருந்து இவர்களுக்குக் கிட்டிய ஔஷதம் சற்று கசப்புள்ளது எனினும் வியாதி நிவர்த்திக்கு ஹேதுவாகும் என்பதை இவர்கள் அறிவார்கள்.

சுவாமிஜி ஒவ்வொரு ஜில்லாவுக்கும் ஒவ்வொரு நகரத்திற்கும் விஜயம் செய்யவில்லை. எனினும் ஒவ்வொரு ஜில்லாவும் ஒவ்வொரு நகரமும் அவரிடம் வந்தன! கள்ளிக்கோட்டையைச் சேர்ந்தவர்கள் சுவாமிஜியைச் சென்னைப் பட்டணத்தில் பார்த்தார்கள். மங்களூரிலிருந்து வந்திருந்த பக்தர்கள் சுவாமிஜியை பங்களூரில் சந்தித்தார்கள். தூத்துக்குடியிலிருந்து மோட்டார்கார்களில் வந்திருந்த சாதகர்கள் விருதுநகரில் சுவாமிஜியை தரிசித்தார்கள். கோலாரில் அந்த ஜில்லாவாசிகள் அனைவரும் கூடி இருந்தனர். அமலசாத்திற்கு சுவாமிஜி விஜயம் செய்வதற்கு அநேக நாட்கள் முன்பே இருந்து எல்லா பக்கங்களிலிருந்தும் அமல்சாத்திற்கு வரும் ரயில்வண்டிகள் சுவாமிஜியின் பக்தர்களைக் கொண்டுவந்தவண்ணமாகவே இருந்தன. சுவாமிஜியை ஒருதரம் தரிசித்தவர்களும் சுவாமிஜியைப் பற்றி ஒரு தடவையே கேட்டுள்ளவர்களும், சுவாமிஜியின் பாதங்களை ஒரு தடவை ஸ்பரிசித்தவர்களும், ஒருதடவையுடன் திருப்தியடையாமல், இந்தத் தெவிட்டாத அமிர்தத்தை அநேக தடவைகள் பருகவேண்டும் என்ற நினைப்புடன் அநேகமுறை சுவாமிஜியின் பாதங்களை ஸ்பரிசிக்க விரும்பினர். இந் நோக்கத்துடனே, இவர்கள் சுவாமிஜி சென்ற இடங்களிலெல்லாம் சுவாமிஜியைப் பின் தொடர்ந்தே சென்றனர். சிலர் ரிஷிகேசம் வரையும் சென்றார்கள். யாவரிடமும் அன்பு செலுத்தும் ஆத்மத்துவம் இவரிடம் இருப்பதைக் கண்டார்கள். மனித உள்ளங்கள் "அனைத்திலும் விளங்குவது ஒரே ஆத்மா; தன்னுடைய உள்ளத்தில் இருக்கும் ஆத்மாவே யாவருடைய உள்ளங்களிலும் இருப்பது என்ற தன் உபதேசத்தை சுவாமிஜி நிரூபித்துக் காட்டிவிட்டார்.

இந்த ஆத்மஞானமே ஆங்காங்கு கூடி இருந்தவர்களை ஸ்தம்பிக்கச் செய்தது. இவர்களின் உலகவாழ்க்கைத் தன்மையை அறவே ஒழித்தது இவர்கள் இதய குகையில் ஞான விளக்கை ஏற்றும்படி செய்ததும் 'இந்த ஆத்ம ஞானமே. ஆயிரக்கணக்காகக் கூடியவர்களையும் தன்னையும் சுவாமிஜி, சமமாகவே பாவித்துக்கொண்டார். தான் வேறு இவர்கள் வேறு என்று சுவாமிஜி கருதவில்லை. இதை சுவாமிஜி அடிக்கடி வெளிப்படையாக வற்புறுத்தினர். 'ஓ'ங்காரத் தொனியுடன் உபன்னியாசங்களை ஆரம்பித்த பொழுது, எல்லா வேற்றுமைகளும் மறைந்தன. இவர்களும் தாங்கள் வேறு, சுவாமிஜி வேறு என்று கருதவில்லை. இவர்களுடைய கண்கள் சுவாமியைத் தரிசித்தவண்ண மாகவே இருந்தன. இவர்களுடைய காதுகள் உபன்னியாசங்களைக் கேட்டவண்ணமாகவே இருந்தன. இவ்வாறு இவர்கள் திகட்டாத அமிர்தத்தைப் பருகியவண்ணமாகவே இருந்தனர். இவர்கள், தங்களை மறந்து ஹிருதயத்தைத் திறந்து காட்டினார்கள். சுவாமிஜியினுடைய ஹிருதயத்தி லிருந்து வரும் வார்த்தைகள்—அந்தராத்மாவிடமிருந்து வரும் வார்த்தைகள்—இவர்களுடைய ஹிருதயத்தில் பாய்ந்தன. சுவாமிஜியின் வெண்ணெய்போன்று உருகும் ஹிரு தயம் அன்பு மேலிட்டால உருகிற்று. உருகி ஓடும் அன்புப் பிரவாகத்தைப் பருக ஒவ்வொரு ஹிருதயமும் தயாராகக் காத்துக்கொண்டே இருந்தது. இவ்வாறு ஞானம் சுவாமிஜியின் ஹிருதயத்திலிருந்து பக்தர்களுடைய ஹிரு தயங்களுக்குச் சென்றது. இதுவும் சுவாமிஜியின் ஆத்ம ஞானத்தின் மகிமையே தன் ஹிருதய குகையில ஆத்மாவைத் தரிசித்தவன் யாவர் உள்ளத்திலும் உள்ள ஆத்மா

வாக ஆகிவிடுகிறான். இவ்விஷயம் சுவாமிஜியின் இருமாத சுற்றுப்பிரயாண காலத்தில் ஒவ்வொரு நிமிஷத்திலும் நிரூபிக்கப்பட்டது.

இப்புததகத்தில் இந்த அற்புத சக்தியைப் பறறி அநேக விவரங்கள் தரப்பட்டிருக்கின்றன ஆங்கிலத்தில் வெளியிடப்படும் "சிவானநதரின் உபன்னியாசங்கள்—அகில இந்திய சுற்றுப்பிரயாணம்" என்ற புத்தகத்தில் இதை இன்னும் விரிவாகக் காணலாம் இவ்விரு புத்தகங்களும ஒரே காலத்தில் வெளியாகின்றன. இதைக்காட்டிலும் விரிவாகத் தெரிந்துகொள்ள வேண்டுமானல், பாரத பூமியிலுள்ள லக்ஷக்கணக்கான மக்களின் ஹிருதயங்களையும் இலங்கையிலுள்ள லக்ஷக்கணக்கான மக்களின் ஹிருதயங்களையும் திறந்து பாருங்கள். இவர்கள் உள்ளத்தில் சுவாமிஜியின் அற்புத சக்தி, ஆணித்தரம்போல் பதிந்து கிடக்கிறது. இவர்கள் உள்ளத்தில் சுவாமிஜி குடிகொண்டுள்ளார். இக் கோயில்களிலிருந்து தான் சுவாமிஜி பிரகாசிக்கின்ருர். இங்கிருந்துதான் மனிதனை ஆதமீகத துறையில் கைதூக்கி விடுகின்ருர். இங்கிருந்துதான் இவனுக்கு மோக்ஷத்திற்கு வழிகாட்டுகிருர்.

ஜூன் 1951
ஆனந்தகுடீர்
ஹிமாலயம்

சுவாமி ராமானநதா.

# பரமானந்தா

ஈஸ்வரனே குருவாக வந்து நம்மை ஆட்கொள்ளுகிறார். இதை நன்கு அறிந்தவர் கர்மயோகி சுவாமி பரமானந்தா.

குருவே இவருடைய உயிரும் உடலும். குருவுக்காக இவர் தன்னுடைய உயிரையும அர்ப்பணம் செய்துவிடுவார். குரு சிறிதும் கஷ்டப்பட சகிக்கமாட்டார். குருவுக்குப் பணிவிடை செய்வதில் எல்லையற்ற ஆனந்தம். குரு சேவைக்காகக் குதித்துக்கொண்டு ஓடிவருவார் நாள் முழுதும் குரு சேவையில் ஈடுபட்ட வண்ணமாகவே இருப்பார். கஷடமான வேலை என்பதே இவருக்குக் கிடையாது குருவுக்காகச் சஞ்சீவி மலையையும் கொண்டுவநது விடுவார். இவர் ஒரு "சக்தி ஹற்றே" இவருக்கு மோக்ஷம்கூடத் தேவைஇல்லை. குரு சேவைதான் வேண்டும். குரு சேவையில் ஈடுபடும் மற்லவர்களுக்கும் இவர் அன்புடன் பணிசெய்வார். அவர்களைக் கோயிலில் வைத்தும் கும்பிடுவார்.

இவருக்குச் சேவையே ஆராதனை. பலனை எதிர்பாராமல், ஊக்கத்துடனும், உற்சாகத்துடனும் வேலையில் மூழ்கிக் கிடப்பார். பசி தாகம் இவரைப் பாதிக்காது. சேவையே இவரது பசியை ஆற்றிவிடும். இவரே உண்மையான கர்மயோகி.

இவர், படிப்பு முடிந்து, ரயில்வேயில் வேலை செய்து வந்தார். அன்புப் பணிசெய்து மக்களின் உள்ளத்தையும் கவர்ந்தார்.

சென்னைப்பட்டணத்தில் தங்கியிருக்கையில் ஆனந்த குடீர் ஸ்ரீ சுவாமி சிவானந்தஜியைப்பற்றி கேள்விப்பட்டார்.

ஒருநாள் கனிமரா புஸ்தகசாலையில் சிவானந்தஜி எழுதிய "Practice of Yoga Vol I" புஸ்தகத்தை வாசித்தார். புஸ்தகத்தை வாசித்து முடித்தார். மனமும் சிவானந்தஜியிடம் சென்றது. சிவானந்தஜியும் இவரைக் கவர்ந்தார். சுயநலமற்ற சேவையிலேயே மூழ்கியிருக்க வேண்டும் என்னும் தாகம அதிகரிக்கவே, எநதச்செனறால் இத் தாகத்தைத தணித்துக்கொள்ளலாம் என்று தீவிரமாக ஆலோசனைசெய்ய ஆரம்பித்தார். கடைசியில் ஞானிகளுக்குத் தொண்டு செய்வதுதான் உண்மையான சுயநலமற்ற சேவை என்பதை உணர்நது, வீட்டைவிட்டு வெளியேறி, தான் நாடிய குருவைத் தேடி அலைநதார்.

1931-ல் ஸ்ரீ சுவாமி சிவானந்தஜி சுவர்காஸ்ரமத்தில் இருந்த சமயத்தில் பரமானந்தஜி சுவாமிஜியை வநது அடைந்தார். குருவை வநது அடைந்ததுமே, சிடன் பய பக்தியுடன் குருவுக்குச சேவைசெய்வதில் ஈடுபட்டான். தன்னையும குருவுக்கு அர்ப்பணமாகச் செய்து கொண்டான். அன்றே ஒரு பிரதிக்ஞையையும செய்துகொண்டான். "ஆண்டவன் என்று ஒருவர் இருபபாரேயாகில் இவரே அது. இவா பூஜிக்கத் தகுந்தவர். இவருக்கு மனமாரச சேவை செய்வேன்." 'சிவா'வுக்குச் சேவை செய்வதே என்னுடைய சாதனம்." இப்பிரதிக்ஞையை நிறைவேற்றியே விட்டார்.

இவா ஒரு உண்மையான கர்மயோகி என்பதை அறிந்து ஸ்ரீ சிவானநதஜி இவருக்கு உடனே சன்னியாசத்தைக் கொடுத்து ஸ்ரீ சுவாமி பரமானந்தா என்ற பெயரையும் கொடுத்தார். அன்று முதல், பரமானந்தா, குருவுக்கு ஆத்மீகத்துறையில் அரிய தொண்டாற்றி, குருவினுடைய

கீர்த்தி உலக முழுவதிலும் பாயும்படிச் செய்து ஒரு ஆசிரமத்தையும் தெய்வநெறி கழகத்தையும் ஏற்படுத்துவதில் சுவாமிஜிக்கு உதவிபுரிந்தார்.

இவர்தான் தெய்வநெறி கழகத்தின் முதல் பொதுக் காரியதரிசி. 1936 லிருந்து 1942 வரையில் இந்த ஸ்தானத்தை வகித்தார். இன்று இக்கழகம் பிரசித்தி பெற்று இருப்பதற்கு இவருடைய தீவிரமான உழைப்புதான் காரணம்.

சுவாமிஜியின் முதல் வாழ்க்கைச் சரித்திரத்தை எழுதியவர் இவரே.

சிவானந்தா பதிப்பக காரியாலயம், சாதனாவாரம் முதலியவைகளையும் ஆரம்பித்து வைத்தவர் இவரே.

சுவாமிஜியைப் பற்றிய சினிமாப்படங்களை முதல் முதலாக இவர்தான் எடுத்தார்.

சுவாமிஜியின் கீர்த்தனங்களும் உபன்யாசங்களும் கிராமபோன் ரிகார்டுகளில் எடுக்கப்பட்டிருப்பதற்கும் இவர்தான் காரணம். ஸ்ரீ சுவாமி சிவானந்தஜியின் வைரவிழா கொண்டாட்டத்தையும் இவர்தான் வெற்றிகரமாக முடித்துவைத்தார்.

சுவாமிஜியின் அகில இந்திய சுற்றுப் பிரயாணத்தை வெற்றிகரமாக முடித்துவைத்ததும் இவர்தான். எட்டு மாதங்கள் இவர் யாத்திரை நினைப்பாகவே இருந்து, இராப்பகலாக யாத்திரைக்காக உழைத்தார். இவ்வுழைப்புதான் வெற்றிக்குக் காரணம். லக்ஷக்கணக்கான மக்களுக்கு சுவாமிஜியின் தரிசனம் கிட்டியதும் இவருடைய உழைப்பின் பயனே

சுவாமிஜியின் அந்தராத்மாவிடமிருந்து வந்த வார்த்தையே பரமானந்தஜிக்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அளித்து இப்பெரிய காரியத்தைச் செய்து முடிக்கச் சக்தியையும் அளித்தது.

யாத்திரையில் சுவாமிஜிக்குச் சிறிது அசௌகரியம் கூட இல்லாமல் அவரை நன்கு கவனித்தது பரமானந்த ஜியே. இக்காரியத்தை பரமானந்தஜி செய்ததுபோல வேறு ஒருவராலும் செய்திருக்க முடியாது. ஒரு பக்கத்தில் சுவாமிஜியின் தரிசனத்திற்காக ஜனங்கள் சூழ்ந்து விடுவார்கள். கூட்டத்தை விலக்கி சுவாமிஜிக்கு ஒரு ஹானியும் நேராதபடி பார்த்துக்கொள்ளவேண்டும். மற்றொரு பக்கத்தில் ஆங்காங்கு சுவாமிஜியின் உபன்னியாசத்திற்கு ஏற்பாடு செய்பவர்கள் இவரிடம் ஆலோசனை கேட்பதற்காகக் காத்து இருப்பார்கள். அவர்களுக்கும் ஆலோசனை அளிக்கவேண்டும். இன்னொரு பக்கத்தில் பதில் எழுத வேண்டிய கடிதங்கள் கவனத்தை இழுத்தவண்ணமாகவே இருக்கும். இக் கடிதங்களுக்கு உடனே பதில் எழுதியும் ஆகவேண்டும். இம்மூன்றும் ஒரே காலத்தில் செய்யப்பட வேண்டியவையே. சுவாமிகளுக்குத் தேவையான பொழு தெல்லாம் அங்கும் இருப்பார். சுவாமிஜியின் உபன்னி யாசங்களை ஏற்பாடு செய்பவர்களுக்கு ஆலோசனை அளிக் கவும் முன் வருவார். கடிதக்குவியல்களையும் பதில் எழுதிக் கரைப்பார். என்ன சக்தி! இது எங்கிருந்து வந்தது? எல்லாம் சுவாமிஜியின் மகிமையே. இவ்வாறு அஷ்டாவ தானம் செய்து யாத்திரையை வெற்றிகரமாக முடித்து, சுவாமிஜியையும் அவருடைய ஸ்வஸ்தானத்திற்குக் கொண்டு சேர்த்தார்.

இப்பெரிய காரியத்தை சாதித்த கர்மயோகி பரமா னந்தர் வாழ்க! குரு சேவையும் குரு பக்தியும் பூஷண மாகக் கொண்ட மகான் வாழ்க!! இவருக்கு ஆரோக்கி யத்தையும், குரு சேவை செய்வதற்காக நீண்ட ஆயுளையும் ஆத்மீகத்துறையில் உழைக்க ஊக்கத்தையும் ஆண்டவன் அளிப்பாராக!!!

சுவாமி ராமானந்தா.

# பொருளடக்கம்


| | | | | பக்கம் |
|---|---|---|---|---|
| | வடநாட்டு யாத்திரை | | | 1 |
| 1. | ஹரித்வார் | .... | .... | 3 |
| 2. | பலமாவ் | ... | ... | 5 |
| 3. | லக்னௌ | .... | ... | 9 |
| 4. | பைஸாபாத | ... | ... | 8 |
| 5. | காசி | .... | ... | 12 |
| 6. | சாரநாத் | ... | .... | 13 |
| 7. | பாட்னு | ... | ... | 16 |
| 8. | ஹாஜிப்பூர் | ... | .... | 19 |
| 9. | கயா | ... | .... | 20 |
| 10. | கல்கத்தா | ... | ... | 22 |
| 11. | வாலடேர் | ... | ... | 26 |
| 12. | ராஜமஹேந்திரம் | ... | ... | 29 |
| 13. | விஜயவாடா | ... | ... | 35 |
| 14. | சென்னை | | ... | 38 |
| 15. | ஸ்ரீநிவாசக காந்தி நிலையம | | .... | 40 |
| 16. | திருவலலிக் கேணியில் ... | | ... | 41 |
| 17. | காப்பரேஷன் வரவேற்பு | | ... | 47 |
| 18. | பத்திரிகையாளர் சம்மேளனத்தில் | | ... | 48 |
| 19. | மைலாப்பூரில் | ... | ... | 65 |
| 20. | சிவாஜி வியாயமண்டலத்தில் | | ... | 67 |
| 21. | விழுப்புரம் | ... | ... | 78 |
| 22. | சிதம்பரம | ... | .. | 83 |
| 23. | மாயூரம | ... | ... | 93 |
| 24. | தருமபுரம | ... | ... | 96 |
| 25. | சிவானந்தரை சந்திக்கவாரும் (தர்க்கம்) | | ... | 100 |
| 26. | மகா சன்னிதான உபசாரம் | | .. | 112 |
| 27. | தஞ்சை | ... | ... | 137 |
| 28. | திருச்சி | ... | ... | 145 |

29. புதுக்கோட்டை .... ... 149
30. குருதரிசனம் (நாடகம்) .. 159
31. ராமேஸ்வரம் ... .... 169
32. தனுஷ்கோடி .... ... 173

33. இலங்கை ... 177
34. கொழும்பில் .... .. 195
35. முனிசிபல் சபை வரவேற்பு .. 198
36. மேயர் வரவேற்பு .... ... 210
37. கோட்டையில் வரவேற்பு .. 215
38. பொது வரவேற்பு ... ... 225

39. மதுரை ... .... 228
40. விருதுநகர் ... .... 238
41. திருநெல்வேலி .... ... 247
42. நாகர்கோவில் .... ... 264
43. திருவனந்தபுரம் .... .... 273
44. கொச்சி ... ... 278
45. பெங்களூர் ... .... 280
46. மைசூர் .... ... 281
47. ஹைதராபாத் .... ... 291
48. புனா .... ... 297
49. பம்பாய் ... ... 392
50. அமல்ஸாத் .... ... 316
51. பரோடா .... ... 321
52. அஹமதாபாத் ... .. 323
53. டெல்லி .... .... 327
54. ரிஷிகேசம் .... .... 339

---

## இப்புத்தகாசிரியர்கள்





ஸ்வாமி ஸச்சிதானந்தர் ஸ்ரீ ஸ்வாமி ஸதானந்தர்

*Professors, Forest University, RISHIKESH*

# சிவானந்த திக்விஜயம்

## வட நாட்டு யாத்திரை

வருஷக் கணக்காகத் தம்முடைய அன்பர்களும் அடியார்களும் பன்முறை விரும்பிக் கேட்டும் விண்ணப்பஞ் செய்தும் எதற்கும் இணங்காத சிவானந்த ஸ்வாமிஜி 1950-ம் வருஷத்தில் பலர் வேண்டுகோளுக்கு இணங்கி இந்தியாவிலுள்ள பற்பல முக்கியமான இடங்களுக்கும் இலங்கைக்கும் விஜயம் செய்வதாக வாக்களித்தார். அவருடைய சிஷ்யர்களும், ஆயிரக்கணக்கான பக்தர்களும் தம்முடைய குருநாதரின் மனமாற்றம் கண்டு ஆனந்தங் கொண்டு சுவாமிகளுடைய அகில இந்திய யாத்திரை இடையூறின்றியும் குருநாதருக்கு மெய்வருத்தம் அதிகமில்லாமலும் நடைபெறுவதற்காக மிகுந்த ஊக்கத்துடன் உழைக்க முற்பட்டார்கள். சுவாமிகள் புறப்படும் நாளை நிச்சயித்து, அதற்கு மூன்று மாதங்களுக்கு முன்னமே சகல ஏற்பாடுகளையும் வெகு செம்மையாகவே செய்து வைத்தார்கள்.

### ஆரம்பவிழா

1950 ௵ ஸெப்டம்பர் 7உ யன்று ரிஷீகேசம் ரெயில்வே ஸ்டேஷனில் யாத்ரா மண்டலியின் ஆரம்ப விழா நடத்தப்பட்டது. அழகிய ரெயில்வண்டி யொன்று ரிஷீகேச ஸ்டேஷனிலே கொண்டுவந்து நிறுத்தப்பட்டிருந்தது. அதனகத்து ஸ்வாமிகளும் அவருடன் செல்லும் சீடரும் இரண்டு மாதங்கள் இருந்து வாழ்வதற்கான வசதி

களும சௌகரியங்களும் வெகு நேர்த்தியாக அமைக்கப் பட்டிருந்தன. இவற்றை நண்பர் யாவரும அறிந்துகொள் வதற்காக அத்தினம் காலை 10 மணிக்கு ஒரு சிற்றுண்டி விருந்து அவ்வண்டியினகத்தே அளிக்கப்பட்டது ரிஷீ கேச வாசிகளில முக்கியமான சிலரும் ஆனந்தகுடீரத்தி லேயே இருப்போருட் சிலரும் அழைக்கப்பட்டிருந்தனர்.

ஆங்கில நாகரீகமபோலக் காணப்பட்டாலும அச்சிற் றுண்டிவிழா நம்நாட்டு மனப்பான்மையுடன் நடைபெற்ற தென்று விளங்கும்படி ஸ்வாமிகள அங்கேயே தம்முடைய கீர்த்தனங்களைப் பாடினதுடன் பிறரையும பாடவைத்தனர். அன்று புதிதாக ஒரு கீர்த்தனம் அமைத்திருந்தார்— அதன் பொருள் “இணங்கு, இடங்கொடு, இசைந்து நில, அவமதிப்பைப் பொறு, தீங்கைப் பொறு, இதுவே உயர்ந்த சாதனை” என்பதாம். அங்கு வந்து கூடி யிருந்தவர் மகிழ் வுற்றனர். இறுதியில் மஹா மிருத்தியுஞ்ஜய ஜெபம் செய்யப்பட்டபின் கூட்டமும் கலைந்தது.

செப்டம்பர் மீ 9 தேதியன்று யாத்திரை ஆரம்பித் தது. காலை 8 மணிக்கு ஆனந்த குடீரத்திலிருந்து ரிஷீகேசம் ஸ்டேஷனுக்கு யாத்ராமண்டலி புறப்பட்டது. அலங்கரிக்கப்பட்ட யானை தன்மீது சில மகாத்மாக்களை ஏற்றிக்கொண்டு முன்சென்றது அதன்பின் பூமாலைகளால் முற்றிலும் மூடப்பட்ட ஒரு மோட்டாரில் வைத்த ஒரு வெள்ளிப் பல்லக்கில், வெள்ளிக்குடத்தில் கங்காஜலம; அதன்பின் ஒரு மோட்டார்வண்டியில் ஸ்வாமி சிவானந்த ரும, அவர் அருகே ஒரு பெரிய குடத்தில கங்காஜலமும், அதன்பின் ஆறு மோட்டார் பஸ்களில் அளவுகடந்து நிரமபியிருந்த ஜனங்கள, அவற்றின்பின் மைல்கணக்கான

ஜனக்கூட்டங்கள், இவை வழி முழுவதும 'ஹரே ராமா' பாடிக்கொண்டே சென்றது—இவற்றையெல்லாம விஸ்தாரமாக எழுதுவது இங்கே சாத்தியமில்லை. வழியிலே தரித்திர நாராயணர்களுக்கு ஸ்வாமிகள் பிடிபிடியாகத் தானம கொடுத்துக்கொண்டே வந்தார். ஸ்டேஷனிலும் வந்து குவிந்திருந்த ஜனங்களுக்கும ஸ்வாமிகள் தரிசனம கொடுத்ததுமல்லாமல இனிய தின்பண்டங்களை வேண்டியவரையில் தாமே எடுத்து அளித்தார். வண்டிக்குள் புகுந்ததும அதற்குள்ளே வைக்கப்பட்டிருந்த ஒலிபரப்பியின் உதவியால் சுவைமிகுந்த தம்முடைய உபந்யாசத்தை அளித்தார். அவர் கூறியவற்றின் குறிப்பு பின்வருமாறு. "பொறுத்துக்கொள்வதே முக்கியமான சாதனை. ஆபீசுகளிலே குமாஸ்தாக்களுக்கும மேலதிகாரிகளுக்கும் உண்டாகும் சண்டைகளுக்கும, வீடுகளிலே மனைவிக்கும் அவள் புருஷனுக்கும் உண்டாகும் வேற்றுமைக்கும், இதுபோன்ற மற்ற சச்சரவுகளுக்கும பொறுமை யில்லாததே முக்கிய காரணம். தாழ்மைக் குணமில்லாமற் பொறுமை சாத்தியமில்லை" என்பதே. ஸ்டேஷனைவிட்டு வண்டி புறப்படும் போது ஸ்வாமிகள் சொன்னது "எல்லோரும ராமநாமம் சொல்லுங்கள்—அதுவே இந்த அணுகுண்டு நாட்களுக்குப் பெரிய அணுகுண்டாகும். அன்றியும நீங்கள் உங்களுடைய உண்மை ஸ்வரூபத்தை அறிய அதுவே பயனளிக்கும்."

## ஹரித்வார்

சிறிது நேரத்துக்கெல்லாம் வண்டி ஹரித்வாரம் வந்துவிட்டது. அங்கே ஸ்வாமிகள மாலை 4 மணிக்கு வண்டியிலிருந்து இறங்கி ஹரிக்கீப்பூடிக்குப்போய் கங்கா ஆரதி நடத்தினர்—வண்டியிலிருந்திறங்கியவுடனேயே லாஹுர் வாசிகளான ஸ்ரீமதி கைலாஸவதி யம்மையாரும் அவர்கள்

தங்கைகளும ஸ்வாமிகளுக்கு மாலையிட்டனர். அப பொழுதே ஸவாமிகள ஹரேராம கீர்த்தனை தொடங்கினர். அங்கே கூடியிருந்த அனைவரும ஆனநதபாஷ்பததுடன் கீர்த்தனையிலே கலந்துகொண்டனர இலவசப் பத்திரிகை களும வழஙகபபட்டன ஏழைகளுக்குப் பணமும அளிக கப்பட்டது கஙகா பூஜை முடிநதபின் ஸவாமிகள மகராவலி தர்மசாலைககுப் போனா. அங்கும கீர்த்தனையே. ராசன் நாமம சொல்லிககொண்டே இருபபதல்லவா அவ ருககு ஆனந்தம! மீண்டும ஸவாமிகள வண்டிககுத திரும பினர்

இரவு மறுபடியும் வண்டி ஹரிததுவாரைவிட்டுப் புறப் பட்டது. யாத்திரை வணடி சென்றுகொண்டிருக்கும பொழுதிலெல்லாம் ஏதாவது ஸ்டேஷனில் சில நிமிஷங்கள் வண்டி நின்றாலும ஜனஙகள வந்து கூடிவிடுவார்கள் அவர்க ளிடம அநதச சிறு நேரத்துக்குள் மிகப் பெரிய விஷயங் களை ஸவாமிகள் கூறிவிடுவார். இப்படிச் செயவதில ஸ்வாமிகளை எவராலும் வெல்ல முடியாது வைத்யத் தொழிலில் பூர்வாசிரமத்தில மாததிரைகொடுத்து வநதது போல இபபொழுது வேதாநத மாததிரைகள கொடுபபது அவருடைய தனிப்பட்ட சாமர்த்தியம. யோகம, வேதாந தம என்றும் இவ்விரண்டிலும் உள்ள நுட்பமான விஷயம் இதுவே:—பணிசெய், நேசி, கொடு, சுத்தப்படுததூ, த்யானமசெய், ஆத்மானுபவமபெறு—நல்லவனயிரு, நனமைசெய், தயைகாட்டு, கருணை பாராட்டு. இபபடியே கூறிககொண்டு போவது அவருடைய வழக்கம அவர் கூறுவதுபோலவே தாமும் ஒழுகி யிருபபதாலேயே இன் றைக்கு அவர் மிகவும சிறப்பு வாய்நத ஒபபற்ற மகாதமா வாக விளங்குகிறார்.

மறுநாட் காலை வண்டி ஹார்தாய் என்னும் ஸ்டேஷன் வந்ததும ஜனங்கள் அடக்கமுடியாதவாறு மேனமேலும் வந்து குவிந்து ஒருவரை யொருவர் மோதிகொண்டு முன் சென்றனா. ஸ்வாமிகள் அவர்களுடைய அன்புத் தாகத்தைத் தணிக்க வண்டியினின்று கீழே இறங்கி நின்றார். அன்றியும் அடக்கத்தைப் பற்றி ஒரு சிறு பிரசங்கம் செய்தார். நாக்கு முதலிய உறுப்புக்களையும இந்திரியங்களையும் விருப்பு வெறுப்புககளையும் அடக்கவேண்டும் என்று கூறினார். வண்டி புறப்படும் நேரம் வந்ததும் அதற்குள் புகுந்தார். பளாட்பாரத்திலோ ஜனங்கள் தாயிழந்த கன்று போலத் தவித்தனர். ஸ்வாமிகள் அதைக்கணடு ஸிம்மம் போல "ஓம்" என்று நீளமாகவும் உரககவும கர்ஜித்தார். அனைவரும் அதுபோலவே உரக்கக் கூவவே அவர்கள் கொதிப்புத் தணிநதது. அதன்பின் சுவாமிகள "ராசன் நாமமே உங்களுக்கு எல்லாவறறையும அளிக்கும்—என்னுடன் கூறுங்கள்! ராம, ராம், ராம!" எனறார். எல்லோரும் "ராம—ராம" என்று கூறிக்கொண்டே யிருக்க வண்டியும் நகர்ந்தது—அபபொழுதும் ஸ்வாமிகள் விடவில்லை—"ஓம்" என்று மீண்டும் ஆரம்பித்தார். அப்பெருங் கூட்டமும் அவரையொத்து "ஓம" என்று உரக்கக் கூவிற்று. இடி முழக்கம போன்ற அந்த அரவம் எத்தகைய சகதி வாயநததென்று யாரறிவார!

## பலமாவ்

பலமாவ் என்ற ஸ்டேஷன் வந்ததும் பலர் ஸ்வாமிகள் வண்டிக்குள புகுந்தனர். எவனோ ஒருவன், "ஸ்வாமிகளை மிகவும் துன்பப்படுததுகின்றோம்" என்றான். அதற்கு ஸ்வாமிகள் "துன்பமே உன்குரு" என்று தாம் பாடியுள்ள

ஆங்கிலப்பாட்டைப் பாடினார். அதன் அருமையான ஆத்தத்தை நீர் நிறைந்த கண்களுடன் கேட்டிருந்த அவர்களை ஸ்வாமிகள் 'ஹரே ராம' கீர்த்தனையில் சேரச் செய்தார். இதன்பின் "ராம நாமமே பெரிய சிலாஜித்—அபூர்வமான ச்யவனப்ராசம்" என்று கூறி அவர்களை ராம நாமம் உரைக்கச் செய்தார்—

## லக்னௌ

ஸ்வாமிகளுக்கு லக்னௌ ஸ்டேஷனில் சுமார் முந்நூறு பேர் மாலையிட்டனர். அன்பர்கள் அவரிடம் வந்து அவருக்கு மாலையிட முடியாமல் இருப்பதைப்பார்த்து ஸ்வாமிகள் தாமே அவர்களிடமிருந்து மாலையைப் பெற்றுக்கொண்டு தமமுடைய கழுத்திலேயே அணிந்துகொண்டார். அது அங்கிருந்த யாவருக்கும் ஆனந்தமளித்தது.

அரைநிமிஷமும் வீண் போகக்கூடாதென்பதே ஸ்வாமிகள் நோக்கமாதலால் அவர் உடனே கீர்த்தனம் ஆரம்பித்துவிட்டார். அவருக்கு மிகவும் பிடித்த பாடல் "சிதானந்த ஹம்" என்பது அதைப்பாடி அதன் பொருளையும் ஓர் உபன்யாசமாக உரைத்தார். "உணவு ஒன்றும் கிடையாத போதிலும் நீ பரமாத்மா என்பதை மறவாதே" என்று அவர் சொன்னபொழுது அங்கு நின்றவருடைய முகங்கள் மலர்ந்தன. அந்த நேரத்தில் அவர்கள் அச்சமற்றவராகக் காணப்பட்டனர்.

ஸ்டேஷனிலேயே மற்றோரிடத்திலும் சுவாமிகள் உபந்யாசமும் கீர்த்தனையும் செய்யவேண்டியிருந்தது. அப்பொழுது அவருடைய அழகான "கொஞ்சம்" என்னும் பாடலைப் பாடினார். அவர் சொல்லியதின் குறிப்பு இதுவே

"எல்லாவற்றிலும மிதமாக இரு. உணவு கொஞ்சமாக இருக்கட்டும. அப்படியானால வைத்யனுக்கு வேலையில்லை. பேசுவதும் கொஞ்சமாகவே யிருக்கட்டும். அப்படியானால் சண்டை சச்சரவில்லை" இவ்விஷயத்தை வெகு அழகாக உணர்த்தியபின்பு அவர் யோக சாதனத்தின் இரகசியங்களை ஐந்தாறு வார்த்தைகளில் அடக்கிக் கூறினார். "தெய்வானுபூதி பெற இவையே படிகள். கேளுங்கள். சுத்தம், தாரணை, மனனம், த்யானம், ப்ரகாசம், ஒன்றுதல், ஒன்றாக நிற்றல், அனுபூதி." இவ்வளவு சுருக்கமாகக் கூறும திறமை ஸ்வாமிகளிடம் மாத்திரமே காணலாகும். அதன்பின் "பதினெண் குணங்கள்" (Song of Eighteen "ities") என்ற பாடலைப் பாடினார். இப்பாட்டை ஸ்வாமிகளிடம் எத்தனைதரம கேட்பினும் போதுமென்று தோன்றாது. பின்பு, அன்று ஞாயிறறுக்கிழமை என்ற நினைப்பு அவருக்குண்டாகவே ஏசுநாதரைப்பற்றித் தாம இயற்றிய பாடலைப் பாடினார். எம்மதமும தம்மதமாகக் கொள்ளும் ஸ்வாமிகளுக்குக் கிருஸ்தவரும, இஸ்லாமியரும் சிஷ்யர்களாக அமைந்துள்ளார். அதன்பின் "காலையில் ப்ரம்ம முகூர்த்தத்தில் எழு" என்று தொடங்கிப் பல உபதேசங்கள் அடங்கி யிருக்கின்ற அவருடைய ஒரு பாடலைப் பாடிக் காட்டினார். அப்படிப் பாடுவதோடு நிற்காமல் அதன் கருத்துக்களை விளக்கி மிகவும் அழகிய ஒருபதேசமும் செய்தார். அதனிடையில் "உன்னை எது 'பயநதாங்கொள்ளி'யாக்குகிறது? அவித்யை—அதுவே மாயை. அதற்கிடம் கொடுக்காதே. நீ உன் உடம்பல்ல வென்று உணர். பணம் பணம் எனறு உயிர் விடாதே. பணத்தைத் திருடன் கொண்டுபோக முடியும். ஆத்மஞானமே பெரிய அழிவற்ற சொத்து" என்று வெகு அருமையாக எளிய நடையிலும்

தெளிவான உதாரணங்களோடு அன்பு ததும்பும குரலுடன் ஸ்வாமிகள் பேசுவதைக் கேட்டு யார்தாம் ஆச்சரியமடையமாட்டார்கள்? லக்னௌ ஜனங்கள் மெய்மறந்து நின்றார்கள் என்றால் அதில் ஆச்சரியமில்லை.

இந்த ஞானவிருந்து முடிந்ததும ப்ளாட்பாரத்திலேயே ஏராளமாக உணவளிக்கப்பட்டது. சுமார் நூற்றைம்பதுபேர் உண்டார்கள். லக்னௌ ஸ்டேஷனை விட்ட பின்பு ஸ்வாமிகளை ஜனங்கள் சூழ்ந்துகொண்டது பார பங்கி என்னு மிடத்திலேதான். அங்கேயும் முன்போலவே கீர்த்தனமும உபந்யாசமும் செய்து அன்பர்களுக்கு ஆனந்தம் அளித்தார். அங்கு எடுத்துக் கூறிய விஷயம் கர்மயோகத்தின் பெருமை. "அகங்காரமில்லாமல் சேவை செய்வீர்களானால் ஆத்ம ஞானம் எளிதிலே தோன்றும" என்பது அவர் கூறியதன் சுருக்கமாகும்.

## பைஸாபாத்

பைஸாபாத் வந்து சேர்ந்ததும் ஸ்ரீ ராமசரண்மிஸ்ரா என்னும அன்பரால் வரவேற்கப்பட்டு ஸ்வாமிகள் அவர் வீட்டுக்குச் சென்றார். அவர் அளித்த உபசாரணைகளைப் பெற்றபின் விக்டோரியா ஹாலுக்குச் சென்று அங்கே உபன்யாசம செய்தார். லக்னௌவுக்கும், பைஸாபாதுக்கும் கமிஷனரான ஸ்ரீ. எஸ் எல். தார், ஐ ஸி. எஸ். என்பவர் தலைமை வகித்த கூட்டத்தில் ஸ்வாமிஜி பேசினார். ஓம் என்னும் மந்திரத்தின் மகிமையை எடுத்துக் கூறி அம்மந்திரத்தையே அங்குக் கூடியிருந்த எல்லாருடனும் சேர்ந்து தாமும் சிறிதுநேரம் உரக்கக் கூவினார். "எல்லாருக்கும் அமரத்துவம வேண்டும் என்ற விருப்பம் இருக்கிறது... அளவற்ற சுகம் வேண்டும் என்ற விருப்பம் இருக்கிறது...

இவை கிட்ட வேண்டுமாயின் இந்திரியங்களுக்கு இடம் கொடாதீர்கள்'' என்று சாதனமுறைகளைக் கூறி, பொறுமை, தைரியம், ஸஹனசக்தி, ஆத்மபாவம், அன்பு முதலிய குணங்களை வளர்த்துக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தினர். தன்னை யடக்கிக் கொள்ளாதவனால் முன்னேற்றம் பெறமுடியாதென்பதை யுணர்த்தினர் பின்பு ஸாதன சதுஷ்டயம், த்யானத்தின் இரகசியம், விடா முயற்சியின் அவசியம், வைராக்கியம் விவேகம் என்பவற்றின் இன்றியமையாமை முதலியவற்றை விளக்கிக் காட்டினர். உபன்யாச முடிவில் தமமுடைய இனிய குரலில் தமமுடைய பாடல்களைப்பாடி, கீர்த்தனமும் செய்தார். அங்கு கூடினவருக்குத் தாங்கள் பூலோகத்திலிருப்பதாகவே அப்பொழுது நினைப்பில்லை. ஏதோ அபூர்வமான ஒரு புதிய உலகத்திலிருப்பதாகவே தோன்றிற்று. தலைமை வகித்த ஸ்ரீ தார் என்பவர் முடிவுரை கூறும்பொழுது "எனக்கு ஸ்வாமிஜீயின் தெய்வீக குணங்களை வருணிக்க முடியவில்லை. நாம் அவருடைய மேன்மையை யனுபவிக்கலாமேயல்லாமல் அது எத்தகையது என்று நம்மால் சொல்ல முடியாது'' என்றார் ஆம்—அதுவே ஸ்வாமி சிவானந்தரின் தன்மை அவருடைய குணங்கள் வருணனைக் கடங்கமாட்டா.

மறுநாட் காலை (11—9—50) ராமசரணமிசிரா அவர்கள் வீட்டில் ஸத்ஸங்கம் நடத்தப் புறப்பட்டுக்கொண்டிருக்கும் ஸமயத்தில் ஸ்வாமிகள் தம்மைச் சில சிறுவர்கள் சூழ்ந்திருப்பதைக் கவனித்தார். உடனே ஒரு கூடை வாழைப்பழம் வரவழைத்து அவர்களுக்குக்கொடுத்து அவர்களைக் கீர்த்தனஞ் செய்யவைத்தார். அவர்களும் வெகு சீக்கிரம் கீர்த்தன த்வனியைக் கற்றுக்கொண்டு அழகாகச்

சொல்லத் தொடங்கினார்கள். இப்படியே கிடைத்த சந்தர்ப்பங்களை யெல்லாம் உபயோகப்படுத்துவதே ஸ்வாமிகள் வழக்கம்.

பைஸாபாத்திலே ஸ்ரீ ராம்சரண மிசிரா வீட்டில் ஸத்ஸங்கமும் டாக்டர் சக்ரவர்த்தி வீட்டில் சிறிது ஓய்வு எடுத்துக் கொள்வதும் முடிந்தபின்பு, அவ்வூர் மாணக்கர்களுக்கு ஒரு அழகிய உபன்யாஸம் செய்தார். அவ்வுபன்யாசம் ஆரம்பித்ததே நன்றாக இருந்தது. "நீங்கள் சிறுவர்களாக இருக்கும்பொழுதே உங்கள் சேவையைக் கடவுளுக்கு அர்ப்பணம் செய்யவேண்டும். வாசனை யிருக்கும் புஷ்பத்தையே தெய்வத்துக்குக் கொடுக்கவேண்டும். வாசனை நீங்கின பின்பு அப்புஷ்பம் பயனற்றதாகும்." இப்படி ஆரம்பித்து, தைத்திரீய உபநிஷத்து கூறும், "உண்மை பேசு, தர்மத்தைக் கைப்பற்று" முதலிய உபதேசங்களை விளக்கிப் பேசினார். மனத்தையும் இந்திரியங்களையும் அடக்கவேண்டிய அவசியத்தையும், சரீரத்தை நோயின்றி வைத்துக்கொள்ள வேண்டிய முக்கியத்தையும், அதற்காக ஸாத்வீக ஆகாரமே ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதையும் அவர்களுக்கு அறிவித்து இறுதியில் நிஷ்காமிய ஸேவையின் மகிமையை விளக்கும் ஒரு பாடலையும் பாடிக் காட்டினார். கலாசாலைப் படிப்புக்கு மேலான ப்ரம்மவித்தையைப் பெற முயலவேண்டும். அப்பொழுதுதான் தீரனாக முடியும் என்று சொன்னார். மனிதர் தங்கள் சரீரங்களையும் சொத்துக்களையும் பற்றியே சிந்தனைசெய்துகொண்டு தங்கள் வாழ்நாட்கள் எல்லாவற்றையும் செலவிட்டு ஒரு சிறிது சுகமும் பெறாமல் உலகத்தைவிட்டு விலகுகிறார்கள் என்பதை அறிவித்தார். கீதை, உபநிஷத் முதலியவற்றில் இருந்த பல வாக்கியங்களைச் சொல்லி அவற்றின் கருத்தை விளக்கித்

தம் சொற்பொழிவை மிகவும் மேன்மையாக நடத்தினர். இறுதியில் ராமநாமத்தை அவர்கள் தம்முடன் சொல்லி அதிலே மகிழ்ச்சி பெறும்படியும் செய்தார். அவர் பாடும் போதும் கீர்த்தனை செய்யும்போதும் அவருடைய உள்ளத்தில் ஊறிக்கொண்டிருந்த ஆனந்தம் வெளிப்பட்டுக் கொண்டே இருந்ததால் அங்கு கூடியிருந்த அனைவரும் ஆனந்தக்கடலில் அமிழ்ந்திருந்தார்கள். பலர் ஸ்வாமிகள் கூடவே சேர்ந்து பாடினார்கள். மிருத்யுஞ்ஜய மந்திரத்துடனும் சாந்திக் கூற்றுடனும் கூட்டம் முடிவுற்றது.

அதன்பின் ஸ்வாமிகள் அயோத்யாவைப் பார்க்கச் சென்றார். சூரியன் தன் அஸ்தமனக் கிரணங்களை ஸரயு நதியிலே விடுவித்துக்கொண்டிருந்த காட்சி கண்ணைக் கவர்ந்தது. அப்பொழுதும் அவ்விடத்தில் ஸ்வாமிகளால், மௌனமாக இருக்க முடியவில்லை. வைராகிகள், வைஷ்ணவபக்தர்கள், ராமபக்தர்கள் முதலியோர் அங்கே ஸ்வாமிகளைச் சூழ்ந்துகொண்டு நின்றமையால், ஸ்வாமிகள் அவர்களை நோக்கிச் சில வார்த்தைகள் பேசவேண்டி வந்தது. "ராமர் தசரதர் மகன் மாத்திரம் என்று நினையாதீர்கள். அவர் பரமாத்மா. அவர் பெயர் எவ்வளவு சக்தி வாய்ந்தது என்பது தெரியுமா?" என்று ஆரம்பித்து ராமர் பெருமையைப் பற்றியும், ராமநாமத்தின் அளவற்ற சக்தியைப் பற்றியும் மற்ற பக்தி முறைகளைப்பற்றியும் ஒரு சிறு சொற்பொழிவு அளித்தார். அவர் கூறியவற்றை ஸ்ரீ வியாஸஜீமகராஜ் ஹிந்தியில் மொழி பெயர்த்தார். அதன்பின் மனத்தை யுருக்கும் கீர்த்தனையும் செய்யப்பட்டது.

திரும்பினபின்பு பைஸாபாத முனிஸிபாலிட்டி சேர்மன் ஸ்ரீ ப்ரியதத்தராம் என்பவர் வீட்டில கீர்த்தனையும் விருந்தும் நிகழ்ந்தன. அங்கிருந்து கல்லூரி மாணவிகள்

ஹாஸ்டலிலே ஒரு சொற்பொழிவு நடந்தபொழுது சுவாமிகள் அவர்களை மைத்ரேயி, கார்கி, முதலிய பரமஞான அன்னைகளைப்போலப் பெருமைபெற்று வளரவேண்டும் என்று ஆசீர்வதித்தார். ரெயில்வே ஸ்டேஷனிலும் கணக்கற்ற ஜனங்கள் காத்திருந்தமையால் அங்கும் தரிசனமும் நல்லுரையும் அளித்து அதன்பின் விடைபெற்றுச் சென்றார்.

## காசி

ஸெப்டம்பர் 12உ ஸ்வாமிகள் காசிவந்து சேர்ந்தார். காலையில் ஸ்ரீ கிச்சலு அவர்கள் வீட்டில் ஸத்ஸங்கம் நிகழ்ந்தது. பின்பு விசுவநாதர் கோவிலுக்குப் போன பொழுது அங்கே கோவில் அதிகாரிகள் பூர்ண கும்பத்துடன் வரவேற்று, கர்ப்பக்கிரகத்துக்கு அழைத்துச் சென்று அபிஷேகம் செய்ய வசதிகள் அளித்தார்கள். அபிஷேகம் அர்ச்சனை முதலிய முடிந்தபின், அங்கேயே ஸ்வாமிகள் பஞ்சாக்ஷரிகீர்த்தனஞ் செய்து, சில பாடல்களும் பாடினார். புரோகிதர்களுக்குத் தகுந்த தக்ஷிணைகள் கொடுத்து வெளியே வந்தார்.

அன்று மாலை கிச்சலு அவர்கள் வீட்டில் நடந்த ஸத்ஸங்கத்தில் சுவாமிகள் மகாமந்திரமாகிய ஹரேராம மந்திரத்தைப் பற்றி வெகு விரிவாகப் பேசியிருந்தார். அம்மந்திரத்திலுள்ள பதினாறு அக்ஷரங்களுக்கும் ஜீவனுக்குள்ள பதினாறு கலைகளுக்கும் இருக்கும் சம்பந்தத்தைப்பற்றிய வெகு நுட்பமான விஷயங்களை எடுத்துச் சொல்லி அம்மந்திரத்தால் அடையக்கூடிய பயன்களையெல்லாம் விரிவாகச் சொன்னார். அந்தச் சந்தர்ப்பத்திலேயே ஹனுமானைப் பற்றிய அரிய உண்மைகளையும் கூறினார். ஹனுமானைப்

பற்றிய கீர்த்தனைகள் செய்யவேண்டிய அவசியத்தையும் சொன்னார். மாயையைத் தாண்டுவது ஆண்டவன் அருளில்லாமல் முடியாதென்றும், அவ்வருளைப்பெறுவது பக்தியினால் மாத்திரமே சாத்தியமாகுமென்றும், அந்தப் பக்தியின் இன்றியமையாத ஒரு அங்கம் கீர்த்தனையென்றும் விவரித்தார்.

## சாரநாத்

செப்டம்பர் மாதம் 13ல் ஸ்வாமிகள் சாரநாத் என்னும் இடத்தைப் பார்க்கச் சென்றார். அங்கே புத்த விக்கிரகத்தினடியிலிருந்து கொண்டு ஸ்வாமிகள் தியானம் செய்தார். அச்சமயம் அவ்விஹாரத்தின் காரியதரிசியான ஸங்கரதன பிக்ஷு என்பவர் விரைவாக வந்து ஸ்வாமிகளை நமஸ்கரித்தார். வெகு சீக்கிரம் பெரியதோர் கூட்டம் கூடி விட்டது. ஸ்வாமிகளும் வழக்கம்போல் கீர்த்தனம் ஆரம்பித்துவிட்டார். சிறிது நேரம் சென்றதும் சிலர் ஸ்வாமிகளைப் பல வேறு சந்தேகங்கள் கேட்க முனைவந்தனர். அவர்களுக்குள் ஒருவர் ஹாபீஸ் ஸய்யத் என்னும் ஓர் இஸ்லாமியர். அவர் கேட்டது விக்கிரக ஆராதனையைப்பற்றியது. தகுந்த விடைகளைக் கேட்ட ஹாபீஸ் ஸய்யத் மிக்க மகிழ்ச்சி யடைந்தார். அங்கே பார்க்க இருந்த சிறப்பு வேலைப்பாடுகள் யாவற்றையும் பார்த்தானந்தித்த பின்பு ஸ்வாமிகள் ஸ்ரீ கிச்சுலு வீட்டுக்குத் திரும்பினார். அன்று ஸ்வாமிகளுக்கு காசி ஸாவகலாசாலை தத்வஞான ஸங்கத்தார் ஒரு சிற்றுண்டி விருந்து அளித்தனர்.

பின்பு, டாக்டர் ஆத்ரேயா அவர்கள் ஸ்வாமிகளை ஸாவ கலாசாலைக் கட்டடங்களைப் பார்க்க அழைத்துச் சென்றார். அங்கே ஆத்ரேயா அவர்கள் வீட்டில் மிஸ்-

பின்பு, அங்கிருந்து பண்டித கோவிந்த மாளவியா வீட்டிற்குச் சென்று அவரைக் கண்டு சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தார், அதன் பின் அவ்விடம் விட்டகன்று ஸென்ட்ரல் ஹிந்தி ஹைஸ்கூல் ஹாலுக்குப் போய் அங்கே நடத்தப்பட்ட ஒரு நாடகத்தையும் பார்த்தார். நாடக முடிவில் ஸ்வாமிகளே கீர்த்தனம் ஆரம்பித்தார் யாவரும் கலந்து கொண்டனர்

## ராமானுஜ வித்யாலயம்

ஸெப்டம்பர் 14உ ஸ்வாமிகள் பல இடங்களுக்குப் போய் பேச வேண்டியதாக இருந்தது. அவற்றுள் ஒன்றான ராமானுஜ வித்யாலயத்துக்குப் போனபொழுது அவ்வாலயத்து அதிபதி ஸ்வாமிகளைப் பார்த்துப் புகழ் மொழிகள் பல கூறினார். பின்பு அங்கு கூடியிருந்த கூட்டத்தில் ஸ்வாமிகள் ஒரு உபன்யாசம் செய்தார். "நாம் முதலில் அஷ்டாக்ஷரத்தால் ஸ்ரீமந் நாராயணன் நாமத்தைச் சொல்வோம். அதுவே இக்கலியுகத்தில் நம்மைக் காப்பாற்றக் கூடியது" என்று ஆரம்பித்தார் பின்பு, ஸ்ரீ ராமனுஜர் சரித்திரத்தைச் சுருக்கமாகச் சொல்லி அவர் தென் நாட்டிற்களித்த தொண்டை விவரித்து, அவர் தந்துள்ள விசிஷ்டாத்வைதத்தின் பெருமையை விளக்கினார். இக்கூட்டம் கலைந்தபின் ஸ்வாமிகள் விரைந்து சென்று பண்டித கோவிந்த மாலவியாவைக் கண்டு அவர் நோய்தீர, கீர்த்தனஞ் செய்து, மிருத்யுஞ்ஜய ஜபமும் பண்ணினார். அதன் பின் அங்கிருந்து தியஸாபிகல் ஸொஸைட்டிக்குப் போய் அங்கே யாத்ராமண்டலியின் படங்களைக்காட்டும் ஸினிமாவைக் காண்பிக்கச்செய்தார். அது முடிந்ததும் காசியிலுள்ள தென்னிந்தியச் சங்கத்தார் ஸ்வாமிகளுக்கு ஒரு வரவேற்புப் பத்திரிகையை சமர்ப்பித்தனர். அதிற்

கூறியிருந்தவற்றிற்கு விடையாக இரண்டொரு வார்த்தைகள் பேசி விட்டு, ஸ்வாமிகள் தமிழில் சில பாடல்களைப் பாடினார். வேறு பாடல்களும் பாடி, கீர்த்தனைகள் நடத்தி, இரவு சுமார் 9 மணிக்கு மீண்டும் கிச்சுலு அவர்கள் வீட்டுக்குப்போய் அங்கே நடத்தப்பட்ட வஸந்த பூஜையையும் பார்த்தபின் ஸ்வாமிகள் நித்திரைக்குச் சென்றார். வஸந்த பூஜையில் நான்கு வேதங்களிலிருந்தும் சிற்சில பாகங்கள் ஓதப்பட்டன. நித்திரைக்காக ரெயில்வே ஸ்டேஷனுக்குத்திரும்பும்பொழுது இரவு பன்னிரண்டு மணியாகி விட்டது. எனினும் ஸ்வாமிகள் களைப்படையவில்லை. "ஆண்டவன் நாமம் சொல்லிக் கீர்த்தனை செய்யும் பொழுது எனக்கு எங்கிருந்தோ ஒரு சக்தி வருகிறது" என்று ஸ்வாமிகள் சொன்னார்.

ஸெப்டம்பர் 14உ தியஸாபிகல் ஸொஸைட்டியில் ஸ்வாமிகள் செய்த பிரசங்கத்தின் முக்கியமானவை கீர்த்தனத்தின் மகிமை, பிரம்மானந்தம் அடையவேண்டிய விதம், எப்படி ஒருவன் ஜீவன் முக்தனாக முடியும் என்பவையே. வழக்கம்போலவே பிரசங்கமுடிவில் சில கீர்த்தனைகளும் பாட்டுகளும் இருந்தன. அன்றைய தினமே ஸென்ட்ரல் ஹிந்து பெண்கள் பள்ளிக்கூடத்தில் நிகழ்ந்த உபன்யாசத்தில் மாதர் கைப்பற்ற வேண்டிய நெறிகள், குழந்தைகளை வளர்க்க வேண்டியவிதம், பற்றற்றிருக்கும் வழிகள், ஜபம் கீர்த்தனை முதலியன செய்து மனத்தைச் சுத்தஞ் செய்து கொள்ளும் முறைகள் முதலிய விஷயங்கள் விளக்கப்பட்டன.

அதே தினத்தில் கிச்சுலு அவர்கள் வீட்டில் ஸ்வாமிகளுக்கு அநேக ஸங்கத்தார் உபசாரப்பத்திரங்கள் பல

அளித்தனர். வடமொழியில் காசிவாசிப பண்டிதர்கள் ஒரு பத்திரம் கொடுத்தார்கள். டாக்டர் லால்ஜீ என்பவர் உருது பாஷையில் ஒன்று கொடுத்தார். எல்லாவற்றை யும் பெற்றுக்கொண்டு ஒவ்வொரு சங்கத்தாருக்கும் அவர வருக்கேற்றவாறு வந்தன மொழிகளை ஸ்வாமிகள் கூறினார்.

ஸெப்டம்பர் 15வ காலை 8 மணிக்கு ஸ்ரீ பி எஸ். எஸ். வர்மா, ஸ்ரீ அதவானி முதலிய அநேக பெரிய உத்யோகஸ் தர்கள், வித்வான்கள் முதலியோர் சுவாமிகளை வந்து பார்த்துப்பேசி அவரவர்கள் சந்தேகங்களைத் தீர்த்துக் கொண்டபின்பு வண்டி காசியை விட்டு நகர்ந்தது. அப் பொழுது ஸ்டேஷனில் ஓங்காரத்வனி முழங்கிற்று.

## பாட்னாவில்

குறிப்பிட்ட நேரத்தில் வண்டி பாட்னாவுக்குப் போயிற்று மழையைப் பாராட்டாமல் கூட்டம் கூட்டமாக ஜனங்கள் எதிர் நோக்கி நின்றனர். பல பெண்மணிகள் ஆரத்தியும் பூஜையும் செய்து முடித்த பின் ஸ்ரீ ஏ. கே. ஸின்ஹாவால் ஏற்படுத்தப்பட்ட ஊர்வலம் ஆரம்பித்து அது அரை மைல் நீளம் இருந்தது. பீஹார் மந்திரி ஸ்ரீ அனுக்ரஹ நாராயண ஸின்ஹா ஸ்ரீ ஏ கே. ஸின்ஹா வீட்டிற்கு வந்து சுவாமிகளுடன் போஜனம் செய்தார். பின்பு கயானந்தா ஹைஸ்கூலில் ஸத்ஸங்கம், யூனிவர் ஸிட்டி ஹாஸ்டலில் ஸங்கீர்த்தனம், ஸ்ரீ கோபால்ஜி வீட்டில் பல பக்தர்களால் பாத பூஜை முடிந்தபின் ஏ. கே. ஸின்ஹா வீட்டிலேயே ஓர் உபன்யாசமும் நடைபெற்றது. அப்பொழுது கீர்த்தனங்களின் மேன்மையைப் பற்றியே சுவாமிகள் பேசினார். ஞானயோகம், கர்மயோகம், பக்தி யோகம் என்ற மூன்றும் சேரவேண்டும் என்று சொன்ன

போது அதுவே அத்யாத்மக் கிச்சடி யென்றார். தேகப் பயிற்சியின் அவசியம் எடுத்து விளக்கப்பட்டது. அமெரிக்கா முதலிய நாடுகளில் நடைபெறும் தான தரு மங்களுக்கும் நம் நாட்டு நிஷ்காமிய ஸேவைக்கும் உள்ள வேற்றுமையை எடுத்துப் பேசினார். ஹடயோகத்தைப் பற்றிப் பேசினபொழுது சுவாமிகள் பிராணாயாமம் செய்து காட்டினார். ஸாதனா முறைகள் விளக்கிக்காட்டப் பட்டன. அத்வைத விஷயமான பல உண்மைகள் தெளிவாக அறிவிக் கப்பட்டன. உபந்யாச முடிவில் ராம ராம கீர்த்தனமும் நடைபெற்றது.

அன்று ஸாயங்காலம் பி. என். காலேஜ ஹாலில் உபந்யாசம நடந்தது. ஏறக்குறைய 10,000 ஜனங்கள் கூடியிருந்தார்கள். டாக்டர் ஸ்ரீகிருஷ்ண ஸின்ஹா (பீஹார் பிரதம மந்திரி அக்ராஸனம் வகித்தார். அவர் சுவாமிகளைப் பற்றி மிகவும் பாராட்டிப் பேசினார். சுவா மிகள் நிகழ்த்திய பிரசங்கத்தில் பல உண்மைகள் கூறப் பட்டன. தைத்திரீய உபநிஷத்திலுள்ள உபதேச மந்தி ரங்கள் விளக்கப்பட்டன. கொஞ்சம் கீர்த்தனங்கள் பாடிய பின் யாத்திராமண்டலியின் ஸினிமாக்காட்சியின் மூலம் யோகாஸனங்கள், யோககிரியைகள் முதலியவற்றைக் காண்பித்த பின் இரவு 9 மணிக்குக் கூட்டம் கலைந்தது.

ஸெப்டம்பர் மாதம் 17௳ யாத்திரா மண்டலி ஏ. கே. ஸின்ஹா வீட்டில் ஊர்வலமாய்ப்போய் ஒரு பெரிய தன வான் வீட்டுக்குச் சென்றது. அந்தத் தனவான் ஸ்ரீ ராதா கிருஷ்ண ஜயென் என்பவர். அவர் வீடு ஓர் அரண்மனையை யொத்திருந்தது. சுவாமிஜிக்கு அவர் பாத பூஜை செய்தார். அவர் சேகரித்து வைத்திருந்த அபூர்வமான மிகவும் விலை

பெறுமான பற்பல காக்ஷிக் கருவிகளை சுவாமிகளுக்கு காண்பித்தார். அவற்றை யெல்லாம் பார்த்த பின்பு வெளிப் புறத்தில் தோட்டத்தில் ஒரு பிரஸங்கம் நிகழ்ந்தது. பல பக்தர்கள் வந்து கூடி யிருந்தனர். "நதத்ர சூர்யோ பாதி" என்று தொடங்கும் மந்திரத்தை எடுத்துக் கொண்டு சுவா கள் ஆரம்பித்த அந்தராத்மாவின் இயல்லைப் பற்றியும் மற்ற பல்வேறு வேதாந்த விஷயங்களைப்பற்றி மிகவும் மேன்மையான ஒரு சொற்பொழிவு அளித்தார். வாஸிஷ்டத்திலிருந்து சிகித்வஜ உபாக்யானத்தைச் சொல்லி அதன் அநதரார்த்தத்தை விளககினார். ஜன்ம துக்கம், ஜரா துக்கம், முதலிய துன்பங்களைக்கூறி விவேக புருஷன் செய்ய வேண்டிய காரியத்தை விவரித்தார். மாயையின் பற்பல செயல்களை விளக்கினார். ஸாதனை செய்வதெப்படி என்பதை அறிவித்தார்.

பிரசங்கம் முடிந்தபின் தம்முடைய கையாலேயே சுவாமிகள் அங்கிருந்தவருக்கு பிரசாதங்கள் கொடுத்தார்.

அங்கிருந்து பாட்னா ஏ. ஐ. ஆர். ஸ்டேஷனுக்குப் போய் ஒலிபரப்பில் பேச்சும் கொடுக்கப்பட்டது.

மாலை 2-30 மணிக்கு பெரிய உத்தியோகஸ்தர்களுக்கு பேட்டி அளிக்கப்பட்டது. அதன் பின் தயானந்தா ஹைஸ்கூலில் மாணுக்கர்களுக் கென்று ஒரு சொற்பொழிவு அளிக்கப்பட்டது. அங்கே "ஓம்" என்னும் மந்திரம் உரக் கச் சொல்லப்பட்ட பின் சில நிமிஷங்கள் எல்லோரும் தியானத்திலும் இருந்தார்கள். இவை முடிந்தபின் மாணவர்களுக் கேற்றவாறு சுவாமிகள் பேசினார். ஜபத்தின் முக்கியத்தையே எடுத்துச்சொன்னார், ஸ்வபாவம நன்றாக

இருக்கவேண்டும என்று வற்புறுத்தினார். சில இங்கிலீஷ் பாடல்கள பாடப்பட்டன. கீர்த்தனத்துடன் பிரஸங்கம் முடிவு பெற்றது.

பின்பு தயானந்தா பெண்கள் பள்ளியில் நூற்றுக்கணக் கான பெண்மணிகளுக்கும் குழந்தைகளுக்கும் ஸ்வாமிகள் தரிசனம அளித்தார் அங்கேயும ஸங்கீர்த்தனமும் பிரசஙகமும நடைபெற்றன.

## ஹாஜிப்பூர்

ஸெப்டம்பர் 18உ காலை பாட்னுவிலிருந்து ஹாஜிப்பூ ருக்கு மோட்டார் லாஞ்சு மூலம யாத்திராமண்டலி போய்ச் சேர்நதார். அங்கே காலை 9-30 மணிக்கு போனபொழுது சுமார் 5,000 ஜனங்கள் காத்துக்கொண்டிருந்தார்கள். ஊர் வலம மிகவும் மும்மரமாய் இருந்தது. ஐந்து யானைகள், 200 ஸ்கௌட்டுக்கள், இரண்டு லாரிகளில் போலிசார், கார் கள் முதலியன வந்திருந்தன, சுவாமிகள் உமாகாந்த சுக்லா வீட்டில் இறங்கினார். எல்லோரும் அங்கேதான் சுவாமி களை வணங்கினார்கள். அருகிலேயிருந்த ஒரு சினிமாக் கொட்டகையில் பிரசங்கம், ஆஸனககாக்ஷி முதலியன நிகழ்நதன. பிரசங்கத்தில் சுவாமிகள் ஸங்கீர்த்தனத்தின் அத்யாவசியத்தைப் பற்றியே பேசினார். சிறிது கீர்த்தனங் களும செய்தார். பின்பு யோகம் என்பது என்ன வென்று பேசி யோகத்தின் பல்வேறு வகைகளையும் பிரிவுகளையும் எடுத்துக்காட்டினா. இறுதியில் ஸதாச்சாரம் என்பதைப் பற்றி வெகுதெளிவாகப் பிரசங்கித்தார்.

பிரசங்கம் முடிந்த பின்பு யாத்ராமண்டலி லாஞ்சி லேறிப் பாட்னுவுக்குச் சென்றது.

## கயா

ஸெப்டம்பர் 19ஆ மண்டலி கயாவை அடைந்தது. சுவாமிகள் மாலைகளால் சூடப்பட்டார். ஸ்டேஷனுக்கு வெளியே புஷ்பத்தால் அலங்கரிக்கப்பட்ட ஒரு மோட்டார் கார் காத்திருந்தது. அதன் மூலம கயா வாசியான ஸ்ரீ காசிநாத் ஸின்ஹா வீட்டில் சுவாமிகள் வரவேற்கப்பட்டார். அங்கு போனவுடனேயே ஸத்ஸங்கம ஆரம்பமாயிற்று அன்று மாலை 5-30 மணிக்கு ஸமஸ்கிருத வித்யாலயத்தில் சுவாமிகள் ஹிந்தியிலும இங்கிலீஷிலும் பேசினார். 'யாக்கை' நிலையாமையைப் பற்றிக் கூறிய அறிவுரையே அந்தப் பிரசங்கம். உடம்பு அழியப்பட்டது என்று கூறும் பொழுது ஆத்மன் அழிவற்றது என்று சொல்ல வேண்டியதாயிற்று. அப்பொழுது ஆத்மாவைப் பற்றிய யாவும் விளக்கப் பட்டன. ஆத்ம ஞானம் பெறுவதற்காக சங்கராச்சாரியா கூறியுள்ள ஸாதன சதுஷ்டயம் விளக்கப்பட்டது. அதைசசொல்லப் புகுந்தபொழுதுசுவாமிகள் உபநிஷத்துக் களின் நுட்பங்களை எடுத்துக் காட்டினார்.

ஸெப்டம்பர் 20ஆ சுவாமிகள் புத்த கயாவுக்குப் போனார். அங்கு ஸத்காரம் பெற்றுத்திருமபின பின் கயாவிலே ஜவஹாலால் ஹாலிலே வேறொரு சொற்பொழிவு நடத்தினார். அப்பொழுது அவா சொன்ன மஹா மந்தி ரத்தை, கூட்டத்திலுள்ள எல்லோரும் அவருடன் சொன் னார்கள். ஜனங்களின் உத்சாகத்தைக்கண்டு சுவாமிகள அடுக்கடுக்காய் பல கீர்த்தனங்களைச்சொல்ல ஆரம்பித்தார். அதன பின் கடவுள் எப்படி நமமைப் பல ஆபத்துக்களி லிருந்தும் காப்பாற்றுகிறார் என்று விவரித்தார். பின்பு சிறிது சிறிதாக ஞானமார்க்கம, பக்திமார்க்கம், முதலிய

மார்க்கஙகளைப் பற்றிப் பேசி வேதாந்த தத்துவங்களின் அநதரங்கங்களை யெல்லாம் கூறினூர். சொற்பொழிவு மிகவும் தெளிவாக இருநதமையால் ஜனங்கள் நிசப்தமாக யிருநது முடிவுவரையில் கேட்டார்கள்.

ஸெப்டம்பர் 21உ காலை 9 மணிக்கு சுவாமிகள் ஸ்ரீ சிவப்ரஸாத், ஸ்ரீ ராம்மனோரதர் என்னும் இரு அன்பர் கள வசிக்கும வீட்டுக்குப்போனூர். அவ்விருவரும தங்கள் வீட்டின் உச்சியில் ஒரு சிவாலயம் கட்டி யிருந்தார்கள். சுவாமிகள் மூலம சிவனைப் பிரதிஷ்டை செய்யவேணும் என்று ஆசை கொண்டிருந்தார்கள். சுவாமிகள் அஙகு சென்றபொழுது அவருக்குப் பாத பூஜை முதலிய உபசாரணைகள் நிகழ்நதன. பின்னர் சிவனுக்கு அபிஷேகம் செய்து, அர்சசனை முடிந்தது. புதிதாகச் செய்திருநத சிவ லிஙகத்தை அங்கே பிரதிஷ்டை செய்தார்

அதன் பின கங்கா மஹாலில் ஒரு ஸத்ஸங்கம் நடை பெற்றது. அபபொழுது சுவாமிகள் தியானத்தைப் பற்றி விவரித்தார். கூட்டத்திலிருநத சிலருக்கு இங்கிலீஷ் விளங்காமலிருந்ததால், சிதானநத சுவாமி அசசொற் பொழிவை ஹிந்தி பாஷையில் மொழி பெயர்த்துப் பேசினூர்.

பின் கயாக் கல்லூரி மாணுக்கர்களுக்காக ஒரு பிரஸங்கம் நடந்தது. வெய்யில் மிகவும் அதிகமாகத் தீய்ந்து கொண்டிருந்தது. எனினும் போதகாசிரியர்களும் மாணுக் கர்களும் சுவாமிகள வரவை வெகு ஆர்வத்துடன் எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள. பிரசங்கம் செய்பவர் பேச்சைக் கவனமாகக் கேட்க வேண்டும் என்றும், இளமைப் பருவத்திலேயே ஆண்டவனை வழிபடப் பழக வேண்டு

மென்றும், மனிதனுடைய புத்தியினாலேயே எல்லா உண்மைகளையும் அறிந்து விடுவது சாத்தியமல்லவென்றும், உடம்பை நோய்களினின்று காப்பாற்றிக் கொள்ள யோகாஸனப் பயிற்சி அவசியமென்றும், சூரிய நமஸ்காரத்தால் அடையக் கூடிய பயன் மிகப்பெரிதென்றும், வெப்பம், தண்மை, என்னும் இரண்டையும் பொறுக்கப் பழக வேண்டுமென்றும் போதித்த பின் ஓங்காரத்வனியின் சக்தியையும் மேன்மையையும் எடுத்தோதினார். அப்பிரசங்கத்தில் இன்னும் அநேக நுண்ணிய விஷயங்கள் அடங்கியிருந்தன. அவற்றைக் கேட்டவர் மிகப்பயன் பெற்றவரானார்கள்.

சொற்பொழிவு முடிந்தபின் திவ்ய ஜீவன சங்கத்து நண்பர் சிலரைப் பார்த்துவிட்டு சுவாமிகள் ரெயில்வே ஸ்டேஷனுக்கு மாலை 7 மணிக்கு வந்து சேர்ந்தார். 9 மணிக்கு வண்டி புறப்படப் போகின்றதென்று தெரிந்திருந்த பலர் ஸ்டேஷனில் வந்து குவிந்து விட்டனர். அங்கே சுவாமிகள் பாதத்தைப்பிடித்துத் தத்தம் சிரங்களில் வைத்துக் கொள்ளவேண்டும் என்ற எண்ணத்துடன் கூட்டத்துக்குள்ளே நெருக்கிச் சென்றவர் தொகை கணக்கிட முடியவில்லை. தமக்கு இதனால் ஏற்பட்ட துன்பங்களையெல்லாம் பொறுத்துக்கொண்டு சுவாமிகள் அந்நேரத்திலெல்லாம் மஹா மந்திரமும் ராம மந்திரமும் உரக்கச் சொல்லிக்கொண்டே யிருந்தார். இறுதியில் வண்டி நகர்ந்தது. ஓங்காரத்வனி முழங்கிற்று.

## கல்கத்தா

ஸெப்டம்பர் 22உ யன்று சுவாமிகள் கல்கத்தாவை அடைந்தார் அங்கே அவருக்கு அளிக்கப்பட்ட வரவேற்பு ஒரு சக்கரவர்த்திக்கு அளிக்கக் கூடும் வரவேற்புக்கு

நிகராக இருந்தது. எனினும் ஒரு விஷயத்தில் மாத்திரம் வேற்றுமை யிருந்தது. இங்கே தனவான் ஏழை என்ற பேதம் காணப்படவில்லை ஒரு ஞானியின பால் அனை வரும ஒரே மாதிரி வைத்த பகதியே அதற்குக் காரணம. சுவாமிகளா கழுத்திலேறின மாலைகளுக்குக் கணக்கே இலலை. "ஜேய்" கூற்றின் ஒலி வானம் வரை பாய்ந்தது.

ஸ்ரீ ஸ்வாமிகள் தங்குவதற்காக கங்கைக் கரையில் ஒரு பெரிய பங்களாவை ஸ்ரீ காசிராம குப்தா அவர்களா ஏற் படுத்தி யிருந்தார். கங்கையைப் பார்த்ததும் ஸ்வாமி களுக்கு ஆனந்தம் பொங்கிற்று. எதிரில் தக்ஷிணேசுவரர் கோயிலும் இருந்ததால் இன்னும் அதிக சந்தோஷம் உண்டாயிற்று.

ஸ்வாமிகளா வநது சேர்ந்த சில நிமிஷங்களுக்கெல்லாம் ஆண் பெண் சிறுவர் பெரியோர் என்று நூற்றுக்கணக் கான ஜனங்கள் வரத்தொடங்கிவிட்டார்கள். தரிசனம் கிடைத்தவர் போனால் அவரிருநத இடத்துக்கு வேறு கூட்டம வநதுவிடும். ஸ்வாமிகளும் கீர்த்தனம் செய்து கொண்டும் ஓய்வு எடுத்துக்கொண்டும் தரிசனம் அளித்துக் கொண்டிருநதார்.

இப்படிக் கொஞ்சம் நேரம் சென்றபின் ஸ்வாமிகள் கல்கத்தா ஸர்வகலாசாலையில் பிரஸங்கம் செய்யப் புறப் பட்டார். மார்க்கத்தில் காசிராம் குப்தாவின் அச்சுச் சாலையைப் பார்வையிட்டார். அஙகேயும் கீர்த்தனம் செய் தார் சிறிது ஓய்வும் ஏற்றுக்கொண்டார்.

ஸர்வ கலாசாலையிலே ஆஷுடோஷ் ஹாலுக்குச் சென்றபோது ஸ்ரீ என். ஜி. கோஷ் சுவாமிகளுக்கு மற்ற போதகாச்சாரியார்களை அறிமுகப்படுத்தினர். கூட்டமும்

ஆரம்பித்தது. பிரார்த்தனையும் ஓங்கார உச்சரிப்பும் முடிந்தபின் சுவாமிகள் பிரசங்கத்தைத் துவக்கினார். வழக்கம போலவே அச் சொற்பொழிவு வேதாந்த விஷயமாகவே யிருந்தது.

ஸெப்டம்பர் 23உ காலை கல்கத்தா வாசிகளான அன்பர்கள பலரும் சுவாமிகளை வந்து கண்டனர். மாலை அகில இந்திய ரேடியோ ப்ராட்காஸ்டிங் ஸ்டேஷனுக்குப் போய்ப் பார்வையிட்டார். அங்கேயிருந்த டைரக்டர் முதலியோர் சுவாமிகளைத் தகுந்தபடி ஸத்காரம் செய்தார்கள். அதன் பின் சுவாமிகளுடைய சில பாடல்கள அங்கே ஒலிப்பதிவு செய்யப்பட்டன.

அதன்பின் ஸ்ரீ சுவாமி விசுத்தானந்த ஸரஸ்வதி வித்யாலயததிலே ஒரு பொதுக்கூட்டம கூடிற்று. அஙகே சில ஆசசாரியார்கள் சுவாமிகளைப் பற்றிய புகழ்மொழிகள் கூறினார்கள். அவர்களுக்குள் ஸ்ரீ முகுந்த மாளவியாஜி கூறியது சுவாமிகளின் தபோ மகிமையைப்பற்றியதாயிருந்தது. தறகாலத்திலே சுவாமிகள் செய்துவரும தொண்டு மிகவும் சிறபபுற்றதும் மிகவும அவசியமானதும் ஆகும என்று அவா சொன்னார.

சுவாமிகள் செய்த பிரசங்கத்தில் ஈசுவர நாமத்தின் மகிமை பெரிதும எடுத்துக்காட்டபபட்டது சிரததையும் ஸேவா பாவமும் அதிகபபட்டு கீர்த்தனை செய்து வர வேண்டுமென்றும், வேதாந்த விசாரம் பயில வேண்டுமென்றும அப்பொழுதுதான் உலகம் ஆனந்தத்திலிருநது தோன்றி யிருக்கிறதென்ற உண்மையை அறியக்கூடுமென்றும் சுவாமிகள் பல உதாரணங்களுடன் விளக்கிக் காட்டினார். அதன்பின் ராமநாமம் சொல்லப்பட்டது.

தெய்வீக குணங்களை எப்படிப் பெற்றுக் கொள்வதென்றும் அறிவித்தார். எப்படி தெய்வ அனுக்கிரகமும் அருளும் நினைக்கமுடியாத பலவிதங்களிலும் தோன்றுமென்றும் அறிவித்தார். துன்பங்கள் யாவும் வைராக்யத்தை வளர்த்து வதற்காகவே வருகின்றன என்று உணர்த்தினார். துறவின் மேன்மையையும் எடுத்துக்காட்டினார்.

பிரஸங்கம் முடிந்தபின் சுவாமிகள் ஸ்ரீ பால பக்ஸ ஸிங்கானிய என்னும் ஒரு அன்பர் வீட்டிற்குப் போய் அங்கே அவருடைய மனைவியின் நோய் தீர்வதற்காகக் கீர்த்தனமும் மிருத்தியஞ்ஜய ஜபமும் செய்தார்.

ஸெப்டம்பர் மீ 24௳ கல்கத்தாவிலுள்ள ஸீதாராம் ஆலயத்துக்கு சுவாமிகள் போனார். அங்கே பெண்மணி களுக்காக ஒரு கூட்டம் கூட்டப்பட்டிருந்தது. அதில் சுவாமிகள் ஒருமணிநேரம் வரையில் ஹிந்தி, பஞ்சாபி, தமிழ், முதலிய பாஷைகளில் கீர்த்தனம் செய்தார். ஸ்திரீ களும் கீர்த்தனங்களில் கலந்துகொண்டார்கள்.

அதன்பின் பாலிகஞ்சிலே பாரதி தமிழ்ச்சங்கத்தில் தென்னிந்தியர் குழாம் ஒன்று கூடிற்று. அங்கே சுவாமிகள் தமிழிலேயே ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார். தாமே இயற்றியிருந்த பல தமிழ்ப் பாடல்களையும் பாடினார். பிரசங்கவிஷயம் பரமாத்மாவைப்பற்றியதாயிருந்தது. இடை யிடையே வேடிக்கையாகவும் பெரிய உண்மைகளைக் கூறினார். உதாரணமாக, "அங்கே ப்ளாக் மார்க்கெட்டில்லை. ஹோட்டல் இல்லை. க்ளப் இல்லை! அங்கே மோனம் ஒன்று தான் உண்டு. வெறுப்பெல்லாம் தாண்டிச்சென்ற பேரன்பு தான் உண்டு" என்றார். வாசனைகளையும திருஷ்ணைகளையும் எப்படி வெல்வதென்று போதித்தார். துக்காராம் ஒரு

நாயினிடம் தம்முடைய இஷ்டதெய்வமான விட்டலைக் கண்டகதையைக் கூறினார். பக்தியின் மேன்மையையும் நிஷ்காம்ய சேவையின் பெருமையையும் பற்றிபேசினார். பிரஸங்கம் நடந்துகொண்டிருந்தபோதே மழை பெய்து கொண்டிருந்தது. பலர் நனைந்துகொண்டிருந்தார்கள். ஆனாலும் ஒருவரும் மழையைப் பொருட்படுத்தவில்லை.

பின்பு பாலிகஞ்சில் தங்கியிருந்த ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரியாரை சுவாமிகள் தரிசித்தார். அதன்பின் ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றார். அங்கே கூடியிருந்த நண்பர்களைவிட்டு பிரிவது மிகவும் கஷ்டமாய் விட்டது. எனினும் வண்டி இரவு $7\frac{1}{2}$ மணிக்குப் புறப்பட்டுவிட்டது.

## வால்டேர்

ஸெப்டம்பர் 25உ பகல் பன்னிரண்டரை மணிக்கு ரெயில் வால்டேர் ஸ்டேஷன் வந்து சேர்ந்தது. சூரியன் கொடுமையாகக் காய்ந்துகொண்டிருந்தது. அதையும் பாராட்டாமல் ஸ்டேஷன் ப்ளாட்பாரம்முழுவதும் ஜனங்கள் சுவாமிகள் வரவை எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருந்தார்கள். பூர்ணகும்பம், வேதபாராயணம் முதலியன தென்னிந்தியா வந்துவிட்டதென்று அறிவித்தன. திவ்ய ஜீவன ஸங்கத்துக் காரியதரிசி ஸ்ரீ ஜி. ஆர். ஸுப்ரமணியம் பூரண கும்பத்தைத் தம் தலைமீது வைத்துக்கொண்டு முன் செல்ல, யாத்ரா மண்டலி பின் சென்றது. திவ்ய ஜீவன ஸங்கத்துக் கட்டடத்தில் சுவாமிகளுக்குப் பாதபூஜை நடந்தது. வெளியிலிருந்த கூட்டத்தை ஒழுங்குபடுத்தி ஒவ்வொருவராக உள்ளே அனுப்பி சுவாமிகளைத் தரிசனம் செய்ய வைத்தமையால் குழப்பமில்லாமல் ஜனங்கள் அனைவரும்

சுவாமிகளைத் தரிசிக்க முடிந்தது. இந்தக்காரியம் முடிந்த பின்பு சுவாமிகள் தம்முடைய யாத்திரை வண்டிக்கே வந்து விட்டார்.

மாலை ப்ரேமா ஸமாஜத்துக்குப் போனார். சிறு பையன்களும் பெண்களும் வரிசையாக நின்றுகொண்டு சுவாமிகளுக்கு வழிகாட்ட, ஸமாஜத்து நண்பர்கள் வெகு அழகாக வரவேற்புக் கொண்டாட்டத்தை நடத்தினார்கள். அங்கே காப்பாற்றப்பட்டு வரும் அனாதைகளை சுவாமிகள் பார்வையிட்டார். அவர்களுட் சிலரிடம் சென்று பேசி அவர்களை ஈசுவரநாமம் ஜபிக்கும்படி சொன்னார். அதன் பின் அந்த ஸமாஜக் காரியதரிசியான வைத்யரிடம் சில மொழிகள் கூறினார். அப்பால், பெண்மணிகள் பிரார்த்தனை நடத்தினார்கள். அது முடிந்ததும் சுவாமிகள் தம பிரசங்கத்தை ஆரம்பித்தார்.

“நோயாளிகளுக்குச் செய்யும் கைங்கரியத்துக்கு மேலான எந்த யோகமும் இல்லை” என்று ஆரம்பித்து ஒவ்வொருவரிடத்தும் கடவுளைக் காணவேண்டும், என்ற உண்மையையும், தானதர்மம் செய்வதாலேயே உள்ளம் பரிசுத்தமாகும் என்பதையும், அப்படிச் செய்து வருவாரை யொரு காலத்திலும் கடவுள் கைவிடமாட்டார் என்பதையும் பல அத்தாட்சிகளுடன் எடுத்துக் காட்டினார். கீர்த்தனம் ப்ரேமஸமாஜத்தின் ஒரு நித்திய கர்மமாயிருப்பதைக் கண்டு மகிழ்ச்சியுற்றார். அவித்யை விலகுவதற்குக் கர்ம யோகமும் பக்தியோகமும் மிகவும் அவசியமென்று தெரிவித்தார்.

இந்நிகழ்ச்சிகளுக்குப்பின் ஸர்வ கலாசாலைக்குச் சென்றார். அங்கே மிகவும் சிறப்புற்ற பிரசங்கம் ஒன்று

நடத்தினுர். அதன் முடிவில் டவுன் ஹாலுக்குப் போய் அங்கேயும் ஒரு சொற்பொழிவு அளித்தார். கூட்டம மிகவும் அதிகமாயிருநதாலும் சுமார் இருபது ஊழியர்கள் வழிகாட்டி வந்ததால் சுவாமிகள் போகமுடிநதது. அங்கே பேசினவற்றுள் சிறந்தவை, கலிகாலத்தில் ஸங்கீர்த்தனம ஒன்றே எளிய தெய்வமார்க்கம் என்பதும், ஆகாராதிகளைக் குறைப்பதே சாதனைகளின் முதற்படி என்பதும், கடவுள் அனநத ஆனநதம் என்பதும், இகத்திலும் பரத்திலும் இன்பம அளிக்கக்கூடியது தெய்வ வழிபாடு என்பதும், சாதனைகள் செய்து வநதாலன்றி மகாபுருஷனுக முடியா தென்பதும், இக்காலத்தில் நிர்ப்பய தீரர்கள் தேவை யென் பதும், அப்படிப்பட்டவா கடவுள் பால் நம்பிக்கை வைததாலல்லாமல தஙகள பயத்தை அறவே யொழிப்பது அசாத்திய மென்பதும் போன்ற, பல கருத்துக்கள். தீக் குணஙகளைச் சிறுகசசிறுக ஒழிததுப் பழகுவதற்கு உதவி யாக பல சிறு சாதனைகளை அறிவித்தார். இறுதியில் மகா மநதிரஜபமும் ராம ஜபமும் எலலாரும் கலந்து செய்தார் கள். அதன்பின் கூட்டம் கலைந்தது.

ஸெப்டம்பர் 26உ காலை 6 மணிக்குப் புறப்பட்டு வால்டேரிலேயே யுள்ள சாநதி ஆச்சிரமத்துக்குப் போனுா. அவ்வாச்சிரமத்தை ஸ்தாபித்துள்ள ஸ்ரீ ஸ்வாமி ஓங்கார் என்பவர் சிவானந்த சுவாமிகளுடைய பழைய நண்பர்களுள் ஒருவர். ஓஙகாரசுவாமிகள் பேர்பெற்ற யோகீசுவரர். பல நன்மைகள் அஙகே செய்து வருகிருர். தீராநோய்களை யோகத்தால் நீக்குகிருரென்ற நம்பிக்கை அங்குள்ள ஜனங்களுக்குண்டு. சிவானந்த சுவாமிகள் அநத ஆச்சிரமத்தில் மிகுந்த அன்புடன் வரவேற்கப்பட்டார். அங்கே தங்கியிருநத இரண்டுமணிநேரம் கீர்த்தனை செய்து

கொண்டும் நன்மொழிகள் கூறிக்கொண்டும் இருந்தார். பின்பு ஸ்ரீ ஓங்கார சுவாமிகளிடம் விடைபெற்றுப் பிரிந்தார்.

அருகாமையில் கடல் இருந்தமையால் அங்கே ஆனந்தமாக ஸ்நானமும் செய்தார். அதன்பின் வேறொரு மாளிகையில் தங்கி அங்கே தம்மைக் காண வந்தவர்களுக்குத் தரிசனம் கொடுத்தார். சிலர் பாதபூஜைகள் செய்தார்கள்; இச் சடங்குகள் நடந்தேறியபின், மகாமந்திரம், ராமநாமம், பிரணவகீர்த்தனம் ஆகிய யாவும் நிகழ்ந்தன. அப்பால் சில வேதாந்தக் கீர்த்தனைகளை சுவாமிகள் பாடினார். இவை முடிந்ததும் அநேகம்பேர் பற்பல மந்திரங்களை தீக்ஷையாகப் பெற்றுக்கொண்டார்.

பின்பு, ரெயில்வே ஸ்டேஷனுக்குப்போய் ராஜமஹேந்திரத்துக்குப் பிரயாணம் செய்தார். வண்டி புறப்பட்ட பொழுது ராமநாமம் முழங்கிற்று.

## இராஜ மகேந்திரம்

ஸெப்டம்பர் 26ௗ மாலை 5 மணிக்கு சுவாமிகள் இராஜ மஹேந்திரம் வந்து சேர்ந்தார். அங்கே சுவாமிகளுக்கு அளிக்கப்பட்ட வரவேற்பைப் பார்த்தால் பண்டைக்காலத்தில் அயோத்யாவில் வஸிஷ்டருக்கும், விதேஹத்தில் யாக்ஞவல்கியருக்கும் அளித்திருக்கக்கூடிய வரவேற்பு எப்படி இருந்திருக்கும் என்று யூகிக்கக்கூடிய வகையிலிருந்தது. வேதம் ஓதும் கோஷ்டியார் பூர்ண கும்பத்தோடும் மந்திரங்களோடும் அழைத்து முன்நிற்க, மாலை சாத்துவோர் ஒருவர் பின் ஒருவராய் சாத்திவர, தெருவெல்லாம் நிறைந்து பக்தகோடிகள் ஆரவாரத்தோடு நல்

வரவு கூறும் மொழிகளைச் சொன்னார்கள். இதனிடையே நாதஸ்வரமும் வாசித்துக்கொண்டிருந்தது. சுவாமிகள் மீது ஜனங்கள் வந்து விழாதபடி ஸ்டேஷனிலே ஒரு பாதுகாப்புக் கோஷ்டியும் இருந்தது.

ஸ்டேஷனிலேயே பற்பல கனதனவான்கள் சுவாமிகளை வந்து பார்த்தார்கள். அவர்களுக்குள் பிரதானமாகக் கூறக்கூடியவர் கோதமி ஜீவகாருண்ய ஆச்சிரமத்தைச் சார்ந்த ஸ்ரீ காருண்யானந்தர் என்பவர். ஊர்வலம் சென்ற பொழுதெல்லாம் இந்த சுவாமிகள் மோட்டார் காரின் புட்போர்டில் நின்றுகொண்டே "ஸ்ரீ—ஸ்ரீ சிவானந்த மகாராஜ்-கி-ஜெய்" என்று உரக்கக் கூவிக் கொண்டே வந்தார். ஊர் முழுதும் பற்பல ரஸ்தாக்கள் வழியாக ஊர்வலம் சென்றபொழுது அந்நகர வாசிகளுக்கு சுவாமிகள் தரிசனம் கிடைத்தது. இதற்காகவே அவ்வூர் வலம் ஏற்படுத்தப்பட்டிருந்தது. அயல் ஊர்களிலிருந்தும் லக்ஷக்கணக்கான ஜனங்கள் இராஜமஹேந்திரத்துக்கு வந்திருந்தார்கள்.

ஊருக்குள் செல்லும் மார்க்கத்தில் கோதாவரி காணப்பட்டது. அத்திவ்ய நதியைப் பார்த்ததுமே சுவாமிகள் கண்மூடி மௌனமாகத் தியானத்திலமர்ந்தார். பற்பல இடங்களில் வரவேற்புப் பந்தர்கள் நிறுவப்பட்டிருந்தன. அரசாங்கக் கல்லூரியில் பொதுக்கூட்டம் கூடிற்று. அக் கல்லூரியிலும் மற்ற இடங்களிலும் சுவாமிகளின் வாக்கியங்கள் கொட்டையெழுத்துக்களில் அழகாக எழுதப்பட்டிருந்தன. அவற்றுள் சில, "நற்குணம் பயின்று தீக்குணமொழிமின்," "ஸேவை செய், அன்புகாட்டு, கொடு. சுத்தனாயிரு, த்யானம் செய், அனுபூதி பெறு" என்பவை.

இப்படி அவ்வூரிலுள்ள முக்கியமான கூட்டங்களிலெல்லாம் சுவாமிகளுடைய நற்கூற்றுக்கள் பலகைகளில் எழுதப்பட்டுத் தொங்கவிடப்பட்டிருந்ததானது; அவ்வூரார் சுவாமிகள் பால் வைத்திருந்த அன்பை வெளிப்படுத்திற்று.

யாத்ராமண்டலி தங்கவேண்டிய மாளிகையில் சுவாமிகள் வந்தபொழுது அவரைப் பார்க்கவந்த கூட்டத்துக்குக் கங்கு கரையில்லை. ஒவ்வொருவரும் சுவாமிகள் பாதங்களைத் தொடவேண்டும் என்று ஆசைப்பட்டதால் ஒருவர்மீது ஒருவர் விழுந்து மோதிக்கொண்டனர். அக்கூட்டத்தை அடக்கமுடியவில்லை. வெகு பிரயாசையுடன் சுவாமிகளுக்கு அபாயமொன்றும் நேராதபடிப் பார்த்துக்கொள்ளப் பட்டது.

அரசாங்கக் கல்லூரி மைதானத்திற் கூடிய ஜன சங்கியை பல்லாயிரம் என்றே சொல்லமுடியும். சூப்பெரிண் டெண்டிங் எஞ்சினீயர் ஸ்ரீ சேஷாவதாரம் என்பவர் சுவாமிகளைப் பற்றிச் சில வார்த்தைகள் பேசினபின்பு சுவாமிகள் தம்முடைய பிரசங்கத்தை ஆரம்பித்தார். அவர் பேசியவை யாவும் வேதாந்தத்தின் அந்தரங்க உண்மைகளும், அவற்றை அனுபவத்துக்குக் கொண்டு வருவதற்கேற்ற உபாயங்களுமாகவே யிருந்தன இடையிலும் இறுதியிலும் கீர்த்தனங்களும் நாம உச்சாரணமும் நடைபெற்றன. சுவாமிகள் பேச்சு அவ்வூராருக்கு ஓர் ஆனந்தமழை போல இருந்தது.

பிரசங்கம் முடிவுற்றபின் சுவாமிகள் இராமகிருஷ்ண ஸேவாஸமிதிக்குச் சென்றார். அங்கு கூடிய ஜனங்களின் சங்கியையும் எண்ணிக்கையற்றதாயிருந்தது. ஸ்ரீ இராம

கிருஷ்ணா சிலையின் அருகே போனதும் சுவாமிகள் சில நிமிஷநேரம் தியானத்தில் ஆழ்ந்தார். அதன்பின் அங் கிருந்த புத்தகசாலை, வைத்தியசாலை முதலியவற்றைப் பார்வையிட்டார். பின் வெளியே வந்து அங்கே அமைக் கப்பட்டிருந்த பந்தலில் புகுந்து சொற்பொழிவொன்று அளித்தார். கூடியிருந்த ஜனங்கள் யாவரும் சுவாமிகள் கூறியவற்றை முற்றிலும் தெரிந்துகொள்வதற்காக ஸ்ரீ மந்தாரி பங்காரய்யா என்பவர் சுவாமிகளின் பிரசங்கத் தைத் தெலுங்கு பாஷையில் மொழிபெயர்த்துக் கூறி வந்தார். அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவர் சுவாமிகளுடைய சரிதையைப் பற்றியும் சிறிது கூறினார்.

அங்கே ஒரு ஹார்மோனியம் வைக்கப்பட்டிருந்ததைக் கண்டு சுவாமிகள் அதையெடுத்து பஜனையும் கீர்த்தனமும் ஆரம்பித்துவிட்டார். அவர் எடுத்துக் கொடுத்த தொனி யைப்பின்பற்றிப் பாடினவர் நூற்றுக்கணக்கான பேர்கள். அப்பொழுது ஈசுவர நாமம் பந்தரெங்கும் முழங்கிற்று. சிறிது நேரம் சென்றதும் சுவாமிகள் இருதொகுதிக் கீர்த் தனம் துவக்கினார். அதாவது பெண்டிர் எல்லாரும் ஒரு கூற்றுக்கூற, அதற்கு எதிர்க் கூற்றாக ஆண்மக்கள் கூற வேண்டியது. இப்புதுமையை அவ்வூரார் மிகவும் மெச்சி னார்கள். கூட்டம் கலையும் பொழுது இரவு மணி 10—45.

மறுநாள் காலை (27-9-50) சுவாமிகளுடைய கோதா வரி ஸ்நான ஊர்வலம் விடியற்காலை ஆரம்பமாயிற்று. கங்கா ஜலம் கொண்ட வெள்ளிக் குடத்தை ஒருவர் ஏந்திச் சென்றார். முன்னே நாதஸ்வர கோஷ்டி சென்றது. அவர்களுக்குப் பின் வேதபாராயண கோஷ்டி. அவர்களுக்

குப் பின் பஜனைகோஷ்டி. இறுதியில் சுவாமிகள் இப்படியாக இரண்டு மைல் தூரம் ஊர்வலம் சென்றது. இதுவே தருணமென்று தெரிந்த இராஜ மஹேந்திர வாசிகள் இக்கூட்டத்தில் ஆங்காங்கு கலந்துகொண்டனர். அவர்களுக்கு சுவாமிகளின் தரிசனமும் அப்பொழுது கிடைத்தது.

கோதாவரிக்கரையில் அதற்கென்றே அமைக்கப் பட்டிருந்த ஒரு பந்தரில் சுவாமிகள் அமர்ந்தார். சாஸ்திரிகள் சிலர் சுவாமிகளைப் பூஜை செய்தார்கள். ருத்ரம், சமகம், புருஷஸூக்தம், ஸ்ரீ ஸூக்தம் முதலிய மந்திரங்கள் உச்சாரணம் செய்யப்பட்டன. கோதாவரி அஷ்டோத்ர சத நாமவாளியைச் சொல்லி சுவாமிகள் அர்ச்சனை செய்தார்.

அச்சமயம் பலர் வந்து கோதாவரி நீரால் சுவாமிகள் பாதத்தை அபிஷேகம் செய்தனர். பின்பு அங்கிருந்து மார்க்கண்டேயர் கோவிலுக்குப்போய் சிவபூஜையை முடித்துக்கொண்டு சுவாமிகள் திரும்பினார்.

காலை மணி 8-45க்கு பெண்கள் பள்ளிக்கூடமாகிய வைசிய ஸேவாஸதன ஸம்ஸ்கிருதப் பள்ளிக்கூடத்துக்குப் போய் அங்கே ஒரு சிறு பிரசங்கம் நடத்தினார். அப்பொழுது முக்கியமாகக் கூறப்பட்டது, ஸ்திரீ தர்மம். பெண்மணிகள் பதிவிரதா தர்மத்தைப் பாதுகாத்துக் கொண்டிருந்தால் ஸாவித்ரியைப் போல சகதியும் புகழும் பெறலாமென்று சொன்னார். பெண்கள் செய்யக் கூடிய சாதனைகள் பலவற்றை விளக்கினார்.

பின்பு இராஜமஹேந்திரம் முனிஸிபாலிட்டி ஸ்வாமிகளை வரவேற்றது. அப்பொழுது நிகழ்ந்த பிரசங்கத்திற்கு அக்கிராசனம் வகித்தவர் ஜில்லா நியாயாதிபதியாகிய ஸ்ரீ

வி. எம். திக்ஷிதுலு என்பவர் வரவேற்புப் பத்திரம் முனி ஸிபாலிட்டிச சேர்மன் ஸ்ரீ பி. ஜி. நாகேசுவர ராயரால் வாசிக்கப்பட்டது. சுவாமிகளும் தகுநதபடி பேசினர்.

## கொவ்வூர்

ஸெப்டம்பர் 27உ ஸ்டீம் லாஞ்சில் ஏறிக்கொண்டு கோதாவரியைத் தாண்டிச் சென்று கொவ்வூருக்கு சுவாமி களும் யாத்ராமண்டலியும போய்ச சேர்நதார்கள். கொவ்வூரில வரவேற்றவர் இராமலிங்கேசுவர் ராவ் என்னும் பிரபு. கொவ்வூரிலும் பல்லாயிரக்கணக்கான ஜனங்கள் கூடியிருந்தார்கள். இராமலிங்கேசுவர ராவுக்கு சிவானந்த சுவாமியைக் கண்ட பொழுதுண்டான சந்தோஷம் இவ் வளவு அவ்வளவு என்று கூற முடியாது. அவர் தயாரித் திருந்த மோட்டார்கார் புஷ்பங்களால் முற்றிலும் மறைக்கப் பட்டிருந்தது. தெருவிலும் ரஸ்தாவிலும் குவிநதிருந்த ஜனங்களின் சங்கியை கணக்கிட முடியாததாக இருந்தது. வீடுகளின் கூரைகள் வெண்மாடங்கள் முதலியவற்றிலும், விளக்குமாடஙகளிலும் வழியிலிருந்த மரங்களிலும் மற்ற இடங்களிலும் ஜனங்கள் இருந்தார்கள். போலீஸார் முயற் சியெடுத்துக் கூட்டத்தைத் தடுத்ததினல சுவாமிகள் மீது ஜனங்கள் வீழாமல் சுவாமிகள் காப்பாற்றப் பட்டார்.

அந்த ஊர் பள்ளிக்கூடத்துக்குச் சென்ற பொழுது அஙகேயும் பெருத்த கூட்டம் வந்து சேர்நதிருப்பதாகத் தெரிந்தது. வரவேற்புப் பத்திரிகைகள் இங்கிலீஷிலும், தெலுங்கிலும், ஸம்ஸ்கிருதத்திலும் படிக்கப் பட்டன. ஸ்ரீ கந்தஸாமி என்ற ஜில்லா ஜட்ஜ் சுவாமிகளைப் பற்றிப் புகழ்நது சில வார்த்தைகள் கூறினர். அதன் பின் சுவாமி கள் வழக்கம் போல் கீர்த்தனைகளும் ஓங்கார த்வனியும் சேர்ந்த பிரசங்கம் செய்தார்.

கூட்டம் முடிந்தது. எப்படியோ அவ்விடத்திலிருந்து ஜனங்களைவிட்டு விலகி சுவாமிகள் வெளியே கொண்டுவந்து விடப்பட்டார்.

இராமலிங்கேசுவர ராவ் வீட்டிற்கு வந்ததும் அங்கும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடியிருந்தது, வெளியாயிற்று. அந்தப் பிரபுவும் தம்முடைய வீட்டைத் தேவலோகம் போல அலங்கரித்திருந்தார். ஆயிரக்கணக்கான ஜனங்கள் பாத பூஜைக்காக கையில் புஷ்பங்கள் வைத்துக் கொண்டு காத்து நின்று கொண்டிருந்தார்கள். அரை மணி நேரம் வரைத் தம்முடைய பாதத்தைத் தொடச் சம்மதித்துக் கொண்டு சுவாமிகள் உட்கார்ந்திருந்தார். பின்பு உள்ளே சென்று விட்டார்.

சமையலறையைச் சென்று பார்த்தபொழுது இராமலிங்கேசுவர ராவ் ஆயிரக்கணக்கான ஜனங்களுக்கு விருந்து தயாரித்ததாகத் தெரிந்தது.

சிறிது நேரம் அங்கே தங்கின பின்பு சுவாமிகள் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் திரும்பிப்போனார். யாத்திரா மண்டலியைச் சேர்ந்த சிலர் கூட்டத்துக்குள் அகப்பட்டுக் கொண்டனர். அவர்கள் ஊருக்குள்ளே போய்ப் பார்த்த பொழுது ஒவ்வொரு வீடும் அநேகமாகக் காலியாகவே யிருந்ததை அறிந்தார்கள். வீட்டில் வசிப்பவர் யாவரும் வீட்டைப் பூட்டிக்கொண்டு சுவாமிகளைப் பார்க்கப் போயிருந்தார்கள்.

## விஜயவாடா

ஸெப்டம்பர் 28உ காலை 8 மணிக்கு ரெயில் விஜயவாடாவை அடைந்தது. சுவாமிகளுக்குத் தேக அசௌகரியம் ஏற்பட்டிருந்தது. ஜ்வரமும் இருமலும் இருந்தன.

ஸ்டேஷனில் வந்த கூட்டமோ ஆயிரக்கணக்காகவே யிருந்தது. உயரமான ஓர் ஆஸனத்தில் சுவாமிகளை இருத்தினார்கள். அவா மீது மாலைகள இடப்பட்ட வண்ணமே இருநதன. பின்பு நான்கு குதிரைகள் கட்டின ஒரு வாகனத்தில அவரை அமர்த்தி ஓர் ஊர்வலம புறப்பட்டது. வேத பாராயண கோஷ்டியும், நாதஸ்வரமும, உடன் சென்றன. ஸ்ரீ ஸி. வெங்கட ரெட்டியார் வீட்டில் இறங்கி சுவாமிகள் ஒரு சிறு தர்சன ஸத்ஸங்கம நடத்தினா. வயது மிகுந்த ஒரு ஸம்ஸ்கிருத வித்வான் வரவழைப்புப் பத்திரத்தை ஸம்ஸ்கிருதத்தில வாசித்தார். சுவாமிகள் அதற்கு விடை கூறினார். அப்பொழுது உண்மையான ஆனநதம் ஆத்மானந்தமே யென்றும் அதை ஹிருதயத்திலேயே காண வேண்டும் என்றும் கூறினார். "ஆத்மானுபவம் பெறுவதெப்படி" என்று தெரிந்து கொள்ள வழிகளும் கூறினார்.

பிரசங்கம் முடிந்த பின் ஏ. ஐ. ஆர். ஸ்டேஷன் டைரக்டர் ஸ்ரீ ராமச்சந்திரய்யர் சுவாமிகளை அழைத்துச் சென்று "தர்மம்" என்ற விஷயத்தைப் பற்றி ஒரு சொற்பொழிவை ஒலிப்பதிவு செய்தார் அதன் பின்னர் அக்டோபர் 1 தேதி யன்று ஒலிபரப்பப்பட்டது.

இதனிடைய ஆயிரக்கணக்கான ஜனங்கள் பாத பூஜையும் செய்து பிரசாதமும் பெற்றனா.

பின்பு எஸ். ஆர். ஆர் ஸி. வி. இ. கல்லூரியில ஒரு பெரிய சொற்பொழிவு நிகழ்நதது. பற்பல விஷயங்கள் பேசப்பட்டன. அவற்றுள் முககியமான ஒரு விஷயமும் புகுத்தப்பட்டது. அதாவது கல்லூரி மாணாக்கர் "கமயூனிஸத்தில" கலநது கொள்ளக் கூடாது என்பதே.

கல்லூரிப பிரசங்கம் முடிந்த பின்பு கொத்தக்குடிக் கோவிலில் ஒரு கூட்டம் கூடிறறு. அஙகேயும் ஸ்வாமிகள் பேசினுர். பின்பு ராம்மோஹன் புத்தகசாலையைப் பார்வை யிட்டார். அங்கும் பெருத்த ஜன சங்கியை கூடியிருந்தது.

அதன் பின் ஸமஸ்கிருத வித்தியா பீடத்திற்குச் சென்ருர். அவ்விடத்தில் உபநிஷத்துக்கள் கற்பிக்கப்படு கின்றது.. சுவாமிகள் அநத இடத்திலே சில கீரத்தனேகள் செய்தார். இவையெல்லாம் முடிந்தபின் மறுநாள் காலே 8 மணிக்கு விஜயவாடாவை விட்டு ரெயில் புறப் பட்டது. ராம் ராம் ராம் என்னும் முழக்கம் அங்கே பல மாக இருந்தது.

இரவு பொன்னேரியிலே கடத்தப் பட்டது. மறுநாட் காலேயில் மண்டபி சென்னே ஸெண்ட்ரல் ஸ்டேஷனே அடைந்தது.



# சென்னை

"நேற்று சுவாமிகள் சென்னை வந்து இறங்கினார். ஸெண்ட்ரல் ஸ்டேஷனில் அமோக வரவேற்பு நடந்தது. சுவாமிஜியை ஊர்வலமாக திருவல்லிக்கேணிக்கு கொண்டு போயினர். அவர் பார்த்தசாரதி கோவிலுக்குச் சென்று அங்கே பூஜை செய்தார். பிறகு ராமானுஜ கூடத்தில் நாம சங்கீர்த்தனம் நடத்தினார். அதில் ஏராளமான மக்கள் கலந்துகொண்டனர். அவர் ராமானுஜ கூடத்தில்தான் தங்கியிருக்கிறார். சுவாமிஜி அகில இந்திய சுற்றுப் பிரயாணம் செய்கிறார்.

"சுவாமி சிவானந்தா 1887ஆம் செப்டம்பர் மாதம் 9-ந் தேதி தமிழ்நாட்டில் பத்தமடை என்ற ஊரில் பிறந்தார். இவரது தந்தை எட்டையாபுரம் ஜமீனில் தாசில்தாராக இருந்தார். சுவாமிஜியின் பெயர் குப்புசாமி. அவர் எட்டையாபுரம் ராஜா ஹைஸ்கூலிலும் திருச்சி எஸ். பி. ஜி. காலேஜிலும் வாசித்தார். தஞ்சையில் வைத்ய கல்லூரியில் வாசித்த பின் மலேயா சர்க்கார் சர்வீஸில் சேர்ந்து டாக்டரானார். 1922-ம் வருஷம் இந்தியாவுக்குத் திரும்பியதும் சன்யாச ஆச்ரமத்தை ஏற்று ரிஷிகேசத்தில் காரியாலய மொன்று ஏற்படுத்தினார். யோகம், வேதாந்தம் பற்றி பல புத்தகங்கள் எழுதியிருக்கிறார்." —தினசரி 1-10-50.

"ரிஷிகேசம் "ஆனந்த குடீர்" ஸ்தாபகரும், அகில இந்தியா திவ்ய ஜீவன சபையின் தலைவருமான சுவாமி சிவானந்த சரஸ்வதி அவர்கள் நாளை காலை 7–30 மணிக்கு ஸெண்ட்ரல் ஸ்டேஷன் வந்து சேருகிறார். அங்கு அன்னார் மாலைகள் சூட்டி, வரவேற்கப்படுவார். மங்கள ஹாரத்தி நடக்கும்; வெளி வாசல் வரையில் ஊர்வலம்.

"8-30 மணிக்கு பைக்ராப்ட்ஸ் ரோட் கிழக்குக் கோடியிலிருந்து (கடற்கரைக்கு வெகு சமீபம்) நல்ல தம்பி முதலி தெரு, தேரடித் தெரு, தெற்கு மாடவீதி, துளசிங்கப் பெருமாள் கோவில வீதி, சிங்காரச்சாரியார் தெருக்கள் வழியாக ஊர்வலம். 9-30 மணிக்கு ஸ்ரீபார்த்தசாரதி சுவாமி கோவிலுக்கு சுவாமிகள் விஜயம் செய்து தரிசனம் பண்ணுவார்.

"11 மணிக்கு திருவல்லிக்கேணி சிங்காராச்சாரியார் தெருவில உள்ள ராமானுஜ கூடம் வந்து சேருவார்.

பகல் 12 மணி முதல் 2 வரையில் ஓய்வு.

மாலை 6-30 மணிக்கு மவுண்ட்ரோட் "ஸ்ரீராமா பில்டிங்" ல் உள்ள தென்னிந்திய பத்திரிகாசிரியர்கள் சங்கக் கூட்டத்தில் சுவாமிகள் பேசுவார்.

## திவ்ய ஜீவன சங்கம்

"நாளை பிற்பகல் 2-30 மணிக்கு ஜார்ஜ் டவுன், நெ.39, லிங்கிசெட்டித் தெருவில் உள்ள நர்மதா கிரஹத்துக்கு ஸ்ரீ சுவாமி சிவானந்தா விஜயம் செய்வார். பஜனை நடைபெறும்.

## சிவாஜி வியாய மண்டல்

"சுவாமி சிவானந்தரை வரவேற்பதற்காக 2ந் தேதி திங்கட்கிழமை காலை 7-30 மணிக்கு திருவல்லிக்கேணி பெல்ஸ் ரோடில் உள்ள மண்டல் கட்டிடத்தில் ஒரு கூட்டம் நடக்கும். சுவாமிஜி பேசுவார். மண்டலைச் சேர்ந்தவர்கள் யோகாசனங்களும் இதர பயிற்சிகளும் செய்து காட்டுவார். மண்டல் தலைவர் ஸ்ரீ கே. சஞ்சீவிகாமத் தலைமை வகிப்பார்.

## ஸ்ரீ நிவாஸ காந்தி நிலையம்

"சுவாமிஜியை வரவேற்பதற்காக ஷை ஸ்தாபனத்தின் ஆதரவில அக்டோபர் 1-ந தேதி, ஞாயிற்றுக்கிழமை மாலை 3-30 மணிக்கு தேனாம்பேட்டை, நெ, 96, மோபரீஸ் ரோட்டில் ஒரு கூட்டம் நடக்கும. சுவாமிகளுக்கு திவான் பஹதூர் ஸ்ரீ கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரிகள் அவர்கள் நல்வரவு கூறுவார்கள்."

—சுதேச மித்திரன் 29-9-50

## சுவாமி சிவானந்த சரஸ்வதி சென்னையில் குதூகல வரவேற்பு

ரிஷிகேசிலிருநது யாத்திரையாகக் கிளம்பியுள்ள மண்டலேச்வர ஸ்ரீ சுவாமி சிவானந்த சரஸ்வதி ஆந்திர தேசத்தில் தமது பிரயாணத்தை முடித்துக் கொண்டு இன்று காலை சென்னை வந்து சேர்ந்தார்.

அவரும அவரது கோஷ்டியினரும ஏறிவந்த ரயில் காலை 7-30 மணிக்கு ஸெண்ட்ரல் ஸ்டேஷனை அடைந்ததும் "சுவாமி சிவானந்தஜிக்கு ஜே" என்ற கோஷம் வானைப் பிளந்தது.

சென்னை உபசரணைக்கமிட்டி தலைவர் நீதிபதி ஸ்ரீ ஏ. வி. விச்வநாத சாஸ்திரியும், கமிட்டி காரியதரிசியும், கார்ப்பரேஷன் கவுன்சிலருமான ஸ்ரீ பி. கே. விநாயகமும் உதவிக் காரியதரிசி ஸ்ரீ கே. ஆர். சேஷாத்ரியும், கார்ப்பரேஷன் கவுன்சிலர் ஸ்ரீ எ. ஆர். வி. ஆச்சாரும் இன்னும் பல பிரபலஸ்தர்களும், பக்தர்களும், அபிமானிகளும் ஸ்டேஷனில் கூடியிருந்து சுவாமிஜியை வரவேற்றனர்.

"சுவாமிஜிக்கு மலா மாலைகள் சூட்டினா. பாண்டுவாத யம் 'ஜனகணமன கீதத்தை முழங்கியது. மேள வாத தியம முழங்க ரயிலிலிருந்து சுவாமி அழைத்து செல்லப் பட்டு வெளியில் ஹம்ஸ ரூபத்தில் விசேஷமாக அலங கரிக்கப்பட்டிருந்த மோட்டார வாகனத்தில் அமர்த்தப் பட்டார். பலத்த "ஜே" கோஷங்களுக்கிடையே வண்டி திருவல்லிக்கேணிக்குப் புறப்பட்டது.

## திருவல்லிக்கேணியில் ஊர்வலம்

"நன்றாக அலங்கரிக்கப்பட்ட காரில் இன்று காலையில் திருவல்லிக்கேணி தெருக்கள் வழியாக சுவாமி சிவானந்தா ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டார். திருவல்லிக் கேணி கடற்கரையில் ஊர்வலம் ஆரமப மாயிற்று. காரில் சுவாமிகள் பக்கத்தில் நீதிபதி ஸ்ரீ விஸ்வநாத சாஸ்திரி அமர்ந்திருந்தார். ஸ்ரீ கே. எஸ். ராமசாமி சாஸ்திரிகள் ஸ்ரீ ஆர். வி. கிருஷ்ணய்யர் முதலியோரும் ஊர் வலத்தில் கலந்து கொண்டனர்.

"ஊர்வலம பைக்ராப்ட்ஸ் ரோடு நல்ல தம்பி முதலித் தெரு, தேரடித் தெரு, தெற்கு மாடதெரு, துளசிங்கப் பெருமாள் தெரு, சிருங்காராச்சாரி தெரு, வழியாகச்சென்று ஸ்ரீ பார்த்தசாரதி கோவிலை அடைநதது. ஸ்வாமிகள் அங்கு சுவாமி தரிசனம் செய்தார். 11 மணி சுமாருக்கு அவர் ராமனுஜ கூடத்தை அடைந்து, ஓய்வுக்காக அங்கு தங்கினார்.

"ஊர்வலம் வரும்பொழுது ஜனங்கள் திரளாகக் கூடி சுவாமிகளை தரிசித்தனர். ராஜா ஹனுமந்தலாலா தெரு முனையில் அங்குள்ள சிவன்கோயில் நிர்வாகிகள் பூர்ண கும்பத்துடன் அவருக்கு மரியாதை செய்தனர்.

—சுதேசமித்திரன் 30-9-'50

## தென் இந்தியப் புண்ணிய புருஷருக்கு நகரில் குதூகல வரவேற்பு

சென்னை, செப் 30—இமயமலையில் ரிஷிகேசத்தில் தவம் புரியும் தென் இந்தியப் புண்ணிய புருஷரான மண்டலேசுவர சுவாமி சிவானந்த சரஸ்வதி இன்று காலை சென்னை வந்து சேர்ந்தார். ஸெண்ட்ரல் ஸ்டேஷனில் ஏராளமான பக்தர்களும் ஆஸ்திகர்களும் கூடி சுவாமிஜியை வரவேற்றனர்.

"சுவாமி சிவானந்தரும் அவருடைய ஆசிரமத்தைச் சேர்ந்த 20 பேரும் பொன்னேரியிலிருந்து இன்று காலை சென்னை ஸெண்ட்ரல் ஸ்டேஷனில் வந்து இறங்கினர். நாதஸ்வர இசையுடன் சுவாமி சிவானந்தருக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது. சிவானந்தர் யாத்திரா மண்டலி வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஜஸ்டிஸ் ஏ. வி. விசுவநாத சாஸ்திரியும் மற்றும் பலரும் அவருக்கு மாலைகள் சூட்டினர். ஹிந்து தியாலாஜிகல் உயர்தரப் பாடசாலை தொண்டர்படையினர் ஸ்டேஷனுக்கு வந்து கூட்டத்தைக் கட்டுப்படுத்தினர்.

"திருவல்லிக்கேணி பைக்ராப்ட்ஸ் ரோடின் கிழக்கு கோடியிலிருந்து பார்த்தசாரதி கோயிலுக்கு படகுபோல் அலங்கரிக்கப்பட்ட காரில் சுவாமி சிவானந்தர் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டார். கோயிலில் சுவாமி தரிசனம் முடிந்தவுடன் சிங்கராச்சாரி தெருவில் உள்ள ரமானுஜ கூடத்துக்குச் சென்றார். அங்கு சில நிமிஷங்கள் நாம சங்கீர்த்தனம் நடத்தினர். சுவாமி சிவானந்தர் சென்னையில் 3 தினங்கள் (அடுத்த செவ்வாய்க்கிழமை வரை) தங்கியிருந்துவிட்டு விழுப்புரத்திற்குப் புறப்படுவார்

## வாழ்க்கை வரலாறு

மஹானகளில ஒருவரான மண்டலேசுவரர் சுவாமி சிவானநத சரஸ்வதி ஆத்மீகத் துறையில் மஹா உன்னத நிலையை அடைந்த ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் பரம்பரையில் தோன்றியவா. சுவாமி சிவானநதர் ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரின் அவதாரமென்றே கூறலாம். ஸ்ரீ அபபய்ய தீக்ஷிதர் சம்ஸ்கிருதத்தில் எழுதினரென்பதும், சிவானநதர், உலக பாஷையாகிய ஆங்கிலத்தில் எழுதுகிறூர் என்பதும் தான் இவர்களுக்கிடையே உள்ள வித்தியாசம்

"இமயமலையில் ஆத்ம ஜோதியாக விளங்கும் சுவாமி சிவானந்தர் தாமிரபரணி ஆற்றின் கரையில உள்ள பத்தமடையில் 1887, ஸெப்டம்பர் 8-ம் தேதி அவதரித்தார். இவருடைய தநதை எட்டய்ய புரத்தில் தாசில் தாராக இருநதார். பூர்வாசிரமத்தில் சிவானநதரின பெயர் குப்புசாமி என்பது. சிறுவயதிலேயே இவர் மனம் ஆத்மீகத் துறையை நாடியது. படிப்பில் மிகவும ஊக்கம் கொண்டிருந்தார். நல்ல ஞாபக சக்தி இருநதது.

"இவர் மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் தேறிய பின் திருச்சி எஸ. பி. ஜி. கல்லூரியில் சேர்ந்தார். இங்கு ஆங்கிலத்தில் நல்ல தேர்ச்சி பெற்ருா. ஆனல் குடும்பக் கஷ்டங்களின் விளைவாக கலாசாலைப் படிப்பைப் பூர்த்திசெய்ய முடியவில்லை. பிறகு அவர் தஞ்சாவூர் வைத்தியக் கல்லூரியில் சேர்நது பட்டம் பெற்ருர். சஸ்திர சிகிச்சையில் இவர் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார்.

"1913-ல் டாக்டர் குப்புசாமி (சுவாமி சிவானந்தர்) மலாயாவுக்குச் சென்று வைத்தியத் தொழில் நடத்தினர். நோயாளிகளையும் அவர் குணப்படுத்தி வந்தார். அவருடைய உதாரகுணத்தை அனைவரும் பாராட்டினர்.

## துறவு

"வாழ்க்கை லக்ஷியத்தைப் பூர்த்தி செய்யுமாறு அவருடைய ஆத்மா தூண்டியது. 1922-ல் இந்தியாவுக்குத் திரும்பிவந்து காசி, கயை, பூரி முதலிய க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை சென்றார். பிறகு அவர் உலகத்தைத் துறந்து இமயமலையில் உள்ள ரிஷிகேசத்திற்கருகே 10 வருஷம் கடுந்தவம் செய்தார். அங்கு அமைந்துள்ள ஆசிரமத்துக்கு ஸ்வர்க்க ஆசிரமம் என்று பெயர். ஹடயோகம், ராஜயோகம், கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம், குண்டலினி யோகம் ஆகியவற்றில் சித்தி பெற்றார். இவர் ஓர் உண்மை வேதாந்தசித்தர்—ஜீவன் முக்தர்.

"உலகத்திற்கு சேவை செய்யாமல் குகைக்குள் அடைபட்டுக் கிடக்க இவர் விரும்பவில்லை. ஆகையால் லக்ஷ்மண ஜூலா என்ற இடத்தில் சத்திய சேவா ஆசிரமம் என்ற ஆசிரமத்தை ஆரம்பித்து பதரி நாராயணுக்கு செல்லும் யாத்திரிகர்களுக்கு வைத்திய உதவி அளிக்கத் தொடக்கினார்.

"1930-ல் இவர் 500 மைல் நடந்து கைலாய மலைக்கு யாத்திரை சென்றார். தம் ஆத்மீக அனுபவங்களை 1936 முதல் நூல்களாக எழுதி வெளியிடத் தொடங்கினார் வேறு எந்த ஆத்மஞானியும் இவ்வளவு நூல்கள் எழுதியதில்லை. இவர் சுமார் 100 புத்தகங்களுக்குமேல் இயற்றி யிருக்கிறார்.

"இவருடைய ஆனந்த குடீர ஆசிரமத்தில் அன்பும், ஞானமும், குடி கொண்டிருக்கின்றன. இது ரிஷிகேசத்திலிருந்து $1\frac{1}{2}$ மைல் தூரத்தில் உள்ளது. இது ஆத்மீகத்தைப் பரப்பும் உலக ஸ்தாபனமாக விளங்குகிறது. ஓர் கோயில், தர்மசாலை, சாதகிகளுக்கான அறைகள், ஆசிரமத்திற்கு வருபவர்கள் தங்குவதற்கான இடம் முதலியவை உள்ளன. இவர் எழுதியுள்ள நூல்கள் மனித ஜாதிக்கே வரப்பிரசாதம் போன்றவை. ஆத்ம ஞானத்தை நாடெங்கும் பரப்பி மக்கள் ஒழுக்கத்தை உயர்த்தும் நோக்கத்துடன் இப்பொழுது இவர் அகில இந்திய யாத்திரையை மேற்கொண்டிருக்கிறார்."

# இமாசலத்தின் இருஷிகேசம்

ஸ்ரீலஸ்ரீ சிவானந்த சரஸ்வதி சுவாமிகட்கு
சென்னை ஸ்ரீ P.H. இராமகிருஷ்ணன் பாடிச்சமர்ப்பித்தது.
1-10-1950

பல்லவி

குருநாதா குருநாதா—உம்மைச
சரணமடைநதோம் குருநாத

அனுபல்லவி

அருவுருவில்லா ஆத்ம ஜோதியே
அருள் ஒளி உருவே வா வா வா
அரு சமயததினர் அனைவருமே ஏத்திடும்
ஆதிபகவனே வா வா வா

சரணம்

அஞ்ஞான இருளிலே ஸம்சாரக் காட்டிலே
ஆசைக் கொடிகளால் கட்டுண்டு
கோபதாபங்களாம் கடும் புலி முதலான
கொடிய மிருகங்களால் கடியுண்டு
காப்பாற்றுவாரின்றி கதறித்துடித்து நிற்கும்
குருடர்கள் எம்மீது கருணை கொண்டு
காப்பாற்றிக் கண்ணளிக்க இருடிகேசத்தினின்று
இன்று இங்கு வந்த சிவானந்தமே—
சிவானநதமே—சச்சிதானந்தமே
சிதானந்தமே ஓம் பரஹ்மானந்தமே
நித்யானந்தமே— ஆத்மானந்தமே

சுபம

பார்த்தசாரதி கோவிலில் தெய்வ வழிபாட்டை முடித்துக் கொண்டு சுவாமிகள் இராமானுஜ கூடத்துக்குத் திரும்பினார். அங்கே குவிந்திருந்த பக்த கோடிகளுக்குக் கணக்கில்லை. அவர்களுக்குத் தரிசனம் கொடுத்துச் சிறிது ஓய்வாக இருப்பதற்குள், ஜார்ஜ் டவுன்—தெய்வ நெறிக் கழகக் கிளையைச் சார்ந்த அன்பர்கள் சுவாமிகளை அழைக்க வந்து விட்டனர். அங்கே சென்று அவர்கள் பாத பூஜை செய்து முடிந்த பின் சுவாமிகள் சில கீர்த்தனங்களைச் சொல்லி ஒரு சொற்பொழிவும் செய்தார். ராம நாமம் கூறப்படும் இடமெல்லாம் வைகுண்டமே என்றார். நிர்க்குணத்யானமும், ஸகுணோபாஸனையும் எப்பொழுதும் நம்மால் கைப்பற்றப் படவேண்டும் என்றார். "இல்லை, போ!" என்று சொல்வதை ஒழிக்க வேண்டும் என்றார். பெண்மணிகள் வீட்டு வேலை செய்து கொண்டிருக்கும் பொழுதிலும் ராம நாமம் சொல்லமுடியும் என்று போதித்தார். இந்தப்படியே பற்பல விஷயங்களைப் பற்றிப் பேசின பின் கூட்டம் கலைந்தது.

பின் வெகு அவசரமாக ரிப்பன் பில்டிங்ஸிலே கார்ப்பரேஷன் பிரசங்கத்துக்குச் செல்ல வேண்டி யிருந்தது. அதனிடையில் "மை மாகஸின்" பத்திராதிபர் ஸ்ரீ பி. கே. விநாயகம் என்பவரின் ஆபீஸுக்குப் போக வேண்டியிருந்தது. அங்கேயும் சில கீர்த்தனங்கள் பாடினார்.

அதன்பின் கார்ப்பரேஷனில் ஒரு பெரிய கூட்டம் நடந்தது. மேயா டாக்டர் செரியன் வரவேற்பு கூறினார். தாம் கிருஸ்தவ மதத்தைச் சார்ந்தாராயினும் சுவாமிகள் பால் தமக்குள்ள பக்தி வெகு அதிகம் என்று கூறினார். சுவாமிகள் நிகழ்த்திய பிரசங்கம் மிகவும் உயர்வானதாக இருந்தது.

## கார்ப்பரேஷனில் வரவேற்பு

—o—

### கடவுளை மறவாமல் கடமைகளை செய்யும்படி மக்களுக்கு அறிவுரை

ரிஷிகேசத்தைச் சேர்ந்த சுவாமி சிவானந்த சரஸ்வதிக்கு நேற்று மாலை சென்னை கார்ப்பரேஷன் வரவேற்பு பத்திரமொன்று வாசித்துக்கொடுத்தது. சுவாமிஜி பதிலளிக்கையில் தியானம், ஒழுக்கம் இவை மூலம் ஆத்மாவை உணர்ந்து சாந்தியும் ஆனந்தமும் அடையும்படி மக்களுக்கு அறிவுறுத்தினார்.

கவுன்சிலர்கள் தவிர ஏராளமான பிரமுகர்களும் கவுன்ஸில் ஹாலில் பிரசன்னமாயிருந்தனர். நீதிபதி ஸ்ரீ. ஏ. வி. விஸ்வநாத சாஸ்திரியும் வந்திருந்தார். சுவாமிஜி வந்ததும் அவரை மேயர் டாக்டர் பி. வி. செரியன் வரவேற்றார்.

தேனீர் விருந்துக்குப் பிறகு மேயர், சுவாமிஜியை வரவேற்றுக் கூறியதாவது:— கார்ப்பரேஷனது மத தலைவர் ஒருவருக்கு வரவேற்பு அளிப்பது அபூர்வமாகும். சுவாமிஜி போன்றவரைக் கௌரவிப்பது எங்களை நாங்களே கௌரவித்துக்கொள்வதாகும். சுவாமிஜி மலேயாவில் பல தோட்டங்களில் டாக்டராக இருந்தார். 1924-ல் அவர் சன்யாசியானார்.

சுவாமி சிவானந்த சரஸ்வதி பேசியதாவது:—“ஒவ்வொரு மதமும் கடவுள் ஒருவரே என்பதையே போதிக்கிறது. மனிதருக்குள் பிளவுகளையும் தடைகளையும் நீக்கி சகோதரத்துவத்தை ஸ்தாபிக்கவேண்டும். நகரில் பொது ஜன சுகாதாரத்தைப் பராமரிக்கும் வேலையில் கார்ப்ப

ரேஷன் ஈடுபட்டிருக்கிறது. லௌகிக முன்னேற்றத்திற்கு மட்டுமின்றி ஆதமஞானம் பெறவும ஆரோக்கியம் அவசிய மாகும். எல்லோரும் கடவுளின் அம்சம்தான். அஞ் ஞானத்தின் விளைவே விருப்பு வெறுப்புகள். துன்பத் திலும் மனம சலனமடையாமலும் சோர்வு அடையாமலு மிருகக உதவும் விதகதை ஆத்ம வித்தைதான். அநத விதகதையை எநத சர்வகலாசாலையும் போதிக்க முடியாது. தியானம மூலமே ஞானம் சித்திக்கும. ஆதமஞானத்தால் தான் அகஙகாரம மாயும. அகங்காரந்தான் மனிதரிடை பிளவுகளை ஏற்படுத்தியிருக்கிறது. கடவுளின் ராஜ்யம் நமக் குள்ளேயே இருக்கிறது. 'தியானத்தால் அநத ராஜயத்தை நாம் பெறலாம."

முடிவாக, கார்ப்பரேஷன 'தம்மைக் கௌரவித்ததற் காக சுவாமிஜி வநதனம் கூறினார்.

—o—

## பத்திரிகையாளர் கூட்டத்திலும் சுவாமிஜி பிரசங்கம்

......மாலை தென்னிந்திய பத்திரிகையாளர் சம்மேள னததிலும் சுவாமிஜிக்கு வரவேற்பு நடநதது. ஏராளமான வாகள வந்திருநதனர்.

சம்மேளனத்தின் தலைவர் ஸ்ரீ. என். ரகுநாத அய்யர் சுவாமிஜியை வரவேற்றார்.

சுவாமி சிவானநத சரஸ்வதி ஆதர்சனம் ஏற்படும் விததததில் பேசினார். அவர் கூறியதாவது:—பல விஷயங் கள் குறித்து கருத்துக்களை வினியோகிப்பவரான பததிரிகையாளாகள் அறிவு, ஞானம் இவற்றின் மூலஸ்

தானத்தையே அறிய முயலவேண்டும். இம்முயற்சி கடவுளைக் குறித்த தியானத்தால் கைகூடும. இளமையிலேயே இதை அப்பியாசம் செய்யவேண்டும். மற்றவரிடம அன்பு பாராட்டுவது, உதவிபுரிவதுபோன்ற நற்செய்கைகளால் கடவுளுடன் ஒன்றுபடும் அத்வைத உணர்ச்சியை ஏற்படுத்திக்கொள்ளவேண்டும். அன்றாட கடமைகளை நிறைவேற்றும்போதும் பகவானை மறவாதிருக்கவேண்டும்.

துகாராம, மீராபாய், ராமகிருஷ்ண பரமாத்மா போனற பெரியார்களின் சரித்திரங்களைக் குறிப்பிட்டு சுவாமிஜி கூறியதாவது —"அவர்களது சரித்திரங்கள் கடவுளை அடைவது வாழ்க்கையின் நடவடிக்கைகளிலிருந்தும் சகோதர மக்களுக்கு சுயநலமற்ற சேவை புரிவதிலிருந்தும வேறுபட்ட தலலவென்பதையே நிரூபிக்கின்றன. கடவுளிடம பிரேமை கொண்டால் ஒவ்வொன்றிலும் கடவுளைக் காணக்கூடும. பக்தியுடனும் ஏகாக்ரகசிரத்தையுடனும் ஈஸ்வரநாமத்தை அடிக்கடி ஜபிப்பதால் வசீகரமான பலன் ஏற்படும. புத்தியைக் கைவல்யம் பெற சாதனமாகச் செய்து கொள்ளவேண்டும.

முடிவில் சுவாமிஜியின் சிஷ்யர்களில் ஒருவர் யோகாசனங்கள் செய்துகாட்டினார்.

—தினசரி 1—10—50

—o—

# அகங்காரத்தை ஒழித்து எல்லோரிடமும் சகோதரபாவத்துடன் நடந்துகொள்க

—o—

நகரசபை வரவேற்புக்கு சுவாமி சிவானந்த சரஸ்வதியின் பதில்

——

## வாழ்க்கையின் எல்லா முயற்சிகளையும் ஆத்மீக மயமாக்க வற்புறுத்துகிறார்

நமது முயற்சிகள் நடவடிக்கைகள் எல்லாவற்றையும் ஆத்மீக மயமாக்கவேண்டும் என்று வற்புறுத்தி ஸ்ரீ சுவாமி சிவனந்த ஸரஸ்வதி, அவருக்கு சென்னை நகரசபை அளிதத வரவேற்புக்குப் பதிலளிக்கையில் கூறினார்.

ரிப்பன் மாளிகையில் மேயர் டாகடர் பி. வி. செரிய ஞல இநத வரவேற்புப்பத்திரம் வாசித்து அளிக்கப்பட்டது. பிரதம நீதிபதி, மற்ற ஹைகோாட் நீதிபதிகள், அசெம்பிளி சபாநாயகர் ஸ்ரீஜெ சிவஷண்முகமபிள்ளை, நகரசபை அங்கத்தினர்கள்சிலர், பிரம்மஞான சங்கததினர் முதலானோர் கூட்டத்திற்கு வந்திருந்தனர். மேயர் டெபுடி மேயர் அபீஷியேட்டிங் கமிஷனா ஸ்ரீ எஸ். இ. டி. மாசிலாமணி ஆகியோர் சுவாமிஜி வநததும் அவரை வரவேற்ஞர்கள். கார்ப்பரேஷன் பாண்டு வாசிககப்பட்டது.

ஆத்மீக வழிகளில் ஈடுபட்டுளள மதத்தலைவருக்கு நகர சபை வரவேற்பு அளிப்பதென்பது சாதாரணமாக நடை பெறுவதில்லை யென்றும், கிறிஸ்துவ மேயரான தமக்கு சுவாமிஜியை வரவேற்று கௌரவிக்கும் பாக்கியம் கிடைத்ததைப்பற்றி மகிழ்ச்சி கொள்வதாயும் சேவை செய்வதி

லேயே சுவாமிஜியின் உள்ளம் முழுவதும நிரம்பட்டிருக்கிற தென்றும மேயா சுவாமிஜியை வரவேற்றுப் பேசுகையில் குறிப்பிட்டார்.

"ஓம" என்று நாமெல்லோரும உச்சரிப்போம என்று சுவாமிஜி தனது பிரசங்கத்தை ஆரமபித்தார். சுவாமிஜி யுடன் எல்லோரும் "ஓம்" என்று உசசரித்தனர். "ஓம" என்பதின் மகிமையை சுவாமிஜி விளக்குகையில்; எல்லா வற்றிற்கும் மேலான ஏகபரம்பொருளை அது குறிக்கிற தென்றும் அநதராத்மா இருக்கும் உளளத்தின் பகுதியை அது திறக்கிறதென்றும் ஆதியில சப்தமே தொனித்த தென்றும் அந்த சப்தமே "ஓம்" என்றும் அதே பரம்பொருள் என்றும் "ஓம" என்பதே மனத்திற்கும் அறிவுக்கும அடிப்படை யென்றும் கூறினார்.

எல்லா மதஙகளும் முக்கியமான அடிப்படைகளில் ஒன்றுதானென்றும் தார்மிக வாழ்க்கை நடத்தவேண்டிய முக்கியம்பற்றி புத்தமதம் போதித்ததென்றும் ஹிந்து மதத்திலும் அறநெறி மார்க்கம பிரதானமாக கூறப்பட் டிருக்கிறதென்றும் தேகம்-மனம-பேச்சு ஆகியவை மூலம் தபஸ்பண்ணவேண்டிய அவசியமபற்றி கீதையில் வறபுறுத் தப்பட்டிருககிறதென்றும் அவா மேலும் குறிப்பிட்டு விட்டு "உண்மையாயிரு. அண்டை அயலாரிடம அன்போ டிரு. எல்லோரிடமும் சகோதர பாவததுடனிரு" என்று எல்லா மதங்களும் உபதேசம் செய்கின்றன என்றார்.

"அகங்கார மமகாரத்தினல் மனிதனுக்கு மனிதன் ஏற்படும் வேற்றுமை உணர்ச்சி என்ற தடையை நாசஞ் செய். இநதத் தடையை நீக்குவதறகு எல்லோரிடமும்

சகோதரபாவத்துடன் நடந்துகொள்ளவேண்டும். பொறுமை விரோதம் முதலிய எல்லாக் கெடுதல் உணர்ச்சிகளையும் விலக்கி உங்களை பரிசுத்தம் செய்துகொண்டு தன்னலமற்ற சேவையில ஈடுபடுங்கள்" என்று சுவாமிஜி கூறினா.

புராணத்தில் கூறப்பட்டுள்ள எண்திசை அதிபர்கள் போல் கார்ப்பரேஷன் அதிகாரிகள் நகரின் க்ஷேமாபி விருத்தியைக் கவனித்து வருகின்றனர் என்று சுவாமிஜி மேலும் கூறிவிட்டு ஐந்துவித கிலேசங்கள் மனிதனை எவ்விதம் தொந்திரவுக்குள்ளாக்குகின்றன என்று விளக்கினர்.

"மன அமைதி, உற்சாகம, தறபெருமையிலலாமை, உண்மை, எளிமை, நம்பிகதை ஆகியவைகள ஈஸ்வர தியானத்துக்கு மிகவும் அத்யாவசியமானவையென்றும் இந்தக் குணங்களை எளிதில் அடைய முடியாதெனறும் இநத உலகம் முழுவதும் கிடைத்தாலுங்கூட ஒருவனுக்கு அழிவிலா ஆனநதம் கிட்டிவிடாதென்றும் ஆசையையும் அபிமானத்தையும் ஒழித்தால்தான் மனிதன் உண்மையான ஆனந்தம்பெற முடியுமென்றும் "அகங்காரம்" எப்பொழுதும் கெடுதி விளைவிப்பதென்றும், ஆனல் "வைராக்யமே" அதைக் கொல்ல முடியுமென்றும், கெடுதிகளை ஒழிப்பதே வாழ்க்கையின் லட்சியமாயிருக்கவேண்டுமென்றும் வாழ்க்கையின் எல்லா முயறசிகளும் நடவடிக்கைகளும் ஆத்மீகமயமாக்கப்படவேண்டுமெனறும சுவாமிஜி மேலும வற்புறுத்திக் கூறினர்.

உலகில் ஒன்றும் நமக்குச் சொந்தமானதில்லையென்றும பிறப்பு இறப்பிலிருநது விடுதலைபெற நாம முயற்சிக்க வேண்டுமென்றும், மாயையின் அடிமைகளாக நாம

ஆகிவிடககூடாதென்றும மன நிம்மதியுடன் தாரதம்மிய உணர்ச்சியின்றி சம தரிசனத்துடன் பரம்பொருளின்மீது புத்தியை செலுத்தவேண்டுமென்றும் நாமே அழிவில்லாத பரமாத்மா என்பதை ஒவ்வொருவரும் உணரவேண்டுமென்றும அவர் கூறி சில கீர்த்தனங்கள் பாடினார்.

ஆதமீக வழிகளில் அப்பியாசம் செய்ய ராணுவக் கட்டுபபாட்டைக் காட்டிலும தீவிரமான கட்டுப்பாடு அவசியமென்றும ஒரே நிலையில் நிற்றல், கோபமின்மை விடாமுயறசி, சௌஜன்யம், தாராள சிந்தனை, தார்மிக உணர்ச்சி உள்ளத்தூய்மை முதலிய குணங்களைப் பயிற்சி செய்யவேண்டுமெனறும கூறினார். உணவு, பேச்சு முதலியவைகளில மிதமாக இருநது ஸாத்வீக குணங்களை பழக்கம் செய்வதுமூலம மேற்கூறிய கட்டுப்பாடு ஏற்படும என்று தெரிவித்தார்.

எல்லோரும் நலன் பெற்றிருககு சுவாமிஜி ஆசி கூறி பிரசங்கததை முடித்துக்கொண்டார்.

காரப்பரேஷன் பாண்டு "ஜன கணமன" கீதம்பாட விழாமுடிவுக்கு வநதது.

—o—

## பத்திரிகையாளர்களுக்கு ஆத்மீக அறிவின் அவசியம்

—o—

சொற்களின் சக்தி பற்றி சுவாமி சிவானந்தர்

—

### பத்திரிகையாளர் சம்மேளனத்தில் பிரசங்கம்

சென்னை அக். 1—நேற்று மாலை தென் இந்திய பத்திரிகையாளர் சம்மேளனத்தில் சுவாமி சிவானநதர் பேசுகையில், பத்திரிகையாளர்கள் உலகெங்கும் அறிவைப் பரப்புவதாகவும், அவர்கள் உண்மை அறிவாகிய ஆத்ம

அறிவைப பெற்ருல் அவர்கள் உபயோகிக்கும வார்த்தை களை விசேஷசக்தியைப் பெறுமெனறும "பகவன்" நாமத்தை ஜபிப்பது இதறகுச சிறநத வழியென்றும கூறினர். சுவாமிஜி பிரசங்கத்தில் இடையிடையே சஙகீர்த்தனம் நடத்தினா.

கூட்டததிற்கு சமமேளனத் தலைவர் ஸ்ரீ. என். ரகுநாத அய்யா தலைமை வகித்தார் பல ஸ்திரீகள் உள்பட ஏராள மானவர்கள கூட்டத்திற்கு வநதிருநதனா.

—தினமணி 1—10—50

காா்பரேஷன் நிகழ்சசிக்குப் பின்னர் சுவாமிகள் தென்னிந்திய பத்திரிகையாளர்களின் சம்மேளனத்துக்கு விஜயம செய்தார்.

அதனபிறகு கோகலேஹாலில் நடைபெற்ற காந்தி ஜெயநதி விழாவில் கலநதுகொண்டாா. அதன் விவரம் வருமாறு .

சென்னை கோகலே மண்டபத்தில் ஹைகோர்ட்டு நீதிபதி ஸ்ரீ. பி. சத்யநாராயணராவின் தலைமையில் ஜெயநதி விழா நடைபெற்றது. ஏராளமான ஆண்களும பெண்களும் தேசப்பிதாவின் பிறந்த தினவிழாவில் கலநதுகொண்டனர். ஸ்ரீ. கே சஞ்சீவி காமத் வரவேற்ருர்.

## சுவாமிஜி பிரசங்கம்

சுவாமி சிவானந்த சரஸ்வதி பேசுகையில் காந்திஜியை கர்மயோகி என்று வர்ணித்தார். பெரியவர்கள் பிறந்தநாள் கொண்டாட்டத்தை கேட்கவில்லையென்றும் ஆனல் நாம் அவாகளை மறக்காமல் பின் பற்றுவதற்குத்தான் இந்த ஜெயந்தியென்றும் கூறினர்

"காந்திஜி ஒரு ரிஷி. அவர் உண்மையான வழியைக் காட்டினார். தன்னலமற்ற சேவை மூலம் இருதயத்தை பரிசுத்தமாக்கும் வழியைக் காட்டினார் அரசியலைவிட கட வுளையே அவர் முக்கியமாகக் கருதினார். புத்தருக்குப் பின் அஹிம்ஸையைக் கடைபிடித்த மகாத்மா அவர் ஒருவர் தான்" என்று சுவாமிஜி கூறினார்

## காந்தீய வழி

அஹிம்ஸை, சத்தியம், பிரம்ம சரியம் இவைதான் யோகத்திற்கு அடிப்படை இதற்கு இமயமலைக்கோ அல்லது குகைக்கோ செல்லவேண்டாம். எந்த இடத்தி லிருந்தும் இந்தக் குணங்களைக் கடைபிடித்து கடவுளைக் காணலாம். காந்திஜியின் வழி இதுதான். தன்னலமற்ற சேவை இதற்கு மிகவும் தேவை. அப்பொழுதுதான் ராஜயோகியாக முடியும்.

காந்திஜி இந்த முறைகளைத் தானே கடைப்பிடித்தும் போதித்தும் மக்களை கர்மயோகிகளாக்க பாடுபட்டார். ஆனால் அவர் காட்டிய வழியில் இன்று எவ்வளவுபேர் செல் கிறார்கள்? அவர் வழியை எந்த அளவுக்கு கடைபிடிக் கிறார்கள்?

கதர் உடுப்பதும், 'காந்திஜிக்கு ஜே' போடுவதும் அவர் பிறந்த நாளைக் கொண்டாடுவதும் அவரைப் பின் பற்றுவதாக ஆகாது இவைகளைச் செய்வதால் நாம் அவ ருடைய உண்மை சிஷ்யர்களாக ஆக முடியாது.

உண்மையாக தன்னலமில்லாமல் அஹிம்ஸையைப் பின்பற்றி நாம் சேவை செய்யவேண்டும். அவருடைய ஒவ்வொரு பிறந்த தினத்திலும் நாம் இதுவரை அவரைப்

பின்பற்றி என்ன செய்திருக்கிறோம் என்று ஆராய்ந்து கணக்குப்பார்க்கவேண்டும்.

"காந்திஜி கடைபிடித்த உண்ணுவிரதங்களைப்போல் வேறு யாரும் இருந்ததில்லை யென்றும், மனசுத்திக்கு இது நல்லதென்றும்" அவர் வற்புறுத்தினர்.

தலைமை வகித்த ஸ்ரீ. பி. சத்தியநாராயண சிங் பேசுகையில் இது ரிஷிகள் நாடு என்றும், மகாபாரதத்துக்குப் பின் ரிஷிகளைப்பற்றி நாம் அதிகமாக கேட்டதில்லை யென்றும், பழைய நாட்களைப்போல் நாட்டில் உயர்வு வாய்ந்த மகரிஷிகள் இருக்கவேண்டுமென்றும் கூறினர். பழைய காலத்தைப்போல ஆத்மீக பலத்தை அதிகரித்து இந்திய ஆத்மீகத்துறையில் மறுபடியும் உலகில் முதன்மை ஸ்தானம் வகிக்க வேண்டுமென்றும் கூறினர்.

ஸ்ரீ. ஜி. சீனிவாசன் வந்தனம் கூற முடிவடைந்தது. கோகலே ஹாலில் ஸ்ரீ சுவாமிஜி பிரசங்கம் 30—9—50 3—10—50ல் "பாரததேவி"யில் வெளிவந்த செய்தி.—

—o—

## சென்னையில் காந்தி ஜெயந்தி

### அரசனும் ஆண்டியும் சமம்

விழாவுக்குத் தலைமைவகித்த நீதிபதி பி. சத்திய நாராயணு பேசியதாவது :—

விஸ்வாமித்திரர், வசிஷ்டர் ஆகிய பிரமரிஷிகள், அரசர்களையும், ஆண்டிகளையும் ஒன்றெனக் கருதி நடந்து பெருமைகொண்டனர்.

மாபெரும சாம்ராஜ்யங்களையும வீழ்ததும ஆற்றல் பெற்றுள்ளவர்களை ரிஷிகள். அவ்வித ரிஷிகளைப பின்பற்றி நடந்தால நமக்கு ஒருவித குறையும வராது யோகத்தின் தன்மை எல்லையற்றது. ஆனால் எல்லா காரியங்களையும் அதனால சாதிக்க முடியாது. காநதிஜியின் கொள்கைகளை மககள் உண்மையுடன் கடைப்பிடித்தால் எல்லாக் குறைகளும் நீங்கும்.

## மக்களுள் மஹான்

சுவாமி சிவானந்தா பேசியதாவது :—கடமையைக கருதி நாம் காந்தி ஜெயந்தியை மகிழ்சசியுடன கொண்டாடுகிறோம். மனநதளராது உழைத்து மககளுக்குச் சுதநதிர சுகவாழ்வையளித்த உயர்நத புருஷர் காநதிஜி. அவர் மககளுள் மகாத்மா: மஹான்.

## அவதார புருஷர்

புத்தரைப் பிரிநதபின் அஹிம்சையை மறந்த நமக்கு அஹிம்சா மூர்த்தியாக காந்திஜி அவதரித்தார். சத்தியம, அன்பு, அஹிம்சை, ஆகியவையே அவருடைய மூல மநதிரங்கள். அவற்றைக் கடைப்பிடித்து நடப்பது நமது கடமை. காநதிஜியின் ஆத்மா சாந்தியடைய வேண்டுமானல், அவரது நிர்மாணத் திட்டங்களை பயபக்தியுடன் பின்பற்றவேண்டும்.

அவர் தொடர்நது சொன்னதாவது :—குருவை அடையாத ஒருவனுக்கு சட்டென்று சில சந்தர்பங்களில் கோபமேற்படும. ஆனால் குருவின் கீழ் ஞானோபதேசம் பெற்றுள்ளவர்கள் அன்பின் அவதாரங்களாக விளங்குவர். குருபக்தியும், குருவின்கீழ் உபதேசம பெறும தன்மையும் மக்களுக்கு அவசியமாகும்.

## ஒருநாள் உபவாசம்

மேலும் அவர் கூறியதாவது:—வாரத்திற்கு ஒரு முறைகூட நமமால் உண்ணாவிரதம் இருக்க இயல்வதில்லை. வாரத்தில் ஞாயிற்றுக்கிழமையாவது நாம் உணவு அருந்துதல் கூடாது. அப்படிச் செய்தால்தான் தேகம் பரிசுத்தமபெறும். ஆன்மயோக நிலையை நாடும். உலகத்திலேயே காந்திஜி தான் அதிகப்படியாக உணணாவிரதஙகளை அனுஷ்டித்துள்ளார். அதுவே அவரைப் புனிதராக்கியது ராம பக்தியால் அமரராகிய காந்திஜியை நாம் பின்பற்றி நடககவேண்டும்.

வியக்கத்தக்க சாதனைகளை செய்யுமம விஞ்ஞானிகள் மக்களால் போற்றப்படவேண்டியவர்கள்தான். ஆனால் அவர்கள் புகழும், பெருமையும் மண்ணுலகில்தான். விண்ணுலகில் தலைகாட்ட முடியாது. நிரந்தர ஸ்தானம் பெற விரும்பினால் நாம் யோகிகளாய் மாற்றம் பெறவேணடும். "ஓம்" நம்மை வாழ்விக்கட்டும்.

கேப்டன் சீனிவாசமூர்த்தி நன்றிகூற விழா முடிவுறறது

—தினத்தந்தி 3—10—50

இன்று காலை ஸ்ரீ சுவாமிகள் மயிலாப்பூர் ஸ்ரீ கபாலீஸ்வரர் கோவிலுக்கு விஜயம செய்து இறைவனை வழிபட்ட பின் ஸ்ரீ கேசவப்பெருமாள் கோவிலுககுச் சென்று தரிசனம செய்து திருவல்லிக்கேணியிலுள்ள தெய்வநெறிக் கழகக் கிளைக்கு விஜயம் செய்தார். பின்னர் திரும்பவும் தமது ஜாகைக்கு வந்து சேர்ந்ததும பாதபூஜை, மந்திர தீக்ஷை முதலியன நடந்தேறியது அனைவரும் ஆகாரமுண்டு சிறிது இளைப்பாறினர.

பிற்பகல் மயிலாப்பூர் ஸ்ரீனிவாச காந்தி நிலையத்திலும் சர்வதேச சகோதர சங்கக்கூட்டத்திலும் நடந்த விசேஷ விபரம் பத்திரிகை வாயிலாக.—

## ஸ்திரீகளுக்கு உபதேசம்

சுவாமி சிவானந்த ஸரஸ்வதி நேற்று பிற்பகல் மயிலாப்பூர் ஸ்ரீனிவாச காந்தி நிலையத்துக்கு விஜயம் செய்தார். கடவுளுக்கு அடுத்தாற்போல தாய் ஜகத்குரு வாக கருதப்படுவதாகவும் ஸ்திரீகள் நாமசங்கீர்த்தனத்தின் மூலம் முக்தியடையலாம் என்றும் ஸ்திரீ குழந்தையை எவ் விதம் வளர்க்கிருளோ அதற்கு தகுந்த முறையில்தான் உலகம் முன்னேற முடியும் என்றும் சுவாமிஜி அங்கு பேசு கையில் கூறினர்.

ஸ்ரீமதி அம்புஜம்மாள் மங்களஹாரத்தியுடன் சுவாமியை வரவேற்றார்.

## "எல்லா மதங்களின் லக்ஷியமும் ஒன்றே"

### ஊழியர் கழக சேவா சமாஜத்தில் பிரசங்கம்

சென்னை அக். 2—நேற்று மாலை ஊழியர் கழக சேவா சமாஜத்தில் சுவாமி சிவானந்தர் பேசுகையில், எல்லா மதங் களின் கருத்தும் இலக்ஷியமும் ஒன்றுதானென்றும், கடவு ளுக்கு மதம் கிடையாதென்றும் ஆனால் நமது மனத்தையும் புலன்களையும் அடக்குவதற்கு கடவுள் நமக்கு பல மார்க் கங்களைக் கொடுத்திருக்கிறார் என்றும் எடுத்துரைத்தார்.

சர்வமத ஒத்துழைப்பு என்ற விஷயமாக சுவாமிஜி பேசினர். அவர் பேசியதன் சாரமாவது :—

எல்லா மதங்களும் ஸ்ரீ புத்தரின் 8 வித மார்க்கங்களையே உபதேசிக்கின்றன. அதை உணர்ந்தால் கடவுள் உங்கள் சித்தத்தில் பிரகாசிப்பதை நீங்கள் பார்க்கலாம். ஹிந்து மதம் உபதேசிக்கும் சதாசாரமும் கிறிஸ்துவ மதம் போதிக்கும் ஒழுக்க நெறி எல்லாம் ஒன்றே. எல்லாவற்றிலும் இலக்ஷியம் ஒன்றுதான் நாம் மதத்தை அனுஷ்டித்து அதில் வாழவேண்டும். சத்தியத்தைக் கடைப்பிடிக்கவும் சீலத்தைக் கையாளவும் என்று ஒவ்வொரு மதமும் போதிக்கிறது. எல்லோரிடத்தும் அன்புடனும் பக்ஷமுடனு மிருக்க வேண்டும். அந்தக் கருணையால் சித்தப்பிரசாதம் ஏற்படும். ஒவ்வொரு மதமும் உங்களுக்கு பாதையைக் காட்டுகிறது. எல்லா மதங்களும் சாந்தியைப் போதிக்கின்றன. ஒவ்வொரு மதத்திலுள்ள சிறந்த அம்சங்களை எடுத்துக்கொண்டு எல்லோரும் ஒன்றுபட முயற்சிக்கவேண்டும். சகிப்புத்தன்மையும் அன்பும் வேண்டும்.

அன்பு மதத்திற்கு தடங்கலாக நிற்கக்கூடிய காமக்ரோதம், மாத்சர்யம், ராகத்வேஷங்களை ஒழிக்கவேண்டும். பொறுமையை நாம் வளர்க்கவேண்டும். சகல நல்ல குணங்களுக்கும் அடிப்படை பொறுமைதான். மதம் மதம் என்று வெறுமனே பேசிவிட்டால் மட்டும் ஒன்றும் பிரயோஜனப்படாது. நம்மை நாமே கட்டுப்படுத்திக் கொள்ளவேண்டும். சுயநலத்தை உதறித்தள்ள சேவை செய்யவேண்டும். சேவைக்குப் பணம் தேவையில்லை. உள்ளம்தான் தேவை. ஆயிரக்கணக்கான மக்கள் துன்பத்தில் மூழ்கி யிருக்கிறார்கள். அவர்களுக்கு உதவி செய்ய வேண்டும். —சுதேசமித்திரன் 2—10—50

## பிரார்த்தனைக்கு குறிப்பிட்ட நேரம் அவசியமில்லை

சக்தியின் ஸ்வரூபமே தாய்

சிவானந்தர் அருள்மொழி

சென்னை, அக், 2—சுவாமி சிவானந்தர் ஸ்ரீனிவாச காந்தி நிலையம், சர்வதேச சகோதர சங்கக் கூட்டம் முதலிய இடங்களில் அரிய சொற்பொழிவாற்றினார்.

அவர் கூறியதாவது; குறிப்பிட்ட நேரத்தில்தான், இடத்தில் தான் பிரார்த்தனை செய்யவேண்டும் என்பதில்லை. எந்த சமயத்திலும் எந்த இடத்திலும் வேறு வேலைகள் செய்துகொண்டிருக்கும்போதும் கடவுள் நாமத்தை உச்சரித்துக் கொண்டிருக்கலாம்.

## கடவுளுக்கு அடுத்தபடி தாய்

கடவுளுக்கு அடுத்தபடியாக தாய்தான் ஜகத்குருவாக கருதப்படுகிறார் உலகின் தலைவிதி அன்னையின் கைவசம் இருக்கிறது. குழந்தையை அவள் எப்படி உருவாக்குகிறாளோ அதைப் பொருத்திருக்கிறது உலகம்.

## மாயைத் திரையை நீக்க வழி

மாயைத் திரையை நீக்கினால் கடவுளுடன் லயித்துவிடலாம். பிரார்த்தனை, தியாகம், தன்னலங் கருதா சேவை அகந்தையை ஒழித்தல் இவைமூலம் மாயைத் திரையை நீக்கிவிடலாம்.

## எல்லா மதங்களும் ஒன்றேதான்

பல மதங்கள் இருந்தபோதிலும் அவைகளுள் கொள்கைகளும் உபதேசங்களும் ஒன்றேதான். இதை ஒவ்வொருவரும் புரிந்துகொண்டால் ஏகதும் ஒற்றுமையும்

சௌஜன்ய உணர்ச்சியும் ஏற்பட்டுவிடும். தெய்வ உணர்ச்சி பெறுவதுதான் உண்மையான மதம்.

—பாரத தேவி 3—10—50

இவ்விரு நிகழ்ச்சிகளுக்கு மிடையே ஸ்ரீ சுவாமிகள் திரு. கே. எஸ். ராமசாமி சாஸ்திரி அவர்கள் இல்லம் சென்று தரிசனம் தந்தார்.

பின்னர் திட்டமிட்டபடிக்கு எழும்பூர் மியூஸியம் தியேட்டரில் நிகழ்ச்சி நடந்தேறியது. விவரம் 'சுதேச மித்திரன்' பத்திரிகை தந்தவண்ணம்:—

## வாழ்க்கையின் குறிக்கோள் என்ன?

சுவாமி சிவானந்தர் உபதேசம்

சென்னை பொதுமக்கள் வரவேற்பு

சென்னை, அக. 2—சுவாமி சிவானந்த சரஸ்வதிக்கு நேற்று மாலை எழும்பூர் மியூஸியம் தியேட்டரில் சென்னை பொதுமக்கள் சார்பில் வரவேற்பு அளிக்கப்பட்டது. சுவாமிஜியை தரிசிக்கவும் அவருடைய பொன்மொழிகளைக் கேட்கவும் ஹாலில் உள்ளும் புறமும் ஆயிரக்கணக்கான மக்கள் கூடியிருந்தனர்.

## ஸ்ரீ விச்வநாத சாஸ்திரி

வரவேற்புக் கமிட்டித் தலைவர் நீதிபதி ஸ்ரீ ஏ. வி. விசுவநாத சாஸ்திரிகள் சுவாமிஜிக்கு வரவேற்புப் பத்திரம் ஒன்றை வாசித்துக்கொடுத்தார். வெள்ளிப் பேழையில் அப்பத்திரம் வழங்கப்பட்டது. பணம், பதவி, பேராசை, காமக் குரோத லோபங்களில் உழன்று கிடக்கும் மக்களை உய்விப்பதற்கு அவ்வப்போது இந்த பாரதநாட்டில் தோன்றிய

மகான்களின் வரிசையில் சுவாமி சிவானந்தஜி ஒரு விசேஷ ஸ்தானத்தைப் பெற்றிருப்பதாகவும் அவர் ஒரு உண்மை வேதாந்தி என்றும் பத்திரத்தில் குறிப்பிட்டிருந்தது.

யோகி சுத்தானந்தபாரதியார், டாக்டர் பட்டாபி, ஸ்ரீ பக்தவத்ஸலம், ஸ்ரீ குமாரசுவாமி ராஜா ஆகியோரிட மிருந்துவந்த வாழ்த்துச் செய்திகளை ஸ்ரீ பி. கே. விநாயகம் வாசித்தார்.

சுவாமிஜியின் விஜயத்திலை சென்னை ராஜ்ய மக்களின மனதும் செய்கைகளும் பரிசுத்தமடையுமென்று தாம் நம்புவதாக ஸ்ரீ குமாரசுவாமி ராஜா தமது செய்தியில் குறிப்பிட்டார்.

## சுவாமிஜி உபதேசம்

சுவாமி சிவானந்தர் பிறகு உபதேசம் செய்தார். ராம நாம சங்கீர்த்தனமும், தியானமும் அவரது பிரசங்கத்தின் ஊடே நடைபெற்றன. ஆங்கிலமும் தமிழும் கலந்த நடையில் சுவாமிஜி பேசினர் அவர் கூறியதன் சாரமாவது

"ஓம்" "ஆமென்" "ஆமீன" இந்த எல்லா ஒலிகளும் பரம்பொருளையே குறிப்பிடுகின்றன. அவனன்றி ஓரணு வும் அசையாது. உலகம் யாவையும் தமதுள்ள வாக்கால் நிலை பெறுத்தலும் நீக்கலும், நீங்கலா அளவிலா விளையாட் டுடையவன் அவன். மனிதனுக்கு மனிதன் வித்யாசம் பாராட்டலாகாது. எல்லோரும் இறைவனின் குழந்தை கள்; கடவுளின வெவவேறு சொரூபங்கள. மக்கள் வாழ்க் கையின் குறிக்கோள் என்ன? ஒவவொரு தனி மனிதனும அந்த ஆராய்ச்சியில் ஈடுபடவேணடும. அதுதான் ஆத்ம

சோதனை. தன்னலமற்ற சேவையே சமூகத்துக்கு உதவி. எல்லோருக்கும் நன்மைசெய்ய வேணடும. அறநெறி வழுவாது நடக்கவேணடும்.

சடமான தேகம அழிநதுபோகலாம. ஆத்மாவுக்கு அழிவு கிடையாது. ஞானேந்திரிய காமேந்திரிய சம்பந்தத் தால் அறிவை பறிகொடுக்காது சுகதுக்கங்களை சமமாக எவன் பாவிக்கிருனே அவன் முக்தியடையத் தகுதியுடை யவனுவான். காமக்குரோதங்களால் மனிதனுக்கு ஞானம் மறைந்திருக்கிறது. மனம் புத்தி முதலிய இநதிரியங்களே ஆசைககு இருப்பிடம். இவை ஞானத்தை மறைத்து மனிதர்களை மயக்குகின்றன. ஆதலுல் ஆத்ம விசாரணையில் ஈடுபட்டு மனதை அடக்கி ஆசைகளை ஒழிக்கவேண்டும்.

தினசரி தியானம் செய்யுங்கள். உணவு, உறக்கம், நட மாட்டம் கர்மம் முதலிய விஷயங்களில் மிதமாக நடந்து கொள்பவனுககு தியானயோகம் சித்திக்கும். ராமநாம சங்கீர்த்தனம் செய்யுங்கள் வாழ்க்கைமுறையை திட்ட மிட்டு வரையறுத்து, தினசரி குறிப்பிட்ட நேரங்களில் தியானத்தையும் நாம சங்கீர்த்தனையும் மேற்கொண்டால், பரம்பொருளை அறியும் மார்க்கத்தைக் காண முடியும். உங்கள் வாழ்க்கை புனிதப்படும்; பரமபத மோட்ச சாம் ராஜயத்தை அடையலாம்.

உபசரணைக் கமிட்டி உதவிக் காரியதரிசி ஸ்ரீ கே. ஆர். சேஷாத்ரி வநதனேபசாரம் கூறினர்.

—சுதேச மித்திரன் 2—10—50

மியூஸியம தியேட்டர் அலுவல் முடிந்தவுடன் ஸ்ரீ சிவானந்தா சிறிது ஓயவு எடுததுக்கொண்டு கமமால்

மிகவும் பகதிகொண்ட அன்பர் திரு N. சீனிவாசன் அவர்களை அழைப்பிற கிணங்கி அவரில்லம் சென்று பாதபூஜை ஏற்றுக்கொண்டு அவர்களை ஆசீர்வதித்தார்.

அடுத்தபடியாக மயிலாப்பூர் ஸ்ரீ சாயிபாபா பஜனை மண்டலியின் ஆதரவில் "பாரததேவி" பத்திரிகையில் கண்டபடி பிரசங்கமும் பகவந நாமபஜனையும் நடந்தேறியது.

இத்துடன் இன்றைய அலுவல்களை ஒருவாறு முடிததுக்கொண்டு சுவாமிகள் ஓய்வெடுத்துக்கொண்டனா.

## வாழ்க்கை மேம்பட பக்தி அவசியம்

### மயிலையில சிவானந்தர் உபதேசம்

சென்னை, அக். 2—நேற்றிரவு ஸ்ரீ சாயிபாபா பஜனை மண்டலியின் ஆதரவில் மயிலை பி. எஸ். ஹைஸ்கூலில் சுவாமி சிவானந்தருக்கு மகோன்னதமான வரவேற்பு அளிககப்பட்டது. ஸ்ரீ ஏ. எஸ். பி. அய்யர் தலைமை வகித்தார். ஏராளமான ஜனங்கள் சுவாமிகளை தரிசிககவும் அவருடைய உபதேசங்களைக் கேட்கவும் கூடியிருநதார்.

நீதிபதி ஸ்ரீ ஏ. எஸ். பி. அய்யர் பேசியதாவது: நம் நாடு ஹிட்லர், முஸோலினி, நெப்போலியன் என்பவர்கள் போன்றவர்கள் பிறந்த இடமல்ல. இங்கு ஞான மார்ககத்தைக் கண்ட மகான்கள் கபீர், நானக், ஸாயிபாபா, ராமகிருஷ்ணர், விவேகானநதர், மகாத்மாகாந்தி போன்றவாகள் அவதரித்த நாடாகும். இது இங்கு பக்தியே பிரதானமானது. பக்தி மார்க்கத்தில் இந்தியா சிறநது விளங்கியதனுல்தான் நம கலாசாரமும் நம் பண்பும் உன்னத நிலைமையை அடைந்திருக்கின்றன.

இப்போது நாஸ்திகத்தைப் பரப்ப சிலா கிளம்பியிருக்கின்றனர். இவர்கள் வாதம் "சாமி கண்ணுக்குத் தெரிகிறதா? எப்போது சாமி கண்ணுக்குப் படவில்லையோ அப்போது சாமி என்று ஒன்று கிடையாது" என்பது. இவர்களை நான் ஒன்று கேட்கிறேன. "இவாகளை மூளை கண்ணுக்குத தென்படுவதில்லை. இதைக் கொண்டு இவாகளுககு மூளையே இல்லை என்று சொலலிவிடலாமா?"

ஸ்ரீ ஏ. எஸ். பி. அய்யர் பேசியபின் ஸ்வாமி சிவானநதா பகவநநாம பஜனை நடத்தினா பினனர் அவர் பேசுகையில் வாழ்வு மேம்பட பக்தி அவசியம் என்றும் வைகுண்டம் என்பது எங்கேயோ யுள்ளதலல வென்றும ஒவ்வொரு வீட்டையும வைகுண்டமாகக மக்கள் மனது வைத்தால் முடியும் என்றும், சற்று தியானம, பகவன் நாமத்தை பஜித்தல்; இவைகளை தினம் செய்து வநதால் வாழ்க்கையும் நிம்மதியாக நடப்பதுடன் மோட்சமும் கிடைக்கும் என்று கூறினர்.

## சேவை மூலமே மேன்மை அடையலாம்

சுவாமி சிவானந்தருக்கு நேற்று மாலை மியூஸியம் தியேட்டரில் மகத்தான வரவேற்பு அளிக்கப்பட்டது. வரவேற்புக் கமிட்டித் தலைவர் நீதிபதி ஸ்ரீ வஸ்வநாத சாஸ்திரி வரவேற்புப் பத்திரத்தை வாசித்தளிததாா.

முதல்மந்திரி ஸ்ரீ ராஜா, மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலம் டாக்டர் பட்டாபி சீதாராமையா இவர்களுடைய செய்திகள் படிக்கப்பட்டன.

சுவாமி பேசுகையில் மனிதனுக்கு மனிதன் வித்தியாசம காட்டப்படக்கூடாது எனறும் சேவை மூலமே

மேன்மையடைய முடியும் என்றும எல்லாரும் கடவுளின் குழந்தைகளே என்றும் கூறினா.

2ௗ அக்டோபர் 1950 இன்று நிகழவேண்டிய முதல் நிகழ்ச்சியாகிய திருவல்லிகேணி சிவாஜி வியாய மண்டல உபன்யாசத்துக்குச் செல்லு முன்னர் சுவாமிகள் அன்பர் S. V ஐயர் அவர்கள கோரிக்கைக்கிணங்கி அவர் இல்லம் சென்று அவாகளை ஆசிாவதித்துப் பிறகு சிவாஜி வியாய மண்டலம் வந்து சேர்நதாா. அங்கு நிகழ்நதவைகளை சென்னை "சுதேசமித்திரன்" கூறுகிறது.

## யோகாசனங்களின் அவசியம்

### சிவாஜி வியாய மணடலில் வற்புறுத்தல்

சுவாமி சிவானநத சாஸ்வதிக்கு இன்று காலை திருவல்லிகேணி சிவாஜி வியாய மணடலத்தினா் ஒரு உபசாரம் நடத்தினர்

ஏராளமான ஆண், பெண், குழநதைகள் குழுமியிருந்தனர்.

சுவாமிஜிக்கு ஸ்ரீ சஞ்சீவி காமத் நல்வரவு கூறினா.

ஆங்கிலத்திலும, ஹிந்தியிலும, தமிழிலும உபசாரப் பத்திரங்கள வாசித்தளிக்கப்பட்டன.

மணடலின் தேகப பயிற்சி ஆசிரியர் ஸ்ரீ ஏ. ரங்கராஜன் யோகாசனங்கள் செய்து காண்பித்தார்.

ஸ்வாமிஜியின் சிஷ்யர்களும் சில அபூர்வ ஆசனங்களைச் செய்தனா.

பிறகு சுவாமிஜி பேசுகையில், தேகாரோக்கியமின்றி ஆத்மீக அபிவிருத்தி சாத்தியமில்லை என்றும் தேகா ரோக்யத்திற்காக யோகாசானங்கள் புரிவது அத்யாவசியம் என்றும் உலகாயத நலனுக்காகவும ஆத்மீக பரி பக்குவத்திற்காகவும தியானம் அவசியம என்று கூறினார்.

பெண்மணிகளுக்கும் ஆயுள ஆரோக்யத்திற்காக சூர்ய நமஸ்காரம் ஆசனஙகளை ஆகியவற்றைச் செய்ய வேண்டும் என்றும் அவர் உபதேசித்தார்.

"சிவாஜி மண்டலில் உள்ள அங்கத்தினர்கள எண்ணிக்கை வருத்தத்தக்கது. சென்னை நகரிலுள்ள அனைவரும அதில் சேர்நது பயனடைய வேண்டும்" என்று அவர் குறிப்பிட்டார்.

சிவாஜியின் பெயரைக் கேட்டாலே உத்வேகம் ஏற்படும. நாம் ராணுவ மனப்பான்மை பெறவேண்டும். இன்றைய நிலைமையில் இது அவசியமாகிறது. நாம் ஆத்மீக ஆயுதத்தால் தற்காப்பு செய்துகொள்ள வேண்டும் என்று சுவாமிஜி முடிவில் கூறினார்.

நாமசங்கீர்த்தனத்துடன் விழா முடிவடைந்தது.

—சுதேசமித்திரன் 2-10-50

ஓம்

பூஜ்யசிரேஷ்ட ஸ்ரீ சுவாமி சிவானந்த சரஸ்வதி அவர்களின் அடிபணிநது, சிவாஜி உடற்பயிற்சிக் கழகத்தின் சார்பாக, அன்னாரின் பாதகமலங்களில் சமர்ப்பிக்கப்படும மனமுவந்த வாழ்த்துப் பத்திரம்.

"போற்றத்தகுந்த புண்ணிய சீலரே, எங்கள் இதய பூர்வமான வணககம் பல. தாங்கள், எங்கள அழைபபுக்

கிணங்கி, இவ்விடத்தில் எழுந்தருளி, இதனை தாங்கள், தங்கள் பாததூளிகளினால் பரிசுத்தஸ்தலமாக மாற்றி யமைத்த பெருந்தகை என்னே? பெறற்கரிய பெரும பேறினைப் பெற்ற எங்கள் பாக்கியத்தை என்னென்று கூறுவோம்! யாதென இயம்புவோம்! தங்களை வர வேற்கும தனிப்பெரும பேறுகிட்டிய நாங்கள பேருவகை யுடனும், காவத்துடனும் தலை நிமிர்ந்து பார்க்கிறோம். நிற்க, எங்களுடைய இத்துணைநாள், தவத்தின் பலன் கிட்டியது, என்று நினைக்குங்கால், எங்களுள்ளமும், உடலும் அகமும், புறமும், புளகாங்கித மெய்துகின்றன.

"முற்றும் துறந்த முனிபுங்கவரே! பூஜ்யரே! இத் தென்னிந்திய நாடு, ஸ்ரீ சங்கர, ஸ்ரீ ராமானுஜர், போன்ற புண்ணிய புருடர்களைப் பெற்றெடுத்து பாரதுறந்த பரமர் களைப் போற்றி வளர்த்து இப்பாரத நாடுமுழுமைக்குமே உதவி யிருக்கின்றது. ஆனால், இன்று, இத்தென்னிந்தியா, தங்களை ஈன்றெடுத்ததின் காரணம் யாதெனில கேவலம், தங்கள் மூலம் பாரத நாடு முழுமைக்கும், க்ஷேமத்தை யும், நன்மைகளையும், பெறுவதற்காக மட்டுமல்ல; இந்த அகில உலகும் தங்கள் மூலம், நன்மையையும், நலனையும், அடைதற்பொருட்டேதான், என்னும் கூற்றில அணு வளவும் ஐயமில்லை. இதனைச் சிந்தையில் நிறுத்துங்கால தனிப்பெரும கர்வம் ஏற்படுகிறது.

"இன்று அகில முழுவதிலும், கொடுமைகளும், அநீதி களும், அக்கிரமங்களும, ஊழி நடனம் புரிகின்றன. மாண்பு மிக்க மானிடவர்க்கமானது,

"அசுர சக்திகளின் ஆதிபத்தியத்திற்கு அடிவருடி, அடிமையாகி, அதனைப் போற்றிப் புகழ்ந்து பூஜிக்கத்

தலைப்பட்டுள்ளது. யுத்தமென்னும் பிரளயத்தின் கரு மேகங்கள், வந்து குவிந்து குமுறுகின்றன. அதன் காரணமாக ஏற்படவிருக்கும், மாபெரும் அழிவினை மாந்தர் குலத்துக்கு, குறிப்புகளினால் அறிவுறுத்துகின்றது. இந் நிலையிலே, பாமரமக்கள், எது செய்ய வேண்டும், எது செய்யத்தக்கது, என்று அறிவிழந்து, மதி கெட்டு எங்கும் அடைக்கலம கிட்டாமல், பயந்த நோக்குடன் மரணத்தை எதிர் நோக்குகின்றனர். இவ்வித மரணாவஸ்தையினின் றும், எங்களை விடுத்து, உண்மைப் பாதையிலே நடத்திச் சென்று "சுகம், சாந்தி, இவை கிட்டுமாறு, அருள புரியத் தக்கவாகள், தங்கள் போன்று மாபுருடர்களைத் தவிர்த்து, வேறுயாரே உளர்?"

"துஷ்டநிக்ரஹ, சிஷ்டபரிபாலனத்தின் பொருட்டும், அறநெறி நிறுவுதல் பொருட்டும், நான் ஒவ்வொரு யுகத் திலும், அவதரிக்கிறேன்" என்று கீதையின் வாக்கியத் தையே, தியானித்தவர்களாக, விண்ணை நோக்கி, ஆண் டவனின் அருளுக்காக ஏங்கிநிற்கின்றனர், எளிய சாதுக் கள். இன்றோ, தங்களுடைய திருவுருவை காணக்கிடைத்த பெரும் பேற்றின் நிமித்தமாக, எங்கள மனத்தகத்தே குடி கொண்டிருந்த பயங்கள் பறந்திட்டன. அவநம்பிக்கையும், ஏமாற்றமும், அழிந்துபட்டன. நம்பிக்கையென்னும் பயிர் முளை விட்டிருக்கிறது. அது தலையெடுத்து, தழைத் தோங்கும என்பதில் ஐயமில்லை. அன்று தொட்டு இன்று வரை தாங்கள் "ஆனந்த குடீரத்தில்" அமர்ந்து, பாரின் கண்ணுள்ள பற்பலபாகங்களில் வதிந்து வரும் மக்களின் மனத்தினை பக்தி நெறியில் நிறுத்து வதற்காக எத்துணை பாடுபட்டிருக்கின்றீர்களோ, அதைவிட ஒரு மேலான நலன், தங்களுடைய இந்த யாத்திரையின் மூலம், எங்

களுக்குக் கிட்டியுள்ளது அஃது யாதெனில், தாங்கள் இந்தயாத்திரையின் மூலம், உலக க்ஷேமத்துக்கான, விதை விதைத்திருக்கின்றீர்கள். இது எங்களுக்கும், யாவருக்கும், மிக்க நலம் பயக்கக்கூடியதாகும்.

"அகிலம் துறந்த அண்ணலே! சுவாமிகளே! இந்த சிவாஜி உடற் பயிற்சிக்கழகம், 1927ம், ஆண்டில், ஸ்ரீமான் சஞ்சீவி காமத் அவர்களின் பெருமுயற்சிகளினால் நிறுவப்பட்டதெனபதையும், அன்று முதல இம்மண்டலம் பாரத நாட்டினுடையதேயான, உடற்பயிற்சிகள், ஸூர்ய நமஸ்காரம் யோகாஸனங்கள், இவைகளின் பிரசார மூலமாக, மக்களுக்குத் தொண்டாற்றி வருவதை தாங்கள் அறிந்திருப்பீர்கள். இம்மண்டலத்தை நிறுவி இன்றைக்குச் சற்றேறக்குறைய இருபத்து மூன்றே வருடங்கள் தான் ஆயினபோதிலும் இந்த ஸ்தாபனத்தின் மூலம் ஆயிரக்கணக்கான மக்கள், நன்மை பெற்று, வெவ்வேறு இடங்களிலே, "ஆரோக்கியம் குன்றியும், வியாதிகளினால் பீடிக்கப்பட்டும் வசித்து வரும் மக்களுக்கு" தொண்டு புரிந்து வருகின்றனர்.

"நோயற்ற திடகாத்திர சரீரம் பெறுதல் வேண்டும்; அதனிலே பிறர் சேவையில் ஈடுபடும பவித்திரமான மனத்தினைப் பிரதிஷ்டை செய்தல் வேண்டும" ஆகிய இவையே எமது குறிக்கோளாகும். நாங்கள கர்மயோகி, சத்ரபதி சிவாஜி மகாராஜாவை எங்களுடைய லக்ஷிய புருஷராக ஏற்று, எங்கள் உடலினை உடற்பயிற்சிகளினால் உறுதியாகவும, மனத்தினை யோகாசனம், பிராணாயாமம, முதலியவைகளால், தூய்மையாக ஆக்க முற்படுகிறோம்.

மேலும் தங்களைப்போன்ற, அன்பே உருவெடுத்த, மகான்களின் ஆசிர்வாதத்தினால், நாங்கள் உலக க்ஷேமத்தையும், நலன்களையும், கோரிக்கொடுக்கும் ஆண்டவனின், கைக்கருவிகளாக ஆவோம் அவனுடைய சக்தியின் இயந்திரங்களாக ஆவோம். மாந்தர்களிடம் மட்டற்ற அன்பு பூண்டவர்களாகத் திகழ்வோம்.

தங்களுடைய, இந்த யாத்திரையினால், கிட்டிய பலனும், நலனும், இவ்விடத்திய மக்களின் மனத்திலிருந்து, தன்னலத்தை அறவே அழிக்கட்டும், இரக்கமற்ற தன்மையே அகற்றட்டும், எம்மிடையே பொங்கி நிற்கும் வேற்றுமை உணர்ச்சியை கரைந்துருகச் செய்யட்டும். இவற்றின் மூலம், நாட்டிலே, அமைதி, ஆரோக்கியம், சந்தோஷம், தனதான்யங்களின் விருத்தி, ஆகிய இவை ஏற்பட்டுப் பெருகிவளருமென்று, திட்டமாக நம்புகிறோம்.

தங்கள் ஆசி பல கோரிநிற்கும்,

**சிவாஜி உடற்பயிற்சிக் கழக உறுப்பினர்கள்,**

**சென்னை.**

இவ்விழாமுடிந்ததும் ஹிந்து தியாகராஜிகல பள்ளிக்குச் சென்று அங்கு மாணவர்களுக்கு தக்க அறிவுரைகளை உபதேசித்துப் பின்னர் ஸ்ரீ சுவாமிகள் அன்பர் திரு சம்பந்த முதலியார் அவர்கள் வேண்டுகோளின்படி அவர் இல்லம் சென்று அனைவருக்கும் ஆசி தந்து புரசவாக்கம் திவ்யஜீவன் சங்கக்கிளைக்கு விஜயம் செய்தார்.

அதன் பின்னர் இன்று மாலை வரையில் சுவாமிகள் நேஷனல் பெண்கள் உயர்தரப் பள்ளிக்கும், சென்னை வேதாந்த சங்கத்துக்கும், ஆரோக்ய ஆசிரமத்திற்கும் விஜயம் செய்து ஆங்காங்கு பற்பல உபதேசங்களைப் போதித்து அனைவரும் பிறவிப் பெரும் பயன் எய்தும் வண்ணம் அனுக்கரகித்தார். இத்துடன் இன்றைய நிகழ்ச்சிகள் முடிவடைந்தன.

## சுவாமி சிவானந்தர்
### செவ்வாய் அலுவல்கள்

காலை 6-30 மணி பாரகடவுன், தேவ ராஜ முதலி தெரு ஸ்ரீ சென்ன மல்லீசவரர் ஸ்ரீ சென்னகேசவப் பெருமாள் கோவில்களில் சுவாமி தரிசனம்.

8-மணி - அடையாறு கலாக்ஷேத்திரம, பெஸண்ட் பிரம்மஞானப் பள்ளிக்கூடம, குழந்தைகள் விடுதிகளுக்கு விஜயம.

11-மணி-அடையாறு பிரமமஞான சங்கத்துக்கு விஜயம்.

பிற்பகல் 2-15 மணி-பிராட்வே, "மைமாகஸின் ஆப் இந்தியா" ஆபீஸில் உபசாரம்.

மாலை 3-15 மணி தங்கசாலைத் தெரு, ஸ்ரீ சென்ன ஏகாம்பரேசுவரர் கோவிலில் சுவாமி தரிசனம்.

4-30-மணி கோடம்பாக்கம், ஸ்ரீ வட பழனி ஆண்டவர் கோவிலில் சுவாமி தரிசனம்.

6-மணி தியாகராயநகர், "வாணி மஹாலில்" நடக்கும் பொதுக் கூட்டத்தில பேசுவார்.

7-45 மணி - தியாகராயநகர் சிவ விஷ்ணு ஆலயத்தில் சுவாமி தரிசனம.

இரவு 10-15 மணி - எழும்பூர் ஸ்டேஷனிலிருந்து விழுப்புரததுக்குப் பயணம்.

## வரவேற்புப் பத்திரம்

அவ்வை ஆஸ்ரமம் 3-10-50

பிரமம ஸ்ரீ மகா மணடலேசுவர சுவாமி சிவானந்த சரஸ்வதி மஹாராஜ அவர்களுக்கு, சென்னை அடையாறு அவ்வை ஆசிரமத்தார் வாசித்தளித்த வரவேற்பு.

ஓஙகார நாதத்தால உலகினை எழுப்பும் சுவாமிஜி வருக! வருக!! தஙகள வரவு நல்வரவாகுக!!!

அஞ்ஞான இருளில ஆழ்நது உறஙகிக் கிடக்கும் மககள் விழிப்படைய வநத சூரிய ஒளியே! நாங்கள பாக்கியம் பெற்றவர்கள். தங்கள் பாத தூளி படுதலால் எங்கள் ஆஸ்ரமம் பரிசுத்தமடைநதது.

எஙகள அவ்வை நிலையம் ஜாதிமத பேதமின்றி ஆதரவற்ற குழந்தைகளுக்கும் திக்கற்ற ஸ்திரீகளுக்கும் ஒரு ஒப்பற்ற புகலிடம். பரிவு கொண்டு வரவேற்று அவர்கள் துன்பத்தைத் துடைத்து இன்ப வழி காட்டி ஆதரிக்கும் ஆஸ்ரமம.

செநதமிழ் நாட்டில் தோன்றி தூய எளிய வாழ்க்கை வாழ்ந்து உண்மை ஒளியில் ஒழுகி உலகிற்கு ஞான ஒளி வீசிய அன்னை அவ்வை பிராட்டியின் பெயரால் இலங்குவது.

மண்ணுலகில் பொருளாதாரச் சிக்கல்களாலும், சமூகக் கொடுமைகளாலும், அறியாமையாலும் வேதனை யடையும் பெண்ணுலகைப் போற்றி நல்வழிகாட்டி இம்மாதிரியான நிலையங்கள் பல இன்றியமையாதன என்பதைத் தாங்கள் அறிவீர்கள். உடற்கு வரும் இடர்களையும் உத்தமராய்ப் பணியேற்ற பின்னர் உலகின் மாபெரும் பிணியான அஞ்ஞானத்தை அகற்றி மெஞ்ஞானத்தை யூட்டி சன்மார்க்கத்

தைக் காட்டி பிறவிப் பிணியை அறவே ஓட்ட வல்ல உன்னத தப பணியில் தங்களை ஈடுபடுத்திய ஆண்டவனை மன மொழி மெய்களால் வணங்குகிறோம். தொன்றுதொட்டு அருந்தவ முனிவர்கள் அருள்மிகு ரிஷிகள் சன்மார்க்க மணிகள் சத்திய சீலர்கள் ஆகிய சான்றோர்கள் வழி வந்த எங்களுக்கு தங்கள் தனிப்பெருங் கருணையையும் உய்விக்க வல்ல அருளையும் ஆசியையும் வாரி வழங்க வேண்டுமாய்த் தங்கள் திருவடி பணிந்து வணங்கி வேண்டுகின்றோம்.

இப்படிக்கு
தங்கள் அன்புமிக்க, அவ்வை ஆஸ்ரமத்தார்.

சென்னை நகரில் ஸ்ரீமத் சிவானந்த சரஸ்வதி சுவாமிகளின் விஜயம் எத்தகைய புத்துணர்ச்சியை ஊட்டிற்று என்பதை 'நாரதர்' தம் பத்திரிகை மூலம் விளக்குகிறார்.

## சென்னையிலே சுவாமி சிவானந்தர்

சென்ற நான்கு நாட்களாகச் சென்னையில் எங்கு போனாலும், ரிஷி கேசத்திலிருந்து வந்திருக்கும் ஸ்வாமி சிவானந்த சரஸ்வதியைப் பற்றிய பேச்சுதான். அவர் அங்கே வந்தார், அவர் அந்தக் கோவிலில் தரிசனம் செய்தார்; அவர் இங்கே வந்தார், அநாயாசமாகப் பேசினார்; அங்கே வந்தார்; அங்கிருந்து புறப்படவே அரைமணி யாகி விட்டது; என்றெல்லாம் ஜனங்கள் பேசுவது என் செவிகளில் விழுந்தது.

கன்னி முனையருகே, அசல் பாண்டிய நாட்டில், தாமிரபருணிக் கரையில் ஒரு சிற்றூரான பத்தமடையில், பிறந்தவர் இந்தத் தமிழர். வடக்கே இமயத்திலே, சுமார் முப்

பதாண்டுகளாக, காஷாயமேந்தி, கடுந்தவம் புரிந்து, தன்னை யறிந்து, உண்மை யறிந்து, நல்லதை நானிலத்துள்ளோருக் கெல்லாம் அழகாக எடுத்துச் சொல்லி வருகிறார். சமஸ்கிருத பாஷையில் மகா மேதையாக இருந்து, ஆத்மீகத் துறையில் அபார ஆராய்ச்சி செய்து, நாடெங்கும் புகழ் பெற்று வாழ்ந்து மறைந்த ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் வழி வந்தவர் ஸ்வாமி சிவானந்தர். இவர், சிறந்த ஆங்கில பாஷையில் நூற்றுக் கணக்கான ஆத்ம ஹிதமான விஷயங்களடங்கிய நூல்களை இயற்றியிருக்கிறார்.

சுயநலமின்றி, பரநலத்திற்காகவே பாடுபட்டு வரும் ஒரு உத்தம சந்நியாசி இவர். ஆடம்பரமென்பதே அணுவளவும் அற்றவர். ஆண்டவனுக்கு அடிமையாக இருப்போரின் எண்ணிக்கையை அதிகப்படுத்துவதில் அசாத்திய ஆர்வமுள்ளவர் இவர். குழந்தை உள்ளம் படைத்தவர். குழந்தையைப் போலவே பேசுபவர். பேச என்று எழுந்து விட்டால், மடை திறந்த வெள்ளமென ஞான போதனைகள் வந்து பாய்கின்றன. கேட்போருக்கு அலுப்பு ஏற்படுவதே இல்லை.

ஆங்கிலம், தமிழ், ஹிந்தி எல்லாம் கலந்து பாய்கின்றன. நடுநடுவே ஈஸ்வர நாம பஜனைகளைச் செய்கிறார் உற்சாகத்தோடு எல்லாவித சக்திகளும், ஈஸ்வரநாமங்களைத் தொடர்ந்து பஜனை ரூபத்தில் உச்சரிப்பதால் உண்டாகின்றன என்கின்றார்.

'ஈட் எ லிட்டில், டிரிங்க் எ லிட்டில், ஸ்லீப் எ லிட்டில், திங்க் எ லிட்டில், டீ எ லிட்டில்' என்று ஆங்கிலத்தில் பாட்டாகப் பாடுகிறார்.

'மிதமாகச சாபபிடு, மிதமாக அருந்து, மிதமாகத் தூஙகு, மிதமாக நினை, சிறிதேனும செய்' என்று அர்த்தம் இதற்கு

நகை முகத்தோடு நல்லது பல சொல்கிறுர். செவிக் கும், உள்ளத்திற்கும சிறந்த விருநதாக இருககின்றன அவ ரது உபதேச மொழிகள்.

அவரது எழுத்து வன்மை அபாரமானதாம். அவரது ஆங்கில நூல்களைப் படித்து, அவரது சீடர்களானவர்கள் பலர். உலகெங்கும் அவரது தெய்வநெறிச சஙகத்தின் கிளைகளிருககின்றன.

இத்தகைய ஸ்வாமிஜிக்குச் சென்னை நகர சபை வரவேற்பளித்தது. வணககம் தெரிவித்து உபசரித்தது, சென்னைக்கே ஒரு பெருமையாகும.

சென்னையில் உள்ள முக்கியமான பல ஆலயங்களுக் கெல்லாம் சென்று, ஸ்வாமிஜி வழிபட்டார். ஒரு பிரபல அரசியல் தலைவரை அலைக்கழிபபது போல, இநத வயது முதிர்ந்த துறவியை அங்குமிஙகும் இழுத்துச் சென்று அசாத்யமாக பேச வைத்து விட்டார்கள். ஆனல் அது காரணமாக, அநேகாயிரவர் அவரைத் தரிசித்துமகிழ சந்தர்ப்பம ஏறபட்டது.

சென்னையிலே அவரை மிகச் சிறநத முறையில் வர வேற்று மலர் அன்னவாகன அலங்காரததுடன கூடிய ரதத் தில்வைதது ஊர்வலமாக இட்டுசசென்று அவருககு வேண டியதனைததையும செய்து கொடுத்து, அவரது அன்பிற்குப் பாத்திரமானவரும, "மை மாகஸின்" பத்திரிகை முதலாளி

யும, நகர சபை அங்கத்தினருமான ஸ்ரீ பி. கே. விநாயக மும், "மை மாகஸின்" கூட்டாசிரியரான ஸ்ரீ கே. ஆர். சேஷாத்திரியும எடுத்துக் கொண்ட சிரமம் கொஞ்ச நஞ்சமல்ல. வரவேற்புக கமிட்டித் தலைவரான கனம நீதிபதி ஏ. வி. விஸ்வநாத சாஸ்திரியாரும் நிழல் போலவே கூட இருந்து வநதார்.

ஸ்வாமிகளின் விஜயம் ஆஸ்தீகர்களின் உள்ளஙகளுக்கு ஒரு 'டானிக்' கொடுத்தது மாதிரி இருககும.

—நாரதா 3-10-50.

இன்றைய நிகழ்ச்சியில் கண்டபடி எல்லா இடங்களுக்கும் விஜயம் செய்ததோடு இடையே அடையாறு 'அவ்வை' விடுதிககும் சென்று அவ்வாசிரமத்தார் அன்புடன் அளித்த வரவேற்பை ஏறறுக்கொண்டு அவர்களுககு நல்லுரைகளைக் கூறி நாம சங்கீர்தனமும் செய்து அனைவரையும் ஆசீர்வதித்தார்.

பின்னர் இரவு எழும்பூர் ரயில் வண்டி நிலையமடைந்து 10-15 மணிக்கு யாததிரா மணடலி அடுத்த இடமாகிய விழுப்புரத்தை நோக்கிப் புறப்பட்டது.

## விழுப்புரம்

4—10—50-ல் விழுப்புரத்தில் அன்பர்கள் கூடி சுவாமிகளை மிகவும் பக்தியுடன் வரவேற்று பத்திரம் படித்தளித்தார்கள்.

கேப்டன் V. S மணி, மற்றுமுள்ள பல திவ்ய ஜீவன் சங்கத்து அங்கத்தினர்கள வெகு உற்சாகத்துடன் சகல ஏற்பாடுகளையும் தயார செய்தார்கள

இருஷீகேசம்
தெய்வநெறிக்கழக ஸ்தாபகத் தலைவர்
பூமண்டலேஸ்வர
## ஸ்ரீசுவாமி சிவானந்த சரஸ்வதி
மகாராஜ அவர்கள்
4—10—50ல் விழுப்புரம் விஜயம்செய்தபோழுது
## விழுப்புரம் தெய்வநெறிக் கழகத்தாரால்
பணிவோடு படித்தளித்த
## வரவேற்பு பத்திரம்

அறநெறியை அகிலமெலாம் அளித்தாய் போற்றி
ஆத்மாவின் ஆனந்தம் ஆனாய் போற்றி
இதயத்தில் இறைவனைக் காண்கின்றாய் போற்றி
ஈசனைத் துதிக்க வழிதந்தாய் போற்றி
உடல்நலத்திற்குயர் நெறியும் உரைத்தாய் போற்றி
ஊக்கமோ டொருமையுழைப்பு உகந்தாய் போற்றி
எளிமையால் இன்பமதை ஈவாய் போற்றி
ஏழ்மையிலே இன்பமென ஏற்றாய் போற்றி
ஐம்பொறியை அடக்குமுறை அறைந்தாய் போற்றி
ஒளியொலிகளுட் பொருள்கள் உரைத்தாய் போற்றி
ஓங்காரத்தொரு பொருளில் ஒளிர்வாய் போற்றி
ஔஷதமாம் சற்குருவே போற்றி போற்றி.

அன்பின் வடிவாய் அறத்திற்கோர் அரணாகி அகில மெலாம் ஒளிவீசும் ஆத்ம ஜோதி.

மாயையின் மயக்கால மானிடர்கள் மதிகெட்டு பகுத்தறிவு பெற்றும் பகற்கனவு காண்போராய் உள்ளிருக்கும் உணவு விட்டு ஊருராய் உழல்வன்போல் தன்னுள் நோக்கி தன்னியல்பைத் தான் அறிந்து மற்றும் உயிர்களெல்லாம்

மாதவனே எனறறிந்து, அறநெறி வாழ்வே அழியாச் செல்வமென்று வாழவறியாது விபரீதக் கொள்கை மிஞ்சி தாழ்ந்த நிலையடைந்து தவிதந்து நிற்கும் இந்நாளில் உண்மை உணர்த்தி உலகியலில் உழனறுறும் அவரவாககேற்ற அறநெறியைக் கைக்கொண்டு பிரம்மசரியம் பேணி பெரியார்கள் தனைப்போற்றி மனமொடுங்கும் மார்க்கமும் மந்திரமும் தான் கொண்டு நியமங்களுடனே நிறைவனை இடைவிடாது நாமமதால் ஏற்றி நலமபெற வாழ்வதற்கு நானாவிதமாக நாடெங்கும் எடுத்துரைத்து நாஸ்தீகத்தை வீழ்த்திய குருநாதா வருக.

தங்கள் தெய்வீக வரவால் தூயமையுற்றது இச்சிற்றூர்.
கைம்மாறு கருதாக் கருணைபொழி கற்பகமே
ஏழைகட்கும் இடைவிடாது ஏவல் செய்யும் கர்மயோகி
பக்தியை பாரெங்கும் பரப்பவந்த பரம்பொருளே.

ஞானத்தின் உண்மையை ஊட்டவல்ல ஞானவள்ளால் மழைக்கு மனிதனால் ஆகவேண்டிய தொன்றுமில்லை. மழையினால் மனிதற்கு மங்களங்களுணடாகும். ஒருவாககாய் வந்தமழை பலருககும் பெய்வதேபோல் உன்னைப்போற்றும் உத்தமா பல்லாயிரவா எஙகெஙகோ ஏவலுககு எதிரபாராத திருந்துமம,

தங்கள் பொன்னடியைப் பார்க்க எங்கள் புண்ணியத்தை என்னென்போம!

தஙகள் பரப்பிரம்மஸ்வரூபமும், பிர்ம்ம ஞான வாழ்க்கையும தவசியரும் கண்டேற்றும் தத்துவ விளக்கங்களும் வேதாந்தத்திற்கும் புத்துயிர் கொடுத்தது. சன்மார்க்க

வாழ்வை பெருக்கியது. நாஸ்தீகத்தை நசிக்கச் செய்தது. ஒளி கிடையாதுழன்ற சாதகர் பலருக்கு பேரொளி கொடுத்தது.

தினசரி வாழ்வும் திறமபட நடக்க தெய்வீகம் தேவையெனத் தெளிவாக்கியது. ஜாதி, மதம், தொழில்கள் எத்தகைய தெனினுமு ஒவவொருவனும, ஒவ்வொருவளும் தன் வாழ்வை நல்ல நம்பிக்கையுடன் உயர்நிலேக்கு கொண்டு வர அறிய வழிகாட்டியாயிறறு. யோகத்தின் உண்மையையும் வழிகளேயும் யாவருமு அறிநது எளிதில கைக் கொள்ள உதவியது

தன் லீலேககாக ஜீவர்களே சம்சாரக் கடலில தளளிய கடவுள அவவப்பொழுது கட்டைகளேயுமு மரஙகளேயும் கொட்டுவான்போல் வேதங்கள் விடுததான். உபநிஷதங கள் உதித்தன. கீதையைத் தநதான். பல மேதைகளேயும் ாந்தான். இன்று எமக்குக் கிடைத்தது கட்டை அல்லது கட்டுமரம் இல்லே, தோணியுமு இல்லே. "சிவானந்தக்கப்பல்," யாவரும் ஏறி கவலேயின்றி சமசாரக் கடலைதைக் கடக்கலாம்

வேதத்தின் ஸாரம் உபநிஷத, உபநிஷத்தின்ஸாரமு கீதை. கீதையின் ஸாரமு "ஸ்ரீ சிவானந்தசரஸ்வதி" எனறால் மிகையாகாது.

அறநெறியான தங்கள் அருள வாக்குகள அவ்வப பொழுது உத்தமர் பலரை உய்வித்து வந்தும் தனயரைத் தேடிவருமு தநதையேபோல் தங்களா அமுத மொழியாலும், அருட்கண்ணோக்காலும் ஆதரித்து ஆட்கொள்ளவந்த அன்பினபெருக்கை என்னவெனறு சொலவது? உல s

நிலையில் உடலுக்கு மாத்திரமின்றி ஜீவனுக்கும் உணவின்றி அறத்தைப்போற்றி வளர்க்க ஆற்றலற்று, ஆர்வமும் விட்டுசரீர யாத்திரையே சங்கடமாகி பெரிய சோதனைக் குள்ளாகி யிருக்கும் எங்கள்பால் நின் கடாக்ஷவீக்ஷண்யத்தால் பருதிமுன் பனிபோல் துன்பநிலை நீங்கி ஸன் மார்க்க வாழ்விற்குரிய சூழ்நிலையும் பேரறிவும் பெற அருள்வீராக. கண்ணன்போல் தொண்டுசெய்யுப் நின் தண்ணொளியால் பூவுலகில பூசல்கள் நீங்கி புத்துயிர் பொலிய வைப்பாய் புண்ணிய மூர்த்தி.

இங்ஙனம்,

**தெய்வநெறிக் கழகத்தார்,**

விழுப்புரம்.

சுவாமிகளை அலங்கரித்த வாகனத்தில் ஊர்வலமாக அழைத்துவந்து திரும்பவும் ரயில் நிலையத்தில் சேர்த்தார் கள். ஜெயகோஷத்துடன் அங்கிருந்து வண்டியும் புறப் பட்டது.

—o—

## சிதம்பரம்

சிதம்பரத்தில் டாக்டர் பி. ஸி ராய் ஸ்ரீ சுவாமிஜியின் விஜயத்தைப்பற்றி சகல ஜனங்களுக்கும் தெரியப் படுத்தினர். அண்ணாமலை யுனிவர்சிடியில் ரிஜிஸ்ட்ரார் ஒரு பொதுக்கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தார். பிறகு சிதம் பரம் கோயிலில் ஆயிரக்கணக்கான ஜனங்களுக்கு உப தேசம்-செய்தார். அதுசமயம் அரவிந்தகோஷ் ஆஸ்ரமத் திலிருந்த புகழ்பெற்ற ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் விஜயம் செய்தார்.

## ஸ்ரீ சிவானந்த யாத்ரா மண்டலி
## சிதம்பரம் விஜயம் 4-10-1950.

---

மாலை மணி 2-29க்கு வருகை. மணி 3 லிருந்து அண்ணாமலை சர்வகலாசாலை விஜயம்; சர்வகலாசாலை போதகாசிரியர்கள உத்தியோகஸ்தர்களுடன் பேச்சு; தேநீர விருந்து; சாஸ்திரியார் ஹாலில் ஆத்மீக ஸம்பந்த மான கூட்டம.

இரவு மணி 6 லிருந்து 9 வரையில யோகாஸனப பயிற்சிசெய்து காண்பித்தலும், ஆச்ரம வேலைகளை, சினி மாப்படமாக காண்பித்தலும். டவுனுககு திருமபி வருதல. கோஷ்டியாக ஸ்ரீ நடராஜர் கோயிலுககுச சென்று பூஜை, நாமசங்கீர்த்தனம, உபந்நியாசம்.

5—10—1950 காலை 7-50ககு மாயவரத்திற்கு புறப்பாடு

—o—

உ
குருபாதம்

## அழைப்பிதழ்

---

ஸ்ரீ சிவானநத சரஸ்வதி அவர்கள் யாத்திரைக்காக, தென்னாடு வருகிறார்கள். வழியில் தருமபுர ஆதீனத் திற்கு 5-10-50 வியழாக்கிழமை காலை 9-30 மணிக்கு எழுநதருளுகிறார்கள். அவர்கள் இமாலயத்தில பல யாண்டுகள் தவஞ்செய்து, சகல சாஸ்திரங்களையும் ஆராய்நது, தெளிநது, நிட்டைகூடி, ஆத்மதரிசனம் செய் தவர்கள. யோகம வேதாந்தங்களைப்பற்றி அவர்கள் எழுதி யுள்ள நூல்கள் பல. அவை மேல் நாடுகளிலும் ஏராளமாய்

பரவியுள்ளன. 1936-ம் ஆண்டில் அவர்கள் நிலைநாட்டிய தெய்வநெறிக் கழகம் ஐரோப்பாவிலும், இங்கும் பல இடங்களில் பல கிளைகளுடன் விளங்கிவருகிறது. அவர்கள், யோகமுறைகளையும் ஆத்மஞானப் பயிற்சியையும் அளித்து வருகிறார்கள். இந்த மகானைத் தரிசிக்கும் அரிய சந்தர்ப்பம் இப்போது வாய்த்துள்ளது. ஆதலால் அவர்கள் வரவேற்பிலும், நிகழ்ச்சிகளிலும் கலந்துகொண்டு உபதேச மொழிகளைக் கேட்டுய்ய வேண்டும்.

உத்தரவுப்படி,

தருமபுரம், 29—9—50.

சோமசுந்தரத் தம்பிரான்,
ஆதீனப் பிரசார கோஷ்டித் தலைவர்.

—o—

## நிகழ்ச்சி

5—10—50 வியாழக்கிழமை

—o—

| | | |
|---|---|---|
| காலை மணி 9-30 | | மாயூரம் ஜங்ஷனில் வரவேற்பு. மாலையணிதல், பூரணகும்பம், விபூதிபிரசாதம். |
| ,, | 10 | சண்முக விலாஸுக்கருகில் இருந்து ஊர்வலம் |
| ,, 10-30 | 11 | வடக்கு மடத்தில் வரவேற்பு. |
| ,, | 11 | காவிரியில் நீராடுதல், கோயில், மடாலயம் தரிசனம். |
| நடுப்பகல் | 12 | உணவும்—ஓய்வும் |
| மாலை | 3-10 | அரங்கிற்கு அழைத்துவருதல். |
| ,, | 3-30 | கூட்டம் |

1. கடவுள வாழ்த்து.
2. வரவேற்புரைகள்.
,, ஆதின மடம்.
,, ஆதீனக் கல்லூரி.
,, எனைய கலவி நிலையங்கள்
3 கீர்த்தனம வேலாயுத ஓதுவார்.
4. உரையாடல்: மாணவர்கள்.
5. பஜகோவிந்தம: மாணவாகள்
6 உபதேசம: சுவாமிஜி.
7 நன்றிகூறல்.

,, 6 திருக்கடவூருக்குப் புறப்பாடு.

இரவு 7-30 8-30 ஸ்ரீ அமுதலிங்கப் பெருமான், ஸ்ரீ அபிராமி காலசமஹாரமூர்த்தி தரிசனம்,

,, 9 தருமைக்குத் திரும்புதல்

6—10 50 வெள்ளிக்கிழமை

காலை 4 பஜனை.

,, 5 வழி அனுப்பி உபசரித்தல்

---

[தருமபுர ஆதீன சஞ்சிகையான 'ஞான சம்பந்த'த்தில் வெளியான கட்டுரை.]

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாம் பிஞ்ஞகா பிறபபிலீ
கொன்றையம முடியிஞய் கூடலால வாயிலாய்
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே—சம்பந்தர்

## ஸ்ரீ சிவானந்தர் விஜயம்

ஒரு மூன்றுமாத காலமாகவே தென்னுடு சிவானந்த மகாராஜ அவர்களை வரவேற்கத் தயாராகிறது. சிறப்பாகத் தருமபுரமும அப்படியே. ஊரெங்கும் தூய்மை; எங்கும் மகர தோரணங்கள; அங்கங்கும் தமிழிலும், வடமொழியிலும், ஆங்கிலத்திலும எழுதிய வளைவுத்தட்டிகள்.

சுவாமிகள் தங்குவதற்கு வசதியாகத் தேவாரபாடசாலையும் புது எழிலுடன்·மினுக்கெண்ணை முதலிய பல நிற வாணங் களைப் பூசிக்கொண்டு தயாராக இருந்தது. சிப்பந்திகள் நியமன ஜாப்தாவும் தயாரிக்கப்பட்டு அவரவாகளும இன் னின்னது செய்யவேண்டும என முன்னரே அறிவிப்பும் தரப்பட்டிருந்தது.

சுவாமி சிவானந்த மகராஜ் சென்னைக்கு வந்து விட்டார்கள் என்று தெரிந்தவுடனேயே மகாசந்நிதான மவர்கள் ஆதீனச்சாரபில் பிரதிநிதிகளைச் சென்னைக்கு அனுப்பி வரவேற்கச் செய்தார்கள் சிதம்பரத்திற்கு வந் ததும் தருமபுர ஆதீனத்தின் சார்பாக வேளூர் கட்டளை விசாரணை ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் வர்கள், சுவாமிகளை வரவேற்று உடனிருந்து அழைத்து வந்தார்கள். அன்று மாலை சுவாமிகள் ஸ்ரீ சபாநாயகர் கோயிலுக்கு எழுந்தருளியதும் சுவாமிகளால் அங்கு தரும புர ஆதீனத்தின் நூல்நிலையம் ஒன்று திறந்து வைக்கப் பட்டது. அது தீக்ஷிதர்களுடைய உபயோகத்துக்காக மட்டும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களால் அளிக கப்பட்டதாகும். வேளூர் கட்டளை சுவாமிகள், சுவாமிஜீ அவர்களை அழைத்துக்கொண்டு 5-10-50 காலை 7-40 வண்டிக்குச் சிதம்பரத்தில் ரயிலேறினார்கள். சீகாழி வந்ததும் ஸ்டேஷனில் ஆரஹார முழக்கம் கேட்டது. ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானமவர்களின ஆணையால் சீகாழி கட் டளை விசாரணை, வித்வான் ஸ்ரீமத் சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகள் கோயில் மரியாதையுடன் விபூதிப்பிரசாதம் பார்த்தார்கள். அடுத்து வண்டி வைதீஸ்வரன் கோயில் வந்துநின்றது. அங்கும் ஸ்டேஷனில் பெருங்கூட்டம்.

வேளூர் தேவஸதானத்தில விருநது மநதிரமும், தந்திரமும் மருநதுமாகிய ஸ்ரீவயிததியநாதப்பெருமானின் அநுக்கிரஹ விபூதியும் பிரஸாதஙகளும வநதிருந்தன. அவறறை வேளூர் கட்டளை சுவாமிகள் வாஙகிச் சிவானநத சுவாமிகளிடம ஏறபித்தாாகள். புறப்பட்டது வணடி. 9-40கசூ மாயூரம் ஜஙஷன வநது சேர்ந்தது.

மாயூரம நகர சபைச் சார்பிலும் மறறும பல ஸ்தாபனஙகள் சார்பிலும் வரவேற்க முன் ஏற்பாடு செய்திருந் தார்கள். ஸ்டேஷனிலும் பெருங்கூட்டம். வைதீக சம்பிரதாயப்படி ஆதீன மரியாதைகளுடன் ஞானபுரீஸ்வர ஸ்வாமி கோவில் பிரசாதங்களைச சேர்ப்பித்து, பூர்ண குமபத்தோடு முதல் முதல் வரவேற்கப்பட்டது. திருக் கடவூர்கட்டளை ஸ்ரீ மாணிக்கவாசகத் தம்பிரான் சுவாமிகள் மாலையணிந்து வரவேற்ருர்கள நகரசபை சார்பாக வந்த ஸ்ரீமான் முத்தையஞ் செட்டியார் அவர்களும், மற்றும் பல சபையின் அமைச்சர்களும் சுவாமிஜி அவர்களுக்கு அறிமுகம் செய்விக்கப் பெற்ருர்கள். பிறகு ஆதீன மோட்டாரில தருமைக்கு எழுந்தருளினுர்கள். வழியில் சுவாமிஜி அவர்கள் மாயூரம் நகராண்மைக் கழக உயர் நிலைப்பள்ளிக்குச் சென்று முனிஸிபல், மெடிகல் அஸோஸியேஷன், மாணவர் ஆசிரியர் சங்கம், முதலியவற்றின் வரவேற்புப் பத்திரஙகளைப் பெற்றுக் கொண்டு, ஆசி அருளி, நல்லுரை வழங்கினுர்கள்.

11 மணிககு சுவாமிஜி அவர்கள் தருமபுரம் சண் முகம் வளைவுககு அருகாமையில் வந்தார்கள். குடை, கொடி, ஆலவட்டம், பூர்ணகும்பம், யானை இவைகளுடன் வரவேற்க ஏற்பாடாகியிருந்தது. இரு மருங்கும் ஆதீனக்

கல்வி நிலைய மாணவர்கள் அனைவரும் அணிவகுத்து நின்று சிவநாம முழக்கம் செய்தனர். கார் மெதுவாக ஊர்ந்து வந்தது. மாணவர்கள் அனைவரும் திருவாசகத்திலுள்ள சிவபுராணம் போற்றித்திரு அகவல் இவைகளைப் பாரா யாணம் செய்துவந்தார்கள். கும்பகோணம், நாகப் பட்டினம், பேரளம், சிக்கல், நன்னிலம், மஞ்சக்கொல்லை முதலான இடங்களிலிருந்தும் பல மெய்யன்பர்களும், தெய்வநெறிக்கழக உறுப்பினர்களும் சுவாமிஜி அவர்களைத் தரிசிக்கக் கூடியிருந்தார்கள். மங்களவாத்தியத்துடன் வந்த ஊர்வலம் தேவார பாடசாலையை அடைந்தது. வந்திருந்த அன்பர்கள் அனைவரும் முறையாக வணங்கிச் சுவாமிகள் அவர்களின் அருளைப் பெற்றுக்கொள்ள, சுமார் மணி 12 ஆகிவிட்டது அதற்குமேல் யாத்திரைகோஷ்டி அமைச்சராகிய ஸ்ரீ பரமானந்த அவர்கள் சுவாமிஜி அவர் களுடைய திருமேனிப்பாங்கை முன்னிட்டு, சுவாமிஜி அவர்களைத் தனித்திருக்குமாறு வேண்டிக்கொண்டார்கள். அவ்வாறே அதற்கேற்ற வசதிகளும் செய்துதரப்பட்டன. பின்னர் உணவும் ஓய்வும்.

மாலை 9-30 மணிக்குக் கூட்டம் ஏற்பாடாயிற்று. பழுத்த தவச்செல்வருடைய பண்பட்ட மொழிகள் ஊரெங்கும் பரவ எட்டுதிக்கிலும் ஒலிபரப்புக் கருவி கள் பொருத்தப்பட்டன. ஆதீனப் பாடசாலை ஆசிரியர் களாலும் மாணவர்களாலும் தேவார இன்னிசை முழக்கம் செய்யப்பட்டது. ஓசை ஒலியெலாமான சிவபெருமான் சலையை எல்லோரும் மனத்தகத்துக் கண்டு சிவானந்த மகராஜ அவர்களும் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களும் கூட்டத்திற்கு எழுந்தருளி வந்து மேடையிலுள்ள தத்த மக்குரிய ஆசனத்தில் எழுந்தருளினார்கள். இரண்டு குரு

மார்கள் எழுந்தருளியிருக்கின்ற காட்சியை அன்பர்கள் கண்டு ஆனந்தித்தார்கள். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்திற்கு அன்று குருவார உபவாசமும் மௌனதினமும் ஆகையால் முன்னாலேயே ஒலிப்பதிவு செய்யப்பட்டிருந்தது. அவர்களின் *உபசாரமொழிகள் அப்பொழுது ஒலிபரப்பப் பட்டன.

———

## ஸ்ரீசுவாமிஜி சிவானந்தசரசுவதி மகராஜ்

அவர்கட்கு

(தென்னாட்டுச் சுற்றுப் பயணத்தினபோது)

மாயூரம் நகராண்மைக்கழக உறுப்பினர்கள்

மனமகிழ்ந்து அளித்த

## வரவேற்புரை

—o—

பிறவா யாக்கை உடையோன்
மலரடி என்றும் மறவாப் பெரியீர்!

அன்பின் சிறப்பை அகில உலகிற்கும் எடுத்துக் காட்ட, அல்லும் பகலும் ஐம்பொறிகளையும் அடக்கிய தவத்தின் தலைவ! ஆண்டவன் கட்டளையை மக்களுக்கு உணர்த்தி, அன்பு வழியிலே அனைத்து உயிரையும் சேர்ந்து வாழ, அறிவுரை கூறிவரும் ஆத்மீக தலைவா! எண்ணுவதற்கும் வலிய துன்பங்களையும், இயற்றுவதற்குக் காரணமான மனத்தை அடக்கிய மாபெரும் வித்தக! மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்ற மூன்று ஆசைகளையும் நீக்கிய முனிவா! நீரில் குமிழிபோன்ற நிலையிலா வாழ்க்கையை விரும்பாது, அந்தமில் இன்பத்து அழியாத் துறவு

*உபசாரமொழிகள் இத்துடன் இணைக்கப் பெற்றுள்ளன.

வாழ்க்கையை மேற்கொண்ட துறவின் தலைவ! மழையைக் கண்ட பயிரைப்போல—தாயைக்கண்ட சேய்போல—பசு விளைக்கண்ட கன்றினைப்போல, தங்களைக்கண்ட நாங்கள் சொல்லமுடியாத இன்பத்தை அடைகிறோம். அந்த இன்பப் பெருக்கினால் தங்களை அன்புடன் வருக! வருக! என்று வரவேற்கவும் செய்கிறோம்.

நாட்டு மக்களும், உயிர்களும் நல்ல நிலையில் செழித்து வாழ, எண்ணிய அறிஞர்கள் எங்கு எங்கு தோன்றினும் எல்லோரும் போற்றும் நிலையை அடைபவர்கள் அல்ல. ஒரு சிலரே போற்றும் நிலையைப் பெறுபவர்கள். பழங்கால மக்கள், அறிவை அநேக இயந்திரங்கள் உண்டாக்கப் பயன்படுத்தி அதனால் உலகத்தையே ஆட்டியும் அழித்தும், பிறகு அன்பு வாழ்க்கையையேக் கைக்கொள்ளலாயினர். மதிப்பிடற்கு அரிய மாபெருஞ் செல்வமும், மன்னர் பதவியும் இருந்தும், மண்ணாளும் ஆசையை வெறுத்த புத்தரையும், நாடு பிடிக்கும் கருத்தில் நாட்டு மக்களைக் கொன்றுகுவித்து நாட்டைப் போர்க்களமாக்கி, பிறகு திருந்திய அசோகரையும், அறிவு அற்ற மக்கட்கு ஆவியைக்கொடுத்து அன்பை நிலைநிறுத்திய இயேசுவையும் மூடப்பழக்கத்தில் மூழ்ந்துநின்ற மக்களை முழு அறிவு கொள்ளப் பாடுபட்ட முகமதுநபியையும், நிலம், நீர், தீ, ஒளி, வான் என்ற ஐம்பொருள்களையும் ஆண்டவனாகக்கூறி வழிபட்ட அடியார்களையும் தோற்றுவித்த உலகுதான், அவர்களுக்கு வழிவழியாக அன்பின் பெருமையை அங்கும் இங்கும் எங்கும் எடுத்து ஓத அண்ணல் காந்தியடிகளையும் தெய்வஞானசபையை நிலைநாட்டிய தங்களையும் ஏற்படுத்தியுள்ளது என்று சொன்னால் அது மிகையாகாது என்று கருதுகிறோம்.

ஆதமீகத துறையை அடிவிடாது பறறி, அதனைவழி நடநதுகாட்டிய அன்பாகள தோன்றிய நாடு இதுவே யாயினும சிறப்பாகத தென்னாடு என்று சொன்னால் மறுப்பார் யாருமஇல்லை. ஏனெனில துறவுநிலையில் நின்று, துன்பமிலாத வாழ்வை மக்கள ஏற்கும்படியான தொண்டுகள பலபுரிய எற்பட்ட மடாலயஙகளும், சமரச சன்மார்க்கம போதித்த இராமலிங்கரும், வேதமுறைப்படி விரதம இயற்றும் சஙகராசசாரியாரும், ஆணடவன் பக்கத்தில் இருநது அன்பு கூறிய ரமணரிஷிகளுமஈ, தாஙகளும இநத விதமாக இருக்கின்ற நிலையை நோக்க எநநாட்டினும தெனனாடு ஆதமீகததுறையில சிறநதுள்ளது என்பதை மறுகக இயலாது.

இத்தகைய சிறபபிற்கெல்லாம் காரணமாய் இருநது மேல்நாட்டார உணரும் வகையில ஆங்கிலமொழியில் அனபின நிலையைக கூறிவரும தாஙகள் அகில உலகும் அன்புடன இயைநத வாழ்வில ஒன்றாய் விளஙக, ஆன தொண்டுகள புரிய, நீண்ட ஆயுளையும, நலல உடல் வலிமையையும் தநது காபபாற்ற எலலாம்வலல இறைவனை வேண்டுகிறோம.

இஙஙனம,

மாயூரம் நகராண்மைக்கழகத் தலைவரும்,
உறுப்பினர்களும்

— —

ரிஷிகேசம மண்டலேஸ்வர
## சுவாமி சிவானந்த சரஸ்வதி
## மகராஜ் அவர்களின்
தென்னிந்திய யாத்திரையில், மாயூரம் எழுந்தருளியபோது
மாயூரம் வைத்திய சங்கத்தினரால்
மனமுவந்து வாசித்தளித்த
## வரவேற்பு மங்கலப் பா மலர்

—o—

தண்ணாரும் இமயமலைச சாரலில்இ ரிஷிகேசத்
தவசியாய் ஓங்கும தருவே !
சண்டன்அணு காநிலையில் மண்டலேஸ் வரனானத்
தலைவனாய் வாழும் தயவே!
கண்ணுறும அபயைய தீட்சிதரின் திருமரபில
கவினுற வெழுந்த கனியே !
கழறு தாம பிரபரணி தீரமதில் பத்தமடை
கனம்பெற வுதித்த கடலே!
பண்ணாரும பெயர்குப்பு சாமியெனப் பெற்றுமே
பரவு மருத்துவ மேற்றனை,
பவரோக முதலநக ரோகமதைத் தீர்த்துமே
பாரிலரும சீரும பெற்றாய்
விண்ணாரும் சொர்க்காதி பதியென்ன யோகத்தில்
வெற்றிமேல் வெற்றி கண்டாய்,
விந்தைமிகும் தந்தையே! எந்தாய்! சிவானந்த
வேத வித்தே! வருகவே!

(திரு சரவணபவானந்தர்.)
மாயூரம் வைத்திய சங்கத்தார்கள்.

ஸ்ரீ :

தென்னாட்டுச் சுற்றுப்பயணத்தின்போது

# சுவாமி சிவானந்த சரஸ்வதி அடிகளுக்கு

மாயூரம் நகராண்மைக்கழக உயர்நிலைப்பள்ளி,
ஆசிரியர்களும் மாணவர்களும்
மனமுவந்தளித்த

## வரவேற்புரை

—o—

**தாமிரபரணியாள் தந்த தவப்பேறும் புதல்வ! வருக!**

*பொன்னிக்கரையிலே பொலியும் மாயூர நகர்க்கு வருக! எங்கள் ஞானியே வருக! மூவாசை துறந்த முனிவனே வருக! ஈசனும் திருமாலும் இலங்கும் இத்தலத்தில் உங்களை வாழ்விக்க வந்தவனே! வருக! வருக!!*

**அப்பைய தீக்ஷிதர் அருங்குல அடிகளே வருக!**

*ஆன்மீகத் துறையில் அவரது அவதாரம் நீர்! அன்னாரின் தத்துவபோதமெல்லாம் அமரர் மொழியிலே அழகு செய்வன. ஐய! நின் போதவுரைகளெல்லாம் அகில உலக மொழியாகிய ஆங்கிலத்தின் ஆழங்கண்டன.*

**இமயத்திலே இலங்கும் பேரின்பச் சோதியே! வருக!**

*எங்களிடையே நீ வரும் இந்நாள் எங்களுக்கு இன்ப நன்னாள். குப்புசாமி யெனும் பெயர்கொண்டு திகழ்ந்து கல்வியில் குறையா ஊக்கமும் குன்றா நினைவும் குலவும் அறிவின் குன்றம் நீ. குணக்கடல் நீ. உடல் நோயின்றி மனநோய் களையும் மருத்துவ வித்தகன் நீ. நின்னை தரிசிக்க யாங்கள் என்ன பாக்கியம் செய்தோம்.*

**ஆன்மீக நூல்களை நூற்றுக்கணக்கில் அளித்தவா! வருக!**

மக்கட் குலத்துக்கே வரப்பிரசாதமபோனற நூல்கள ஆதம ஞானத்தை உலகெஙகும பரபபி ஒழுககநிலையை உயர்த்தும நோககம கொண்டன. நினபணி நீடூழி வாழ்வதாக.

**ஆன்மீக வாழ்க்கைச் சங்கம் நிறுவிய அண்ணலே! வருக!**

நின்பெருமாண்பு நிகரற்றதுகாண! நின்னை நாடி வருவோரிடம நீ உண்மைத தத்துவப பொருளைபபற்றி உரையாடுவது தனிச் சிறப்புடையதுகாண்! காட்சிக்கு எளிய நிலையும் கருத்துக்கு இனிய சொல்லும் கசிந்துருகும் அன்புககுப் புனித இடமும கொணடு பழகும அழகு நின் அழகு. இரகசியம் ஏதுமின்றி வெளிபபடையாகக காரண காரிய நிலையிலேயே கொள்கைகளை ஆராயும் நடைமுறை யினையுடையது நின்சங்கம். அடைநதோரை அணுகும் முறையிலும் தனிச் சிறப்புடையது நின்சங்கம். மற்றைச் சங்கஙகளிலே சேர விரும்புவோர் முதலிலே உறுப்பினராக வேண்டும். பூரண விசுவாசம் தெரிவித்து உறுதி கூற வேண்டும் பின்னரே சேரவும், ஆராயவும இடமுண்டு. முதலிலே வருவோருடன் மனமாரப் பேசி கொள்கைகளை விளககித் தெளிவுபடுத்திப் பின்னா உறுப்பினராகும் நிலையை வருவோரது உகப்புககு விடுதலே நின்சஙகத்தின் இணையற்ற நிலை அது என்றும் வாழ இறைவன் அருள் புரிவானாக!

**குகைக்குள் அடைபட்டுக்கிடக்க மனங்கொளளாதவனே! வருக!**

உலகசேவை உன் விருப்பம்; மக்களுயர்வு நின் கருத்து; சாதிக்க என்னென்ன செய்தாய்? 'சத்திய

சேவா ஆசிரமம்' கண்டாய்; யாத்ரீகர்களுக்கு மருத்துவ உதவி தந்தாய்; 'ஆனந்தகுடீர்' ஆசிரமம் கண்டாய்; அன்பும் ஞானமும் அங்கு குடிகொண்டுள்ளன. 'ஆன்மீக வாழ்க்கைச் சங்கம்' நிறுவினாய்; அளவிலா நூல்களை ஆக்கித்தந்தாய்; அகில உலகமும் உய்ய ஆக்கம் அளித்தாய்.

உதார குணமுடைய உத்தம புருட!

உண்மைச் சோதனையில் உயிர்வாழ்கின்றோர்க்கு உயர்ந்த இலக்கணம் இது நிரம்பப்பெற்றாய்! 'அத்வைத'க் கொள்கையில் ஆழ்ந்துள்ளோய் ஆயினும், மற்ற வேதாந்தக் கொள்கைகளையும் முடிவுகளையும் மதித்து ஆராய்ந்து அறிந்து கொண்ட நின் ஆற்றல் சூடிய பொன்னுரைகள் பொன்னேபோல உலகத்தாரால் போற்றப்படும் என்பதில் ஐயமில்லை.

அன்பும் ஆத்மஞானமும் தந்து உலகமக்களை உய்விக்க நீ செய்யும் தொண்டினை இன்றுபோல் என்றும் ஆற்றிவர நினக்கு நீண்ட ஆயுளை அருள எல்லாம் வல்லவனை இறைஞ்சுகின்றோம்.

இங்ஙனம்,

மாயூரம் நகராண்மைக்கழக உயர்நிலைப்பள்ளி,

ஆசிரியர்களும், மாணவர்களும்.

—o—

உ

குருபாதம

தெய்வநெறிக் கழக ஸ்தாபகர்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுவாமி சிவானந்த மகராஜ் அவர்கள்**

5—10—50 வியாழக்கிழமை திருக்கயிலாய பரமபரைத் தருமபுர ஆதீனத்திற்கு எழுந்தருளியபோது

## அளித்த வரவேற்பு இதழ்

—o—

இமயப்பொருப்பின் எழிற்றவ ! வருக !!

சுத்த சமரச சன்மார்க்க வித்தாய், வளர்சிமைய இமயப் பொருப்பில துறவறம பூண்ட நல்லறச்செல்வ ! வருக ! தொண்டாணசமைத்து, தவப்பயிர் நட்டு, சிவானந்தம் விளையச்செய்யும சிவானந்த சரசுவதியெனும் செம்மேனச் செம்மால் ! தங்கள் அன்புமலர் மக்கள உள்ளத் தடாகத்தே மலர்கிறது.

செந்தமிழ்நாட்டில் தோன்றிய செம்மால் !

தமிழ்நாட்டிலே-செந்தமிழ்ப் பொருநைக்கரையிலே-பக்த மடையிலே தோன்றி வீரமும் தீரமும், கவிதையும கலையும், இசையும் அரசும் முரசுகொட்டிய எட்டய புரத்திலே, மதிமலர் விரிந்து, இமயத்துச்சியிலிருந்து சிவமணம் பரப்பும் தெய்வத்தாமரையே ! அடியார் வண்டு கள் அருள்தேனுண்ண ரீங்காரம் பண்ணுகின்றன வருக !

தமிழ்நாட்டு இளங்கோவடிகளைப் போலத் துறவறச் செல்வத்துடன் நல்லறச் செல்வத்தையும் நாவலந் தீவினர்க் களிக்கும நின சான்றாண்மையை உன்னி உன்னி உவகை பூக்கின்றது அன்பர்கள உள்ளம்.

மன்னு உலகத்து மனனுதல் குறித்தோய்!

மானிடப்பிறவி அரிது. அதனினும் அரிது ஞான வேட்கை. அதனினும் அரிது மெய்வழிகாட்டும் குருவை யடைதல். ஆசைகளை அறவே பொழித்து, உலகப் புகழை ஒதுக்கித் தள்ளி, பால்நினைந்தூட்டும் தாயினைப் போலப் பண்பாடறிந்து, அறவுரை நல்கும் தங்கள் யாத்திரை நாத்திக இருளை நசுக்கி அறிவொளியை யாண்டும் மலருவிப்பதாகுக.

உதிக்கின்ற மெய்ஞ்ஞானக் கதிரவ! வருக!

அமெரிக்க சர்வமத மகாசபையிலே வேதாந்த முழக்கம் செய்த சுவாமி விவேகானந்தரேபோல, இருடிகேசத்தை அறச்சாலையாக்கி இந்தியாவையே தவச்சாலையாக்கும் ஆத்துமசோதியே வருக!

பொதுமக்கள் புனிதவாழ்வைக் கருத்துள இருத்தியான எனது என்னும் செருக்கழித்துப் பேரருள் பரியும் மனமாசில்லா மாண்புடைக்குரவ! வருக.

குருஞானசம்பந்தர் அருள்வெள்ளத்தாழ்ந்து கிளைகளும் பதி பசு பாச இலக்கணம் பேசுகின்ற இந்தத் தருமைக்கு இன்று எழுந்தருளப் பெற்றதனலை, உள்ளம் இன்பமடைகிறது! இதய கீதம் எழுப்புகிறது! உள்ளச் சோலையில் சன்மார்க்கக் குயில் கூவுகிறது! ஞானக் கதிரவன் உதித்து விட்டான்! உதிக்கின்ற செங்கதிரால் உள்ளத்திருள் ஓடுகிறது; எங்கும் அறிவொளி! எங்கும் புத்தொளி!

பொருப்பிடையிருந்து புத்தொளி தந்தருள் கதிரவ! வருக!! வாழ்க நின்னருள்!!!

தருமபுரம்,
4—10—50

ஆணைப்படி,
சோமசுந்தரத் தம்பிரான்.

உ
குருபாதம்
திருக்கயிலாயபரம்பரை தருமபுர ஆதீன மடாலயத்தின்கண்

# இருஷிகேசவாசி ஸ்ரீ சிவானந்த ஸரஸ்வதி மகராஜ் அவர்கள்

எழுந்தருளியஞான்று வாழ்த்தருளிய

## கீர்த்தனைப்பா

1. இராகம்: ஹேமவதி தாளம்: ஆதி

### பல்லவி

சிவானந்த சரஸ்வதி சுவாமி
தவமுனிபோற்றும் தத்துவஉபதேச

### அனுபல்லவி

அவமாயை நீங்கி அவனியெல்லாமுய்ய
சிவமாகவேயருளும் சிவமருள சற்குரு

### சரணம்

தவவல்லி யனைமகிழ் தவவல்லியாகியே
பவவலி நீக்கிடும் பஜனைகள் ஆக்கியே
சிவசுர நதியணி சிவன்மகிழ் மலையுறை
தவமுறை பெறஅருள் தண்ணடி வாழியே.

2. இராகம்: சாமா தாளம்: ஆதி

### பல்லவி

அத்வைத சுத்தசிவ ஆனந்தனே
நித்யானந்த திவ்ய தேஜோமயனே

அனுபல்லவி

வித்யாசசித்தசகல வேதாந்தகீதனே
அத்யாத்மவிஸ்வானந்த ஹமசோப தேசனே

சரணம்

சத்யம் ஈதனவே சகலநிட்களமதை
அத்யயனம பெறஅருளமுறை பாஹிமாம
வைத்தசற்குருமணி வானவரும்பரவ
நித்யமேபெற அருள் நிமலனே நினைநதுறும்

3. இராகம்: ஆபோகி தாளம்: ஆதி

பல்லவி

வேதாநத ஞான சறகுருவே ஸ்ரீ
நாத சிவானநத நலமருள சரஸ்வதி

அனுபல்லவி

பூதாந்தமாய புவனமதுய்ந்திட
கீதாந்த ஞான கிளர்மொழியருளிடும்

சரணம்

வேதாந்தத்துச்சி விளங்கொளி சிவநகர்
நாதாந்த நடத்தொடு நலமருள் கங்கை
மாதார்நத இமய மலையிருடிகேசமதின்
மீதார்ந்த புண்யநின் பொன்னடி வாழியே

வாழ்க திருவடி

அடியேன் ரே. வேலாயுதன்
தேவார ஆசிரியன், தருமை,
5—10—50.

௨

குரு பாதம்

# சிவானந்தரை தரிசிக்க வாரும்

(தருமபுர ஆதீனத்திற்கு சுவாமிஜியவர்கள் விஜயம் செய்தபோது, ஆதீனக் கல்லூரி மாணவர்கள் இருவரின் தத்துவ சாஸதிரக கருத்து நிறைந்த சமபாஷணை.)

இளஞ்செழியர்: என்ன நித்தியானந்தரே! இந்த நேரத்தில எங்கு புறப்பட்டீர்?

நித்தியானநதா: அடேடே! தோழர் இளஞசெழியரா! வணக்கம் ஐயா. தருமையாதீன மடாலயததுககுச் செல கிறேன். சரி வரட்டுமா நேரமாகிறது.

இளஞ்: என்ன விசேடம இன்று.

நித்தி: என்னவா. உமக்குத தெரியாதா? தமிழகம தநத தவச் செலவா ஸ்ரீ சிவானந்த சரஸ்வதி சுவாமிகள தமிழகப் பயணத்திலே இன்று தருமை வநதிருககிறாகள். எனபது உமக்கு தெரியாத? வேதாநத விற்பன்னரான... (இடைமறிதது.

இளஞ: என்னையா வேதாநதம, மற்றை சமயங்களைக காட்டிலும அவ்வளவு சிறப்புடையதா?

நித்தி. தோழரே! வேதாநதம் சாதாரணமானதல்ல. பரந்த விரிந்த கற்பகத்தருவின் ஆணிவேர் வேதாந்தம். அது நன்னெறி. மக்கள் வாழ்வில் கடைபிடிக்க வேண்டிய வறறை எலலாம ஒழுஙகுபடக கூறும. செநநெறி இநதியா வில் தற்போது வழக்கிலுளள வெவ்வேறு மதக கொளகை கள, யோகசாதனைகள எல்லாம் உபநிடதஙகளின சார மாகிய வேதாந்தத்தினின்றும் முளைத்தெழுந்ததாகும்.

இளஞ் : என்னேயா மீண்டும வேதாந்தத்தைபபற்றி விளம்ப ஆரம்பித்துவிட்டீரே. தற்கால உலகம விஞ்ஞான உலகம், சரித்திர உலகம ; அறிவியல உலகம. சாத்திரம் படிப்பது அநதக காலம, சரித்திரம படிப்பது இநதக்காலம் என்ன முழிக்கிறீர்? சரிததிரச் சான்று இருககிறதா ஐயா? கூறும, கேட்டுக கொளகிறோம. அது இல்லாமல் வெறும் புராணங்களைப் பொழிய ஆரமபித்துவிட்டீரே

நிதி : (நகைப்பு) சரித்திரக சான்று வேண்டுமா? சொல்கிறேன். இநதியாவிற் சரண்புகுநத அன்னிய மதங் களும் மண வெறி பிடித்து கப்பலேறி வநதிறங்கி அனர்த் தம் விளைவித்த புறச் சமயஙகளுஙகூட வேதாநதத்தினின் றும தபபித்துக் கொளளமுடியவில்லை. அப்படியானல் அதன பெருமையை என்னென்று சொல்வது. வேதாநதம் இநதிய மணணில கலநது ஊறியுள்ளது. அதன் சாரத்தை உட்கொளளாமல் இருகக முடியாது. ஏன் ? இதுமட்டுமா இன்றைய புதிய விஞ்ஞான உலகம் கண்டுபிடித்துள்ள உண்மைகளோடு முரண்படாத சமய தத்துவம் ஒன்று உண்டென்றால் அது வேதாநத சமயநதான். சத்தியமே வெல்லும். சத்தியப் பாதையே கடவுளிடஞ் சேர்க்கும் என்பதுதான் வேதாந்தத்தின் லட்சியம்.

இளஞ் : என்ன, மீண்டும் சத்திய போதனையா ?

நிதி : ஒரு சிறு விதையில் ஆலமரத்தின் வளர்ச்சி அடங்கி நிற்பதைப் போலவே இவ்வுலக முழுவதும் கடவு ளிடததினின்றும பரிணமித்தது என்பதே வேதாந்த சமயத் தின் கொள்கை. "டார்வின்" கண்டு பிடித்த 'எவல்யூஷன்' என்ற பரிணமக் கொள்கை இதற்கு உடன்பாடானது.

இன்ன பிரகாரணங்களாலேயே இன்றைய விஞ்ஞான உலகத்தின பார்வை வேதாநத சமயததின் மீது விழுநதுள்ளது. ஹக்ஸ்லி, ஐன்ஸ்டீன போன்ற அறிவியல் வல்லுநர்கள் வேதாந்த ரகசியஙகளை ஆராய்வது உலகறிந்த விஷயம். அப்படி யிருககும்போது உமபோலியரான ஒரு சாரார் மட்டும அறியாதிருத்தல வியப்புதான்.

இளஞ்: (யோசித்து) ஆம நீங்கள் சொல்லுவதிலும் உணமை யிருககத்தான் செய்கின்றன ஆராயப போனால் சைவத் திருமுறைகளைததும வேதாநதக கருத்துக் களோடொததனவே அதில் சநதேகமே இலலை. ஆம் ஒன்று கூட நினைவுக்கு வருகிறது. தெய்வத தமிழ்ப் பாட்டியார் ஆகிய ஔவையாரும்,

"தேவர் குறளுந திருநான் மறை முடிவும்
மூவர் தமிழும முனிமொழியும்-கோவை
திருவாசகமும் திருமூலர் சொல்லும
ஒருவாசக மெனறுணர"

என்றல்லவா கூறியிருக்கிறார். திருநான மறைமுடிவும் தமிழ்த் திருமுறைக் கருத்தும ஒரு வாசகமே என்று.

நித்தி: ஏன அது மட்டுமா? மன்னன் மகேந்திரவர் மன் அழைக்கின்றான். நாவரசர் பதிலிருத்திய அடிகளைத் தான் பாருங்களேன்.

"நாமார்க்கும குடியல்லோம் நமனை யஞ் சோம்
நரகத்திலிடப்படோம் நடலையில் லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பமில்லை..."

என்று கூறினாரல்லவா. சற்று ஊன்றிப் பார்ப்போமானால் உண்மையில் அவர் செய்தது வேதாந்த கர்ஜனை யல்லவா.

இளஞ் : ஆம், நித்தியானந்தரே உணர்கிறேன். வேதாந்த நெறி பொது நெறி அஃது யாவருக்கும் உரியது. அதிருக்கட்டும், சுவாமிகள் யாரோ இன்று வந்திருப்பதாக கூறினீர்களே அதைப்பற்றி ..

நித்தி : அதுவா ஆம் தென்னாட்டில் பிறந்து இன்று இமய மலைச்சாரலில் உலகத் தெய்வ நெறிக் கழகத் தலைவராக விளங்கும் சுவாமி சிவானந்த சரஸ்வதியவர்கள் கங்கையைப்போல் தெளிந்த உள்ளமும், கருணைமாமுகிலெனத் தோற்றம். திங்களைப் போல் ஒளிரும் சாந்தம், தினகரன் போல ஒளிர்ந்திடும் ஞானம் இவையே நம சுவாமிகள். இத்தகைய சீரடைத்த சுவாமிகள் தமிழர் என்று நினைக்கும் போது செந்தமிழ் மக்கள் உள்ளம் துள்ளித் துள்ளி குதிக்கிறது.

இளஞ் : என்ன தமிழரா! நம் தமிழரா!! ஆகா. நம் தமிழ் நாடு பெற்ற பேறு தான் என்னே. வேதாந்த விளக்கை இமயத்தில் ஏற்றி வைத்திருக்கும் நம தமிழ்க் கடவுளின் தண்ணொளிதான் என்னே!

நித்தி : ஆம். தமிழர்தான். தாமிரபரணி நதிக்கரையில் பத்தமடையில் 8-8-1887ல் குப்புசாமி என்ற பெயருடன் பிறந்தது இந்தத் தமிழ்ச் சுடர். வீரமும் கலையும் விளையாடும் எட்டயபுரத்தில் கலை பயின்றது. மருத்துவக் கலை பயின்று பொது மக்கள் வாழ்வில் புத்துணர்ச்சி பாய்ச்சியது. நாட்டுக்குத் தொண்டு செய்வான் ஞானவேட்கையில் நாட்டம் சென்றது. 'நில்லாதவற்றை நிலையின்

வென்று உணரும் புல்லறிவாண்மை கடை' யென்று உணர்ந்தார். உலகியலை ஒதுக்கினார் இயமயம ஓடினார். இருஷிகேசத்திய ஸ்வாமி.

சந்யாச தீக்ஷை யளிக்கப் பெற்றார். சிவானந்த சரஸ்வதியானார். இன்று வேதாந்த விளக்காக விளங்கு கிறார், வாழ்க அவர் பல்லாண்டு. கொழும்புவரை பயணம் செல்லப் புறப்பட்டு இன்று நம தருமைக்கு வந்திருக்கிறார்.

இளஞ்: நித்தியானந்தரே நானும் அவரைப் பார்க்க வேண்டும். அவரது அருளுக்கம் பெறவேண்டும். அனு ருண்டு சகாபதமாகிய இந்நாளில உய்வதற்கு ஒரு வழி யிருக் கத்தான் செய்கிறதென்பதை சுவாமிகளின் போதனைகளை, வாழ்க்கையை அறிந்தவர்கள உணரத்தவறமாட்டார்கள்.

இந்நாள் சுவாமிகளின் வரலாற்றைக் கூறிய உங்கள் நன்றிக்கு என வணக்கம். இதோ

பொது மக்கள் பொன் வாழ்வைக் கருத்தில் வைத்தார்
பூதலத்தோர் யோக மதைப் பயில வைத்தார்
மதுமொழியும் தெய்வநெறிக் கழகம் வைத்தார்
மாதர் பல மதிவாழ்வை உன்ன வைத்தார்
கதுவுற்ற காமத்தின் தாழ்வு வைத்தார்
அது விலக்கும் வகைபலவும் விளக்க வைத்தார்
மதுவுற்ற திருவடியென் தலைமேல வைத்தார்
மாண்பிலங்கும் சிவானந்தர் நலலவரே.

நித்தி: மிக நன்று. வாரும் சென்று சுவாமிகளைத் தரிசித்து வணங்குவோம்.

சுபம்

வை. கல்யாண சுந்தரன்.

பிறகு ஆதீனத்தின் சார்பிலும், கல்லூரிச்சார்பிலும், ஏனைய கல்வி நிலையங்களின் சார்பிலும் சுவாமிஜி அவர்களுக்கு வரவேற்புப் பத்திரங்கள் வாசித்தளிக்கப்பட்டன.

தேவார ஆசிரியர் ஸ்ரீ வேலாயுத ஓதுவார் அவர்களால் சிவானந்த கீதங்கள் பாடப்பட்டன.

பின்னர் பாடசாலை மாணவர்கள் இருவரால் தத்துவ சாஸ்திரக் கருத்துக்கள் அடங்கிய சம்பாஷணைகள் நிகழ்ந்தன.

மக்கள் இச்சம்பாஷணைகளைமிகவும் ரஸித்தார்கள். அடுத்து சிவாகம பாடசாலையிலுள்ள ஆதிசைவமாணவர்கள் இருவரால் ஸ்ரீ ஆதிசங்கராசாரிய சுவாமிகள் செய்த பஜ கோவிந்தம் பாடப்பெற்றது. இவ்வாறு மக்களுடைய அன்புப் பெரு வெள்ளத்தினிடையே நீந்திக்கொண்டு சிவானந்தமகராஜ் அவர்கள் பேசத்தொடங்கினார்கள். பேச்சின் சுருக்கம் பின்வருமாறு:

"உள்ளத்துறவு அநேகம் பேருக்கு இருக்கிறதில்லை. ஹடயோகம் எல்லாராலும் செய்யமுடியாது. சிவநாமம் உச்சரிக்க வேண்டும். உலகத்தைச் சிவமாக நினைக்கவேண்டும். சிவநாம ஜெபம் செய்தால் சிவசாயுஜ்யபதவி உங்களுக்குக் கூடிய சீக்கிரத்தில் கிடைக்கும். நன்றாக உள்ளிழுத்து அச்சக்தி உள்ளே இறங்குமாறு ஜெபிக்கவேண்டும். இப்பொழுது நாம் கொஞ்சம் பஜனை செய்வோம். ("சிவாய நம ஓம்" என்ற கீதம்) வேதாந்திகள் சொல்லுகிறார்கள் மனதில் மூன்று தோஷங்கள் இருக்கின்றன என்று. மலம், விக்ஷேபம், ஆவரணம் என்பவை அவை. காமக் குரோத லோப மோக மத மாற்சரியம் நீங்கி நிஷ்காமியயோகம் செய்யவேண்டும். சிவநாம ஜெபம் செய்யும் ஒருவனுக்குச்

சிவசாயுஜ்ய பதவி கிடைக்கிறது. காலையில் நீராடி பிராமீ முகூர்த்தத்தில் சிவத்தியானம், பஞ்சாக்ஷரஜபம், சிவபுராண பாராயணம் முதலியன செய்யவேண்டும்.''

> '' ஆங்கார மகற்றி ஐம்புலனைச் சுட்டெரித்து
> தூங்காமல் தூங்கிச் சுகம்பெறுவ தெக்காலம் ''

''ஆங்காரம் கூடாது இதைச் சொல்லவேண்டும் கல் போல் இருக்கிறது அது, 'கல்லேனுமஐய ஒரு காலத்தில் உருகும். என் கல்நெஞ்சம் உருகவில்லையே'' என்கிறார் ஒருவர். அது மிகமிக வன்மையான நிலம் போன்றது அதைப் பொடியாக்கவேண்டும். ஆனால் அதை நேராக அடக்கமுடியாது. அடக்கினால் சத்துருக்குணம் ஆத லின் அதைத் தன்னாலே அடங்கச் செய்யவேண்டும். இந்திரியப்பலம் மிகப்பொல்லாதது. அது ஒவ்வொன்றையும் அடக்கவேண்டும். கண் சினிமா பார்க்க விரும்புகிறது. ஆதலின் அந்தப் பாதையில் நீக்கி மான், மழு, தமருகம் முதலியவைகளோடு விளங்கும் சச்சிதானந்த ரூபத்தை தியானம் செய்யவேண்டும் அது சிறந்தது. அழகுக்கு அழகு செய்யும் அது. அதைப் போலத்தான் நாக்கும்; அதுவும் சுவைப்பொருளை விரும்புகின்றது, அதைக் கட்டுப்படுத்த வேண்டும். ஆனால் மற்றொன்று. விரும்பும் பொருளை கொஞ்ச கொஞ்சமாகத்தான் விட்டுவிட முயற்சிக்கவேண்டும்.''

> Eat a little
> Drink a little,
> Sleep a little,
> Talk a little,
> Jap a little,
> Do Bajana a little
> Serve a little

நாம அவைகளுககு எஜமானனுக இருநது அவைகளைக கட்டுப் படுததவேண்டும.

"மனிதனுகப்பிறநத ஒவ்வொருவரும் தியாகபுததியோடு வாழவேண்டும. பேதபுத்தி அபிமானம இவைகளை விட வேணடும். ஒரு கதை சொல்கிறேன் சிகிதவிஜா தவஞ செய்யக் காட்டிறகுப் போகவேண்டும் என்கிருா. மனைவி சூடாலையோ அதை மறுக்கிருள. ஆனுலும இரவே அவளை விட்டுவிட்டு அவா காடு செனறு தவஞ செய்துகொண டிருககிருா. மாதம ஆறு ஆயிறறு. மனைவி சூடாலை ஆகாயத்தில் பறக்கும் சக்தி பெற்றிருநததிஞல் தான பறநதுசென்று முனிவரின் முனபு நாலடி உயரத்தில் நின்றுள. ஏன? அவவாறு நின்ருல்தான அவருக்கு யோகி வநதிருககிருா என்ற ஆஸ்திகபுத்தி வரும என்று. அமமுனிவருககும அப்படியே புத்தியும வநதது சூடாலை முனிவரைநோக்கி இன்னும தியாகம உனக்குவரவில்லை. என்ருள். உடனே தனனிடமுள்ள கமண்டலத்தையும தண்டையும் எறிநது தியாகி போல நின்ருர். அபபொழு தும் இன்னும் உனக்குத் தியாகம வரவில்லை எனருள. கேட்டமுனிவர் இருப்பது சரீரம ஒன்று தான் அதையும், நீககிவிடுகிறேன் என்று சோலவி மரததில ஏறிக கீழே விழுநதார். அதுகண்ட சூடாலை "சரீரததை அழிபபது தான் தியாகமா? தியாகம என்பது அகஙகாரம, வாசனுபி மானம், முதலியன நீங்கி இருக்கல்தான்" எனறு கூறினுள ஆகவே எல்லோரும தியாக புததியுடன இருக்கவேண்டும. பஜனைசெய்ய வேண்டும எல்லோரையும சிவமாக நினைக்கவேண்டும நான் பெரியவன அவன் சின்னவன என்று எண்ணக்கூடாது எலலாருககும மரியாதை கொடுகக வேண்டும். மனைவியானுலும் சரி வேலைககாரனுனுலும் சரி

"வாருங்கள்" என்று மரியாதையுடன் அழைக்கவேண்டும் அன்பு பாராட்டவேண்டும். நோயாளிகளை நன்கு போஷிக்க வேண்டும், அதுதான் முக்கியமான விஷயம். அதிலும் முக்கியமான விஷயம் அனைவரும் சிவநாம பஜனை செய்ய வேண்டும். சிவத்தியானமும் அவசியம். வீண்காலம் போக்காமல் அந்தநேரத்தைச் சிவத்தியானத்தில் பொழுது போக்கவேண்டும்."

"அனேகம் பேருக்கு எண்ணத்தின் அடிப்படை திட்டமில்லை. டாக்டர் என்ன நினைக்கிறார்! ஆஸ்பத்திரியையும் நோயாளியையுமே. வக்கீல் எண்ணம் எங்கிருக்கிறது? கட்சியின்மீது. பாட்டிக்கு பேரன்மீது எண்ணம். ஆகவே ஒவ்வொருக்கும் ஒவ்வொரு எண்ணம் இருக்கிறது. அந்த எண்ணங்களெல்லாம் நீங்கிச் சிவ எண்ணமாகவேண்டும் அந்தச் சிவ நாமத்தை நினைக்க நினைக்க இன்பம் பெருகுகிறது. சிவரூபமாகலாம். மற்றொன்று."

"ஒவ்வொருவருக்கும் வரையறையான வாழ்க்கை நிலை இல்லை. வருணாச்சிரமத்திற்குத் தகுந்த மாதிரி வரையறை கொள்ளவேண்டும். பிரமசரியம் தன்னைத்தான் அடக்கும் சக்தியைக் கொடுக்கும். மற்றும் வாழ்க்கையில் ஓய்வுபெற்றவர்களுக்குச் சிவபுராணம் சிவத்தியானம் செய்து முக்தியடையும் விருப்பம் உண்டாவதில்லை. என்ன எண்ணுகிறார்கள்? சினிமா கம்பெனி வைக்கவேண்டும், மில் ஏற்படுத்தவேண்டும் என்றெல்லாம் எண்ணுகிறார்கள் அதெல்லாம் கூடாது நாம் ஏன் பிறந்தோம்? என்று எண்ணி சிவத்தியானம் செய்யவேண்டும்"

"குரு பணிவிடை ஒவ்வொருவருக்கும் இன்றியமையாதது அதுதான் மிகத்தூய்மையைத் தரும். ஆகவே

ஸத்மகாசேவை அவசியம் தேவை. அதுவே ஆனந்தம் தரும்"

"மாயை பல ரூபத்தில் இருக்கிறது. பிறப்பினால் உயர்வு தாழ்வு இல்லை. ஒவ்வொரு உத்தியோகஸ்தரும் தாம் தாம் மேல்பதவிபெற நினைக்கிறார்கள். ஆசைப்படுகிறார்கள். அது அமைதியைக் கொடுக்காது. அது கூடாது. சிவபூஜை செய்து அப்பரம்பொருள்மீது ஆசைகொள்ளவேண்டும். தாம் பெற்ற பொருளெல்லாவற்றையும் பிறருக்கும் பகிர்ந்து கொடுத்து உதவவேண்டும்."

"காது கேட்கிறது, கண் பார்க்கிறது, கால் நடக்கிறது, வாய் பேசுகிறது. ஏன்? எல்லாம் அவனருள். எல்லாச் செயலும் அவன் செயலே. ஒரு கதையைப் பாருங்கள். காசியிலே அநுமந்தக்கட்டம். உங்களுக்குத்தான் தெரியுமே. அந்த இடத்தில் இரண்டு பெண்கள் கங்கைநீரில் அமிழ்ந்தினர். கண்டார்கள் காலேஜ் பிள்ளைகள். உடனே குதித்தார்கள். இருவரும் இருவரையும் காப்பாற்றினார்கள். அதில் ஒருவன் கூறுகின்றான். 'நீ என்னை மணஞ்செய்து கொள்' என்று. மற்றொருவன் 'அம்மா கடவுள் எனக்கு ஒரு சந்தர்ப்பங்கொடுத்தார். சேவை செய்தேன்' என்றான். இங்குதான் நீங்கள் கவனிக்கவேண்டிய விஷயம் ஒருவனுக்குச் சித்தசுத்தி ஏற்பட்டது. ஒருவனுக்கு ஏற்படவில்லை. சித்தசுத்தியினால் சிவஜோதி விளங்கும். சிவனருள் பெருகும். இதற்கு என்ன செய்யவேண்டும்! ஒவ்வொருவரும் விடியலில் எழுந்து நீராடி சிவத்தியானம் செய்ய வேண்டும். மாலை 5-மணிக்கே உணவு உண்டுவிட்டால் அது ஜீர்ணமாகிவிடும். தூக்கவேளையில் வயிற்றில் கனமிருக்காது. தூங்கப்போகும்போது தேவையானால் உணவு

உட்கொள்ளாமல் பாலும், பழமும சாப்பிடுதல் நல்லது. யோகிகளுக்கு இது மிகக பயன தருவதாகும. இப்படிச் செய்வது பிராமீ முகூர்த்தத்தில் நமக்கு விழிப்பை உண் டாக்கும. தியானம கைகூடும்."

"தருமபுர ஆதீனம் காசி சாவகலாசாலையைவிட மிக மிகப் பெரியது இதுவே கயிலாசம. ரிஷிகேசத்தைவிட ஆயிரம் மடங்கு இது மேலானது எங்குபார்த்தாலும் குழந்தைகளுடைய வேதபாராயணமும, தேவார பாராயண மும மகிழ்சசி தருகிறது. எஙகு பார்த்தாலும் ஒரு ஒழுங்கு முறை. சைவ சித்தாந்தத்துககே இது ஒரு தலஸ்தானம. இது போல் வேறு எங்குமில்லை. மதுரைபோனற இடங களில் முன இருநதது எனறாலும் இபபொழுது இல்லை. இங்குள்ள எல்லோரும் மங்களம்பெறுக. இவ்வாறு எனக குச் சேவைசெய்யச சந்தர்ப்பம் அளித்ததற்கு மிகநனறி."

Hai Dharmapuram ! Sacred Dharmapuram,
Sublime Dharmapuram ! Beautiful Dharmapuram !

நமச்சிவாயா ! நமசசிவாயா ! நமச்சிவாயா ! நமச்சிவாயா!

This is the glorious land where Mahasannidhanam dwells!
And Siva Bhaktas also abide !

நமசசிவாயா ! நமச்சிவாயா ! நமச்சிவாயா ! நமச்சிவாயா!

Mahasannidhanam purna guru Adhinam's soul

நமசசிவாயா ! நமசசிவாயா ! நமச்சிவாயா ! நமச்சிவாயா!

Mahasannidhanam purna Siva Yogi ! Sri Jagat Guru !
Soul of Adhinam !

நமச்சிவாயா! நமச்சிவாயா! நமச்சிவாயா! நமச்சிவாயா!

Sri Dharmapuravasi Divine Life Organiser
Long live Mahasannidhanam and Mahalinga Sastri

நமச்சிவாயா! நமச்சிவாயா! நமச்சிவாயா! நமச்சிவாயா!

And all other devotees

நமச்சிவாயா! நமச்சிவாயா! நமச்சிவாயா! நமச்சிவாயா!

My silent adoratsons, My silent salutations
My silent adorations! My silent salutations!

நமச்சிவாயா! நமச்சிவாயா! நமச்சிவாயா! நமச்சிவாயா!

My silent prostrations! My silent Namaskarams!
Namaste Namaste Jai Jai Sivjiki

போலோ சங்கர போலோ சங்கர சங்கர் போல்
ஹர ஹர ஹர ஹர மகாதேவ சம்போ சங்கர் சங்கர் போல்
சிவ சிவ சிவ சிவ சதாசிவ சம்போ சங்கர் சங்கர் போல்.

வேளூர் கட்டளைவிசாரணை, ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளவர்கள்.

'வேதாந்தம் சித்தாந்தம் என்பன இரண்டும் வேறுபட்ட கருத்துடையன அல்ல. வேதமரத்தில் விளைந்த ஞானக்கனி வேதாந்தம். அதிலுள்ள கோதும் கொட்டையும் தோலும் காம்பும் நீக்கிப் பிழிந்தெடுக்கப்பட்ட சாரம் சைவசித்தாந்தம். பொருள் கொள்பவர்களின் கருத்து வேறுபாட்டினாலேயே இவை இரண்டும் இரண்டு நெறிகளாகப் பிரித்துக் காட்டப்படுகின்றன. அநுபவிக்கும இரண்டும் ஒன்றுதான். இப்பொருள் இலக்கணத்தை

எமது ஆதிகுருமூர்த்தியின் அநுபவ வெண்பா ஒன்று அறி விக்கிறது பாருங்கள்.

என்னை அறிவென்றான் என் அறிவியல் ஆனந்தம்
தன்னைச் சிவமென்றான் சந்ததமும்—என்னை உன்னைப்
பாரா மறைத்ததுவே பாசம் என்றான் இம்மூன்றும்
ஆராய்ந்தவர் முத்தராம்.

சமரச நிகழ்மிடத்திலே மதஉண்மைகள் அமைந்திருக்கின்றன என்பதை சிவானந்தமகராஜ் அவர்களும் சந்நிதானமவர்களும் எழுந்தருளி இருக்கின்ற நிலையிலேயே அறியலாம். உபதேசமூர்த்திகள் இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்டுவதும், உணர்த்திக்காட்டுவதும் என இரண்டு நிலையை மேற்கொள்ளுகிறார்கள் என்பது இன்றைய நிகழ்சியின் இனிய விளக்கம்.'

என்று பேசினார்கள். பின்னர் திரு. ச. தண்டபாணிதேசிகரவர்கள் நன்றியுரை கூறக் கடவுள் வாழ்த்துடன் கூட்டம் இனிது முடிந்தது.

—o—

உ
குருபாதம்

## ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானமவர்களின் உபசாரமொழி

சுவாமிஜி அவர்களே! மெய்யன்பர்களே!!

ஸ்ரீ ஞானபுரீஸ்வரர் ஆலயத்தில் கும்பாபிஷேகம் நடந்தது. சிற்ப வேலைகள் கண்ணைக் கவருகின்றன. பிள்ளையார் உட்கார்ந்து இருக்கிறார் ஔவைப பாட்டி வாயில் பாட்டு வழியக் கையில புஷ்பத்தை ஏந்திக்கொண்டு

கணபதி பூஜை செய்கிறான். முகத்தில் அன்பு அரும்பு கிறது. சண்டேசா கோயிலிலே சிவபூஜைக்கு இடைஞ்சல் பண்ணின தகப்பனாகாலைச் சண்டேசராகும் விசாரசருமர் வெட்டுகிறார். காலில் ரத்தம் வழிகிறது. முகத்தில் அச்சமும துன்பமும தாண்டவமாடுகின்றன. இபபடி எத்தனையோ உருவங்களைச் சிற்பி சிருஷ்டித்து இருக்கிறான். அவன் தன் சிநதனைசக்தியைத தன்கையின் நுனிவழியாக வழியவிட்டுக் கல்லிலும் சுண்ணமபிலுமாகக் கருத துக்களைக் காட்டுகிறான். அவைகளில நேற்று கணட காட்சிதான் இன்றைக்கும். இன்றைக்குக கண்ட காட்சி தான் நாளைக்கும். அதில் மாற்றம் இலலை. அன்பால், பிளளை யாருக்கு முன்னே அஞ்சி நிற்கிற பாட்டி நகைககமாட் டாளா? அழுகின்ற ஐயர் ஆனநதப்படமட்டாரா எனறு தோன்றுகிறது. ஆனால் மாற்றநதான் இலலை. மாற்றம காணு இடததில் மகிழ்ச்சி ஏது? உண்டதையே உண்டு, கண்ட தையே கண்டு, உடுத்ததையே உடுப்பதில் உலகம மகிழ் கிறதா? பரிணாமத்தில் அல்லவா களிப்பைக்காண்கிறது. ஆதலால் இநத உருவங்களில் நேற்றைய காட்சியையே இன்றும் கண்டால் புத்திலபிக்குமா? ஆதலால் மாற்றம் அவசியம வேண்டும். ஏன் அவைகள மாற்றம் தரவிலலை. உருவங்கள் மனித உருவங்களே. ஆனாலும் அவற்றிறகு ஒன்றுதான் குறைவு. அதுதான் உணர்ச்சி; உணர்சசி உயிரின் தன்மை. உயிர் இல்லை; உணர்வு இல்லை. பிடித்து வைத்த பிள்ளையார் மாதிரி, கோணிவைதத முகத்தைக் கொண்டு, கீறி வைத்த கீறலைக் கொண்டு துன்ப இன்பங் களைத் தோற்றுவித்துக்கொண்டே இருக்கின்றன. அவை களை மாற்றிக கொள்வதற்கு ஆற்றலில்லை; இவ்வளவுதான் எங்களூர்ச் சிற்பியின கைவேலை. இதுமட்டுமா? அவன்

போட்ட ஆயிரம உருவங்களும பெருமபாலும ஒன்றைப் போலவே ஒன்று அமைநதுளளன. முகததை நீளம் குட்டையாகப போட்டாலும ஐமபது வகைகளுககு மேல் அவனு ் மாறறம காட்டமுடியவில்லை அழகான மரததை-செடியைப் போடுகிறுன். பூதத பூ பூத்தபடியே இருக கிறது காய் என்றும காய்தான். கனியும அப்படியே. அதில மணமும இல்லை; குணமும இலலை. இவவளவுதான் ஊர்ச்சிறபியின் வேலைபபாடு.

ஒருதோட்டத்தில ரோஜா மலர்நதிருக்கிறது. மல்லிகை வெடியரும்பு; பன்னீா பூக்கும் நேரம். மற்ற மரங்களும் தத்தம் பருவகாலஙகளில் அப்படி அப்படி. அங்கஙகங்கே அதையதை விரும்புகிற பல நிற வண்டுகளின் ஒலி கண்ணுக்கு-காதுக்கு-மூககுக்கு எல்லாம் விருந்து. ஒன்றன் நிறம் மற்றென்றுககு இல்லை. ஒன்றன் குணம மற்றென்றுக்கு இல்லை ஒன்றன் மணம் மற்றென்றுக்கு இல்லை. வாழைப்பழம, பலாப்பழம, மாம்பழம் எல்லாம தித்திப்புத்தான. ஆனாலும திதிப்பில வேறுபாடு இருக் கிறது. மாம்பழத்தில் எத்தனையோ ஜாதி ஒவ்வொன் றுக்கும் சுவை வேறுபாடு. இவை உலக சிற்பியின உயர் தரவேலை.

சித்திரத்தைக கண்டவுடன் சிற்பியின் ஞாபகம் வருமாறு போல, அதியற்புதமான இந்த சிருஷ்டி அறபுதங களைக் கண்டவுடன செய்தவன்ஞாபகம வரத்தானே வேண் டும்? காரியம் எனபது கருத்தாவை அறிவிககும் கருவி அல்லவா! காரியஙகளைக கண்டு கருத்தா ஒருவன் இருக் கிறுன் என்று எண்ணுத அறிவும அறிவா! இயற்கை என்றுல் வளர்தலும், தேய்தலும இல்லாததே. அது

உள்ளது செயற்கையே. மலர்ந்து மனத்தைக் கவர்ந்து மறைகின்ற மலர்கள்-கனிந்து கருத்தைக் கவர்ந்து இனிக்கின்ற பழங்கள் எல்லாம் வளர்ச்சியும் தேய்வும் உடையன என்பதை யாரால் மறுக்கமுடியும்? ஆதலால் இவை செயற்கையே. செயற்கைகள் எல்லாம் கருத்தாவை உடையனவே. அந்தக் கருத்தா வளர்ச்சியும் தேய்வும் இல்லாமல்-அதாவது தான் செயற்கையாகி விடாமல் இருக்கவேண்டும். ஆதலால் அவனுக்கு முதல் இல்லை; முதல் இல்லையாகவே அவனுக்கு முடிவும் இல்லை என்பது தெளிவு. அவனுடைய அருள் விளையாட்டின் ஆக்கமே இந்தக் காடும், மலையும், கடலும், வளமும், வயலுமாய எல்லாம்.

சிற்பியில்லாமல் சித்திரம் இருந்ததுண்டா? அதுபோலவே கடவுள் இல்லாத காரியப்பாடான உலகம் உண்டு என்பதையும் உணர்ச்சியுடையவன் ஒத்துக்கொள்ள முடியுமா? ஆதலால் அந்தச் சிற்பியே உலகிற்கு முதல்வன். இதனையே 'பிறப்பு, இருப்பு, இறப்பாகிய மூன்று தொழிலை உடைமையால் உலகம் காரியப்பாடு உடையது. அதனால் ஒரு கருத்தாவை உடையது என்று சிவஞானபோதம் தெரிவித்தது. விரிநூல் செய்த அருணந்தி சிவாசாரிய சுவாமிகள்,

"ஒருவனோ டொருத்தி ஒன்றென் றுரைத்திடும் உலகமெல்
லாம் வருமுறை வந்து நின்று போவதும் ஆதலாலே
தருபவன் ஒருவன் வேண்டும்"

என்று விளக்கிக்கூறியது.

இத்தகைய பரம்பொருள் உலகத்தை ஆக்குகிறது. அழிக்கிறது. குழந்தை பொழுதுபோக்காக-தன்னுடைய சக்தி சும்மா இருக்க விடாமையினாலே, ஓடுகிறது, ஆடு

கிறது, உருட்டுகிறது. உடைக்கிறது. அது அவற்றால் அதற்கு ஏதேனும் பயனுண்டா? பெரியவர்களாவது அதனால் பயன் பெறுகிறார்களா? இரண்டும் இல்லை. அதனால் அது வெறும் விளை. அப்படிப்போல அன்ல கடவுளுடைய படைப்பும் அழிபபும். அவருக்கு அதனால் பயனில்லை ஆனாலும் உலகத்திலே உள்ள ஒவ்வொரு அழகையும் அனுபவிக்கிற நாம் பயனடைகிறோம என்பதில் சந்தேகமில்லை. பசி தணிந்தோம என்றால் அது அவன் கொடுத்த தானியத்தின் விளைவுதானே. அணைவில் உடுத்தி ஆனந்தப்படுகிறோம் என்றால் அதுவும் அவன் செய்த ஆக்கவேலையின் பயன்தானே. ஆகவே அவன் செயல் யாவும் நமக்காகச் செய்யப்பட்டனவே. அவற்றால் அவனுக்கு ஒரு பயனும இல்லை. அவன செயல் எல்லாம் நமக்குப் போகமோட்சங்களைத் தரவும, நாம் அறியாமை நீங்கி ஆனநதப்படவுந்தான்.

ஒரு காசு கொடுத்தவனை ஊராறிய வாழ்த்துகிறோம். உபபிட்டவரை உள்ளளவும் நினை' என்கிறது பாட்டிப் பழமொழி. அப்படியிருக்க நமமுடைய காலத்துக்கு-கருததுக்கு ஏற்றாற்போல கண் முதலிய இந்திரியங்களுக்கு இன்பத்தை அளந்து அளந்து இறுதிவரையில் கொடுத்துக் கொண்டே யிருக்கிற உபகாரத்தை உபகாரியை மறக்க லாமா. உலக இன்பங்களை அனுபவிக்க கண்ணுக்கு பார் வையையும், காதுக்குக் கேட்கும் சகதியையும், உடமபுக்கு தன்னளவில் வியாபகமாகிய ஸ்பரிச சக்தியையும் தந்து காக்கின்ற உபகாரியை மறக்கலாமா. ஆனால் ஒன்று உறுதியாக நாம் நினைவு கூரவேண்டும்; நாம் அதனை மறக்காமல் இருப்பதற்காக அந்த உபகாரி இவற்றைப் படைக்க வில்லை யென்பது மட்டும்.

இவவளவு பேசுகின்ற நாம உலகத்தை இன்பமயமாக்க கண்டு களிக்கின்ற நாம, அந்த உபகாரியை ஏன் மறந்திருக்கிரோம? நமமுடைய சக்திக்கப்பாற்பட்ட அனுபவஙகள் நிகழும் போதுதான் உபகாரியைப்பற்றிய ஞாபகம் எழுமபுகிறது. மறற சமயங்களில் மறைகிறது. மாடு, நாய் முதலிய விலங்கினஙகளுக்குத் தீனி கொடுதத மனிதனே கண்டவுடன் நன்றி நினைவு வருகிறது. அன்பு வெளிப்படுகிறது. காணுதபோது அந்தக் கருத்து இல்லை. அது போல விலங்கறிவு படைத்த மக்களுக்கும் நிகழுமல்லவா? பாம்பு புலி கரடி முதலான பொல்லாத பிராணி வர்க்கங்கள் பாதுகாத்தவனேயே பதம்பார்த்து விடுகின்றன. அந்தக் குணம்படைத்த மக்களுக்கு நாட்டில் இடமில்லாமலில்லை. அநத மக்களை நன்றிகெட்டவர்கள் என்று நாம் குறைகூற விருமபவில்லை. அறிவு விளக்கம் அடையவேண்டியவர்கள் என்று ஆசீர்வாதம செய்வோம். இது நிற்க, இப்படியெல்லாம் உதவி பெற்ற மக்கள் உபகாரியை மறப்பது எதனுல் என்பதையும், மறைப்பது எது என்பதையும் அறிந்துகொளளவதில் நமககு மறதி கூடாது.

விலையுயர்ந்த மாணிக்கம. அழகாகச் சாணை பிடிக்கப்பட்டுள்ளது. கைதவறிச் சாணியில் விழுந்துவிட்டது. மேலெல்லாம் சாணி ஒட்டிக்கொண்டுவிட்டது. அதனுல் அந்த மணி தன் ஒளியிழநதது குப்பைக் கல்லோடு கல்லாகக் கிடக்கிறது. ஆனுலும் மணி மணிதான் நமக்கும் செய்நன்றி அறியும் தன்மை உண்டு. ஆனுலும ‘நாமென்ன பிறர் கையை எதிர்பார்க்கிறவர்களா, நமக்கு இயற்கையாக பெருமையில்லையா’ என்ற தடிப்பு உண்டான போது விளக்கம் குன்றுகிறது. விளககம் குறைந்த இடத்தில் உபகாரியும் அவர்செய்த உபகாரமும் தோன்றுமா?

ஆகவே அந்தத் தடிப்பு மறைப்புத்தான் உபகாரியை அறிந்துகொள்ள முடியாமல் தடுக்கிறது. அதற்குத் தான் ஆணவம் என்று பெயர். உயர்ந்த பொருளை அறிவுடைய பொருளை அணுவாக்கிக் கீழ்ப்படுத்துவதனாலேயே அதற்கு ஆணவம் என்ற பெயர் வந்தது. கோவிலுக்குச் சுவாமி கும்பிடப் போகிறோம். சந்நிதியில் திரை போடப்பட்டிருக்கிறது. சுவாமி தெரியவில்லை. திரை தூக்கப்பட்டதும் தீபஜோதியோடு தெய்வ ஜோதியைக் காண்கிறோம். அதுபோல நம்மிடத்திலும் உபகாரியை நாமே காணமுடியும். அப்படிக் காண முடியாதவாறு தடுத்து நிற்பது ஒரு தடை. இது சந்நிதியில் திரையைப்போல யாரோ நடுவில் தைத்துப் போட்டதன்று. நம்மோடேயே பிறந்து நம்மை வருத்துவது. நமக்கு இருக்கின்ற வியாதிகளெல்லாம் வேறு எங்கேயோ பிறந்து வந்தவனல்ல. நம்மோடு பிறந்து நம்மை வருத்துவன. 'உடன் பிறந்தே கொல்லும் வியாதி என்ற பழமொழியும் உண்டல்லவா? தேமல் போன்ற சில வியாதிகள் வியாதி என்றே தம்மைக் காட்டிக்கொள்வதில்லை. அழகுத் தேமல் என்று நம்மையெல்லாம் ஏய்க்கின்றது. அது போலத்தான் நம்முடைய தடையும். தடை இருக்கிறது என்று தெரிந்தால்தானே தடையை நீக்கி உபகாரியை உணரமுடியும்? அந்தத் தடை தன்னையும் காட்டிக்கொள்வதில்லை. உபகாரியையும் காட்டிக்கொள்வதில்லை. மிகப் பொல்லாதது. எல்லாம் அறிவேன். நான் கண்டதே முடிவு என்ற இறுமாப்புநிகழ்ச்சிகளால் தன்னை வெளிப்படுத்திக்கொண்டு நம்மையெல்லாம் மயக்கி நிற்கின்றது. இந்தத் தடை நீங்கினால்தான் இனிய விடையைக் காணலாம். இந்த விடைதான் தரும சொரூபம். இந்தத் தடையைத் தானாக நீக்க முடியாது. நீக்குபவன் ஒருவன் வேண்டும்.

கொட்டிக்காரவைத்தியருக்கும் தங்நோயைத் தான் போக்கிக் கொள்ளத் தெரியாது. 'ஊருக்கெல்லாம் வைத்தியா தமக்குப் பைத்தியா' என்பது பழமொழி. நம்மோடு பிறந்திருக்கிற வியாதியைப் போக்கிக் கொள்ள ஒரு வைத்தியா தேவை வழி தெரியாத நமக்கு - வைத்தியரை அறிய முடியாத நமக்கு இன்ப உலகத்தைத் தந்த அந்த உபகாரியே வைத்தியனாக வருகிறான். குழந்தை இருக்கிறது. அதற்கு மலச் சிக்கல். வயிற்றுக்கு மருந்து கொடுக்க வேண்டும் தகப்பன் மிட்டாய் கொடுத்தாலும் வேண்டாம் என்கிறது. பசியறிந்து பால் கொடும் தாய் எதைக் கொடுத்தாலும் வாய் திறந்து வாங்கிக்கொள்கிறது அதனால் தாய் மாத்திரை தருகிறாள் மருந்தாக இல்லை. பாலில் குழைத்து பாலாகவே தருகிறாள். குழந்தை மறுக்கிற தில்லை. பருகுகிறது மலம் கழிகிறது. காதலியின் வார்த்தையை மேல்வரிச் சட்டமாகக் கொள்ளும் காளை ஒருவன் இருக்கிறான். அவனுடைய பருவம் 'தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை' என்றதைத் தள்ளச் செய் கிறது. 'தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை' என்பது விஷவாகத். அந்த நிலையில் அவனை நல்வழிப்படுத்த அவ னுடைய காதலியின் காதல் மொழிகளே பயன்படுகின்றன. இந்த நிலையில்தான் நாம் அனைவரும் இருக்கிறோம். நம்மி டம் உள்ள தடையை நீக்க வருகின்ற வயித்தியன் தாயாக வரவேண்டும்; அல்லது தேவியாக வரவேண்டும். வந்து தன்னுடைய கருணையினால் எதைக்கொடுத்தால் நாம் உண் போமோ அதில் அவளுடைய அருள் மருந்தைக் குழைத் துக்கொடுக்கவேண்டும். அப்போதுதான் நம்முடைய காமாலை நோய் நீங்கும்; கண் தெரியும். இதுவரையில் மஞ்சளாக இருந்த மறைப்பு நீங்கும். எங்கும் இன்பக்

காட்சியைக் காண்போம். அந்தத் தாய் நமது குரு. குரு அந்த உபகாரியே. உபகாரி தனனுடைய உண்மையான வடிவத்தோடு வந்தால அவன்தான் அந்த உபகாரி என் பதை நாம் ஒருபோதும நமபமாட்டோம. ஒரு சிறு கதை நினைவுக்கு வருகிறது :—

ஒரு ஊரில ஒரு வியாபாரி இருந்தார். இராத்திரி முழுவதும் தூக்கம இல்லாமல் பொழுது போக்குவதே பணத்தைப் பாதுகாக்கும் வழி யென்பது அவருடைய முன்னேற்பாடான எண்ணம இரவு 11-மணி வரையில் வியாபாரம செய்வதும், 12-மணிக்குக் கணக்கு முடிப்ப தும, 1-மணிக்கு மேல் தேக சுத்திசெய்துகொண்டு கோவி லுககுப் போவதும், அதற்கு மேல் உணவு உண்பதும அவருடைய அன்றாட திட்டம். ஊருக்குப் பெரிய செட்டி யார். குருககளுக்கும் ஏதோ கொடுப்பார். தாட்சணயம் தள்ளமுடியாது. அந்த நேரம வரையில் திருக்காப்பிட்டுக் கொள்ளாமல் தெய்வமும காத்திருக்கவேணடும குருக களைப்பற்றிக் கூறுவானேன் இப்படி வெகு நாள் நடந்தது. பொறுமைக்கும் எல்லை உண்டல்லவா ? குருக்கள் ஒரு உபாயம் கண்டு பிடித்தார். ஒரு நாள் இரவு 1-மணி இருக் கும். செட்டியார் சிவசந்நிதியில் ‘சொல்லுவதறியேன் வாழி, தோற்றிய தோற்றம் போற்றி’ என்ற தோத்திரப் பாடலைப்பாடி முடித்து ‘பரமேஸ்வரா! என்னை ஆட் கொள்ள மாட்டாயா என்று பரவசமாகி நின்றார். குருக் கள முன் யோசனைப்படியே சிவலிங்கத்தின் பின்னால் மறை விலநின்றுகொண்டு இப்பொழுதே ஆட்கொளவோம் என்று உறக்கக் கூவினார். செட்டியாா நடுநடுங்கி பின்னாலேயே நகர்ந்து மகாமணடபத்தை அடைந்தார். உபாயம கண்ட குருக்கள் பக்க வாயிலாக ஓடிவந்து செட்டியாரிடம் பதட்

டத்தின் காரணததைக கேட்டுத தெரிநதுகொண்டார். குருககள் 'பரமேஸவரன் வெளிப்படும நேரம் இது அதனல் முனனடியே தரிசிப்பதுதான் நல்லது' என்று கூறிவைத் தார். இப்படியும பலநாள நடந்து வநதது. இவருடைய லோப குணத்தையும போககக கருதிய குருக்கள ஒருநாள் மறைந்து கூறிய வாரத்தைக்கு மதிபபு வைத்திருககிற செட்டியார் கடவுள் நேரே பிரத்யட்சமாகிச் சொன்னல் என்னதான் செய்யமாட்டார எனறு நினைததார். கடவுளைப் போலவே வேஷம தாஙகி வநது அன்பனே, உடலளவு விரதம் பொருள் அளவு தானம என்று பேசியிருக்கிறது. பெரும் பொருள படைத்த நீ பெரும் உபகாரியாக இருகக வேண்டும். தாராளமாகத் தானம செய்' என்று சொல் லிககொணடே அணுக்கத்தில் வந்து காட்சி கொடுக்க வந தார். இவரோட அவரோட ஓட்டப்பநதயம் செட்டியார் வீடுவரையில நிகழ்ந்தது. முடிவில் செட்டியார இளகிய மனம இறுகியது. கடவுள் நம்மை விரட்டுவாரா எனற ஆராய்ச்சி ஞானம் பிறந்தது. எதிர்த்து நின்ருர்....!

இதிலிருநது ஒரு உண்மை விளங்குகிறதல்லவா. பண்பட்ட மனம இல்லாதவர்களுக்குப் பரமனே நேராக வநதாலும் துணிவும் பணிவும் வராது பயன்கொள்ளவும் மாட்டார் என்று. ஆதலால் நம்மைப் போன்ற மக்களுககு அந்தப் பரம உபகாரி நம்மைப் போலவே கண் காது மூக்கு முதலிய உறுப்புக்களோடு மனித வடிவம் தாங்கி வருகிருர். தடையை நீக்கும் உபாயங்களைச் சொல்லித்தருகிருர். ஆனல் முறையில மாத்திரம் வேறுபாடுகள் உண்டு. ஒரு பள்ளிக்கூடத்தில் மாணக்கர்கள் குறும்பு செய்கிருர்கள். ஆசிரியா கடுமையாகப் பார்ககிருர். பார்வையிலேயே சில மாணவர்கள் அடஙகிவிடுகிருர்கள். சிலரை வாயினல் அடக்கவேண்டி யிருக்கிறது. சிலரைக் கையாலோ கம் பாலோ தொட்டு அடககவேண்டியிருக்கிறது. அதனல் மாணக்கர்கள் குற்றததைப் போக்கிக் குணம் பெறுகிருர் கள். அது போலவே ஞானசாரியனும் கண்ணலே

பார்த்துச் சிலரையும், கையாலே தொட்டுச் சிலரையும், உதைத்தும் உருட்டியும் சிலரையும் உண்மை வழியில் செலுத்துகிறார். தடை நீங்குகிறது தலைவன் வெளிப்படுகிறான் ஆனால் ஞானாசாரியர்களை நாடிக் கண்டு பிடிப்பதுதான் கஷ்டமான காரியம். தலை வலித்ததவுடன் டாக்டரைத் தேடிப்போவது போலல்ல. நமக்கும் பண்பாடு ஏற்பட்டு ஞானாசாரியனுக்கும் நல்லருள் பிறந்து இரண்டிற்கும் ஒரு இசைப்பு ஏற்பட்டாலொழிய இது முடியாத காரியம். ஞானாசாரியர்கள் கால தேசங்களோடு ஒத்துப் பல வேறு வகையில் வந்து காட்சியளிப்பார். அவர்களைப் பயன்படுத்திக் கொள்வதில்தான் மனிதப் பண்பு உயர்கிறது தெய்வப்பண்பு திகழுகிறது. அப்படி அமரத்துவத்தை அளிக்கும் அநுபூதிமான்களை உடையது நம்முடைய பாரத நாடு.

பக்த மடையிலதானே அருள் வெள்ளம் வழியும். அருள் வெள்ளத்தைத் தேக்கிவைத்திருக்கும் பலகையே ஞானாசாரியன் திருநெல்வேலி ஜில்லா பக்த மடையில் பிறந்த சிவானந்த ஞானாசாரியப் பலகை பராசக்தியின் அருள் வெள்ளத்தை அவள் அவதரித்த இமயத்தின் உச்சியில் தேக்கி வைத்திருந்தது. ஆனந்த குடீரத்துள் அடக்கி வைத்திருந்தது. கொஞ்சங் கொஞ்சமாக உலகத்துக்கு வந்தது. இன்று இந்தியா முழுவதையும் பக்தமடையாக்க இறங்கி வந்திருக்கிறது. எங்கும் அருள் வெள்ளம் பரவுகிறது. அருள் வெள்ளத்தால் அறிவுப்பயிர் தழைக்கும். சிவபோகம் செழிக்கும். சிவானந்தப் பெருகும் இன்பம் எங்கும் - என்றும்.

எங்கும் இன்பம் பெருகும இயல்பினால்
ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட
மன்றுளார் அடியாரவர் வான்புகழ்
நின்றதெங்கும் நிலவி உலகெலாம்.

—o—

உ

குருபாதம்

தெய்வநெறிக்கழக ஸ்தாபகர்

ஸ்ரீலஸ்ரீ சுவாமி சிவானந்த மகாராஜ அவர்கள்

5—10—50 வியாழக்கிழமை திருக்கயிலாய பரம்பரைத்

தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான

திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேஸ்வர சுவாமி

தேவஸ்தானத்திற்கு எழுந்தருளியபோது

## அளித்த வாழ்த்து இதழ்

1. தூய மெய்ந்நெறி யாய சுத்த அத்
   துவைத நன்னெறி சொற்றிடின்
   பாயு நுண்மன மோய உன்னிவல்
   பஞ்சபொய்ப்புல னடக்கியே
   மேய வாருயிர் யாவை யாயினும்
   மெய்ம்மை அன்பு விளைத்தலால்
   ஏயு மென்றல கெங்கும் சாற்றிடும்
   ஏந்தல் நற்சிவா னந்தனே.

2. சிலைகள் வாயினுற் கதைசொல் சீர்மையிற்
   செல்வம் மல்கிய தருமையின்
   நிலவு சுப்பிரமணிய தேசிகன்
   நின்மலப்பதம் போற்றிநற்
   கலைகள் கற்றிடும் சிறுவ ரேம்நின்
   கருணை வாரிதி ளைத்தனம்
   உலகில் தெய்வநன் னெறிப ரப்பிந்
   ஊழி வாழிய வாழியே

இங்ஙனம்,

**ஆசிரியர், மாணவர்கள்,**

தேவஸ்தான தேவார வகுப்பு.

உ

ஓம் நமச்சிவாயநம

ரிஷிகேசம்

## ஸ்ரீ சிவானந்த சரஸ்வதி மகராஜ் அவர்கள்

தருமபுரம் ஆதீனத்தைச் சேர்ந்த திருக்கடவூர்
எழுந்தருளிய சமயம ஷை யூர் தேவஸ்தானம்
T. S. காசிநாத தேசிகர் வாசித்து அளித்த

## வரவேற்பு வாழ்த்துப்பா

—o—

பூவுலக தனிற் பொலிந்தினி திலங்கும்
தாவில்சீர் தனக்கெனத தருக்கொடு திகழும்
வெள்ளியங்கிரியால் விளங்கிடும் இமயத்
தெளிய நீரால் திரியுநற் கங்கைக்
கரையினில் தனிமரச் சோலைக ளனேகம்
நிரையினில் தவத்தோர் நிலைத்திடச் சாரும்
சுத்தாத் மாக்கள் சூழ்ரிஷிகேசச்
சித்தாந்தத்தின் செந்நெறிகண்ட
சுத்தசிவாநநத சரஸ்வதி மகராஜ்
ஆங்கிலம் வடமொழி அருநதமிழறிந்து
ஓம்நமசிவாயத் துண்மை தெரிநது
சீருடன் விளங்கும் சிஷ்யகோடிகளுடன்
பாரெலாந துதிக்கப் பகலவன் நிகராய்
முக்தனும வகையினில் முதிர்ந்த மகாத்மா
அத்தன்விஸ் வேசர் ஆலய மமைத்தும்
ஆனநதகுடீர ஆஸ்ரமம் செய்தும்
ஸ்ரீதர மந்திரர் கீரத்தியோடெய்தியும்
பகவத்கீதையின் பலன் அறிந்தோர்ந்து
ஐப்புலன் தன்னை அகத்திலடக்கி

மெய்நெறி வழியே மிக்கெனக் கண்டு
காமக்ரோத லோபமும வென்று
ராமநாமத்தின் ரசமதையுண்டு
பாமர மக்கள் பவக்கடல கடநது
நேமமாய்க கடவுள் நெறிதனைக் காண
நலமுடன் வநது நலலுபதேசம
இதமதாய்ச் செய்யும இறையோய் வருக
தென்னாடுதனில் தெற்றெ விளங்கும்
பொன்னாக தருமைப் புனிதன் கிமை
மின்னெனத் தெரிநத மிக்கோய் வருக
இடையூ றகற்றும் ாடிலாத் தலமாம்
கடவூரதனிற் களிப்புடன் வருக
வருக வருக மகரிஷி வருக
வருக ரிஷிகேச வள்ளலால வருக.
வருக சிவானநத மகராஜ வருக
வருக நீடூழி வாழி. வருகவே சுபம்

திருக்கடவூர்
5—10—50

T. S. K. தேசிகர்.

—o—

இரவு 8 மணிக்குக் குறித்தபடி சுவாமிஜி அவர்கள் திருக்கடவூருக்கு எழுந்தருளினார்கள். ஸ்ரீமத் கட்டளை சுவாமிகள் கோயில் மரியாதையுடன் எதிர்கொண்டு வரவேற்று உபசரித்தார்கள். ஆதீன தேவஸ்தான தேவாரப்பாடசாலைகள் சார்பாக ஒரு வரவேற்பும், வித்வான் திரு. காசிநாத தேசிகரால் ஒரு வரவேற்பும் வாசித்து அளிக்கப்பெற்றன. முறைப்படி எல்லா மரியாதைகளுடன் ஆலய வழிபாடு இனிது நடைபெற்றது.

ஸ்ரீ அபிராமி அம்மைக்கு விசேஷ சந்தனக்காப்பு அலங்காரம் செய்யப்பட்டிருந்த காட்சி யாவருக்கும் ஆனந்தமாயிருந்தது. சுவாமிஜியை வரவேற்கத் திருக்கடவூர்ப் பிரமுகர்கள் அனைவரும் பூரணகும்பம் விளக்கு முதலியன வைத்து வீடுகளை அலங்கரித்திருந்தார்கள். கோயில் வழிபாடு முடிந்ததும் ஸ்ரீமான் கைலாஸம்பிள்ளை அவர்கள தமது வீட்டுக்குச் சுவாமியை வரவேற்றுப் பால் முதலியன கொடுத்து உபசரித்தார்கள. சுவாமிஜி அவர்கள் வழிபாடு முடிந்தவுடன் 10 மணிக்குத் தருமபுரம் வந்து சேர்ந்தார்கள. அதற்குமேல் உணவும் ஓய்வும்.

## மறுநாள் 6—10—50 வெள்ளிக்கிழமை

காலை 9 மணிக்கு. கவியோகி ஸ்ரீ சுத்தானந்தபாரதி அவர்கள் காரில் தருமபுர ஆதீனத்திற்கு விஜயமானார்கள். சாந்த நிலையத்தில் ஆதீன சம்பிரதாயப்படி மாலை முதலியன அணிந்து விபூதி பிரசாதம் வழங்கி வரவேற்கப்பட்டது. 12 மணிக்குமேல் விருந்தினர் மாளிகையில் சிவானந்தர், மகாசந்நிதானம், யோகிபாரதியார் ஆகிய மூவர்களும் சந்தித்தார்கள. நீண்டநேரம் ஆத்மானுபாவ விசாரம் நடைபெற்றது அதற்குமேல் பாரதியார் அவர்கள் விரும்பிய வண்ணம் யோகசாதனங்களைப் பற்றிய நிழற்படக்காட்சி காண்பிக்கப்பெற்றது.

மாலை 6 மணிக்கு வழக்கம்போலத் தேவார பாராயணத்துடன் மடாலய முகப்பில் கூட்டம் தொடங்கிற்று. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்கள பேசியதாவது :—

## மெய்யன்பர்களே !

இன்று ஒரு நல்லநாள். யோகம் என்பது மன ஒருமைப்பாடு. ஒன்றோடு ஒன்றை இணைத்துவைக்கும் வன்மையே யோகம். பேரொளியாகிய நித்தியப் பெருமானாகிய ஒன்றோடு உயிரொளியாகிய நித்தியப் பொருளை இணைத்து வைப்பதே யோகம். அந்த யோகநெறியை மிகச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் அப்பரடிகள் திருவாரூர்த் திருத்தாண்டகத்தில் அறிவித்துள்ளார்கள். அவர்கள் காட்டியமுறை மூச்சை அடக்குங்கள்; கண்களை உள்முகமாக்கி உற்று நோக்குங்கள்; உங்களுடைய மாசுபடியாத உள்ளப்படத்திலே ஓர் உருவத்தை எழுதுங்கள். அவ்வுருவம் சச்சிதானந்த சொரூபமாகிய ஒளியும் இன்பமும் உறுதிப்பயனுமாகிய சோமாஸ்கந்த திருமேனியாக இருப்பதைப் பார்ப்பீர்கள்; அங்கேதான் அருள் ஜீவநாடி இழைவதையும் காண்பீர்கள்; அந்த தரிசனங்கண்ட நீங்கள்தான் உண்மை ஞானிகளோடு ஒருங்குவைத்து எண்ணத்தகும் தகுதியைப் பெறுவீர்கள் என்று யோகத்தின் உறுபயனையும் யோகத்தினையும் உணர்த்துகின்றார்கள். அந்தப் பாடலைப் பாருங்கள்.

உயிராவணமிருந்து உற்றுநோக்கி
உள்ளக்கிழியின் உருவெழுதி
உயிராவணஞ்செய்திட்டு உன்கைத்தந்தால்
உணரப்படுவாரோடு ஒட்டிவாழ்தி
அயிராவணம் ஏறாது ஆனேறேறி
அமரர்நாடாளாதே ஆரூர் ஆண்ட
அயிராவணமே என் அம்மானே
நின்னருட்கண்ணால் நோக்காதார் அல்லாதாரே.

நேற்று வியாழக்கிழமை; யோகத்துறுபயனாகிய சிவானந்தத்தின் விளைவு. இன்று வெள்ளிக்கிழமை: யோகமாகிய சுத்தானந்தத்தின் தோற்றம். குருவாரம் சிவவாரம். வெள்ளிவாரம் சக்திவாரம. சக்திவாரத்தில, சுத்தசக்தியைப் பற்றுத் தூயவாழ்க்கை நடத்தும் யோகியார் வருகை. யோகக்கலை ஞானவாயில். அக்கலையில வெற்றிகண்டு விளக்கியவர் நமது திருமூலர். அவர் கூறும தெய்வக் கலையில் எத்தனையோ பகுதிகள் இன்றைக்கும் பெரிய பெரிய புலவர்களுக்கும் கூடப் பொருளாழங் காணமுடியாத புதை பொருளாகக் கிடக்கின்றன. அவற்றை விளக்கங் காண காட்ட ஒருசிவ யோகியர்தான் முற்படவேண்டும். இந்தத் துறையில் இவர்களுக்குள்ள அநுபவத்தை இவர்களுடைய திருமந்திர விளக்கமே அறிவிக்கும்.

மற்றொன்று பாருங்கள். ஒவ்வொருவரும் நாம எதற்காகப் பிறந்தோம் என்பதை உணரவேண்டும். உணர்ந்து கூறுகின்றார் நமது அருணந்திசிவாசாரிய சுவாமிகள் .—

"மானிடப்பிறவிதானும் வகுத்தது மனவாககாயம்
ஆனிடத்தைநதும ஆடும் அரன்பணிக்காக அன்றோ"

என்று. ஆகவே ஒவ்வொருவரும் அரன்பணி செய்ய வேண்டும. அரன்பணி செய்யாத மககள் பதரெனப் படுவர். அதுமட்டுமல்ல; சிவமந்திரஜெபமும் செய்ய வேணடும். அந்த மந்திரம உயிர்த்துணை; நாவினுக்கழகு தருவது, நடுக்கத்தைக் கெடுப்பது, நலமிகக் கொடுப்பது; ஆன்மாககளால் செய்யப்படும் பாவங்களை எல்லாம் கணப் பொழுதில் அழித்துவிடும். நமது அப்பரடிகள் இதனை வெகு அழகாகக் கூறுகிறார். எப்படி? பூமியிலிருந்து

ஆகாயம்வரை விறகு குவிக்கப்பட்டிருக்கிறது மலைபோல. அக் குவியலை உண்ணுதற்கு நெருப்பு உள் நுழைந்தது. அவ்வளவுதான். விறகுக்குவியல் அப்படியே மறைந்து விட்டது. அதுபோலத்தான் பாவமும் நசிக்கும்.

விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகில் அவை ஒன்றும் இல்லையாம்
பண்ணிய உலகினில் பயின்ற பாவத்தை
நண்ணிநின்று அறுப்பது நமச்சிவாயவே

சிவநாமஜெபம் செய்யவேண்டிய முறைகளை நமது சிவானந்தர் அவர்கள் நேற்றுச் சொன்னார்கள். இன்று யோகக்கலையைப்பற்றி யோகி பாரதியார் அவர்கள் தேனொழுக ஆனந்தமாகப் பேசுவார்கள். எல்லோரும் கேட்டு இன்புறுவீர்களாக,

என்று பேசிமுடித்தார்கள். பின் ஆதீனக்கல்லூரி கௌரவப் பேராசிரியர் வித்துவான் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளால் ஆதீனச்சார்பில் ஒரு வரவேற்புரையும் வாசித்தளிக்கப்பட்டது.

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கள் 'யோகக் கலை' என்னும் தலைப்பில் சுமார் $1\frac{1}{2}$-மணிநேரம் சொற்பெருக்காற்றினார்கள். அதன் சுருக்கம் வருமாறு :—

நானுருளுமாய் எனக் கெந்தையுமாய் உடன்தோன்றினராய்
மூன்று யுலகம் படைத்துகந்தான் மனத்துள் இருக்க
ஏன்றான் இமையவர்க்கன்பன் திருப்பாதிருப்புலியூர்த்
தோன்றாத் துணையாயிருந்தனன் தன்னடி யோங்களுக்கே

ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானத்திற்கும்; சுவாமி சிவானந்தருக்கும், மற்றும் உள்ள ஆன்மகோடிகளுக்கும் என ஐக்கிய நமஸ்காரம்.

இன்று புனிதமான நாள். என்வாழ்க்கையிலேயே மிகச் சிறந்த நாள். 40 ஆண்டுகளாகச் செய்த தவம் இன்று எனக்குப பலித்தது. பயனளித்தது. தவத்தின் பயன் முப்பொருளின் உண்மையைக் காண்பதுதான். அந்த முப்பொருள்தான் இன்று உங்கள்முன் காட்சி அளிக்கிறது. இக்காட்சி மிக அபூர்வமானது. காட்சி கண்டபோது பேச்சில்லை. ஆனந்தக் களிப்பு நெஞ்சில் துள்ளுகிறது. ஆனாலும் இம் முப்பொருளைக் கூட்டி வைத்த முதற் பொருளைபபற்றிப் பேசுவேன். அவனருளால் இன்று எனக்கு இப்பேறு கிடைத்தது.

இந்த உலகில நாம் பிறந்திருக்கின்றோம். ஆனால் மூன்று கேள்விகள். எங்குற்றோம்?...., என்னசெய்தோம்? என்ன செய்யவேண்டும்? என்பதைச் சிந்திப்பதில்லை. பிரான்ஸ தேசத்திலே மோர்தாக் என்றொருவர் இருநதார். அவர் பெரும் பணககாரர். மேலும் கல்விமான். ஆனால் மனச்சாநதி இல்லை. இறுதியில இநத மூன்று கேள்விகளும எழுநதன. செல்வம முதலியவற்றால் பயனிலலை இன்பமில்லை. இதற்கு அப்பால ஒரு இன்பம் உள்ளது. அதை எப்படி அடைவது? எனறெல்லாம் சிந்திததார; சித்தனானர். அதுபோல் ஒவ்வொருவரும் அவ்வாறு செய்தால அஞ்ஞானம் நீங்கும். யாவரும் அடைய வேண்டியபொருள் பரம்பொருளே. அப்பரம்பொருள் ர சிவம். அது வெளிப்பட்டு அருளும்.

போகததால பயனில்லை. கடைசியில் நோய்தான், வயித்தியரிடம சென்று இறக்கிறான். குலத்தாலும் பய னில்லை. சிறந்த குலததில் பிறநதாலும குலத்தைககெடுகக வநத கோடாரிக்காமபாக ஒரு பிள்ளை பிறநதுவிடுகிறான். வித்தையினாலும், அதனால் பணத்தைத் திரட்டினாலும் பயனில்லை. வரிகள் பல விதிப்பதில பணம் சுரண்டப்படு கிறது. செல்வம் செல்வோம் என்று போய்விடுகிறது. பலத்தினாலும துன்பநதான். எப்பொழுது? தன்னைவிட ஒரு பலசாலி வநத பொழுது இன்று வாழ்வான் நாளை தாழ்வான். இப்பொழுதும் பாருங்கள். வடகொரியா தெனகொரியாமீது படையெடுததது முன்னால். இப் பொழுது தென்கொரியா வடகொரியாமீது படையெடுக் கிறது. ஆகவே உலக வாழ்க்கை நிலையில்லாதது நீர்க் குமிழி எப்படியோ அப்படித்தான்.

'அறத்தால் வருவதே இன்பம' என்றார் வள்ளுவர். அறம் தருமம தருமம் தருமபுரம். தருமபுரத்திற்கும் அறத்திற்கும பொருத்தம. தருமபுரத்தினால் தமிழ்நாட் டிற்கு இன்பம. ஏன! மஙகிக்கிடநது அழிநதுபோன- பூட்டப்பட்ட பல நூல்களை எடுத்து அச்சிட்டது. தேவா ரம் முதலிய நூல்கள் இன்று ஒவ்வொரு சிறுவர் கையிலும் இருந்து பயனளிககின்றதென்றால அது நமது சநநிதானத் தின் தொண்டல்லவா? இதனால் தருமபுரம் மிகப் பெருமை பெற்றது நிற்க, வாழ்க்கைக்கும அறமே இன்பமாகும். துன்பமற்றப் பேரினபநிலையை அடைவதே நமது லட்சியம். அறம் தன்னையும் பூரணமாக்கி மக்களையும பூரணமாக்கு வது. ஒன்றுபாருங்கள :—

பையன்கள் இருக்கிறார்கள். நன்றாகப் படித்து B A, பரீட்சை எழுதப்போகிறார்கள். ஒருவன் சரியாக எழுதிப்

பரீக்ஷையில் தேறிவிடுகிறான் ஒருவன் எழுதாமல் காலத்தை வீண் போக்குகிறான். மற்றொருவன் காப்பி யடித்துத் தண்டனைக்குள்ளாகிறான். ஆகவே ஒழுங்காக எழுதியவன் பாஸ் செய்து இன்பம் பெறுகிறான். அது போலத்தான் நமது வாழ்க்கையாகிய பரீக்ஷையும். இப் பரீக்ஷையில் மனிதவாழ்க்கை ஒரு பள்ளிக்கூடம். 'இன்னது செய்' என்ற ஆண்டவன் கட்டளையை அறிந்து செய்துவிட்டால் ஜன்மம் ஸாபல்யம் பெறும். அறிந்து செய்யாவிட்டால் மறுபிறவி எடுக்கவேண்டியதுதான். 'புனரபி மரணம்; புனரபி ஜனனம்.'

வாழ்க்கை வீணாகிறது. ஒரு பெரிய மகான் கூறு கின்றார்—ஹே! சம்போ! நான உண்பது, உடுப்பது உனது திருவடி பூசிப்பதாக இருக்கட்டும். என் இதய மானது உன்னைச் சொல்லட்டும். அந்தத் தொண்டையே நான் செய்கின்றேன். எதை நினைத்தாலும் பாடுபட்டாலும் ஈஸ்வரார்ப்பணமாகவேண்டும் என்று.

நால்வர்கள் சைவத்திற்காக அரும்பாடு பட்டார்கள் அப்பர் பாடல்கள் சைவசித்தாந்தத்தைப் பிழிந்தெடுத்துக் காட்டுகின்றன. மணிவாசகர் 'நமசிவாய வாழ்க்கை நாதன்தாள் வாழ்க, இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க' என்று கூறுகின்றார். திருவாச கமும் திருக்குறளும் சிறந்த நூல்கள். திருவாசகம் உயிர். திருக்குறள் உடல் சுந்தரரோ சிவனைக்கூட 'பித்தா' என்று வைதார். ஆனால் அவர்தான் தம்பிரான் தோழ ரானார். கடவுளை உலக மக்களுக்கும் தோழராக்கினார். ஞானசம்பந்தரை எடுத்துக்கொள்வோம். அவர் இல்லா விட்டால் இன்றைக்குச் சைவம் ஏது? நாம் இன்று நெற்றி

யில் திருநீறு பூசிக்கொள்ளுகிறோமென்றால் யார் காரணம் சம்பந்தரல்லவா !

யோகம் என்பது என்ன ? சித்தத்தை நிச்சிந்தையாக ஒன்றினில ஒன்றைச்செய்வது யோகம. மன அடக்கத் திற்குச் சரியை, கிரியை, யோகம் என்ற படிகளில் செல்ல வேண்டும். எங்கெங்கு மனம் செல்கின்றதோ அதை விடுத்து ஒருவழிப்படுத்துவதே யோகம். இந் நான்கி னுள சரியையும் கிரியையும் உலகியல். யோகமும் ஞான மும் அதற்கு அப்பாற்பட்டன. மணிவாசகர் மந்திர ஞானமாகிற தியான யோகத்தை 'நானேயோ தவஞ் செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்' என்று சொல்லிக் காட்டுகிறார் ஆகவே யோகம் என்பது கடவுளிடத்து ஒரு வழிப்படுத்துவதுதான்.

ஹியூதர்கோ என்ற விஞ்ஞானி இருந்தான். B. A. படித்தவன். விஞ்ஞானத்தில் முதன்மையானவன். ஆனால் மனச்சாந்தி கிடைக்கவில்லை. ஒரு பெரியவரை அணுகி னன். எனக்கு மனச்சாந்தி வேண்டுமென்று இரந்தான். ஆண்டவனைத் தரிசித்தால் உனக்குச் சாந்தி கிட்டும் என்று அவர் சொன்னார். கடவுளைக் காண்பது எங்கே என்று கேட்டான். அவரை எங்கும் பார்க்கலாமே என்றார். கேட்ட விஞ்ஞானி தூரதிருஷ்டி கண்ணாடிமூலம் எங்கும் பார்த் தான். தேடினன். ஒன்றும் தெரியவில்லை. பாதிரியா ரிடம வநது 'பார்தேதேனே தெரியவில்லை' என்றான். நீ அப் படிப் பார்த்தது போதாது. உன்னுள்ளே பார்த்துக் கொண்டாயா என்றார். விஞ்ஞானி விழித்தான். ஒன்றும் புரியவில்லை என்றான்

[கடவுளுண்மையை நிர்ணயிக்கவும இருக்குமிடத்தைச் சுட்டிககாட்டவும மற்றொரு விஞ்ஞானியின் வரலாறும், ஆட்டைத் தோளின்மீது போட்டுக்கொண்டு தேடிய கோனன் வரலாறும எடுத்துக கூறப்பட்டன.]

மனிதனுக்கு மன அடக்கமும் பொறி அடக்கமும் அவசியம தேவை. "யாதனின் யாதனின் நீங்கியான்" என்றார் வள்ளுவர். மேலும் அவரே "ஒருமையுள ஆமை போல் ஐநதடக்கலாற்றின் ஒருவர்க்கு எழுமையும ஏமாப் புடைத்து" என்றும் கூறியிருக்கினறார். (எழுமை என் பதற்கு எழுச்சி என்று பொருளகூறிக் காட்டியது, ஆராய்சசியாளருக்கும் பெருவிருந்தாயிருந்தது.) யோகத் தின் படிகள மூனறு. சித்தாநதத்துள நன்கு கூறபபடு கிறது. அவைதாம் நமசிவாய, சிவோகம், சிவமயம். இவை யோகததின் அடிப்படைத் தத்துவஙகள். உலகில் எவனொருவன் பரம்பொருளை அடைகிறானே அவனே யோகி. அநத யோகியும பன்னிரண்டு வருடம் பரமபொரு ளிடததில் கருத்தூன்றி மௌன விரதம் கைக்கொண்டா னால் தில்லை நடராசப்பெருமான் அவன் மனத்தின்கண் வெளிப்பட்டருளுவார். இது யோகத்தின் ரகசியம். அப்ப ரடிகளும் 'மனமணி இலிங்கமாக' என்று கூறுகிறார். அவனருளாலே அவன்தாள்வணங்கி' என்பது மாணிக்கப் பாட்டு அவன் என்றதுயார்? அவன்தான் பரம்பொருள். 'என னுள்ளே உயிர்ப்பாய், புறம்போந்துபுக்கு என் னுள்ளே நிற்கும் இன்னம்பர் ஈசன்' என்று தேவாரம் கூறுகிறது. இன்னும் பாருங்கள்.

சிவானந்தர் உடல் வைத்யம் செய்தார். அவர் உள் ளத்தில் 'உயிருக்கு வைத்யம் என்னசெய்தோம்?' என்ற கேள்வி எழுந்தது. சிவயோகத்தில் ஈடுபட்டார். உண்மைப்

பரம்பொருளை உள்ளத்திடத்தே கண்டார். எல்லாருக்கும் மனோவைத்யராகவே ஆகிவிட்டார. யோகம் அவரிடம் சித்தி பெற்றது. யோகத்தால் நரம்புகள் மாற்றமடைகின்றன. ஒவ்வொருவரும் உத்தம யோகம செய்யவேண்டும். உள்ளத்திலே உணமை ஒளியைக் காண்டலே யோகம். யோகசாதனம் அநதரங்கம் பகிரஙகம் என இரு வகைப் படுகிறது. பக்திக்குப் பொருள் தன்னை அர்ப்பணித்தல் என்பதாம். அரு, உரு, குரு என்ற வணக்கங்கள் அதற்குரிய மார்க்கஙகள். அவனே தஞ்சம் என்று வாழ்தல் தக்க வாழ்க்கை. எல்லாம அவன் அருள்; அவனுடைமை என்ற நினைப்பு தேவை. சாநத மனமுடையவனே யோகி. சிவசக்தியால் ஆன்மா ஐக்கிய மடைகிறது. காந்தத்துக்கும் இரும்புக்கும உள்ள தொடர்பு போல்வது சிவசக்திக்கும், ஆன்மாவுக்கும் உள்ளதொடர்பு

நமசிவாய-நமக்கு மேல் பரம்பொருள் ஒன்று இருக்கிறது. மார்க்கோனி, ரேடியோ கண்டார். எடிசன் எலெக்டரி கண்டுபிடித்தார். சைகிளோன் அணுசக்தியைக் கண்டார். ஆனால் அவைகளுக்குள் ஒரு சக்தி நின்று இயக்குகிறது என்பதையும் அவர்கள் உணராமல் இல்லை. நமக்கு மேற்பட்ட பொருள் ஒன்று இருக்கிறது என்பதையும் கண்டார்கள். அது இல்லாமல் உடல் ஆடாது. உலகம் இயங்காது. உடலை அர்ப்பணம் செய்; புலன் வழி விடாமல் நிலைநிறுத்து; இது யோகத்தின் முதற்படி. இதற்கு நமசிவாய ஓம் சக்தி என்ற மந்திரங்களை ஜெபிக்கலாம்.

சிவோகம்:—'என்று நீ அன்று நான்' என்ற உணர்வு தலைப்படுதல. உனக்குள் ஒருவன் இருக்கிறான் எனற உணர்வு இரண்டாம் படியில் தலைப்படவேண்டும்.

"நினைக்க நினைக்க நினைப்பற்று நெஞ்சே நினைப்பற்றி நீயாகி நில்" தியான சக்தி ஒருவனை நினைப்புப்போல ஆக்குகிறது சிவோகம் செய்பவன் அது சித்தித்த உடன்தான் கணை திறக்கவேண்டும். அந்த சித்தியை மற்ற வழிகளில் பயன்படுத்தக்கூடாது.

சிவமயம்-யோகத்தின் மூன்றாம்நிலை சிவமயம் அங்கிங்கெனாதபடி எங்கு பார்த்தாலும அவனேயாய்க் காணும் நிலை சிவமயம். நாம் கடிதங்களில்கூட பிள்ளையார் சுழி யிட்டு சிவமயம் எழுதுகிறோம 'யத்பாவம் தத்பவது.' மனிதன் தான் நினைத்த சக்தியாகவே தான் ஆகின்றான். அதனால்தான் சிவபூசை செய்கின்றனர். சிவலிங்கம் ஆகாசமயம. 'மனமணி இலிங்கம்' என்பார் அப்பரடிகள். சிவபூசை செய்யும் ஒருவன் சிவமயமாகின்றான். இன்ப நிலை அடைகின்றான். செபசாதனைகளைபபயில். உரிமைகளை அவனுடையதாக்கு யாவர்க்கும் நன்மைசெய். பணிவோடிரு. இவை யோகநிலைகளை வளர்க்கும். மனிதன் யோகசாதனைகள் பயின்று சிவபரம்பொருளைக் காண்பானாகுக என்று நாம் வாழ்த்துகின்றோம். ஆன்மகோடிகளுக்கு என் நன்றி. ஓம்சிவம்.

ஸ்ரீ பாரதியாரவர்கள் பேச்சு முடிநதபிறகு பலர் வேண்டுகோட்கு இணங்க, சுவாமி சிவானந்த மகராஜ் அவர்கள் முதனாள் பேச்சின் ஒலிப்பதிவு ஒலி பரப்பப் பட்டது. வேலூர் கட்டளைவிசாரணை பிரசார கோஷ்டித் தலைவர் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் நன்றியுரை கூறக் கூட்டம் இனிது முடிந்தது.

**படக்காட்சி** :—இவ்விரண்டு நாட்களிலும் பொதுமக்களுக்கு யோகம சாதனைகளும், இமயமலையின் இயற்கை

வளமும், கங்கையாற்றின் தெளிந்த நீரோட்டமும் படக் காட்சி மூலம் யாத்ரா மண்டலியாரால் அறிவிக்கப்பட்டன. சமய உண்மைகளைப் பரப்புவதற்காக, சிவானந்தா அவர்கள் நவீன சாதனங்களையும் பயன்படுத்தி வருவதை மக்கள் மிகமிகப் பாராட்டினார்கள்.

அன்றிரவு 11-மணி அளவில் சுவாமி சிவானந்தமகராஜ் அவர்கள் யாத்ராமண்டலியுடன் ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களிடத்தில் பிரியா விடைபெற்றுக் கொண்டார்கள்.

—o—

## தஞ்சை

ஸ்ரீலஸ்ரீ சுவாமி சிவானந்த ஸரஸ்வதி இன்று காலை மாயூரத்திலிருந்து தஞ்சை வந்து, ரயில்வே ஸ்டேஷனிலிருந்து சங்கர மடத்துக்கு ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டார். ஊர்வலத்தில் ஏராளமான பக்தகோடிகள் கலந்து கொண்டனர். வழிநெடுக பஜனை செய்யப்பட்டது.

சுவாமிஜி உடல்நிலை சரியாக இல்லாததால் தஞ்சையில் நடக்கவிருந்த எல்லா நிகழ்ச்சிகளும் ரத்து செய்யப்பட்டன. ஆனாலும், திரளான ஜனங்களுக்கு சுவாமிஜி சங்கரமடத்தில் தரிசனம் கொடுத்தார். அங்கு ராம பஜனை நடந்தது. நகர பொதுமக்கள் சார்பில் வரவேற்புப் பத்திரங்கள் வாசித்தளிக்கப்பட்டன. சிறிது நேரம் அங்கு தங்கின பிறகு ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்து முற்பகலிலேயே திருச்சிக்குப் புறப்பட்டார். ஸ்டேஷனிலும் ஏராளமான ஜனங்களுக்கு தரிசனம் கொடுத்தார்.

—சுதேசமித்திரன். 9-10-50

## அறிவிப்பு

இமயமலையில் ரிஷிகேசத்தில் அமையப்பெற்றுள்ள ஆனந்தகுடீரத்தின் ஸ்தாபகரான ஸ்ரீ மண்டலேஸ்வர சுவாமி சிவானந்த ஸரஸ்வதி மகராஜ் அவர்கள் தங்கள் சிஷ்யமண்டலத்தில் ஒரு சிலருடன் இராமேஸ்வர யாத்திரை யினிமித்தம் வருங்காலத்தில், பக்தர்கள் பிரார்த்தனைக் கிணங்கி, வருகிற அக்டோபர் மாதம் 6-ம் தேதி வெள்ளிக் கிழமை ஒருநாள் மட்டும் இவ்வூரில் தங்க இசைந்துள்ளார் கள். ஆனந்தகுடீர் என்ற ஸ்தாபனத்தின் முக்கிய நோக் கங்கள் என்னவெனின்: ஜீவராசிகள் ஆத்மஞானத்தை யடைந்து அனுபவிப்பதும், உலகில் சமரசம், சாந்தம், அன்பு, ஒற்றுமை இவைகளை ஓங்கச்செய்வதும் இவற்றிற்கு அடிப்படையாக உள்ள யோகசாதனத்தை குரு சிஷ்யக்கிரம மாய் அனுஷ்டிப்பதுமாகும்.

ஸத்ஸங்கம், ஈஸ்வரபஜனை, பக்தியோகம், வேதாந்த விஷய அறிவு இவைகளால் எவரும் ஆத்மஞானம் அடையும் படி சுவாமிகள் தென்னாடெங்கும் விஜயம்செய்து வருகின் றார்கள்.

ஆகையால் இம்மகான் நமது தஞ்சைமா நகருக்கு வரும் நன்னாளை எதிர்பார்த்து எல்லோரும் ஒன்றுகூடி சுவாமியையும், அவர் கோஷ்டியையும் சிறப்பாக வரவேற்று அவர்களது தரிசனம், ஸத்ஸங்கம், நற்போதனைகள் இவை களால் அவர்களுடன் ஆத்ம சம்பந்தத்தை ஏற்படுத்திக் கொண்டு இம்மையிலும், மறுமையிலும் க்ஷேமத்தை அடை யுமாறு கோரப்படுகிறது.

இப் பெரியோர்களை வரவேற்க அமைக்கப்பட்டுள்ள ஒரு ஸங்கம் தஞ்சை அய்யங்குளம் கீழ்க்கரையிலுள்ள

மகாராஷ்டிரஸமாஜ கட்டிடத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது இந்த ஸத்காரியத்திற்கு எல்லோரும் முன்வந்து ஒத்துழைக்குமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

ஸ்வாமிகளின் விஜயத்தின சமயம இவ்வூரில் நடக்கும் சமபவங்களின் விவரங்கள் இடம், காலம் முதலியன துண்டுப் பிரசுரங்களின் மூலம் வெளிவரும். மகாராஷ்டிரஸமாஜ கட்டிடததில் பிரதி ஞாயிற்றுக்கிழமையிலும் மாலை 6-30 மணிககு இது சமபநதமாக கூட்டம் நடைபெறும ஆஸ்திகர்கள் அனைவரும கூட்டத்தில் கலநதுகொள்ளுமாறு கோரப்படுகிறது

அபிமானிகள்

ஸ்ரீ. வெஙகடகிருஷ்ண பிள்ளை, காய்கனி வர்த்தகர்கள் சஙகம் தஞ்சை

,, R. விசுவநாத ஜோஷி ஜவுளி வியாபாரம் ,,

Dr. N. ராமநாதன் M B.B S., மெடிகல் அஸோஸியேஷன் ,,

ஸ்ரீ. சுவாமிநாத பிள்ளை V. M. ராஜராஜசமய சங்கம் ,,

,, J. சதாசிவ தவே குஜராத்தி அஸோஸியேஷன் ,,

,, T. A. நாராயணசாமி பிள்ளை பழவியாபாரிகள் ,,

,, K. S. கோபாலசாமி அய்யர் ஹோட்டல் முதலாளி சஙகம் ,,

,, மாரிமுத்து பிள்ளை புஷ்ப வியாபாரிகள சஙகம் ,,

,, பஜஜி ரங்கய்யர்
,, பஜஜி சுப்பையா — சௌராஷ்டிர சங்கம் ,,
,, S. V பாகவதர்

,, கிருஷ்ண ஜோஷி மிராசுதார்கள ,,

,, சொக்கலிங்க செட்டியார் மில் ஓனர்ஸ் அஸோஸியேஷன் ,,

ஸ்ரீ சம்பசிவ அய்யா (குன்னியூர்) வைதீக தர்ம சங்கம்,,
,, குப்புசாமி பிள்ளை ஞானசம்பந்தா மடாலயம் ,,
,, ராமானுஜதாஸர் கருந்தட்டான்குடி ,,
,, R. ஹரிராவ் (இனுமதார்) கோவிலடி, பூதலூர் ,,

S. கலியாணசுந்தரம் அய்யர்
தலைவர்.

T. B. சிவசங்கர தேவே
T S சாதசிவ ராவ்
காரியதரிகள்.

தஞ்சாவூர், தேதி 10-8-50

—o—

நமோநாராயணாய

தஞ்சாவூர் மஹாஜனங்களின் சார்பாக தஞ்சைக்கு
6-10-50-ல் விஜயம் செய்த பரமஹம்ஸ பரிவ்
ராஜகாசார்ய ஸ்ரீ சிவானந்த சுவாமிகளுக்கு
அளிக்கப்பட்ட

## வரவேற்புப் பத்திரம்

தங்கள வரவு நல்வரவு ஆகுக.

தஞ்சை மஹாஜனங்களின் சார்பாக, தஙகளை வர வேற்க அமைக்கபபட்ட கமிட்டியார் தங்களை மனப்பூர்வ மாயும் நன்றியறிதலுடனும் சரித்திர வாயிலாயும் பிரஸித்தி பெற்ற இத்தஞ்சை நகருக்கு வரவேற்கிறோம்.

ஈச்வர வீர்யத்தை அடைய தாஙகள செய்யும் தபஸ் உலகத்தின் க்ஷேமார்த்தமாக தங்களால் அமைக்கப்படும் ஸ்தாபனங்கள், சங்கங்கள். தஙகளால் சமஷ்டி பாபத்தை நீக்கி ஜீவகாருண்யம் அன்பு, பரோபகாரம. ஐக்கிய உணர்ச்சி இவைகளை மனிதன் மனதில் வளரச்செய்யவல்ல ஸ்ரீ அதிருத்ரம், ஸ்ரீ மகாருத்ரம், இவை போன்ற மஹா எக்ஞங்கள் உபநிஷதங்களில் அமைந்திருக்கும் வேதாந்த உண்மைகளை ஜெகத்தில் எல்லோரும் உணர்ந்து அநுபவிக் கும் வழியில் ரிஷீகேச மஹாக்ஷேத்திரத்தை உலகத்தின் சுத்த ஹிருதய ஸ்தானமாய் தாங்கள அமைக்கும் திறமை

இவைகளைக் கண்டும் அடியோம், பக்தி, ஆச்சரியம், நமது பாக்கியமே பாக்கியம் என்ற உணர்ச்சிகளுடன் பரவசப்பட்டு இருக்கிறோம் என்ன உயர்ந்த லக்ஷியங்கள். என்ன அற்புத ஸாதனங்கள் ஸித்திகள் ஒரு வாழ்க்கையிலே

ஸமஸ்காரமற்ற புத்தி இப்பொழுது உலகத்தில் அணுகுண்டு முதலிய நாசகரமான ஸாதனங்களைத் தேடி வருகிறது. இக்காலத்தில் அஹோ, தங்களை ஈன்றெடுத்த தமிழ் நாட்டின் பாக்கியம். மஹா தபஸ், காமயோகம் இவைகளால் உலகத்தை நல் வாழ்க்கையில் ஈடுபடச்செய்ய பாடுபடும், தங்களுடையவும் தங்களுடைய ஆசிரம வாசிகளை வளர்க்கும், ஹிமயபர்வதத்தின் புண்ணியமே புண்ணியம்!

தங்களுடைய தபோ பலஞக அணுகுண்டு முதலிய அசேதன சக்தியை வளர்க்கும் விஞ்ஞான சாஸ்திரிகளின் மனத்தையும் உடைக்க வல்ல ஈசவர வீர்யத்தை மனுஷ்ய மனதின் வாயிலாய ஊட்டவல்ல தபோ பலமே பலம்.

ரிஷீகேச க்ஷேத்திரம் இனி இந்தியாவிற்கே அல்ல, உலகத்திற்கே ஒரு விசித்திர விக்ஞான சாஸ்திர ஆராய்ச்சி நிலையமாகி உலகத்தில் இன்று வியாபித்திருக்கும் தமஸையும் அதன் பலஞக நேரிடும் கொடுமைகளையும் நாஸ்திகத்தையும் போக்கி தேவ சம்பத்தான ஸ்வர்ணத்தைச் செய்யும் ஒரு ரஸ வாத நிலையமாகும். ஈசன் தங்களை பாரத வருஷத்திற்கும் உலக க்ஷேமத்திற்கும் பாடுபட நீண்ட ஆயுள் ஆரோக்கியம் இவைகளை அளிக்க வேணுமென பிரார்த்திக்கிறோம்.

தடுத்தாட் கொண்டு வலுவே வந்து எங்களுக்கு தரிசனம் கொடுத்து எங்களை புனிதராக்கியதற்கு நாங்கள் ஆழ்ந்த நன்றி பாராட்டுகிறோம். இந்த நகர வாசிகள் இதன் பலஞக ஈஸ்வர அனுக்கிரகத்திற்குத் தகுந்த பாத்திரர்களாக வேணுமென பிரார்த்திக்கிறோம்.

தஞ்சாவூர்
6-10-50

தஞ்சைநகர வாசிகளின் ஊழியர்களான
வரவேற்புக் கமிட்டியார்.

ஸ்ரீலஸ்ரீ சாது மண்டலேஸ்வர
சுவாமி சிவானந்த சரஸ்வதி மஹாராஜ
6-10-50 அன்று தஞ்சை விஜயம் செய்தபோது
நாகை தெய்வநெறிக் கழகத்தினர் அளித்த

## அன்புப் பத்திரம்

"மகமது மலைக்குப்போக முடியாவிட்டால் மலை தான் மகமதைத் தேடி வரட்டுமே" என்பது ஒரு ஆங்கிலப் பழமொழி. பழமொழி பொய்க்காது என்பதை நாம இன்று திண்ணமாயறிகின்றோம் இமயமலைச் சாரலில் தவஞ் செய்துவரும் சுவாமி சிவானந்தரைத் தென்னாட்டிலுள்ள நாம நேரில்போய்த் தரிசிக்க முடியவில்லையாயினும் சுவாமிகள் நம்மைத் தேடி அருள்புரிய வந்துள்ளார். ஏன்? "தென்னாடுடைய சிவனே போற்றி! எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!!" என்று கோஷம செய்பவர்கள் யார்? தமிழர்கள் தமிழ்மொழியில் இன்று பாடுகின்றனர். சிவனில் ஆநந்தத்தைக் கண்ட சிவானந்தர் நமமைத்தேடி வந்தாக வேணடும். அது சிவபெருமான் கட்டளை.

சென்னை:—

ஜாதி, மதம், நாடு, அரசியல் முதலிய பாகுபாடற்ற ஒரு சந்நியாசிக்கு நேற்று சென்னைநகரத்தில் கார்ப்பொரேஷன் அங்கத்தினர் சென்னைமாகாணத்தின் சார்பில் உவந்தளித்த அமோக வரவேற்பு தென்னாட்டினரின மனப் பண்பை உலகிற்கு எடுத்துக்காட்டி விட்டது.

தஞ்சாவூர்:—

நம் குருநாதனை டாக்டராகும்படி செய்தபெருமை தஞ்சாவூருக்கே உரியது. உடல் நோய் தீர்க்க வலலவர் என்ற பட்டம் பெற்று இவ்வூரை விட்டுபோனார். கடல்

கடந்து மலாயா நாடு சென்ற டாக்டர் இமாலயம் சென்று சிவானந்தக்கடலில மூழ்கித் திரும்பிவந்து தான் படித்த ஊரிலேயே தன்மருந்தை விற்க இன்று நம்முன் வந்துள்ளார். அவர் கொடுக்கும் மருந்து உடல் நோய், உயிர் நோய் இரண்டையும் தீர்கக வல்லது. மறுமுறை சந்தர்ப்பம் வாய்க்காது. அவரவா வியாதிக்குத்தக்க மருநதைக் காசு இல்லாமல பெற்றுககொள்ளலாம.

நாகப்பட்டினம் :—

தஞ்சை ஜில்லாவைச்சேர்ந்த நாகப்பட்டினத்தில் சுவாமிகள் இட்ட கட்டளைகளைக் கடைபிடித் தொழுகும் தெய்வநெறிக் கழகமொன்று இருந்தபோதிலும சுவாமிகள் செலலும் யாததிராமார்க்கத்தில் நாகப்பட்டினம் அமையப் பெறுமையால் அங்கு அவர்கள் வர இயலவில்லை. ஆயினும் அடிகளைக்காண இன்று நாம நூற்றுக்கணக்கில் நாகையி லிருந்து வநதுளளோம சுவாமிகள் நமபால கருணை கூர்ந்து ஆசிபுரிவார்களாக !

ஐவகையாம பொறிகடமக் கருததுவதே
தொழிலாகி யலைந்து நொநது
முய்வகையொன் றடைவதற்கு முணர்விலராய்
எனைமானு முலகமாக்கள்
செய்வகைதோந் துயாகதியைச் சேர்வதற்கிங்
கவதரித்த சிவமேயெங்குந
தெய்வநெறிக் கழகமதைச் செகமிறுவுஞ
சிவானந்த தேவே போற்றி !

நாகப்பட்டினம்,
6—10—50.

இங்ஙனம்,
நாகை தெய்வநெறிக் கழகத்தினர்.

## திருச்சி

திருச்சிராப்பள்ளி வந்து சேர்ந்ததும் ஸ்ரீ சுவாமிகள் 8-10-50 தேதியன்று காலை முதன் முதலாக மலைவாசல் பிள்ளையார் கோவில் தரிசனம் செய்தார் பின்பு ஊர்வலம் மிகவும் ஆடம்பரமாக நடைபெற்றது. அடுத்து உருமி பள்ளிக்கட்டிடத்தில் பாத பூஜை பக்தி வினயத்துடன் நடத்தப்பட்டது. அன்றைய தினம் சுவாமிகள் சாவித்திரி உயர்தரப் பள்ளிக்கும், நேஷனல் கலேஜுக்கும், கோல்டனாராக திவ்ய ஜீவன சங்கக் கிளைக்கும் விஜயம் செய்து பற்பல அரிய உபதேசங்களையும் சங்கீர்த்தனங்களையும் செய்து மக்கள் உள்ளத்தை பரவசமடையச் செய்தார்.

மறுநாள் (9-10-50)ல் ஸ்ரீ சிவானந்தர் உருமி சேஷாசலம் செட்டியார் அனாதாஸ்ரமத்துக்கு சென்று தரிசனம் தந்து குழந்தைகளை ஆசீர்வதித்து அருளினார்.

திருச்சி விஜயக் கமிட்டி அறிக்கையும், பாலை நகர் திவ்ய ஜீவன சங்கக்கிளையார் வாசித்தளித்த வரவேற்பு இதழும்; சுவாமிகளின் திருச்சி நிகழ்ச்சி குறித்து 9-10-50 தேதிய 'சுதேசமித்திரன' தந்த விவரத்தையும் இத்துடன் அளிக்கிறோம். அடுத்துள்ள 'சாதன முறைக் குறிப்பு' அச்சுத் தாள்கள் திருச்சியில அன்பர்களனைவருக்கும் இலவசமாக விநியோகிக்கப்பட்டது.

—o—

ஓம்

## ஸ்ரீ சிவானந்த திருச்சி விஜய கமிட்டி—1950

திருச்சிராப்பள்ளி நகரவாசிகளுக்கு தெரிவிப்பது என்ன வெனில் :—

சுவாமி சிவானந்த ஸரஸ்வதி அவர்களால் தெய்வநெறிக் கழகத்தின் தலைமைச் சங்கம், (Divine Life Society) இமயமலையைச் சேர்ந்த ரிஷிகேசத்தில் ஸ்தாபிக்கப்பட்டும் அதன் கிளைக் கழகங்கள் பாரதநாடு முழுதும், வெளிநாடு களில் ஐரோப்பா, அமெரிக்கா, மெக்ஸிகோ தேசங்களிலும் ஸ்தாபிக்கப்பட்டும் வருகிறது. இப்பால் ஸ்ரீ சுவாமிகள் கங்கோத்திரியினின்று கங்கையைக்கொண்டு இராமேச்சு வரத்தில் அபிஷேகம் செய்ய உத்தேசித்து, பல க்ஷேத்திரங் களைத் தெரிசித்து வரும் யாத்திரையில், இடையில் திருச்சி ராப்பள்ளியில் 7-10-50 முதல் 9-10-50 வரை தங்கியிருப் பார்கள்.

2. தெய்வீகத்துறையில மனிதனின் வாழ்க்கைக்கு வேண்டிய முக்கிய குறிக்கோள்களை அவ்வப்போது புஸ்த கங்கள், ஸஞ்சிகைகள், துண்டுப்பிரசுரங்கள் மூலம் ஸ்ரீ சுவாமிகள் விடுத்து வரும அரிய பெரிய உபதேசங்களை மக்கள் அறிந்திருப்பார்கள். அவ்வுபதேசங்களினின்று எவரேனும் தெய்வீக லக்ஷியத்தை உணராது இருக்கமுடி யாது. மேலும் ஸ்ரீ சுவாமிகள் தற்போது எல்லோருக்கும் ஜகத்குருவாகவே விளங்கிவருகிறார் என்பது உலகம் அறி யும். ஆகவே திருச்சிவாசிகள் இந்த அருமையான சந்தாப பத்தைப் பயன்படுத்திக்கொண்டு, அன்னாரை நேரில் தெரி சிப்பதோடு அவர்களுடைய ஆசிகளையும் பெற்று உய்ய வேண்டும்.

3. ஆத்மீகத் துறையில் ஈடுபட்ட ஒவ்வொருவரும ஜாதி, மத பேதமின்றி சிறந்த முறையில் இனிய வரவேற்பு நடைபெறும்படி தாராளமாகப் பொருள் உதவிசெய்து, இநத அரிய ஸேவையில் கலநதுகொள்வோமாக.

4. நன்கொடைப் பொருள் எதுவாயினும் அவைகளை "ஸ்ரீ P. ஜம்புநாதய்யர், B. A., B. L., காரியதரிசி, ஸ்ரீ சிவானந்த திருச்சி விஜய கமிட்டி, நெ. 30, இரட்டை மால் தெரு, தெப்பக்குளம் போஸ்டு, திருசசிராப்பள்ளி" என்ற விலாசததிற்கு அனுப்பக் கேட்டுக்கொள்கிறோம.

திருச்சி,
18—5—50

P ஜெம்புநாதய்யர்
காரியதரிசி,
வரவேற்புக்கமிட்டியாருக்காக.

—o—

நமோநாராயணுய
இமயமலை ரிஷிகேசம், மறைதிரு மண்டலேசவரா
சுவாமி சிவானந்த ஸரஸ்வதி அவாகட்கு
பாலைநகர் திவ்ய ஜீவன சங்கத்தார் அளித்த

## வரவேற்பு வாழ்த்து

சிவானநத சரஸ்வதி யெனும சீர்சால் துறவியே! வருக, வருக, வருக. தங்களது பெறற்கரிய நல்வரவைப் பெறற யாஙகள் மழை காண் மயிலும் பெறு மகிழ்வு அடைநதுள்ளோம. திசையெலாம் புகழும செந்தமிழ் நாட்டின் திலகமாகிய தாமிரைபரணி நதிதீரத்து இலகும் உததமர் வாழ் பத்தமடையின் கண் மனித கணம உய்ய அவதரித்த தாங்கள் கற்பனக்கற்று முற்றிய நினைவாற்ற லுடன் இளமையிலேயே ஆத்மீக ஞானம கைவரப் பெற்று

லக்ஷியம பெறுவான் வேண்டி துறவாம மேற்கொண்டு இமயம் சாரநது பலலாண்டு கடுந்தவம் புரிநதுள்ளீர்கள். துறவென்பது குகையுட்சென்று உட்கார்நதிருத்தலன்று. அகஙகாரம மமகாரஙகளை ஒழித்தலேயாம். அதனை இல்லத்திருநதும அநுட்டிககலாம் என்ற கோட்பாடுடைய தங்களது துறவின் பெருமை எல்லாம் எடுத்து இயம்புதற்கெளிதோ!

உலகம் போறறும் யோகீஸவரரே!

ரிஷீகேசதது ஆன்மீகம் பரப்பும், உலக ஸதாபனமாய் விளங்கும் ஆனநத குடீர் ஆச்ரமத்தில் வதியும தாஙகள் ஹட யோகம, ராஜயோகம, குண்டலியோகம், முதலியவற்றிற் சித்தி பெறறு வேதாநத சிததராய், விளங்குவதோடன்றி கைலாயயாத்திரையாலும பிறவாற்றாலும, எய்திய அநுபவங்களை சுவாமி விவேகானநதருக்குப் பின் மேனாட்டார முதலிய என்நாட்டாரும் போற்றும் நிலையில் ஆங்கில மொழியில் நூற்றுககு மேலான நூட்கள் எழுதி உலகினர்க்கு அருளியுள்ளீர்கள். தங்களது நூல்கள் மக்கட்கு வரப்பிரசாதமாக அமைந்துள்ளன இதற்கு உலகினர் செய்யும் கைமாறு தங்களை வாழ்த்துதலன்றி வேறின்று.

பிறர் நலமேபுரி பெற்றியார் அறவோர்ய்!

அமெரிக்கா முதலிய மேனாட்டாரும் ஆத்மீக வளர்ச்சிக்கு யோக முறையே சிறந்தது என மேற்கொளளும் இக்காலத்தில் தாங்கள் யோகமுறையால் மக்களின் மனநோய்கள் தீர்த்து ஒழுக்கமுடையாராக்குவ தோடன்றி லக்ஷ்மண ஜூலாவில் சத்யசேவாச்ரமம் அமைத்து பத்திரி நாராயணுக்கு செல்லும் யாத்ரீகர்களுக்கு சத்திர சிகிச்சை முதலிய வைத்திய உதவியால் உடல் நோயும் தீரத்து வருகின்றீர்கள்! இங்ஙனம் பிறர் நலம் புரியும் தாங்கள் கடவுட்

பேற்றையடைய முதற்படி ஒழுக்கமே எனக்கொண்டு உல கினர்க்கு ஒழுக்கத்தை உபதேசிக்க உலக யாத்திரை துவங்கியுள்ளமை! ஆஸ்தீகத் தன்மை குறைந்திருக்கும் இக்காலத்தில் தென்னாட்டாருக்குப் பெறும பயனை அளிப் பதாயுளது! இங்ஙனம அறம் பல புரியும், தாங்கள் எல் லாம வல்ல இறையருளால் ஊழிதோறாழி வாழுமாறு வாழ்த்துகின்றோம்.!

பாலை நகர் இங்ஙனம்
8-10-50 திவ்ய ஜீவன சங்கத்தார்.

—o—

## திருச்சி

திருசசி அக் 7—தெய்வீக வாழ்க்கை சங்க ஸ்தாபகர் ரிஷிகேசஸ்வாமி சிவானந்த சரஸ்வதி இனறு மாலை மதுரை பாஸஞ்சர் மூலம் இங்கு வந்து சேர்ந்தார். தொண்டைப்புண் ணினல் ஸ்வாமிஜியால் பேசமுடியவில்லை இன்று பூராவும் ஓய்வுஎடுத்துக் கொள்கிறார். ஒருவருக்கும் தரிசனம் கொடுக்கமாட்டார்.

### சுவாமி தரிசனம்

திருச்சிஅக் 8—இஙகு வந்துள்ள ரிஷிகேசஸ்வாமி சிவா னந்த சரஸ்வதி இன்று மலைக்கோட்டை அடிவாரத்திலுள்ள மாணிக்கவிநாயகர் கோயிலுக்குச்சென்று ஸவாமி தரிசனம் செய்தார். பிறகு மலைக்கோட்டையைச் சுற்றி அலங்கரிக்கப் பட்ட காரில்ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டாா. பிர தானவீதிகள் வழியாக ஊாவலம் சென்று உருமு தனலக்ஷ்மி வித்யாலயத்தில் முடிவுற்றது. வித்யாலய தலைமை ஆசிரியர் ஸ்வாமிக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்தார். பஜனை நடைபெற்ற பிறகு இரண்டு மணிநேரம் பொது மக்களுக்கு தரிசனம் வழங்கினர். —சுதேசமித்திரன் 9-10-50.

ஓம் :
மண்டலேஸ்வர

## ஸ்ரீலஸ்ரீ சுவாமி சிவானந்த சரஸ்வதி
(ரிஷிகேசம்)

## புதுக்கோட்டைக்கு விஜயம்
9—10—50

### பிரார்த்தனையின் சக்தி

பிரார்த்தனை மகத்தானதோர் ஆத்மீக சக்தி. உண்மையான உருக்கத்துடனும், நம்பிக்கையுடனும் பிரார்த்தனை செய்யப்படவேண்டும். பிரார்த்தனையின் சக்தியைப்பற்றி தாக்கம் செய்யாதே. அதன் சக்தி மகத்தானது.

பிரார்த்தனை செய்யும்போது உன் இதயத்தைத்திறந்து காட்டு, எதையாவது மறைத்து ஏமாறற நினைக்காதே. நீ வேண்டுவதெல்லாம் அடைவாய். உன் பிரார்த்தனையில் தவறு ஒழுங்குடனிரு. ஒளி, தூய்மை, பக்தி, ஞானம் இவற்றை இறைவனிடம் இறைஞ்சி வேண்டு.

திரௌபதி மனமுருகி இறைவனை வேண்டினள் உடனே கண்ணன் அவளது துன்பம் துடைத்தான். கஜேந்திரனும் அவ்விதமே வேண்டினன். சங்குசக்கரதாரியாக அங்கு விரைந்து வந்தார் விஷ்ணு. மீராவும கண்ணனைக் காதலுடன் பிரார்த்தனை செய்தாள். கிரிதாரி அவளுக்கு சேவகம் செய்தான். இப்பொழுதிலிருந்து உள்ளன்புடன் பிரார்த்தனை செய்.

ராதா கிருஷ்ணா! தாமதியாதே. நண்பா! நாளை என்பது வரவே வராது.

வத்ஸலா,

எளிய ஆடை அணிந்துகொள், பகட்டான பட்டாடையும், மின்னும் நகைகளும் விரும்பாதே. அடக்கமெனும் வளையல்களும், தூய்மையெனும் கழுத்தணியும், கற்பெனும் மோதிரமும், பொறுமையெனும் மூக்குத்தியும், சக்தியெனும் காதணியும் தரித்துக்கொள், இவை அனைத்தும் உன்னை அழகிகளுள் அழகியாக்கிவிடும். இதைப்பயின்று உணர்ந்து கொள்.

தியானம்செய். அனைத்துக்கும் காரணமான தெய்வீக உற்பத்தி ஸ்தானத்தை அறிந்து உபயோகி. அது பேரின்பமும், சாந்தியும், சந்தோஷமும் நிறைந்தது. அது பரிபூர்ண ஐக்கியமும், ஆனந்தமுமாகும். எப்பொழுதும் மகிழ்ந்திரு. இறைவன் உன்னை ஆசீர்வதிப்பாராக.

சுவாமி சிவானந்தர், ரிஷிகேசம்.

—o—

—சுதேசமித்திரன் பத்திரிகைச் செய்தி

## புதுக்கோட்டையில் வரவேற்பு ஏற்பாடுகள்

ஹிந்து மதத்தின் உண்மைக் குறிக்கோளை ஜனங்களுக்குப் பரப்பி, இந்துக்களுள் அதிகப்படியாக ஒற்றுமையை வளரவேண்டி அகில இந்திய யாத்திரை செய்துவரும் சிவானந்த சுவாமிகள் புதுக்கோட்டைக்கு அக்டோபர் 9-ம் தேதி விஜயம் செய்வார். அச்சமயம் அவரைத் தகுந்தபடி வரவேற்று அவரது கொள்கைகளை ஜனங்களுக்கு அறிமுகப்படுத்தி வைக்க புதுக்கோட்டையில் பிரபலஸ்தர்களடங்கிய ஒரு கமிட்டி நிறுவப்பட்டிருக்கிறது. சந்தைப் பேட்டையில் பூர்ணகும்பத்துடன் ஸ்வாமிஜியை வரவேற்று

ஊர்வலமாக கீழராஜவீதிக்கு அழைத்துச் செல்ல ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது மாலை ராஜ கலலூரியில் மாணவர் களுககு ஒரு சொற்பொழிவு நடத்துவார். பின் ஸ்ரீகுலபதி பாலையாபள்ளியில ஒரு பொதுக் கூட்டத்தில் ஸ்வாமிஜி பேசுவார.

புதுககோட்டையில ஸ்ரீ சிவானந்தஜீ நகர மக்களால் மிக ஆர்வத்துடன் வரவேற்கப்பட்டார். நகர பொதுமக்கள் சாாபாக கீழ்கண்ட வரவேற்புப் பத்திரம் வாசித்தளிக்கப் பட்டது.

பின்னர் சுவாமி ஸம்ஸகிருத வேதபாடசாலைக்கு விஜ யம் செய்து நற்போதனைகள் பலவும் செய்து அனைவரையும் ஆசிர்வதித்தார்.

அடுத்தபடியாக திவ்ய ஜீவன் சங்கக் கிளைக்குச் சென்று அவ்வன்பர்களின் வரவேற்பை ஏற்றுக்கொண்டு ஆன்மநெறி யின் பல தரங்களையும் அதில் இடையூறின்றி மக்கள் முன் னேற வேண்டிய முறைகளையும் போதித்து சங்கீர்த்தனத் தால் எல்லோரையும் பரவசமடையச் செய்தார்.

இந்நிகழ்ச்சிக்குப் பின்னர் புதுக்கோட்டை நகர மன்றத்தார் அளித்த வரவேற்பைப் பெற்று அங்கு சென்று அனைவருக்கும் வாழ்ககையின் நோக்கத்தையும் அடைய வேண்டிய குறிக்கோளையும விரிவாக எடுத்துரைத்தும் சங் கீர்த்தன மகிமையையும் அதன் பலனையும் வந்திருநதோர் உள்ளத்தில் பதியவைத்து நல்லாசிகள் வழங்கினார்

இந்நிகழ்ச்சிகளுககிடையே ஸ்ரீ சுவாமிகளா திருமுன் சிறுவர்கள் இருவர் சுவாமிகளின் வாழ்க்கைச் சரிதத்தில் ஒரு முக்கிய சம்பவத்தை சம்பாஷணை மூலம் நடித்துக் காட்டினார்கள்.

ஸ்ரீ சதாசிவ பிரமமேந்திர ஆஸ்ரமத்திலும் சுவாமிகளுக்கு ஒரு வரவேற்புரை வாசித்தளித்தனர்.

ஸ்ரீ சுவாமிகள் புதுக்கோட்டையில் பத்திரிகை நிருபருக்கு பேட்டி யளித்த விவரமும் பின்னர் நடந்த நிகழ்ச்சிகளும் "தினமணி" பத்திரிகை வாயிலாக அறிவோம்:

ரிஷிகேசம் ஆனந்தகுடீரிலிருந்து
தக்ஷிண தேச யாத்திரைக்கு எழுந்தருளும்,
ஸ்ரீலஸ்ரீ சிவானந்த சரஸ்வதி
சுவாமிகளுக்கு புதுக்கோட்டை நகரத்துப்
பக்த ஜனங்கள் சமர்ப்பிக்கும்

## நல்வரவேற்புப் பத்திரிகை

இமயத் தவமணியே!

உடம்புக்கு வைத்தியம் செய்து, பரோபகாரம் புரிந்து வைத்திய உத்தியோகத்தைத் துறந்து, ஸந்யாச ஆச்ரமத்தை மேற்கொண்டு கங்கைக் கரையில் ரிஷிகேச க்ஷேத்திரத்தில் வந்து அமர்ந்து, உள்ளத்துக்கு வைத்தியம் செய்து, சாது ஜனங்களை சன்மார்க்கத்தில் நடத்திச் செல்லும் திருப்பணி பூண்டிருக்கும் தங்களுக்கும் தங்களுடன் தென்னாட்டு யாத்திரைக்காக வந்திருக்கும் சாதுக்களுக்கும் நல்வரவு கூறுகின்றோம்.

ஸாரஸ்வத ஸார்வபௌமா!

நமது பாரத புண்ணிய பூமியில் மஹாரிஷிகளும், ஆசார்யபரம்பரைகளும், மகாகவிகளும் ஆரிய பாஷையிலே லோகோபகாரத்தமாக அருளிச் செய்திருக்கும் சாஸ்திர ஜாலங்களை யெல்லாம் மூல ரூபத்திலே ஐயம் திரிபறச் சேர்ந்து, தெளிந்து அங்ஙனம் அடைந்த அரும்பொருட் செல்வத்தை உலகம் பெறவேண்டும் என்ற கருணையால்

ஆங்கில பாஷையிலே நூறநூககணக்கான நூலகளாக வெளி யிட்டிருககும் தங்கள் திவ்ய கைங்கரியத்தை உலகமே உணர்ந்து போற்றுமதலால் இத்தனை புண்ணிய மூர்த்தியை எம் நாட்டவர் என்று சொல்லிக் கொள்ளும பெருமை எமக்கு வாய்திருப்பது எமது பாக்கியமே என்று கருது கிறோம. தங்கள் சத்கோஷடிக்கு ஸ்வாகதம் கூறுகின் றோம்.

பக்தசிகாமணியே ! !

நாம சங்கீர்த்தனமே. கலியுகத்தில் ஆதமா கடைத் தேற எளிய வழி கண்டு, அதனை எழுததாலும், சொல்லா லும், செயலாலும், நமமவர்க்கு விளக்கும் பணிபூண்டு இருக் கும் தாஙகள் ஆத்ம வித்ய விலாசத்தை அறிநது போற்றும் பெரியோர்களோடு நாங்களும் சேர்நது தங்கள் சாது ஜனமகா சமாஜத்தை இநநகரத்துககு வரவேற்கின்றோம். சேதுயாத்திரை திருப்திகரமாக முடியவும் கங்கா தீரத்துக்கு இநத கோஷ்டி ஸமஸ்த சௌகரியஙகளோடும மீண்டு சென்று நம் நாட்டின் சத்வித்யாப் பிரசாரம் செய்யவும் ஸர்வேஸ்வரனை பிரார்த்திக்கின்றோம்.

புதுக்கோட்டை, புதுக்கோட்டை பகத ஜனஙகள்
3-10-50

—o—

நமோ நாராயணாய

தெய்வநெறிக்கழகம் புதுக்கோட்டை

## ஸ்ரீ சுவாமி சிவானந்தஜீ இந்நகருக்கு விஜயம் செய்தபோது

இக் கழகத்தின் சார்பாக சமர்ப்பித்த

## வரவேற்பு பத்திரிகை

சுவாமிஜீ

இக் கழகத்தின் ஸ்தாபகரும் தலைவருமான தாங்கள் மிக்க கருணையுடன் ஹிமாலயத்திலிருந்து இலங்கைவரை யாவரும் உஜ்ஜீவிக்கும்பொருட்டு வயோதிகத்தையும் சிரமத்தையும் பாராட்டாமல் பிறர் நன்மையையே பொருளாக எண்ணி எங்கள் வேண்டுகோளுக்கு இணங்கி இந்நகருக்கு வந்து எங்களுக்கு அனுக்கிரகம் செய்திருப்பது எங்கள் பாக்கியமே.

இந்நகரில் இக் கழகத்தின் கிளை ஏற்படுத்தியிருப்பதும் தலைவர் இங்கு விஜயம் செய்திருப்பதும் ஒரே சமயமாக யிருப்பதும் பெருமையே. அதன் அபிவிருத்திக்கு சுவாமிஜீ அவர்களின் வருகையே முக்கிய காரணமாக இருக்கிறது. இக் கழகத்தை தலைவர் எந்த நோக்கத்துடன் ஏற்படுத்தியிருக்கின்றார்களோ, அவைகளைக் கடைப்பிடித்து நடத்தி வருவதற்கு சுவாமிஜீ அவர்களின் பூர்ண ஆசீர்வாதம் கோருகிறோம்.

மிக்க சிறிதாக ஆரம்பித்திருந்தாலும் நாளடைவில் இது விருத்தியாகி ஜனங்களுக்குத் தொண்டுபுரிந்து சேவை செய்து யாவரும் நன்னெறியுடன் வாழ்ந்துவர நாங்கள் முயற்சி செய்கிறோம் அவ்வப்போது எங்களுக்கு வழி

காட்டி புததி·புகட்டி புஸதகஙகளை மூலமாகவும பததிரிகை களை வாயிலாகவும அன்பு ஊட்டுமபடி மிகக வணக்கத் துடன் பிராத்திககிறோம.

சிறு குழந்தை பிசகுகள செய்தாலும பெரியோர் பொருட்படுத்தாமல் நலவழி புகன்று உய்விக்குமாறு நாம் எல்லாம வல்ல இறைவனுடன் நமது தலைவரையும் பிரார்த் தித்துககொள்வது உசிதமே.

நமமுடன் சுவாமிஜீ அவாகள தங்கும நேரம் குறுகிய தாக யிருநதாலும் தரிசனம் கொடுத்து கடாக்ஷம் செய் திருப்பது மிக்க பெரிதே.

நமது தலைவரும் குருவுமான சுவாமிஜீ அவர்கட்கு தீர்க்கமான ஆயுளும திடமான திரேக ஆரோக்கியமும் அளிககும்படி இறைவனை பிரார்த்திக்கிறோம.

27/3 வடக்கு ராஜவீதி,
புதுக்கோட்டை.
9—10—50

தெய்வநெறிக்கழகம்,
புதுக்கோட்டை.

—o—

ஓம் ஆமென் அமீன்

அருள் நிறைந்த

# ரிஷிகேச ஸ்ரீ சுவாமி சிவானந்த சரஸ்வதி

அவர்களுக்கு

புதுக்கோட்டை நகர மன்றத்தார்

## மனமுவந்து அளிக்கும் நல்வரவேற்பு

முனிவர் பெருமானே!

வணக்கம்

வருக. வருக. தங்கள் வரவு எங்கள் பாக்யம். தங்கள் தரிசனம் கிடைத்தற்கு மகிழ்கின்றோம். நல்லாரைக் காண்பதுவும் நன்றே நல்லார் குணங்கள் உரைப்பதுவும் நன்றே. நலமிக்க நல்லார் சொல் கேட்டலும் நன்றே. தங்களால் இன்று முப்பேறுகளையும் பெற்றுப் பெருமைப்படுகின்றோம்.

2 துறவினால் உயர்ந்த தூயோரே!

தலைப்பட்டார் தீரத்துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவர்—

என்ற மறை மொழிக்கு இலக்காகத் திகழும் தங்கள் தனிப்பெரும் துறவைப் பாராட்டுகின்றோம். பற்றற்றுப் பரிதி என எழுந்து பாரிடை மக்களது மனமயக்கங்களையும் மாசுகளையும் கைம்மாறு கருதாது களைந்து வரும் கனிந்த அன்பிற்கு பொது மக்கள் சார்பாக எங்கள் நன்றியை ஏற்று அருளுங்கள்.

3. சேவையில் செலுத்துவிக்கும் செம்மலே !

உலகின் உண்மை ஊழியர்கள் நேரடி சேவைக்கு ஏற்றது என எடுத்துக் காட்டும் மக்களது மருத்துவ (வைத்ய) சேவையே தஙகளது வாழ்க்கைத் தொழிலாகவும் பணியாகவும பெற்று விளங்கினீர்கள். சேவைச் சிறப்பினாலும இறை அருளாலும் துறவேற்று தூய்மைக்குன்றேறி தெய்வக்காட்சி பெற்றீர்கள. யாமபெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்—என்ற பொன்மொழிககேற்ப மீண்டும் தாஙகள் தஙகள் ஆன்மீக இரபானுபவத்தை விட்டு தனிப் பெருங் கருணையால் தூண்டப் பட்டுத் தரணியில் தவிக்கும் மக்களுக்கு தநநல மற்ற சேவை செய்து துப்பரவும் தூய்மையும் துறவும் பெற வழி காட்ட வநது இருக்கிறீர்கள். உண்மைச் சேவைப் பாதையில் உழைத்து உலகின அடிப்படை உணமை கண்டு தடைகளைத் தாண்டித் தெய்வீக நிலையை அடையத் தூண்டி வழிகாட்டும் தங்கள் பேருளுக்கு இவ்வுலகம் பெரிதும கடமைப்பட்டுள்ளது. பேரது மக்கள் சேவையில் ஈடுபட்டு எங்களுக்குத் தூண்டுகோலாகத் திகழும் தங்களுக்கு எங்கள் நன்றியும வணக்கமும் கூறுகின்றோம்.

4. தன்னுயிர் தானறப்பெறற தவசியே !

துன்பம சுடச் சுட நோற்றுச் சுடச் சுடரும் பொன் போல் ஒளி விடும் தங்கள் தெய்வீக தேஜஸைக் காணப் பெற்ற பின்னுவது எங்கள் குற்றங குறைகள் நீஙகித் தாங்கள் காட்டும் நலவழியில் இந்நகர மக்களும நாங்களும் வாழ்ந்து வாழ்க்கையின் முடிவான அமர வாழ்வாம் அற வாழ்வை எய்த முனையத் தங்கள் நல்லாசியை அளித்திட வேண்டுகின்றோம

5. சமரச சன்மார்க்க சாந்த மூர்த்தியே !

பலவேறு நிலையிலுள்ள பல சமய மக்களும் கூடி வாழும் இந்நகரில் பல முறைப்பணிகள் ஆற்றும், உரிமையும் கடமையும் வாய்ப்பும் பெற்றுள்ள நாங்கள் எங்களால் கூடிய அளவு நகரமக்களுக்குப் பணிகளைப் புரிந்துவரு கிறோம். இன்னும் இயற்ற வேண்டிய வேலைகளோ ஏராள மாக உள. இன்றைய உலக நிலையாலும், நாட்டின் நிலை யாலும், நகரின் நிலைமையினாலும் நலிவு கொண்டுள்ளோம். நந்நிலையும், செழிப்பும், சேவையில் செம்மையும் சேர்ந்து உழைத்துப்பெற தாங்கள் எங்களை வாழ்த்தி அருள வேண்டுகின்றோம் தங்கள் புனிதப் பொன் மொழிகளால் எங்களுக்கு நற்போதனைகளையும் உற்சாகத்தையும் ஊட்டும் படியும் தாழ்மையுடன் தங்களை கேட்டுக்கொள்கிறோம்,

6. வரையாது வழங்கும் ஞான வள்ளலே !

உலகை உண்மை வழியில் செலுத்தி வாழ்விக்கும் உத்தமர்கள் பரம்பரையில் வந்து மக்கள் உடல் மன ஊனங் களைச் சீராக்கி உள்ளத்திற்கு உண்மை ஞானத்தை வரை யாது வழங்கும் தாங்கள் உடல் உரனுடனும் ஊக்கமிக்க சீடர்களுடனும் நீடூழி வாழ்ந்து உலகை உய்விக்குமாறு அருளபுரிய இறைவனை வேண்டி வழுத்துகின்றோம்.

தங்கள் அன்புள்ள,

**புதுக்கோட்டை நகர மன்றத்தார்.**

—o—

உ

# குருதரிசனம்

(நாடகம்)

குப்புசாமி :—ஆஹா வசநத சவுந்தரியம இமயமலைக காட்சியைக் கொஞ்சித் தவழ்கிறது. எங்கும் மலரழகு. ஜிலு ஜிலு என்று மநதமாருதம் சிவநாதம்பாடுகிறது அதற்கு கங்காநதி ஓஙகாரசுருதிபோட்டுப் பரவசமாகப் பாய்கிறது. இயற்கையின் எழிலில அமைதி நிலவுகிறது எங்கே திரும்பினாலும் சாதுசங்கம். ரிஷிகேசமே உண்மையில் பரம சாநதமளிக்கிறது. ஜபம், பஜனை, சிவத தியானம், சாதுசங்கம இவற்றிலேயே காலங்கழித்து வருவது வாழ்க்கையை புதுப்பிக்கிறது. வேறு எதையும சிந்தையில் கொள்ள நினைத்தாலும் இடம் தரவில்லை. அதிலும இநத கங்கையில நீராடுவதே தனி இன்பம். என்னசெய்யலாம். இவ்வளவையும் சிநதிக்கையில் "அட்டா கிரமப்படி சநயாசம் கொடுக்க எவரும் எதிர்படவில்லையே. யாரைத தேடி இதைக் கேட்பது" என்ற எணணம் என் மனத்தைத் துன்புறுத்திக்கொண்டே இருக்கிறதே. எவ்வளவோ பிரயாசைப்பட்டு இந்தப் பரம சுகமான சத் சங்கத்தில் கொண்டுவந்து சேர்த்த பகவானுக்கு இநதக் காரியத்தை செய்து வைப்பது ஒரு பிரமாதமா பார்ப் போம். அதோ யாரோ ஒரு பெரியவர் இங்கு நோக்கி வருவதுபோலத் தெரிகிறதே. ஆஹா? யார் இது! மகா தேஜஸ்வியாகக காண்கிறார். இவரைக் கண்டதும ஒரு மன எழுச்சி உண்டாகிறதே! மனமே அவசரப்படாதே. ஓம் நமசிவாய குருப்யோநம (வணங்குகிறார்.)

சுவாமி விஸ்வானநத சரஸ்வதி :—ஐயா, எழுந்திரும் நீர் மஹா புருஷா உயாநத நிலையை அடைநது உலகில அரிய ஞான சேவை செய்வீர

குப்பு :— ஆஹா! சுவாமி வணக்கம். தாங்கள் யார் என்று அறிந்துகொள்ள மனம அவாவுகிறது

விஸ்வா :— நான ஸ்ருங்கேரி சங்கர மடத்தைச் சேர்ந்தவன் காசியில வசித்துவருகிறேன். என்னை சுவாமி விஸ்வாநந்த சரஸ்வதி என்பார்கள்.

அது இருக்கட்டும். "குருப்யோநம" என்று திடீரென எம்மை நீர் குருவாக வரித்தீரே என் மனத்தை நீர் அறியாமல் அவ்விதம சொன்னது சரியா ?

குப்பு :— என் மனத்தில் சரியென்று தோன்றியது. அவவாறு செய்தேன். அது என்ன தவறு ?

விஸ்வா :— ஆஹா! என் அனுமதியின்றி இன்னார் என அறியாமல் என்னைக் குருவாக வரித்ததுமன்றி அதில் என்ன தவறு என்றும் உத்தண்டமாகவா கேட்கிறாய், இதோ உன்னை சபித்தே தீருகிறேன் பார்.

குப்பு :— பெரியோரே! ஒருமுறை தங்களை குருவாக வரித்தபின் பின்வாங்கமாட்டேன். சிஷ்யனை குரு சுட்டெரிக்க பாக்யமல்லவோ செய்திருக்கவேண்டும. தங்கள சித்தம என் பாக்யம்.

விஸ்வா ;— (மட மட வென்று சிரித்து) அது இருக கட்டும் உனது பெயர் என்ன ?

குப்பு :— குப்புசுவாமி.

விஸ்வா :— உனக்குக் கல்யாணம் ஆனதோ ?

குப்பு :— அவ்விலங்கில அகப்பட வில்லை.

விஸ்வா :— தாய் தந்தையர் ?

குப்பு :— தாய் பராசக்தி தந்தை பரமசிவம்

விஸ்வா :— எங்கிருந்து வருகிறாய்?

குப்பு :— சென்னையிலிருந்து.

விஸ்வா :— நேரே அங்கிருந்தா ?

குப்பு :— இல்லை.

விஸ்வா :— பின் ?

குப்பு :— சிங்கப்பூரிலிருந்து.

விஸ்வா :— அப்படியா ? அங்கு என்ன அலுவலோ ?

குப்பு :— அங்கே டாக்டர் உத்தியோகத்திலிருந்தேன்.

விஸ்வா :— அடடா ! அதை விடுவானேன் ?

குப்பு :— உலகம் புளித்தது. அனைத்தும் மாயை எனக் கண்டேன். சகலமும் அழியக்கூடியது என்று உணர்ந்தேன். சாவு நிச்சயம் என்று கொண்டேன். ஆகவே சாகா நெறியைக் கடைப்பிடிக்க என்மனம் தீ போல் எரிந்தது. அணி, பணி, வீடு, வாசல், பொருள் அனைத்தையும் சூறையாடினேன். பல இடங்களில் பல நாட்கள் படாதபாடு பட்டேன். இங்குற்றேன். தங்களை தரிசிக்கும் பாக்யம் கிடைத்தது. எப்படியும் என் ஞானக் கண்ணைத் திறந்து அருள்புரிதல் வேண்டும். அனைத்தும் உங்கள் பாரம்.

விஸ்வா :—அப்பனே ! கவலையொழித்து கங்கையில் நீராடி என்கூட வா. நான் தங்கியுள்ள இடம் சென்று ஆவன செய்கிறேன்.

குப்பு :— தன்யன் ! தன்யன் ! (பாட்டு)

### பல்லவி

இரவும் பகலும் உந்தன் சரணாலயப்பணியில்
இருந்திடும் வரம் தருவாய் (இரவு)

### அனுபல்லவி

தருணமழை போலென் தாகம் தணிக்கவந்த
தாசர் தயாநிதியே சாந்த குணபதியே (இரவு)

### சரணம்

தஞ்சம் புகுந்தவர் நெஞ்சக் கவலை தீர்க்கும்
சமய சஞ்சீவி யாவாய்.
பஞ்சகோசாதீத பரம சூரிய நிலைபார்க்கத்
துணை புரிவாய்
அஞ்சுமடங்கி என்னுள் அறிவாயிருந்திடும்
ஆனந்தம் தந்தருள் ஞான சிகாமணியே. (இரவு)

(இஃது ஸ்ரீலஸ்ரீ சுவாமி சிவானந்தரின் தென் இந்திய சுற்றுப பிரயாணத்தின்பொழுது புதுக்கோட்டையில் சுவாமிஜியின் சந்நிதானத்தில் இரு சிறுவர்கள் நடித்த சம்பாஷணை)

—o—

## ஸ்ரீ சதாசிவ பிர்மேந்திர ஆஸ்ரமம்
அய்யர்குளம வடகரை, புதுக்கோட்டை.

## ஸ்ரீ சிவானந்த குரு மகராஜக்கு அளித்த
## வாழ்த்துப் பத்திரம்

தாம்ரபர்ணி தீரா தமிழ்நாட்டு வீரா
நாம பஜன் சூரா ஞான அதிகாரா
குப்புசாமி நாமனே கூர்புத்தி காமனே
அப்பைய தீக்ஷிதர் வம்சனே ஆத்மஞான ஹம்சமே
பத்தமடையில் பிறந்தவா பாரபுகழச் சிறந்தவா
வைத்யகல்வி கற்றவா மலேயாநாடு உற்றவா
நத்தும் சுகம் தநதவா மெத்தகருணைகொண்டவா
நித்திய சுகம் கண்டையா நிலையைவிட்டு வந்தையே
சுற்றியாத்ரை செய்தனே சுகத்தைக்காண வேண்டினே
துக்கநிவிர்த்தி வநததா துறவி வேடம் பூண்டையே
இமயமலை சார்நதனே ஏற்க தபசு சாதனே
நியமம் தவராதிருந்தனே நிலைத்த சுகம் பெற்றனே
பெற்ற சுகம் பாக்யனே மற்ற மக்கள் வாழ்கவே
"உற்ற சுகம் உம்முளே" என்று உலகை எழுப்பினே
கொட்டி முழக்கம் செய்தனே கோடி சீடர் கூடவே
ரிஷீகேச க்ஷேத்ரி சத்வகுண பாத்ரி
ஹடயோக யாத்ரி தேகதிட காத்ரி
மகாமந்திர கோஷி மக்கள் பக்தி போஷி
சுகானந்த ரூபி சுத்த அன்பு சோபி
தெய்வ கழகம் நாட்ட மெய்யில் கருத்தைக் கூட்ட
உய்யும் வகையைக் காட்ட புகழ்மாலையைச் சூட்ட
சிவானந்த நாமா தெய்வநெறி காமா
பவார்னவ நாவா பரமப்பிரேம சீமா
வாழி வாழி யோகி வாழி வாழி சீலர்
வாழி வாழி கழகம் வாழி வாழி உலகம்

ஓம்

# தினசரி காலை மாலை பஜனை

ஸ்ரீ நாராயண ஹரிநாராயண
ஜயநாராயண நாராயண
லட்சுமி நாராயணங்கி ஜேய்
சிவாய நம ஓம் சிவாய நம
சிவாய நம ஓம் நம : சிவாய
உமாபதி சங்கர்கி ஜேய்
வாணி சரஸ்வதி வாக் தேவி
பசுபதி பாரதி மாமபாஹி
சரஸ்வதி மகாமாயிக்கு ஜேய்
ஸ்ரீராம் ஜயராம் ஜயஜயராம் ஓம
ஸ்ரீராம் ஜயராம ஜயஜயராம
சீதாபதி ராமச்சந்தர்கி ஜேய்
ஜயகுரு சிவகுரு ஹரிகுரு ராம்
ஜகதகுரு பரமகுரு ஸத்குருச்யாம
ஸத்குரு மகராஜஜிக்கு ஜேய்
ஓம்சக்தி ஓம சகதி ஓம் சகதி ஓம
ஆதி சக்தி மஹாசக்தி பராசகதி ஓம்
சகதி மஹாமாயிககு ஜேய்
ஓம நமோபகவதே வாஸுதேவாய
ஓம் நமோபகவதே நாராயணாய
ருக்மணி சத்யபாமா ராதாகிருஷ்ண மூர்த்திக்கு ஜேய்

மஹாமந்திரம்

ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே
ஹரே க்ருஷ்ண ஹரே க்ருஷ்ண
க்ருஷ்ணக்ருஷ்ண ஹரே ஹரே.

ஆஸ்ரமத்தில் தினசரி மாலை சுமார் 5 மணி முதல் 6-30 வரை சதகாலட்சேபம் நடைபெறும்.

அனபர்கள வருக ஆனநதம் அடைக.

K. R. சஙகர அய்யர்
காரியதரிசி

K. ரங்கசுவாமி அய்யர்
தலைவா

ஓம்

ரிஷிகேச சுவாமிகள் சிவானந்த சரஸ்வதி மகராஜ்
அவர்கட்கு 9—10—50 அன்று புதுககோட்டையில்

## பிருந்தாதேவி இயற்றி அளித்த பாமாலை

அறிவி னூற்றே! ஆனந்தப் பேறே!
ஐமபுலனும் வென்ற நிறைவே!
நெறி நின்ற திருவே! நேர்மையின் வருவே!
நினைவார்க் கருளும் குருவே!
குறிப்புடைக் குணமே! கோதிலா ஞானமே!
கோவே! குவலயப் பெருவானமே!
சிறியோர்க் கிரஙகும் செழுஞ்சுடரே!
சிவானநதப் பேரரசே போற்றி!
இமயத்தின் எல்லை சேர்ந்தாய் போற்றி!
சமயத்தின் ஒற்றுமை கண்டாய் போற்றி!
நேயத்தே நின்றருள பெற்ருய் போற்றி!
மாயப் பிறவிதனை யறுத்தாய் போற்றி!
ஓங்காரத் துள்ளுருகினுய் போற்றி!
ஆங்காரத்தை வென்றடக்கினுய் போற்றி!
ரீங்காரத் துள்ளினிதமர்ந்தாய் போற்றி!
தீங்கிலா பிருநதை பணியும் சிவானந்தமே!
போற்றி போற்றி போற்றி!

சி. பிருந்தாதேவி

வந்தே மாதரம் ஜெய்ஹிந்த்

சமதர்ம சங்கம்
பிச்சத்தாம் பட்டி
புதுக்கோட்டை, ரயில்வேஸ்டேஷன்
தேதி 9—10—50

உழவுக்கும், தொழிலுக்கும் வந்தனை செய்வோம்
பிச்சத்தாம்பட்டி சமதர்ம சங்கத்தில்
சுவாமி சிவானந்த சரஸ்வதி அவர்களுக்கு

**வா ழ் த் து ரை**

நேர்மையும், அன்பும், அஹிம்சையும் சேர்ந்தொளிர் ஐயா,

வருக, வருக, தங்கள வரவு நல்வரவாகுக. தங்கள், பல அலுவலகளின் மிகுதியிலும் எங்கள் ஊர் வேண்டு கோளுக்கிரங்கி நகர மக்களுக்கு தெரிசனம் தந்துள்ள மைக்கு மகிழ்கின்றோம்.

எங்கள் பிச்சத்தாம் பட்டியில் உள்ள விவசாய மக்க ளுக்கும், பொதுமக்களுக்கும், பள்ளி மாணவர்களுக்கும் தெரிசனம் கொடுத்ததிற்கு மகிழ்கின்றோம். எங்கள் ஊரை எப்பொழுதும் தங்கள் நினைப்பாக இருக்க வேண்டு கிறோம்.

எங்கள் நம்பிக்கை காந்திஜி வழிப்படி வெற்றிபெற தாஙகள் எல்லா நலன்களையுட எய்தி இனிது வாழ, வாழ்த்திபடும்படிக் கேட்டுக்கொள்கிறோம்.

இப்படிக்கு
பிச்சத்தாம்பட்டி சமதர்ம சங்கத்தார்கள்

## ஆண்டவனிடம் நம்பிக்கை வையுங்கள்

மக்களுக்கு சுவாமி சிவானந்தர் செய்தி

காரைக்குடி அக். 10—சுவாமி சிவானந்த சரஸ்வதியை "தினமணி" நிருபர் பேட்டிகண்டபொழுது இந்திய மக்களுக்காக கீழ்க்கண்ட செய்தி யொன்றை யளித்தார். ஆண்டவனிடம் உறுதியான நம்பிக்கை வைக்கவேண்டும். இந்த நம்பிக்கை யில்லாமல் மனிதன் விஞ்ஞானத்திற்கு அடிமையாகி விட்டால் மனிதனுக்கு ஏற்படும் அல்லல்கள் யாவற்றிற்கும் விஞ்ஞானமே காரணமாகிவிடுகிறது. சர்வ வல்லமையுள்ள ஆண்டவனிடம் நம்பிக்கை குறைந்துவிட்டதால் மனிதன் சுலபமாக மிருகத் தன்மையை அடைந்து சுயநலம், காமம், பொறாமை, பலாத்காரம் முதலியன புரிய ஆளாகின்றான். ஒவ்வொருவரும் சுய அறிவைக்கொண்டு காண வேண்டும். சுய அறிவால் ஜெயம் பெறலாம். சுய அறிவை நம்பிக்கை, பக்தி, இதய சுத்தி முதலியவற்றால் அபிவிருத்தி செய்யலாம். இதயசுத்தியானது பக்தி, பிரார்த்தனை, ஜபம், கீர்த்தனம் புனித நூல்களைப் படித்தல் எல்லாவற்றிலும் முக்கியமாக மனித சமூகத்திற்கு தன்னலமற்ற சேவை செய்தல் இவைகளால் பெற முடியும். எல்லோருக்கும் சேவை; எல்லாரிடமும் அன்பு இவற்றால் எல்லோரிடமும் ஆண்டவனைக் காணலாம் இதனால் வாழ்க்கையிலேயே வெற்றி மட்டுமல்லாது சித்த சுத்தியையும் பிறகு ஞானத்தையும் பெறமுடியும். இத்தகைய ஆடவரும் பெண்டிரும் அடங்கிய சமூகம் முன்னேற்றமும் பெருமையும் அடையும். இந்த லட்சியத்தை நோக்கித்தான் பாரதநாடு செல்ல வேண்டும். பண்டைய ஞானிகளின் செய்தியை பாரத தேசம் மனத்திற்கொண்டு இப்பொழுது உலகிற்கே அறிவிக்க வேண்டியது கடமையாகும்.

## ஆண்டவன் நாமஸ்மரணையே ஐசுவரியம் ஆகும்

### செட்டிநாட்டில் சுவாமி சிவானந்தர் பிரசங்கம்

காரைக்குடி, அக். 10—ரிஷிகேசம் சுவாமி சிவானந்த சரஸ்வதி தமது யாத்ரா மணடலியுடன் புதுக்கோட்டையிலிருந்து அரிமளம் வழியாக கானுடுகாத்தான் வந்து சேர்ந்தார் அஙகே கானுடுகாத்தான ஸ்ரீ வெ. வீர. நாகப்பச் செட்டியார் எம். எல். ஸி. காரைகருடி டாக்டர் அழகப்பச் செட்டியார் கல்லூரிகரஸ்பாண்டெண்ட் ஸ்ரீ கே. வீ. ஏ. எல். எம். ராமநாதன செட்டியார் ஆகியோர் சுவாமிஜியை வரவேற்றனர்.

இன்று காலை கானுடுகாத்தான் பொதுக்கூட்டத்தில் சுவாமிஜி கூறியதாவது ; சிவபெருமான் என்ருல் ஸ்ரீ ராமனுக்கும், ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் வேற்றுமைபபட்டவரல்ல மூடப் பக்தியை விட்டுவிட்டு கிருஷ்ணன், ராமன், விஷ்ணு• தேவி இவர்கஎெல்லோரையும் சமமாக நினைத்து பக்தி கொள்ளவேண்டும். எல்லா ஆலயங்களுக்கும் கிறிஸ்தவர், முஸ்லிம்கள் உட்பட எல்லோரும் சென்ருல்தான் சிவபெருமானிடம் உண்மையான பக்தியை வளர்க்க முடியும்.

ஆண்டவனது ஸ்மரணையே உண்மை ஐஸ்வரியமாகும். மற்றவை எல்லாம் நிலைத்து நிற்கக்கூடியவையல்ல. தோட்டம் துரவு உண்மையான ஐஸ்வர்யமாகாது.

ஏராளமான பணத்தை சம்பாதித்தாலும் தான தருமங்களை நிறையச் செய்யவேண்டும். ஏழைகள்பொருட்டு சேவை செய்யவேண்டும.

அதிகாலை 4 மணிக்கு எழுந்து தியானம் செய்யவேண்டும். ஆண்டவனின் நாம ஜபம் உங்களிடமுள்ள ஆத்ம சக்தியை கிளப்பும். ஆண்டவனது நாமஸ்மரணைசெய்து உலகில் அன்பை வளருங்கள். கலப்பற்ற பேரின்பத்தையும், மனச்சாந்தியையும் அனுபவிப்பீர்கள்.

கீதையைக் கிரமமாகப் படித்து அதில் அடங்கியுள்ள சிறந்த கருத்துக்களை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வாருங்கள்.

ஜபம் கீர்த்தனை முதலியன செய்தால் சுலபமாக தெய்வ சாயுஜ்யமடைய முடியும் ஆண்டவன் உங்களுக்கு ஆரோக்கியம், நீண்ட ஆயுள் அமைதி வெற்றி பேரின்பத்தை அருள்புரிவாராக.



## இராமேசுவரம்

பின்னர் யாத்திரா மண்டலி தமது யாத்திரையின் மிக முக்கியமான கட்டமாகிய இராமேசுவரத்திற்கு வந்து சேர்ந்தனர். அங்கு சுவாமிகளை ஆலய நிர்வாகிகளும், பொது மக்களும் வரவேற்று ஊர்வலமாக அழைத்துச் சென்ற காட்சி கண் கொள்ளாததாக இருந்தது.

நமோநாராயணாய

பாரதத் தாயின் அருந்தவப் புதல்வரும் தென்னாட்டு திலக
முமான மஹாசன்னிதானம் மண்டலேஸ்வர
ஸ்ரீ ஸ்வாமி சிவானந்தஜீ மஹாராஜ அவர்கட்கு
இராமேஸ்வரம் வாசிகள் அன்புடன் வாசித்தளித்த
நல்வரவேற்பு

## உபசார வாழ்த்துப் பத்திரம்

பாரதத் தாயின் தவப் புதல்வ வருக, வருக. நாட்டு மக்களின் நலம் கருதி தவமிருக்கும் யோகீஸ்வரரே இப் பாரத நாடும் உலக மக்களும் சிறப்புற்று வாழ ஹிமாலயத் தில் தவமிருந்து வரும் தங்கள் வருகை நல்வரவாகுக.

தளர்ந்தவயதில் தன்நாட்டு மக்கள் பால தயை கொண்டு ஆசீர்வதிக்க சுற்றுப் பிரயாணம் செய்யும் எங்களன்புள்ள மஹாத்மாவே !

இந்து மதம் சிறப்புற்று ஓங்கவும் உலக மக்கள் சுபிக்ஷ மாக வாழவும் அல்லும் பகலும் சலியாது மக்களுக்கு வழி காட்டியாக தாங்கள் பாரத நாட்டின் பல பாகங்களில் சுற்றுப் பிரயாணம் செய்து மக்களை விழிப்புறச் செய்யும் தங்கள் மனோபிஷ்டம் நிறைவேறவும், தாங்கள் கண்ட தெய்வநெறிக் கழகம் மேன்மேலும் திகழவும், தங்கள் கொள்கைப் பல பாகங்களில் பரவவும், அம்பிகை பரமேஸ் வரி பருவதாவர்த்தனியும் சாக்ஷாத ராமநாதனும் தங்கள் பால் அருள பிரார்த்திக்கிறோம்.

இந்த பாரத பூமியின் புண்ணிய விசேஷங்களை பல மஹரிஷிகளால வேத, சாஸ்திர, இதிகாச புராணங்களில்

கூறப்பட்டிருக்கும் அரிய வேதாந்த தத்துவங்களை பாமர மக்கள் அறிந்து நன்னெறியைக் கடைபிடித்து ஒழுகவும், மேல்நாட்டார்கள் அறிந்து கண்டு வியக்கவும், யோகாப்பியாசத்தை, தேகாப்பியாசமாக நினைக்காமல், மக்கள் இறைவனடியை கடைபிடிக்கும், மார்க்கமாக உபதேசித்தும், லௌகீகதர்மத்தை அனுசரித்து, எளியநடையில் ஞானதத்துவத்தை போதித்து ஞானவெள்ளம் பெருக்கெடுக்கச் செய்யும் பணியில் இந்தியாவின் சிகரமான மேருவில ரிஷிகேசத்தில் வாழ்ந்து வரும் மஹரிஷியே!

தங்கள் ராமேஸ்வரம் விஜயத்தால் எங்கள் வாழ்க்கை புதிய சகாப்தமாக விளங்கவும் தங்களின் பொன் மொழிகளால் மனித வாக்கத்தினர் கடைத்தேறும் மார்க்கத்தை எங்களுக்கு உபதேசித்து ஆசீர்வதிக்க பிரார்த்திக்கிறோம்.

இராமேஸ்வரம் இங்ஙனம்

10–10–50 இராமேஸ்வர மஹா ஜனங்கள்.

இராமேஸ்வர நகரம் வைகுண்டம் போன்று விளங்கிற்று: மலர் மாலைகளால் அழகு செய்யப்பட்ட பல்லக்கில் ஸ்ரீ சிவானந்த மகரிஷி எழுந்தருளிய தோற்றம் பார்க்கப் பரமானந்தமாக இருந்தது.

முதன் முதல் ஸ்டேஷனிலேயே சத்சங்கம் ஒன்று இனிமையாக நடந்தது. மறுநாள் தக்கநேரத்தில் சுவாமிகள் ஸ்ரீ ராமலிங்கேசுவர தரிசனத்தை நாடி ஆலயம் புக்கனர். உடன் கொண்டு வந்த புனிதக் கங்கை நீரால் அபிஷேகம் செய்யப் பெற்றார் இறைவன்.

தவச் செல்வராம சிவானந்த முனிவர் இராமலிங்கேசுரரை மனமொழி மெய்களால் வழுத்தி மெய்மறந்த காட்சி அனைவர் மனத்தையும ஈர்த்துச் சென்று இறையருளின்

பாலாக்கியது. பூசனை முடிந்தவுடன் புனிதா ஆற்றிய சங்கீத சத்சங்கத்தில் எல்லோரும் கலந்து பரவசமுற்றனர்.

அன்றே மண்டலி இராமேசுரத்திலிருந்து தனுஷ் கோடி சென்றது.

தனுஷ்கோடியில் வரவேற்புக் குழுவினர் பூரண கும்பத்துடன் தவமுனிவரை வரவேற்றனர். அவர்கள் செய்த முன்னேற்பாடுகளைத்தும் கீழ்க்கண்ட அறிக்கையிற் காணலாம்.

ஓம்

## ஸ்ரீ சிவானந்தா யாத்ரா வரவேற்புக் குழுவினர்

### தனுஷ்கோடி

1 மண்டலேஸ்வரர் ஸ்ரீ சுவாமி சிவானந்த சரஸ்வதி ஹிமயமலைச் சாரலைச்சார்ந்த ரிஷிகேசத்தில் ஸ்தாபிக்கப் பட்டிருக்கும் தலைமை தெய்வ நெறிக் கழகத்தின் தனிப் பெரும் ஸ்தாபகர்.

2. தன் நலந் துறந்து மானிட ஜாதியின் மேம்பாட்டுக்காகவே உழைத்துவரும் உத்தமர். சத்தியம், தயாளம், பரோபகார சிந்தை, பிறருக்கு இன்னா செய்யாமை, இன்னா செய்தாரையும் அவர் நாண நன்னயம் செய்துவிடல், தொண்டு, சத்தியம், புலனடக்கம், நன்னெறி இவற்றை தன வாழ்வின் குறிக்கோளாகக்கொண்டு நடைமுறையில் அனுஷ்டித்தும் அவ்வப்பொழுது புஸ்தகங்கள், சஞ்சிகைகள, துண்டுப் பிரசுரங்கள் எழுதியும், ஆழ்ந்த கருத்துடைய பிரசங்கங்கள் ஆக்காங்கு நிகழ்த்தியும், மனித சமுதாயம் உய்வான்வேண்டி ஆற்றிவரும் சீரிய தொண்டினை ஆத்மீகத் துறையில் ஈடுபட்டவருமின்றி மாறுபட்டவரும் ஆவலோடு

எதிர்நோக்கி வரவேற்கின்றனர். இதனையாம அறியும் பொழுது புளகாங்கிதமடைகின்றோம்.

3. தீர்க்கதரிசியான சுவாமிகளையும் அவாகளது, குழுவினரையும, வரவேற்று, உபசரிதது, அவர்கள் திருவாய் மலர்நதருளும அருள்மொழிகளையும் அன்புறச் செவி மடுதது உயவோமாக.

4. யாத்ரா மணடலி 1950ம் வருடம் அக்டோபர் மாதம் 11ந தேதி புதன்கிழமை சுமார 11-55 மணிக்கு தனுஷ்கோடி வநது சேரும். மகரிஷி சிவானநத சரஸ்வதிககு பூரண கும்பத்துடன் வரவேற்பளிக்கப்படும்.

5. யாத்ரா மண்டலி சில மணி நேரம தனுஷகோடியில் தஙகி அன்று சாயங்காலமே கப்பலில இலஙகைககுப் பிரயாணமாவார்கள். மண்டலி இலங்கைப் பிரயாணத்தை முடித்துக்கொண்டு 14-10-50 சனிக்கிழமை திரும்புவார் கள். அன்று மாலை 4-30 மணி முதல் 5-30 மணி வரை சுவாமிகள் உபந்நியாசம நிகழ்த்துவார்கள. அன்பர்கள் அனைவரும் இவண ஏகி, சுவாமிகளின் அருள் மொழிகளைச் செவிமடுததுப் பயனுற வேண்டுகின்றோம். பினபு அன்று சாயநதிரமே 6-25 ரெயிலவண்டியில் மதுரைக்கு பிரயாண மாவாாகள.

6. தனுஷ்கோடி, இராமேஸ்வரம், பாம்பன், மண்டபம் முதலிய பிராநதியங்களில வாழும மகாஜனஙகள் இந்த அருமையான சநதர்ப்பத்தைப பயன்படுததிக்கொண்டு இமமஹானை நேரில் தரிசிப்பதோடு அவர்களுடைய ஆசியையும பெற்று உய்ய வேணடுகினறோம்.

7 சுவாமிகளின் வருகைக்கான செலவினத்திற்குப் பொருளுதவி செய்வதுடன் தனுஷ்கோடி இரயிலவே

ஸ்டேஷனில் திரளாக வநதிருநது ஆர்வம் கலநத ஒத்துழைப்பையும தநது சிறப்பித்துப் பயனுற வேண்டுகின்றோம்.

தனுஷ்கோடி
5—10—50

V. நாராயணசாமி நாயுடு,
காரியதரிசி,
வரவேற்புக் குழுவினர்.

இங்குள்ள தெய்வநெறிக கழகக் கிளைக்கும் சுவாமிகள் விஜயம செய்தபின் அன்று மாலையே (11-10-50) கப்பலேறி கடல கடநது தலைமன்னார் சென்றடைநதார்.

தலைமன்னாரிலும் இமாசல முனிவருக்கு அதிவிமரிசையான வரவேற்பு நடநதது. அன்பர்கள் அளித்த உபசாரத்தை ஏறறுக்கொண்டு அனைவருக்கும் ஆசி வழஙகி அன்றிரவில் தானே மண்டலிக்காக ஏற்பாடு செய்திருநத ஸ்பெஷல வண்டி மூலம் புறப்பட்டு அக்டோபா 12ந் தேதி காலை கொழும்பு வந்து சேர்நதார்.

கொழும்பில் பல மாதங்கள முன்னிருநதே நடநது வரலான வரவேற்பு ஏற்பாடுகளையும பத்திரிகை அறிக்கைகளையும ஒரு சிறிது காணுவோம.

## ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் இலங்கை விஜயம்

அக்டோபர் 12, காலை 8 மணி :- கொழுமபுக் கோட்டை ஸ்டேஷனில் தலைமன்னா புகைரத மார்க்கம் வநது சோதல்.

3-00 பி. ப. :—கொழும்பு நகரசபை வரவேற்பு.

4-15 ,, :—இலஙகை சர்வகலாசாலை இநது மாணவர் சஙகத்தின ஆதரவில் பிரார்த்தனைக கூட்டம்.

5-30 ,, :—கொழும்பு நகர சபை மண்டபத்தில் பொது வரவேற்பு.

7-30 பி.ப. .— வெள்ளவத்தை ஸ்ரீ ராமகிருஷ்ண மடததில் பிரார்த்தனைக் கூட்டம்.

அக்டோபர் 13, 7-30•மு.ப. :—கொச்சிக் கடை தமபையா சததிரத்தில் பிரார்த்தனைக் கூட்டம.

10-30 மு. ப —சைவமங்கையர் கழக மண்டபத்தில் உபநியாசம்.

4-30 பி.ப.—கொழுமபு விவேகானந்த சபையினர் வரவேறபு.

7-00 „ தலைமன்னார் புகைரத மார்க்கம் புறப்படுதல்.

இந்த வைபவங்கள் நடக்கும் மண்டபங்களிலெல்லாம் போதிய இடவசதியில்லாதபடியால அன்பர்கள் சுவாமியின் தரிசனத்தைப் பலவிடங்களில் பெற விரும்பாது தங்கட்கு வசதியான ஒரு இடத்தில மாத்திரம பெறுவதற்கு குறித்த சபையினருடன் கலநது ஒழுஙகு செய்யுமாறு கேட்டுக் கொள்ளப்படுகின்றனா. கோட்டை ஸ்டேஷனிலும் அதன் அருகிலுள்ள பாதைகளிலும் சுவாமியை வரவேறபதற்கு யாவரும் அன்புடன அழைக்கப்படுகின்றனர்.

கொழும்பு நகரசபை மண்டபத்தில் நடைபெறும் பொது வரவேற்புக கூட்டத்தில் பிரவேசச் சீட்டு பெற்றவர்களுக்கு மாத்திரம், இடவசதி யுண்டு. அச்சீட்டுகளை வரவேற்புச சபையின் காரியதரிசிக்கு கீழ்க்கண்ட விலாசப்படி எழுதிப பெறலாம. உளளே இடமின்மையால், நகரசபை மணடபத்தின் வெளிமுற்றத்தில் நிற்கும் அனபர்கள் சுவாமியின் தரிசனம் பெறுவதற்கும் அவரின் உபதேசத்தைக் கேட்பதற்கும் பிரததியேக ஒழுஙகுகள செய்யப்படும்.

60-டீன் பிளேஸ், கொழும்பு 3.

## சுவாமி சிவானந்தாவுக்கு வரவேற்பு
### விசேஷக் கமிட்டி நியமனம்

கொழும்பு, ஜூலை. 1 ஸ்ரீலஸ்ரீ ஸ்வாமி சிவானந்தாவை வரவேற்பதற்கான ஒழுங்குகளை செய்யும் பொருட்டு ஹிந்துக்களடங்கிய விசேஷக் கமிட்டியொன்று கொழும்பு விவேகானந்த சபை நிர்வாக சபையால தெளிவு செய்யப் பட்டுள்ளது. பிரஸ்தாபக் கமிட்டியில் இன்னும அதிக அங்கத்தினர்களும் சேர்த்துக்கொள்ளப்படலாம்.

ஸ்ரீமதி சிவானந்தம தம்பையா, ஸ்ரீமதி எல். நல்லநாதன் ஸ்ரீ கே. ஆளவாப் பிள்ளை, ஸ்ரீ எஸ். சிவசுப்பிரமணியம், ஸ்ரீ பி. முத்துலிங்க சுவாமி, டாக்டர் டி. நல்லநாதன், டாக்டர் ராஜதுரைரத்னம, ஸ்ரீ எம எஸ். திருவிளங்கம், ஸ்ரீ கே. குமார வேலு (எம்.பி) ஸ்ரீ டி. மயில்வாகனம், ஸ்ரீ ா. சுப்பிரமணியம, ஸ்ரீ வி. தவமணி, ஸ்ரீ என். முத்தையா, ஸ்ரீ கே. ராமசந்திரன் ஆகியோர கமிட்டி அங்கத்தினர்களாகத் தெரிவு செய்யப்பட்டுள்ளனர்.

பிரஸ்தாப வரவேற்புக் கழகத்தின் முதற் கூட்டம திங்களன்று மாலை சைவ மங்கையர் கழகமண்டபத்தில் நடைபெறுமென அறிவிக்கப்படுகிறது.

—o—

## தூய அறிவினல்தான் துயரை அழிக்கலாம்
(சுவாமி சிவானந்தா சரஸ்வதி)

ஸ்ரீ சுவாமி சிவானந்த மஹராஜ் தமது மண்டலீகருடன் ரிஷிகேசத்திலிருந்து இராமேஸ்வரம்வரை சுற்றுப் பிரயாணத்தை மேற்கொண்டுள்ளார்கள். செப்டம்பர் 9ந் தேதி புறப்படுகிறார்கள். சீரிய ஆத்மீக-தத்துவத்தைப் பரப்பி உலக மக்கள் சாந்தியோடு சுபீட்சத்தைப் பெறவேண்டி இப்புனித பிரயாணத்தை தொடங்குகிறார்கள். கொழும்புக்கு அக்டோபர் 12ந தேதி விஜயம்செய்ய ஒழுங்குகள் நடைபெறுகின்றன. சுவாமிஜி குருநகல சைவ மகாசபையின் 20வது ஆண்டு நிறைவு விழாவுக்கு கீழ்க்கண்ட ஆசிச் செய்தியை அனுப்பியுள்ளார்.

இறைவனின் அருட் குழந்தைகளே !

ஆழ்நத ஞான ஊற்றிலிருந்து தான் வாழ்க்கையின்பம் பிறக்கிறது ; மனிதன் தன் தெய்வாம்சத்தை உணருகிறான் இறை மாட்சியை அடைகிறான்.

அஞ்ஞானத்தில் அமிழ்ந்திருப்பவனுக்கு ‘ இவ்வுலகமுமில்லை, அவ்வுலகமுமில்லை. ’ நிலைதளும்பாத உள்ளத்தின் அமைதியும் அவனுக்குக் கிட்டாது ; இகபர சுகங்களை அஞ்ஞானி அனுபவிக்க முடியாது.

தொழில நுட்பத் துறைகளிலும் ரஸாயன ஆராய்ச்சிகளிலும முன்னேற்றமடைந்த இன்றைய மனிதன், தனது மூதாதையர்களைவிடத் தான் அறிவில் சிறந்தவனாகவும் நாகரிகததில உயாநதவனாகவும் மார்புதட்டி வீம்புபேசுகிறான். ஆனால் இன்றைய மனிதனின் விஞ்ஞான அறிவு முதிர்ச்சியானது, மக்களினத்தைப் பூண்டோடு அழித்துவிடக் கங்கணம கட்டியுள்ளதாகவே படுகிறது.

இன்றைய மனிதனின் பழிப்புக் கிடமான மூதாதையர் களோ, இயற்கையோடியைந்த வாழ்வு நடாத்தினார்கள்; மனி தத் தன்மையுடன் வாழ்ந்ததால் தெய்வத் தன்மையை அவர் களுடைய வாழ்க்கை பிரதிபலித்தது. இன்றைய மனிதன் அசுரதன்மையுடன் நாச லீலைகள் புரிவதில் அக்கறை காண்பிக்கிறான்.

புறவுலக மோகத்தில் மனிதன் இன்று மயங்கி 'கண் டதே காட்சி; கொண்டதே கோலம்' என்று போதை யுற்றுத் திரிவதினாலேதான் உலகத்தில் இத்தனை குழப்ப மும் நிலவுகிறது.

உலோகாயத விஷயங்களிலும் அன்றாட வாழ்க்கை வர்த்தமானங்களிலும் சிந்தனையைச் சிதறவிட்டு, தூய அறி வின் அன்புமார்க்கத்தினின்றும் இன்றைய மனிதன் பிறழ்ந்துவிட்டான். சுயமாக எழும் சிந்தனை ஊற்றை செயற்கை முறையான வாழ்க்கையினால் உள்ளே அடங்கி யிருக்கும்படி செய்துவிட்டான். சிந்தனை ஊற்று தடைப் பட்டு, தூய அறிவின் பிரகாசம் மங்கியதும் புன்பிணக்கு களும், இன்னல்களும், குழப்பங்களும் தலைதூக்க ஆரம் பித்துவிட்டன.

அணுகுண்டு, ஹைட்ரஜன்குண்டு ஆகிய ஊழிகால ஆயுதங்களைக் கண்டு பீதியடைந்த மக்களின் அகவுலக அந்த காரத்தில் ஒளிர்விடும் துருவ நட்சத்திரம்போல் சமய கலாச் சார ஸ்தாபனங்களும் சபைகளும் திகழ்கின்றன. அவதி யுறும் உங்களுக்கு ஆறுதலையளிக்கின்றன; வரண்ட பாலை வனம் போன்ற உள்ளங்களில் பாலைவனச் சோலைகளாக விளங்குகின்றன. ப்ரஹ்மஞான உபதேச மூலம் இச்சமய

ஸ்தாபனங்கள் மக்களின் மனசில் நம்பிக்கையையும் சாந்தத்தையும் வளர்க்கின்றன. அண்ட சராசரங்கள் அனைத்தினையும ஊடுருவி நிறரும தனிப்பெரும சக்தியே நம்முடைய ஆதாரப பொருளென்று போதிக்கின்றன.

## இந்து தாமத்தைப் பரப்புங்கள்

உங்களுடைய சைவ மகாசபை ஆற்றிவரும பலவகையான பணிகள் என்னுள்ளத்தைக் கவர்ந்துவிட்டன. அளப்பரிய ஆனந்தமடைகிறேன். வீர புருஷர்களே! வீறு கொண்டு எழுங்கள! உயரிய லட்சியங்களை உன்னிப் பிடியுங்கள்! சக்தியின் நிலைக்களனாக விளங்குங்கள்! 20வது ஆண்டு நிறைவு விழாவைக் கொண்டாடும இப்புனித தினமமென்மேலும் இந்து தர்மத்தைப் பரபபுவதற்கான ஊக்கத்தையும உழைப்பையும் உங்களுக்கு அருளட்டும்.

சிறிய அணு உட்பட சகலகோடி சீவராசிகளும, அசேதனப பொருட்களாகிய கல்லும மண்ணும் இறைவனின் இதயத் துடிப்பைப் பிரதிபலிக்கின்றன, நீங்களும் அதே சக்தியினால்தான் சூழப்பட்டு இருக்கிறீர்கள; அந்த சக்தி பிரவாகத்தின் சிறு குமிழிகளே நீங்கள.

இறைவனை உணாந்து இறைவாழ்க்கை நடத்துவதே வாழ்க்கையின் நோக்கமாகும்.

ஆழ்ந்து சிந்தனை செய்யுங்கள்; தியானம் செய்யுங்கள்; வேத புராணங்களை ஓதுங்கள். தூய உள்ளம நிர்மலமான இதயம, தன்னலமற்ற சேவை ஆகியவை மூலமே இறை இன்பத்தில வாழலாம்.

நேர்மையாக இருங்கள்; அஞ்ஞானத்தை எதிர்த்துப் போராடுங்கள; தியானம் பண்ணுங்கள்; உய்த்துணருங்கள்; தர்மத்தைப் பரப்பும் நிலையங்களாகப் பிரகாசியுங்கள்

## "உங்களது வாழ்நாளை இன்புறச் செய்வதே எனது நோக்கம்"

—சுவாமி சிவானந்தர்

## இமயமலையிலிருந்து இலங்கை வரும் தபோதனர் ஸ்ரீ சிவானந்தாவின் அரிய சேவை

(கே. ராமச்சந்திரன்)

பதினைந்தாம நூற்றுண்டில வடநாட்டில் வேதாந்தப் பணியில் தலை சிறநது விளஙகியவர் சதானந்த யோகீந்தா ராவர். இநத மகான் சஙகரர் நிறுவிய சிருங்கேரி சாஸ்வதி என்ற மடத்தைச் சேர்ந்தவர். இவர் எழுதிய 'வேதாந்த சாரம்' என்னும் நூல, மிகவும் அரியதொன்றாகும். சங்கரா பத்மபாதா, ஹஸ்தமலிகர், சுரேஸ்வராச்சாரியார் முதலிய பெரியார்கள் வரைந்துகுவித்த நூல்களெல்லாவற்றிலு முள்ள கருத்துக்களை வேதாந்தகேசரி எமக்குத் தெளிவாக எடுத்துக்காட்டுகின்றது. 'சுபோதினி' 'அத்வைதசித்தி' 'பிரம்மானந்தியம'முதலியவைகள் இதன் வழி நூல்களாகும். நரசிம்மசரஸ்வதி, மதுசூதன சரஸ்வதி, பிரம்மானநத சரஸ்வதி ஆகியோர்களும் இதே குரு பரம்பரையைச சேர்ந்தவர்களே.

இவர்களெல்லாருஞ் சேர்ந்து வெவ்வேறு காலத்தில் செய்த வேதாந்தப் பிரசாரததை ஒரே காலத்தில் தன்னந் தனியாய் பதினாறும் நூற்றுண்டில் செய்து முடித்தவர் அப்பையதீட்சிதர் வேதாநத கேசரியாய் விளங்கியதோடு நின்றுவிடாது, சிவானுபூதிச செல்வராயும் சித்தாந்த சரப மாயும் சிறப்புற்று, சைவ- வைஷ்ணவச சண்டைகட்கு அற்புத சித்தியால் சமாதானங் காட்டி வேதாநதம சித்தாந்தம்

என்னும் இரு பெரிய நதிகளுக்கிடையே அழிக்க முடியாத பாலத்தை அமைத்துச் சமரசங் கண்டவா இநத அரிய சிவ பக்தரேயாம். அவர் அருளிய 'சதுர் மத சாரசஙகிரத்தின்' அருங கருத்துக்களை தாயுமானுர் பாடல்களிலும் அருட்பிரகாச வள்ளலாரின் மகா தேவமாலையிலும் பாக்கக் காணலாம். அப்பைய தீட்சிதர் அஸ்திவாரம போட்டெழுப்பின சமரச நெறிக் கோட்டைக்கு கோபுரங்கள் கட்டிய பெருமை பிந்திய இரு மகாத்மாககளைச் சேர்நததாகும். அப்பைய தீட்சிதரின் ஜயந்தி தினம் காந்தியடிகள் பிறநத நாளாகிய அக்டோபர் மாசம் இரண்டாம தேதியாகும். இன்னும இரு வாரங்களுள, இலங்கைவாழ் இந்துக்கள் செய்த புண்ணியத்தின பயனுகக் கொழும்பில் காட்சி தந்தருளப் போகும் ஸ்ரீ சுவாமி சிவானந்தர் அப்பையதீட்சிதரின் பதிமூன்ருவது சந்ததியில் தோன்றியவரென்பதை மகிழ்ச்சியுடன் தெரியத்தருகின்ருேம்.

## ஆத்மீக சேவை

எழுத்தாணிப் பணியால் உலகின் நன்றிக்கு என்றென்றைக்கும் உரித்தானவர் வியாசர். அதேவித உரிமைபெற்ற தீட்சிதரின் மரபில் வந்துதித்த சிவானந்தர் இன்று வியாசரின் புகழையும் புலமையையும் வென்று நிற்பதில் வியப்பொன்றுமில்லை. அப்பையரே குப்புசாமியாகப் பிறவியெடுத்து ஜெகத் குருவான சிவானந்தராக விளங்குகிருரெனப் பலர் கருதுகின்றனர். பாரத நாட்டின் பரமார்த்திகப் பண்பு காலத்துக்காலம் மறுமலர்ச்சி பெற்று உலகின் கவனத்தை ஈர்ப்பதின் காரணம் இவ்வித மகான்களின் தோற்றமேயாகும். மக்கள் மறந்துவிடும் உண்மைகளை காலதேவி வேண்டிநிற்கும் புதுநடையில் விளக்கி அவர்கட்கு உய்யவழிகாட்டுவதே இந்த மகாத்மாக்களின் உன்னதலட்

சியம். இந்து மதமெனனும் கற்பகதருவில் தோன்றிய இலைகள், மலர்கள், காய்கள, கனிகள யாவறறையும் ஒருவர் அறியவிருமபின் சுவாமி சிவானநதர் எழுதியுளள நூலகளைக் கறகவேணடும். உலக மொழியான ஆங்கிலததில எளிய நடையை அவா வேணடுமென்றே கையாளுகிறா. பண்டி தாகள் மாததிரமின்றி, பாமராகளும பாலாகளுமகூட எமது மஹரிஷிகள விட்டுப்போன பக்தி, ஞான, யோக ரகசியங களை அறிநது அவறறை சாதனைக்குக கொணடு வரவேண்டு மெனபதே இநதப் புண்ணிய புருஷனின பேரவா. அவர் இன்று உடல்கொண்டு உலாவுவது உலகின் நன்மை ஒனறிற் காகவேயாம். முப்பத்தாறுவது வயசில் ஆயிரககணக்காக மாசம் வரும்படி கொடுதத டாக்டர் உத்தியோகத்தைவிட்டு துறவு பூணடது அதன பொருடடேயாம. தமது அறுபதது நான்காவது வயசில், ஆறுதலாய் ஆசரமததில் வாழ்வதை விட்டு, சென்றமாசம் அகில-இந்தியா யாத்திரையை ஏறறுக கொண்டது மக்களின் உள்ளத்தில் உறஙகிக கிடககும் ஆதமீக உணாச்சியைத் தட்டி எழுப்புவதற்கேயாம.

## என் கடன் பணி செய்து கிடப்பதே

“உங்கள் யாவருக்கும் பணியாற்றவே யானுளேன. உங்களது வாழ்நாளை இனிதாக்கி இன்புறவாழச் செய் யவே யானுளேன். அறியாமையை அகற்றி பிறவிப்பயனை அடைவதற்கேற்ற பாதையில துணை புரியவே யானுளேன”

“இந்த வேட்கை மிக்குள்ள அன்பர்களுக்கு அரும பணியாற்றுத லொழித்து வேறொரு கடவுளும், புனிதபூச னையும் எனக்கில்லை. அவர்களுக்குத் துணையாக இருந்து உதவி புரிதலே எனது மேலான யோகம்—யானடைந்த அரு ளொளி.”

என உணர்ச்சி பெருக்குடன் அடிக்கடி கூறும் இப்பரம ஹம்ஸரின் கருணை உள்ளத்தை எவ்வாறு எழுத்தால் விவரிக்கமுடியும்?

இமயமலைச்சாரலில் தாம் வதியும் ஆச்சிரமஞ் சென்று தம்மை தரிசிக்கும் தமது அமிர்த வசனங்களைக் கேட்கும் பாக்கியம் பலகோடி மக்களுக்குக் கிடைக்காது என்பதை உத்தேசித்தே இக்கருணையே உருவான பெரியார் அறுபது தின நீண்ட யாத்திரையில் புறப்பட்டுள்ளார். அயோத்தியா, காசி, கயா, ஜகந்நாதம், சிதம்பர மார்க்கம இராமேஸ்வரம் வந்து மஹாளய அமாவாசை யன்று கங்கோத்திரியிலிருந்து கொண்டுவரப்படும் புண்ணிய தீர்த்தத்தில் இராமநாதபெருமானுக்கு அபிஷேகம செய்து, அன்றைய தினமே தனுஷ் கோடியில் கப்பலேறி அடுத்த நாட்காலையில் (12-10-50 வியாழககிழமை) கொழும்பு கோட்டை ஸ்டேஷனில் வந்து இறங்குவார். இலங்கையின் பல பாகங்களிலும் வாழும் அன்பர்கள அத்தருணம் ஆயிரக்கணக்காகத் திரண்டு வந்து அவரின் திவ்ய தரிசனம் பெறுவார்களாக.

ஆணாகிப் பெண்ணாகி வடிவு தோன்றும்
ஆத்மானு பூதிக்கோர் அணியுந தோன்றும்
வாணாளை வீணாக்கும் வழக்கை நீக்கி
வந்தவினை தனை முடிக்க வழியுந் தோன்றும
காணாத காட்சியெல்லாங் கண்முன் தோன்றும்
கைலையைப்போற் கம்பீரக்காட்சி தோன்றும்
சேணாக உயர்ந்த பெருஞ்சிறப்புத் தோன்றும்
சிவானந்த ஜெகத் குருவைக் கண்டபோதே.

---

# ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் அகில இந்திய யாத்திரை

## அக்டோபர் 12-ல் கொழும்பு மக்கள்

### அவருக்கு அமோக வரவேற்பளிக்க ஏற்பாடு

அணுகுண்டுச சக்தியின் ஆதிக்கத்தில நாததமும்பேற நாஸ்திகம பேசப்படும் வேளையில், மககளிடையே முக்கிய மாக மாணவ, மாணவிகளின் உள்ளத்தில் பாரதநாட்டின் மதிப்பற்ற பொக்கிஷமான ஆத்மீகக் கலையைப் பரப்ப வேண்டுமென்ற உன்னத நோககுடன் ஸ்ரீ சிவானநத மகான் இமயமலைச் சாரலிலுள்ள தமது ஆச்சிரமத்தை விட்டுச் செப்டமபர் மாதம் ஒன்பதாம் தேதி புறப்பட்டு ஓர் அகில இந்திய யாத்திரையை ஆரமபித்துள்ளார்.

அவா சென்ற க்ஷேத்திரங்களிலெல்லாம் பல்லாயிரக் கணக்கான மக்கள் வழிபாடுகளிலும், பஜனையிலுங் கலந்து, அவரது ஞான மொழிகளையுங் கேட்டின்புறுகின்றனர். அயோததியா, காசி, சாரநாத், காயா, கலகத்தா மார்க்கம் யாத்திரை செய்து, நேற்று சென்னையை சேர்ந்தபோது நகரசபையினரால் வரவேற்புபசரணை அளிக்கப்பட்டது. அங்கே மூன்று தினங்கள் தங்கி நகரின் பல இடங்களில் உபதேசஞ் செய்கின்றார்.

சிதம்பரத்திலும் தருமபுர ஆதீனததிலும் குதூகல மான வரவேற்புகள் அவரை எதிர்பார்க்கின்றன. அண்ணா மலைச் சர்வகலாசாலையில் 4ந்தேதி புதன்கிழமை பேராசிரி யாகள் மாணவர்கள, ஒன்று சேர்ந்து ஏழுமணித்தியால நிகழ்ச்சிகள் தொடர்ச்சியாய் நடாத்தத் திட்டஞ் செய்துள்

ளனர். இதில் பஜனை சமய மகாநாடு, யோகாப்பியாச விளக்கங்கள், கூட்டுவழிபாடுகள் முடிந்தபின ஸ்ரீ நடராசர் தரிசனத்திற்காக அனைவரும் ஆலயஞ் சென்று ஆராதனை செய்வர். இறுதியில சுவாமிஜியின் உபந்யாசம் நடைபெறும் சிதம்பரத்திலிருநது தர்மபுர ஆதீனம் வழியாக பல ஸ்தலங்களை தரிசித்துக்கொண்டு சுவாமிகள் 10ந தேதி மாலை இராமேஸ்வரம் சேர்வார். மஹாளய அமாவாசை பொருநதிய சுபதினத்தில் ராமநாதப் பெருமானுக்கு கங்கோத்திரியிலிருந்து யாத்திரை கோஷ்டியினரால் கொண்டுவரபபட்ட தீர்த்தத்தினுல் அபிஷேகம் நடைபெறும்.

அன்று மாலை சுவாமிகளும் அடியார்களும் தனுஷ்கோடியில் கப்பலேறி அடுத்தநாட் காலை எட்டு மணிக்கு (12-10-50) கொழும்பு கோட்டை ஸ்டேஷனில் வநதிறங்குவார்கள். அப்போது இநத நகரம் இநதுமதச் சார்பில் இதுவரையில கண்டிராத ஓர் அற்புதக் காட்சியை தருமெனவும் அதனைக் கண்டின்புறவும் சுவாமிகளின் தரிசனம்பெற்று அவரது ஞான மொழிகளைப் பருகவும், இலங்கையின் பல பாகங்களிலுமிருந்து ஆயிரக்கணக்கான மக்கள் வருகிறுர்களெனவும் கொழும்பு வரவேற்பு சபையின் காரியதரிசி திரு க. இராமச்சந்திரன் அறியத்தருகின்றுர்.

—தினகரன், 1—10—50

## ஸ்ரீ சுவாமி சிவானந்தரவர்களின் இலங்கை விஜயம்

பொது மக்களிடத்திலும், முக்கியமாகக் கலாசாலை மாணவர்களிடத்திலும், ஆத்மீக உணர்ச்சியை உண்டுபண்ணும் நோக்குடன் இந்த மஹான் சென்ற மாதம் 9-ந்தேதியன்று ரிஷிகேசத்திலுள்ள தமது ஆச்சிரமத்திலிருந்து ஓர் அகில-இந்திய யாத்திரையை ஆரம்பித்தனர். அயோத்தியா, காசி, கயா, கல்கத்தா முதலாய இடங்களில் வழிபாட்டுக் கூட்டங்களில் உபந்நியாசங்கள் நடைபெற்றன. சென்னையில் 30ந் தேதி சுவாமிகள் சேர்ந்தபோது நகரசபையினரால் வரவேற்பு அளிக்கப்பட்டது. மூன்று தினங்களாகச் சென்னையில் தங்கி காந்தி ஜயந்தியிலும் வேறு பல நிகழ்ச்சிகளிலும் பங்கு பற்றினார்.

சுவாமிகளின் இத் திக்குவிஜயத்தில் முக்கியமான சம்பவம் ஒன்று நாளைய தினம் சிதம்பரத்தில் நடைபெறும். பிற்பகல் 2-30 தொடக்கம் 8 மணி வரைக்கும் அண்ணாமலைச் சர்வகலாசாலையில், வழிபாடு, பஜனை, மகாநாடு, யோகாப்பியாசக் காட்சிகள் தொடர்ந்து நடைபெறும். இரவு எட்டு மணிக்கு சுவாமிகள் சர்வகலாசாலை பேராசிரியர்கள், மாணவர்கள், ஏனைய பக்தர்கள் சூழ ஸ்ரீ நடராசர் சந்நிதி சேர்ந்து அங்கே விசேட அபிடேக ஆராதனைகள் முடிந்ததும் ஓர் சொற்பொழிவு செய்வார்.

சிதம்பரத்திலிருந்து தருமபுர ஆதீனஞ்சென்று, அங்கே மகாசந்நிதானத்தின் உபசரணை நடைபெற்றபின் சுவாமிகள் தென்னாட்டுப் பல க்ஷேத்திரங்களைத் தரிசித்து ஆங்காங்கே வழிபாடுகளும் உபந்நியாசங்களும் செய்த பின்னர் அக்டோபர் 10-ந் தேதி இராமேஸ்வரம் சேர்வர்.

அடுத்த நாள் மஹாளய அமாவாசைத் தினத்தில ஸ்ரீ ராம நாதப் பெருமானுககு கங்கோத்ரியிலிருந்து கொணடுவரப் பட்ட தீர்த்தங்களினல் அபிஷேகம நடைபெறும். அன்று சாயந்திரம் தனுஷகோடி மார்க்கம யாத்திரைக் கோஷ்டி தலைமன்னர் சேரும. மன்னரிலும் அதன் சுற்றுப்புறங களிலுமுள்ள பக்தர்கள் தகுந்த வரவேற்பு அளிகக ஒழுங்கு செய்கின்றார்கள். இதில் கலநதுகொள்ள யாழ்பாணத்தி லிருநதும கொழுமபிலிருந்தும பலா செல்கின்றார்கள்.

12-10-50 வியாழக்கிழமை காலை 8 மணியளவில் கொழுமபு நகரத்தில் இதுவரையிற் கணடிராத காட்சி நடை பெறுமெனவும் அதைக கண்டின்புறுதல் இநதுக்கள் சகல ரதும் முக்கிய கடமையெனவும் வரவேறபுககழக காரிபதரிசி திரு. க இராமச்சநதிரன் அறிவிககின்றார். அடிகள் கொழுமபில் தங்கும் முப்பத்தைநது மணித்தியாலஙகளுள் ஏழு பிரதான இடங்களில் கூட்டு வழிபாடுகள், சங்கீர்த்த னம், உபநியாசங்கள் நடைபெறும். நகரசபை மணடபத் தில் நடைபெறும பொது வரவேற்புக் கூட்டததில் இநதுக் களல்லாத பிரமுகர்கள் பலரும் கலநது கொளவார்கள

அடிகளின் இமயம் நோக்கிய யாததிரை தனுஷகோடி யில் ஆரம்பித்து, மதுரை கன்னியாகுமரி, மைசூர், பமபாய், பரோடா, டில்லி மார்க்கம் நவமபர் மாசம் 8ந்தேதி நிறைவேறும். இனி வரபபோகும் இநதுமத சரித்திரத் தில் இந்த யாத்திரை ஓர் தனி அத்தியாயம் எடுக்குமென நிச்சயமாகக் கூறலாம். இலங்கை சிவானநதர் வரவேற்புக் கழகத்தின் தலைவராக தொண்டாற்றும், சர். கந்தையா வைத்தியநாதன் அவர்கட்கு இநநாட்டு இநதுக்களின் நன்றி உரித்தாகும். —இந்து ஸதன், 30—10—50

# அன்புருவான சுவாமி சிவானந்தர் ஆத்மீகத்தை பரப்பும் அற்புதஒளி

சுதந்திர காலம் ஆரம்பித்ததிலிருந்து பாரத புண்ணிய பூமியானது அமைதியான வாழ்வினையும் சமாதானத்தையும் நல்லிணக்கத்தையும் பெரிதும ஓம்பிவரும் தியாக பூமியாகும்.

ஜனநாயக அரசியல் முதன் முதலாக இந்தியாவில், கிறிஸ்தாப்கத்திற்குப் பல்லாண்டுகட்கு முன்னரே நிலை பெற்று வந்தது.

சமய வாழ்வே எல்லோர்க்கும் புராதனமான குறிக்கோளாக வேண்டுமெனபதையும வற்புறுத்தி வந்துளது.

இப்பெரும் போதனையைக் காலத்துக்குக் காலம் இந்தியாவில் எத்தனையோ பரமாத்மாக்கள் தோன்றி நன்கு விளக்கி நிலைநாட்டியுள்ளார்கள். இக்காலத்தில் மகாத்மா காந்தியடிகள் நமக்கு வழங்கியுள்ள அமிர்த போதனைகளை எவரும் மறக்கமுடியாது.

இபபடியான உண்மைப் பெரியார் பரம்பரையைச் சேர்நதவர்தான் இருஷிகேசத்தில் வசிக்கும் சுவாமி சிவாநந்த சரஸ்வதி எனபவர் வேதகாலங்களிலிருந்த பெரிய மகாத்மாக்கள எடுத்துக்கூறிய தேவவாக்குகளை உதாரணத்தால் விளக்கி நல்லறிவுச் சுடரைக் கொளுத்தி மக்களை உய்யச் செய்யுந தொண்டினை இவர் ஏற்றுள்ளார். "எங்கள் நாட்டின் பரம்பரைச் செல்வமாகும ஆத்மஞானத்தைப் பற்றிய உண்மைகளை எடுத்துக் கூறி மனிதவர்க்கத்தை ஈடேற்றுந் தொண்டினைச் சுவாமிகள் ஏற்றுள்ளார்" என்று

சமீபத்தில், இந்திய இராணுவப் பெருந் தலைவர் தளபதி கரியபபா கூறியுள்ளார். இவரது அருள் மொழிகள் இந்தியாவில் மாத்திரமன்று உலகம் முழுவதும் பரந்து செல்கின்றன.

## பெரிய அற்புதம்

தென்னிந்தியாவிற் பத்தமடை என்னும் கிராமத்தில் தோன்றிய இநதச் சாதாரண மனிதனின, பேரும், புகழும்; சக்தியும உலகமெங்கணும எப்படி வன்மையுடன் மேலோங்கிச் செல்கின்றதென்பது உள்ளபடி அற்புதந்தான. மலாய் நாட்டில் வைத்தியராக இருந்த இவர், மிக்க கீர்த்தியையும் வருவாயையும வருவித்த அத்தொழிலைச் சடுதியிற் கைவிட்டு, 1924-ம் ஆண்டு சநநியாசத்தைக் கையேற்றது மிக விந்தையாகின்றது. அபபோது இவருக்கு வயது 36 ஆகும்.

அன்று தொடக்கம் இருஷிகேசத்திலிருந்து அருந்தவம் இயற்றிவந்தார். பன்னிரண்டு வருட காலமாக இவா பட்ட கஷ்டங்கள். அனுபவங்கள், பரிசோதனைகள், இலகுவிற் கூறிவிடமுடியாது. அதன்பின் உலக நன்மையை நாடி, மக்களின் மீட்சியை இலக்காகக் கொண்டு, தொண்டு புரிய எண்ணி 1936-ம் வருடம் 'தைவீக வாழ்க்கைக் கழகம்" என்ற பெயருடன் ஒரு ஸ்தாபனத்தைத் தோற்றுவித்தனர். இப்போது இநத ஸதாபனம் மிகவும் ஆதிககமடைந்து உலகின் பல பாகங்களிலும் விளங்குவதைக் காணலாம். இதன் மத்திய சங்கம் இமயமலைச சாரலில் இருஷிகேசத்து அண்மையிலுள்ள முனிக்கற்றி எனனும் பளளத் தாககில் உளது. இபபோது இந்த ஸ்தாபனம இவரது இடையறாத

முயற்சியால் இனிது ஓங்கி வளர்ந்து வருவதை எவருங் காணலாம். கங்கைக் கரையிலுள்ள இந்த ஆச்ரமத்துக்கு அணித்தாகவுள்ள கற்பாறியிலிருந்து இவர் தவஞ்செய்வது நோக்குவோர்க்கு அற்புதமாகும். இவர் என்றும் முயற்சியுடையராய் இருப்பது இவரது இயற்கை. அதிகாலையில் நித்திரை விட்டெழுந்ததும் கடன்களை முடித்துக்கொண்டு ஆசிரமத்தின் இலவச வைத்தியசாலைக்குச் சென்று நோயாளர்களை நன்று நோக்கிச் சிகிச்சைச் செய்வார். பின்னர் மலையுச்சியிலுள்ள வித்யாசாலையில் மாணவர் மத்தியிற் காணப்படுவார். அதன் பின்னர் தமது ஆச்சிரமத்தையண்டி யுள்ளன பல்கலைக் கழகத்தில் யோக சாதனைகள், வேதாந்த போதனைகள் நடத்துவார். இங்கே உலகின் பல தேசங்களிலிருந்தும் வந்துள்ள மாணவ வேதபரம்பரை முறையில் ஆத்ம ஞான ஆராய்ச்சி செய்வர். இவ்வாறே சுவாமி சிவானந்தர் தமது ஆநந்தகுடீர் என்னும் ஆச்ரமத்தில் அரிய தொண்டு புரிந்து வருவதைக் காணப்பெறுவது அரிய காட்சியாகும். உலகிலுள்ள எல்லாச் சமயங்களுக்கு மிடையில் ஒற்றுமையையும் நல்லிணக்கத்தையும் நிலைநாட்டும் நன்னோக்கத்துடன் சுவாமி சிவானந்தா இரு பெரிய ஸ்தாபனங்களை இங்கேயமைத்து நடத்துகின்றனர் 1—சர்வசமய சமமேளனம். 2—சர்வதேச சாது சங்கம். அன்றியும் இங்கே ஒரு யோகசாலை யுண்டு. அதன் உதவியால் யோக சாதனை முறைகளை நடைமுறையில் கற்பது மிக இலகுவாகும்.

நல்வாழ்வில் ஆர்வம்

இவைகளன்றிப் பொதுமக்களின் நல்வாழ்வில் இவர்க்கு மிக ஆர்வமுண்டு. பொதுமக்களின் நாளாந்தரத்தில் அடையும் கஷ்டங்களை நிவிர்த்தி செய்வதில் மிக்க அபேட்சை

யுடையார். சென்ற 20 வருடங்களாக அததுறையில் அரியதொண்டு இவர் புரிந்து வருவது யாவருமறிந்த விஷயம். நற்போதனைகளைப் புரிவதுமன்றி, அரிய நூல்களை எழுதி வெளியிட்டதுமன்றி, தமது உதார வாழ்க்கையால் உண்மையான புராதன இந்திய வாழ்க்கை எவ்விதமென்பதை நன்கு காட்டி வைத்துள்ளார். அவர் எழுதி வெளியிடும் விஷயங்கள் எல்லோருக்கும் ஆத்மக் கிளர்ச்சியை உண்டாக்குமென்பதில் ஐயமின்று. இவர் வெளியிட்ட நூல்கள் நூற்றுக்கு மேலாகும். இந்தியாவில மாத்திரமன்று மேலைத்தேச நாடுகளிலும அவைகட்கு விசேஷ மதிப்பும் ஆதரவும் இருந்து வருகின்றது. ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் அவரது நூலைப்பற்றி அபிப்பிராயங் கூறுமிடத்து, 'பரிசுத்தமான மாற்றுயர்ந்த பொன்னையடித்துச் செய்யப்பட்ட பல வடிவங்கள். இவரின் சகதி மிகவும் அபாரமானது' என்றார். காங்கிரஸ் தலைவராகும் பட்டாபி சீதாராமய்யா என்ன சொன்னார்? 'உஙகள் புத்தகங்கள் எப்போதும் எனது பககத்தில் இருக்கும். பொதுவாக எல்லா விஷயங்கட்கும் அவைகளை நான் புரட்டிப் பார்க்கவேண்டியதாகின்றது. புராதன ஞானங்கட்கும் அவை களஞ்சியம போன்றன! தற்கால மக்கட்கு நல்லறிவினை உண்டாக்கக்கூடியன.'

அமெரிக்காவிலுள்ள சில பல்கலைக்கழகங்கள் இவர் நூல்களை உயர்தர வகுப்புகட்குப் பாடப் புத்தகங்களாக அமைத்துள்ளன.

**அவர் ஏற்ற பணி**

அற்புதமான மனிதர் சுவாமி சிவாநநதர் என்பதை நம்மனதில் பதித்துக் கொள்ளல் வேண்டும், உண்மைச் சந்நியாசி, உண்மையான யோகி என்பவர்கள் தமது ஆற்

றலை வெளிபபடையாகக் காட்டுவது அவசியமென்றார். தேடிச் செல்வோருக்கு மாத்திரம் தமது சமய வுணர்ச்சியை ஆற்றலை, காணபித்தால் அது வீணாய்பபோய்விடும். ஆனால் உண்மையை மறைத்து வைக்கவியலாது. சுவாமி சிவாநந்தரின் ஒப்பற்ற, ஆச்சரியமான, அந்தரங்கமான, அரிய ஆத்ம சக்தியின் பெருமையைக் குறித்து, இடைவிடாது ஆச்சரியத்தோடு கூடிய நம்பிக்கை வாக்குகள், புகழுரைகள் உலகின் நாலா பக்கங்களிலுமிருநது வந்து கொண்டிருக்கின்றன. அவரது அற்புத சகதியைப் பற்றி இவரை நேரே சநதிப்பவர்கள் கேட்டால மௌனஞ் சாதித்து விடுகின்றனர். வேறு சில அரிய சந்தர்ப்பங்களில் இவர் புன்னகை செய்து மகிழ்ச்சியுடன் தாழ்மையாக, "எல்லாம் கடவுள் அருள் தான்" என்று கூறிவிடுவர்.

இப்படியாகச் சுவாமி சிவானநதர் தமது அபார சக்தியை உபயோகித்து இந்தியாவின் பெருமையை எங்கும் அறியச் செய்து வருகின்றனர். நவ நாகரிக உலகத்துக்கு உற்ற முறைகளையே இவர் உபயோகப்படுத்துவது இங்கே குறிப்பிடாதிருக்க முடியாது. யோக சாதனைகளை விளககும் படங்கள, இசைத்தட்டுகள், ஒலிபரப்பிகள், மாசிக வாசிகப் பத்திரிகைகள் என்பனவே இவர் உபயோகிக்கும் சாதனங்களாகும்.

## ஒரே யோருவழி

கடவுளறிவும், உலக சமாதானமும், அன்பும் உலகமெங்கணும் பரப்பவேண்டு மென்பதுதான் இவரது பிரதம நோக்கமுங் கொள்கையுமாகும். சமாதானத்தை நிலைப் படுத்தலும், நல்லிணக்கத்தை யுண்டாக்கலும், இன்று

போல் என்றும் உலக வல்லரசினர்க்கிடையில தேவைப் பட்டதா யிருநதிருக்கவில்லை. சன்மார்க்கங் குன்றிப பெரிய கொடிய அழிவுகள் உணடாவதற்குக் காரணமாகும மூன்று வது உலக மகாயுத்தம் தடுக்கப்பட வேண்டுமாயின் ஒரே யொரு வழிதான் அனுட்டிக்க இருக்கிறது. பீஹாராமாகா ணத்தேசாதிபதி கூறியதாவது: "உலகம் கொநதளித்துக் கொண்டிருக்கிறது. இநத சமயத்தில் சிவானநதா போன்ற ஆத்மயோகிகள் தமது அபார சக்தியை உபயோகிததாற் றுன மககளுக்கிடையில் எழுந்த கலகஙகள் சாநதியடைநது அவர்களுக்கிடையில் சகோதரத்துவம நிலைநாடடப் படலாம."

## சுற்றுப்பிரயாணம்

மனித சமூகம் மீட்சியடைய வேண்டுமாயின் யாவரும் இவர் போதனைகளைக் கேட்டு அதன்படி நடக்கச் சித்தங் கொள்ளவேண்டும். தமது உண்மை உரைகளை விரைந்து மக்கள் யாவருக்கும் விளக்கவேண்டிய அவசியத்தை இவர் நன்கு உணர்ந்துள்ளார். அந்த காரணத்தால் ஆன்மகோடி களின் ஈடேற்றத்தில் இரங்கி இந்தியா எஙகணுஞ் சென்று தமது நற்போதனையை வழஙக உடன்பட்டுளளார். அவரு டைய யாத்திரை, சென்ற மாதம் 9-ம தேதி சனிவாரம் ஆரமபமாயிற்று. அன்றுரின் 64-வது பிறநததின திகதிக்கு முதற்றினமாகும். பிரதானமாக இருஷிகேசம், கல்கத்தா, சென்னை, பம்பாய், டில்லி, இலஙகை முதலிய இடஙகளைத் தரிசித்து வருகின்றார்.

—ஈழகேசரி, 8—10—50

## சுவாமி சிவானந்தரின் இலங்கை விஜயம்

பொதுமக்களிடையே ஆத்மீக உணர்ச்சியை ஊட்டும் நோக்குடன் இம மகான சென்ற மாசம் 9-ந் தேதி யன்று ரிஷிகேசத்திலுள்ள தமது ஆசசிரமததிலிருநது அகில-இநதிய யாத்திரை செய்வதற்காகப புறபபட்டனர். அயோத்தியா, காசி, கயா, முதலிய ஸ்தலஙகளில அடியார் கூட்டத்துடன் வழிபாடுகள செய்துவிட்டுச் செப்டம்பர் மாசம 30-ந் தேதி சென்னை சோநதபோது நகரசபையின ரால ஒரு வரவேற்பு உபசாரம அளிககப்பட்டது. அகடோ பர் 4-ந் தேதி அண்ணுமலைப் பலகலைக் கழகத்திலும, சிதம் பரம் நடராஜப் பெருமான் சந்நிதியிலும் பிரார்த்தனை, ஆரா தனைகள் விசேடமாக நடநதன.

தெற்கிலுள்ள ஏனைய பல ஸ்தலங்களைத் தரிசிததுக் கொண்டு மஹாளய அமாவாசை தினத்தன்று (11-10-50) இராமேச்சுவரத்தில் கங்கோத்திரியிலிருந்து கொண்டுவரப் பட்ட தீர்த்தத்திைல் அபிடேகமும் விசேட ஆராதனையும் முடித்துக்கொண்டு, அன்று மாலையே தனுஷகோடியில் கப்பலெடுத்து அடுத்தநாட் காலை (வியாழக்கிழமை) கொழும் பில் கோட்டை புகைரத ஸ்தானத்தில், அன்பர்கட்குக் காட்சி யளிப்பார். அவர் கொழும்பில் தங்கியிருக்கும் இரு தினங்களின் நிகழ்ச்சி அட்டவணை சென்ற வார ஈழகேசரி யில் வெளிவந்துள்ளது. யாத்திரையைத் தொடர்ந்து தனுஷ்கோடி யிலிருந்தே 14-10-50 ஆரம்பிக்க ஏற்பாடுகள் முன்னரேயே நிச்சயம் செய்த படியாற் சுவாமிகள் இலங் கையில் வேறு எப்பாகத்திற்காகவது செல்லக் காலம் போதாதெென விசனத்துடன் தெரிவித்துவிட்டதாக அறி

கின்றோம். அவரது இமயம் நோக்கிய யாத்திரை கன்னியா குமரி, திருவனந்தபுரம், மைசூர், பம்பாய், டில்லி மார்க்கம் நவம்பர் மாசம் 8-ந் தேதி முடிவு பெறுமென இலங்கை சிவானந்தர் வரவேற்புச் சபையின் காரியதரிசி திரு க. இராமச்சந்திரன் தெரிவிக்கின்றார் இச்சபையின் தலைவராகப் பணியாற்றுகின்ற சர் கந்தையா வைத்தியநாதன் அவர்கட்கு இந்துக்களின் நன்றி உரித்தாகும்.

—ஈழகேசரி.

இவ்வளவு ஆடம்பரமான ஏற்பாடுகளோடு நம் ஞான வள்ளலை எதிர்பார்த்திருந்த கொழும்பு பக்தகோடிகள் ஸ்ரீ சுவாமிகள் கொழும்பு ஸ்டேஷனில் வந்து சேர்ந்தவுடன் என்ன செய்கிறார்கள் என்பதையும் பத்திரிகைகளின் மூலம் விவரித்திருப்பது காண்க.

——

## சுவாமி சிவானந்தாவுக்கு பக்தி ததும்பிய வரவேற்பு

### கொழும்பு கோட்டை ஸ்டேஷனில் கண்கொள்ளாக் காட்சி

*ஸ்ரீ கைலாசநாதர் ஆலயத்தில் நடைபெற்றகூட்டுப் பஜனை.*

கொழும்பு, அக். 13—“ அரோகரா ” என்ற பக்தி கோஷங்களுக்கிடையே, சுவாமி சிவானந்த சரஸ்வதி தமது யாத்ரா மண்டலியுடன் நேற்றுக் காலை சரியாக 8மணிக்கு தலைமன்னார் ரயிலில் கொழும்பு கோட்டை ஸ்டேஷன் வந்து சேர்ந்தார்கள். மேயர் டாக்டர். குமாரன் ரத்னம், வெளி நாட்டு இலாகா நிரந்தரக் காரியதரிசியும், வரவேற்புக் கமிட்டித் தலைவருமான சர். கே. வைத்தியநாதனும், சுவாமி

களுக்கு மாலை போட்டு, பாதங்களைத் தொட்டு வணங்கி வரவேற்றனர்.

கோட்டை ஸ்டேஷனில் அதிகாலை முதல் ஜனங்கள் கூட ஆரம்பித்துவிட்டார்கள். இது ஒரு கோவில் உற்சவமோ என்று சொல்லும் முறையில், ஸ்டேஷனை மகாதோரணங்களாலும், புஷ்பங்களாலும் அலங்கரித்திருந்தனர். ஒவ்வொரு தூணிலும் ஸ்வாமியின் திருவுருவப்படத்தை ஒட்டியிருந்ததுடன், பூங்கொத்துக்களால் சிங்காரித்திருந்தார்கள். பூர்ண கும்பமும் குத்துவிளக்கும் மங்களகரமாக ஏற்றிவைத்திருக்கப்பட்டது.

சுவாமி சிவானந்தா வரும் தலைமன்னார் ரயில் 8 மணிக்கு வருகின்றது என்ற தமிழ், சிங்களம், ஆங்கிலம் இம்மூன்று மொழிகளிலும் ஒலிபெருக்கிகள் மூலம் ரயில்வே அதிகாரிகள் ஒரு மணி நேரத்துக்கு முன்பிருந்தே அறிவித்து வந்தனர். வரவர கூட்டம் திரண்டு விட்டது. வேறு பல ரயில்களில் வந்தவர்களும் சுவாமியை தரிசிக்கக் கூடினர்.

முதல் நாள் இரவு நல்ல மழை. நேற்றும் மப்பும் மந்தாரமுமாக இருந்தது. சுவாமிகள் வருவதற்கு 10 நிமிடத்துக்கு முன் வருணன் சற்றே பூ மாரி பொழிந்து நின்றுவிட்டான். அதனால் மக்கள் சிரமமின்றி, சுவாமிகளை தரிசிக்க வசதியாக இருந்தது.

ரயிலிலிருந்து இறங்கும்போது சுவாமிகள் முகம் சற்றே களைத்துப் போய் இருந்தது. ஆனால் அங்கு அமைந்திருந்த விசேஷ மேடை மீதேறி, பக்தி வெள்ளத்தில் மூழ்கிய ஜனங்கள் பஜனைவளி செய்வதைக் கண்டதும், அவர்

முகம் புதிய ஒளிபெற்று மலர்ந்தது. சுவாமிகளும் பஜனையில் கலந்து பாடினார். அங்கு கூடியிருந்தவர்களனைவரையும் ஆசீர்வதித்து, நடந்து படியேறி, மேல் பாலத்தின் வழியே நடந்து, ஸ்டேஷன் முன்புறத்தில் காத்திருந்த மக்களுக்குக் காட்சி அளித்தார்.

அங்கிருந்து, கப்பித்தாவத்தை ஸ்ரீ கைலாசநாதர் கோவிலுக்குச் சென்று சுவாமி தரிசனம் செய்து, மண்டபத்தில் சற்றே அமர்ந்தார். அவரது சிஷ்யர்களில் ஒருவர் சுவாமியின் கட்டளைப்படி ஒரு பஜனையை சில நிமிஷங்கள் நடத்தினார். ஸ்டேஷனில் பக்தியுடன் அவ்வளவு மக்கள் கூடியிருந்ததைக் கண்ட சுவாமிகளுக்கும், உள்ளம் பூரித்ததென்றும், மக்கள் தங்களுக்குள்ளேயும் வெளியிலும் ஆண்டவனைக் கண்டும், உயரிய லட்சிய வாழ்க்கை நடத்தி உய்ய வேண்டுமென்பதே சுவாமிகளின் நோக்கமென்றும், தமிழிலும் ஆங்கிலத்திலும் பேசினார்.

சுவாமிகளின் உபதேசங்களடங்கிய ஒரு பிரசுரம், அங்கு கூடியிருந்தவர்களுக்கு வழங்கப்பட்டது. ஜனங்கள் சுவாமிகளின் பாதங்களைத் தொட நெருங்கி வந்தனர். கூட்டத்தை ஒதுக்கி சுவாமிகள் காரில், திரு கே. வைத்தியநாதனுடன் ஹார்டன்பிளேஸிலுள்ள ஸ்ரீமதி சிவானந்தம் தம்பையாவின் பங்களாவுக்குச் சென்றார். சுவாமிகளுடன் மொத்தம் 17 பேர் வந்திருக்கின்றார்கள்.

போலீஸ் ஏற்பாடுகள் எல்லாம் வெகு கச்சிதமாய் இருந்தன.

—வீரகேசரி, 13-10-50.

---

## ஹிமாசல யோகிக்கு கொழும்பு முனிசிபல் சபையின் வரவேற்புபசாரம்

### சுவாமி சிவானந்தரின் ஆத்மோபதேசம்

*திரள் திரளான மக்கள் சுவாமியை தரிசித்தனர்*

சுவாமி சிவானந்தாவின் பிரசங்கத்தைக் கேட்க ஆயிரக்கணக்கான மக்கள் நேற்று மாலை கொழும்பு நகரமண்டபத்தில் வந்திருந்தனர் அங்கு இலங்கை வாழ் ஹிந்துக்கள் சுவாமி சிவானந்தாவுக்கு பொது வரவேற்பு ஒன்று அளித்தனர்.

இலங்கை மக்களின் வரவேற்பை ஏற்க சுவாமி சிவானந்தர் மண்டபத்திற்குள் நுழைந்தபோது மக்கள் அனைவரும் எழுந்து நின்று "ஹரோ ஹரா" கோஷத்துடன் வரவேற்றனர்.

நேற்றுக் காலை சுவாமிகள் தலைமன்னார் கோச்சு மூலம் கொழும்பு வந்து சேர்ந்த போது சுமார் 3000 மக்கள் கோட்டை ஸ்டேஷனில் குழுமி "ஹரோஹரா" கோஷத்துடன் அவரை வரவேற்றனர். சுவாமிஜி கோச்சை விட்டு இறங்கியதும் சர் கந்தையா வைத்தியநாதன் தலைமையின் கீழ் ஸ்ரீ சிவானந்தா யாத்ரா மண்டல வரவேற்புக் கமிட்டியும் கொழும்பு மேயர் டாக்டர் குமாரன் ரத்னம் வரவேற்றனர். ஸ்டேஷனை விட்டு புறப்பட்டு சுவாமிஜி கப்பிதவத்தியிலுள்ள கைலாசநாத சுவாமி கோவிலுக்கு விஜயம் செய்து பிரார்த்தனை நடத்தினார்.

## முனிசிபல்சபை வரவேற்பு

சுவாமி சிவானந்தாவுக்கு கொழும்பு முனிபல்சபை நேற்று பிற்பகல் 3 மணிக்கு ஒரு வரவேற்புப்பத்திரம் வாசித்தளித்தது இவ்வரவேற்பு வைபவத்தில் விசேஷ அழைப்பின் பேரில் நகர பிரமுகர்கள பலரும் கலந்துகொண்டனர். சுவாமியைக் காண ஏராளமான மக்கள சபையின் நாலா பக்கங்களிலும் குழுமியிருந்தனர். சபை மண்டபத்தில் மேயா டாக்டர் குமாரன் ரத்தினத்திற்கு இடது பக்கத்தில் பிரதம மந்திரி திரு. டி. எஸ். சேனநாயகாவும், கண்டி குருணுகல் மேயர்களும் அமர்திருந்தனர். வெளிநாட்டு ஸ்தானீகராலய அதிகாரிகளும் பிரசன்னமாயிருந்தனர்.

சுவாமியை சபைக்கு வரவேற்று பேசுகையில் டாக்டர் குமாரன் ரத்னம் சுவாமிஜியை வரவேற்க ரெயில்வே ஸ்டேஷனிலும் நகர மண்டபத்திலும் கூடிய ஏராளமான கூட்டத்தைக் குறிப்பிட்டார். சுவாமியின் ஆற்றலும், புகழும எவ்வளவு தூரம பரவியிருக்கிற தென்பதற்கு இது ஒரு அத்தாட்சி என்று அவர் கூறிஞர். சுவாமிஜி அவருடைய அகில இந்திய சுற்றுப்பிரயாணத் திட்டத்தில் கொழும்பையும் சேர்த்துக் கொண்டதற்கு நன்றி கூறிய மேயர் சுவாமி அவர்கள கொழும்பில் இரண்டு நாட்களே தங்கவிருக்கிருரென்றும அறிய நாங்கள் வருந்துவதாகக் கூறிஞர்.

அதன் பின்பு மேயர் வரவேற்பு பத்திரத்தை வாசித்து சுவாமிக்கு அளித்தார்.

## சுவாமிஜியின் பதில்

சுவாஜி ஆங்கிலத்தில் எளிய நடையில வரவேற்பு உபசாரத்திற்குப் பதிலளிக்கையில் முதலில் " ஓம் " என்ற

பிரணவ மந்திரத்தின் உட்கருத்தை சுருக்கமாக விளக்கிக் கூறினார். இராமர், சீதை, ஹனுமான், புத்தர் போன்ற பெரியோர்கள் வந்து பாதந்துளி பட்ட இலங்கைக்கு விஜயம் செய்ய தனக்குச் சந்தர்ப்பம் கிடைத்ததுப் பற்றி தான் மிகவும் மகிழ்ச்சியுறுவதாகக் கூறிய சுவாமிஜி இலங்கையின் பெருமையை விஸ்தாரமாக எடுத்துக் கூறினார். மாணிக்க கங்கையும் சிவனடிபாதம், கதிர்காமம் போன்ற க்ஷேத்திரங்களுமுள்ள புனித இலங்கைக்கு தனக்கு விஜயம் செய்ய சந்தர்ப்பம் கிடைத்ததற்கு தான் மகிழ்ச்சியடைவதாக சுவாமிஜி கூறினார்.

முனிசிபல் சபை வரவேற்பு முடிந்ததும் நகர மண்டபத்தில் சுவாமிஜிக்கு தேனீர் விருந்து அளிக்கப்பட்டது. விருந்தில் கலந்து கொண்ட பிரமுகர்கள் சுவாமிஜிக்கு அறிமுகப்படுத்தி வைக்கப்பட்டனர்

## பொதுஜன வரவேற்பு

"எல்லா மதங்களின் அடிப்படைத் தத்துவங்களும் ஒன்றே. அத்தியாவசியமற்ற விஷயங்களில் தான் பேதங்கள் இருக்கின்றன பிரதான அம்சங்களில் அபிப்பிராய பேதமே கிடையாது. எந்த ஒரு மதமும் மற்றதைவிட உயர்ந்ததில்லை. விஷயம் தெரியாதவர்கள் தான் இதுபற்றி தகராறு செய்வார்கள்" என்று சுவாமி சிவானந்தஜி நேற்று மாலை நகர மண்டபத்தில் அவருக்கு அளிக்கப்பட்ட பொதுஜன வரவேற்புக்குப் பதிலளிக்கையில் கூறினார்.

சுவாமிகள் தமது பிரசங்கத்தில் மேலும் கூறியதாவது:-

"மதம் விவாதத்துக்குரிய ஒரு விஷயமல்ல. மதமென்பது செயல் முறையில் கொண்டுவரக் கூடியதாக இருக்க வேண்டும். எல்லா மதங்களின் லட்சியமும் ஒன்றே.

உண்மை பேசுங்கள். எலலோருக்கும் சேவை செய்யுங்கள். உங்கள் மனதிலுள்ள அழுக்குகளை அகற்றுங்கள். நல்லொழுக்கங்களை மேற்கொள்ளுங்கள். எல்லா மதங்களும இதையே போதிக்கின்றன. திட்டமிட்டு வாழ முற்படுங்கள வாழ்நாள் முழுவதும் உலக ஆசைகளில் ஈடுபட்டிராமல் அநதிய காலததிலாவது பிரார்த்தனை செய்ய முற்படுஙகள

தினசரி வாழ்க்கையில நீங்கள் சிறுக உண்டு, சிறிது தூஙகி, சிறிது பிரார்த்தனை செய்யக் கற்றுக்கொள்ளுங்கள். உஙகள தவறுகளை எடுத்துக காண்பிப்பவர்பால் ஆத்திரம கொளளாமல் நன்றிகூற முன்வாருஙகள். பல்வேறு மதஙகளைப்பற்றியும மகான்களின் போதனைகளைப்பற்றியும் படித்துச சிநதிகக முயற்சி செய்யுங்கள் ”

அதன பின்பு சுவாமிஜி எல்லோரும் எல்லாத் துறைகளிலும மிதமாக நடந்துகொள்ள வேண்டுமென்பதை வற்புறுத்திதான் இயற்றியுள்ள இரு ஆங்கிலப் பாடலகளைப் பாடிக்காண்பித்தார். சுவாமிஜி பிரசங்க இறுதியில் “ ராம நாம பஜனை ” நடத்தினார்.

## யோகாசனங்கள்

கூட்ட ஆரம்பத்தில் சுவாமிஜியின் சிஷ்யர்களில ஒருவர் யோகாசானங்களைக் கூட்டத்தினருக்கு செய்து காண்பித்தார

ஸ்ரீ சிவானநதா யாத்ரா மண்டலி இலங்கை வரவேற்புக் கமிட்டியின் சார்பில சர். கந்தையா வைத்தியநாதன் சுவாமிஜிக்கு ஒரு வரவேற்பு பத்திரம் வாசித்தளித்தார். சா. கந்

தையா வைத்திய நாதன் ஒரு சொற்பொழிவு நிகழ்த்துகை யில் மதத துறையில் இலங்கையும் இநதியாவும் ஒன்றே என்பதை வற்புறுத்திக் கூறினார்.

அதன் பின்பு சுவாமிஜி வெள்ளவத்தை ராமகிருஷ்ண மடததிற்கு விஜயம் செய்து அங்கு அளிக்கப்பட்ட வர வேற்பை ஏற்றுக்கொண்டார்.

—o—

## "பணத்தை நம்பவேண்டாம்; ஆண்டவனை நம்புங்கள்"

### ராமகிருஷ்ண மிஷனில் சுவாமி சிவானந்தா

கொழும்பு, அக. 13 "பாஙகியில போட்டுள்ள பணத்தை நம்பியே பலர் வாழ்கினறனர். அஸ்ஸாம பூகம் பததில கோடீஸ்வரர்கள் திடீரெனப பிச்சைககாரர்களாகி விட்டனா. ஆகவே வெறும் பணத்தை நம்பி வாழாமல், ஆண்டவனை நம்பி வாழவேணடும். 'நான்' என்ற ஆண வத்தை விட்டு ஆண்டவனுக்காகவே வாழ்வோமாயின நமக்கு வேண்டியதெல்லாம ஆணடவன் கொடுப்பான். இரணடு மோட்டார் இருநதால் நானகு மோட்டார் கொடுப் பான். துறவு என்பது எல்லாவற்றையும் விட்டுவிட்டு காட் டுக்குச் செல்வதல்ல. 'நான்' என்ற அகமபாவத்தை விடு வதுதான உண்மையான துறவு" என்று சுவாமி சிவானந்தா நேற்றிரவு ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன மண்டபத்தில் பேசுகை யில் குறிப்பிட்டாா. மணடபத்திலும வெளியிலும் தாங்க முடியாத கூட்டம். இதுவரை இவ்வளவு பெரிய கூட்டம் அங்கு நடநததில்லை. ஜஸ்டிஸ் ஸி. நாகலிங்கம தலைமை வகிததார்.

வாழ்க்கையில் ஒரு லட்சியமிருக்க வேண்டுமென்றும் ஹிட்லர், முஸோலினி, காந்திஜி, சிவாஜி இவர்கள் எல்லாம் மறைந்து விட்டதால் வாழ்வு நிச்சயமில்லை என்றும் ஆகவே தியானம், பஜனை முதலியவை தினசரி கொஞ்சநேரமாவது செய்து அன்பை வளர்த்து பிறருக்காக வாழ முயலவேண்டுமென்றும் கூறி ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் செய்து வரும் அருமையான சேவைகளைப் பாராட்டினார்.

ஆசிரம பஜனையும் நடைபெற்றது. சுவாமி சித்தாத்மானந்த வந்தனோபசாரம் கூறியபின் கூட்டம் இனிது முடிந்தது.

—o—

## ஓங்காரத்திலிருந்தே அண்ட சராசரங்களும் உதித்தன

### ஆத்மாவிற்குள் இருக்கும் ஆண்டவனை அடைவதற்கு சரியான வழி

*கொழும்பு முனிசிபல் சபை வரவேற்பில் சுவாமி சிவானந்தர் பிரசங்கம்*

கொழும்பு, அக்டோபர் 13 முனிசிபல் சபையின் நாலா பக்கங்களிலும் பிரமுகர்கள் பிரசன்னமாயிருந்தனர். ரைட் ஆனரபிள் திரு. டி. எஸ். சேனநாயகாவும், கண்டி, காலி மேயர்களும் கொழும்பு மேயரின் இடது புறத்தில் அமர்ந்திருந்தனர். வலது புறத்தில் காவி வஸ்திரத்தாலான நீண்ட அங்கியையும், அங்கவஸ்திரத்தையும் தரித்து சுவாமிஜி அமர்ந்திருந்தார்.

கொழும்பு மேயா டாக்டர் குமாரன் ரத்தினம் வர வேற்பு உபசாரத்தை வாசித்தளிக்கும் முன்னர் முன்னுரையாகப் பின்வருமாறு கூறினா :-

"இன்று இங்கு கூடியிருக்கும் ஜனத்திரளைப் பார்க்குமிடத்தும், காலையில் ரயில்வே ஸ்டேஷனில் கூடியிருந்தவர்களைப் பார்க்குமிடத்தும் சுவாமிஜி இலங்கைக்கு வருவதற்கு முன்னால் அவருடைய புகழ் எவ்வளவு தூரம் இங்கு பரவியிருக்கிறதென்பது நனகு புலனாகின்றது. போர்களாலும், பிணக்குகளாலும் பிளவுபட்டிருக்கும் இன்றைய உலகில் சமாதானம், அமைதி ஆகியவற்றின் உறைவிடமாக விளங்கும் இவ்வழகிய தீவுக்கு தங்களை நாம் அன்புடன் வரவேற்கிறோம்"

(வரவேற்பு உபசாரப் பத்திரத்தின் முழு விபரமும் வேறொரு பக்கத்தில் பிரசுரமாகியுள்ளது.)

சுவாமிஜி மெல்லென எழுந்து சுற்றும் முற்றும் ஒரு கணம் பார்த்தார். அவருடைய பார்வையில் அன்பும் கனிவும் நிரம்பியிருந்தது. நான் பெற்ற இன்பத்தைப் பெற வாருங்கள் என்று அழைப்பது போல் இருந்தது. 'ஓம்' என்ற பிரணவ மந்திரத்தை உச்சரித்தபடியே சில கணம் அந்தர் முகத்தியானம் செய்தார். சபையில் இருந்த சிலரும் ஓங்கார சப்தத்தில் ஈடுபட்டு பிரணவத்தை உச்சரித்தனர். கம்யூனிஸ்டு அங்கத்தவர்கள் உட்பட ஏகமனதாக சுவாமிஜிக்கு நகர வரவேற்பு அளிக்க நிச்சயித்த முனிசிபல் சபை மண்டபத்தில் தூய்மையான அமைதி நிலவிற்று. படம் பிடிப்பவர்களின் 'கிளிக்' என்ற சப்தமும் மின்னல் ஒளியுமே சூழ்நிலையை மேலும் முக்கியமாக்கியது.

## ஓங்காரத்தின் மகத்துவம்

சுவாமிஜி பின்வருமாறு கூறினார்: உலகோற்பத்திக்கு முன்னால் ஓம் என்ற சொல்லே இருந்தது. அச்சொல்லினின்றே அண்டசராசரங்களும் தோன்றின. 'ஓம்' என்ற சொல்லில் இருந்துதான் எல்லா மொழிகளும் பிறந்தன.

இலங்கை ஒரு புனிதமான தீவு. இராமபிரான், இலட்சுமணன், சீதை, ஹனுமான், புத்தபிரான், அர்ஹாத்தர்கள் ஆகிய இன்னோரன்ன மகான்களின் பாத தூளி பட்ட இடமல்லவா இலங்கை! சிவஒளி பரவும் கதிர்காம க்ஷேத்திரமும் திகழும் இடமல்லவா இலங்கை! பல வினைகளையும் தீர்க்கும் மாணிக்க கங்கை பாயும் இடமல்லவா இலங்கை! பல்லாண்டுகளாக எத்தனையோ அற்புதங்கள், சுப்ரமண்யப் பெருமான் சோதி நடனம் புரியும் கதிர்காமத்தில் திகழ்ந்திருக்கின்றன. நாலு வைத்தியரும் இனிமேல் நம்புதற்கில்லையென்று கைவிடப் பட்டவர்களும் இழந்த ஆரோக்கியத்தை மீண்டும் அப்புனித ஸ்தலத்தில் பெற்றிருக்கிறார்கள்.

ஏகனை, முதல்வனை இந்திரியங்களைக் இவ்வண்ணத்தின் என்று குறுகிய மனத்தைக்கொண்டு அளந்து அறிந்து விட முடியாது. சத்தாகிய அப்பொருள் என்றென்றும் உள்ளது; சாசுவதமானது. "அகம் ஸ்மி" 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வை நாம் மறுக்க முடியாது.

## ஆத்மாவினுள் இருப்பவரே ஆண்டவன்

இறந்துபோய் விட்டதாக சிறிது நேரம் கண்ணை மூடிக்கொண்டு யோசியுங்கள்; (இங்கே சுவாமிஜி கண்களை மூடி பாவனை செய்து காண்பித்தார்) செத்த உடல் பக்கத்தே

இருக்கிறதாகவும் நீங்களப்புறப்பாக இருப்பதாகவும் உணர்ச்சி எஞ்சியிருக்கிறது. கனவு காணும்பொழுது ஓரளவு உணர்ச்சியை இழந்தபோதிலும், கனவில் நாம் அழவும் சிரிக்கவும் செய்கிறோம். இவற்றினின்று என்ன புலனாகின்றது, ஆத்மா என்றும் உள்ளது. அதனுள் ஒளிர்பவனே இறைவன்.

இறைவன் சச்சிதானந்த 'சொரூபிசத்' என்றால் என்று முள்ளது; சாசுவதமானது. 'சித்' என்றால் உணர்ச்சி, மற்றது ஆனந்தம். ஒரு பொருள் இருந்தால் அதற்கு உணர்ச்சி யிருக்கும்; உணர்ச்சியிருக்குமிடத்தில் ஆனந்தம் நிலை பெறும். துக்கம் இருப்பதின் காரண மென்ன? பூரணத்துவம் பெறாத இடத்தில்தான் துன்பம் இருக்க முடியும். பூரணமான சச்சிதானந்தப் பொருளே இறைவன் அவனே நீங்கள் "தத்துவமஸி" "நீ தான் அது."

பாலில் வெண்ணெய் போல, விறகில் தீ போல, விதையில் எண்ணெய்போல, இறைவன் உங்களுக்குள் உறைகிறான்.

## ஒழுக்கமே பக்தி மார்க்கத்தின் வழி

வாசிகசாலைகளிலிருந்து ஏடுகளைப் புரட்டுவதினால் இறைவனை உணர்ந்து விடமுடியாது. நல்லொழுக்கம் வேண்டும் ஆத்ம விசாரணையினால் தான் நல்லொழுக்கம் பிறக்கும். ராணுவ சேவைக்கே ஒழுக்கம் பிரதானமா யிருக்கும் பொழுது ஆத்மீகசேவைக்கு ஒழுக்கம் எவ்வளவு முக்கியம். ஆத்ம விசாரணை நிஷ்காமிய கர்மயோகம், உபாசனை, பிராணயாமம் ஆகியவைமூலம் மனமென்னும்

குரங்கை அடக்கி உள்ளுக்குள்ளே உள்ள மாணிக்கத்தை அடையலாம். மனமென்னும் கள்வன் இம்மாணிக்கத்தை உள்ளுக்குள்ளே ஒளித்து வைத்திருக்கிறான். மனமாசைப் போக்கினால் தான் மாணிக்கத்தை மீண்டும் பெறலாம்.

சிற்றின்ப சொகுசுகளும் இன்பங்களுமே துன்பத்தின் பிறப்பிடமாகும் ஆனதினால் ஐம்புலன்கள் வழியே செல்லும் மனதை ஏகாக்கிர சிந்தனை மூலம் ஒருவழிப் படுத்தி இறைவனுடன் லயிக்கச் செய்ய வேண்டும்.

அல்லா, புத்தா ஆகிய பெயர்கள் எல்லாம் ஒரே தன்மையன அகண்ட, அத்துவைத, பர, சித்துணர் வைப் பெறுவதே வேதாந்தத்தின் போதனையாகும். வேதாந்தம் ஒன்றே எல்லாச் சமயங்களைகளையும், மக்களை யும் ஐக்கியப்படுத்தி ஒன்றாக இணைக்கவல்லது.

கோபத்தை அடக்கி பற்றற்று தொழில் புரியுங்கள். அடக்கம் ‘அமரருள் உய்க்கும்’ என்பதை மறவாதீர்கள். ‘நீ தான் அது’ என்பதை மறவாதீர்கள். வேலையில்லாத் திண்டாட்டத்தினால் அவதியுற்றபோதிலும் பாங்கியில் பண மற்றிருந்தபோதிலும் அகண்ட பரிபூரண சச்சிதானந்த இறைவன் உள்ளுக்குள் உறைகிறான் என்பதை உணருங் கள். அதை உணரப்பெறறால் ஒன்றும் உங்களுக்கு தீங்கிழைக்க முடியாது.

நீங்கள் எல்லோரும் ஆரோக்கியமாகவும் சகல சுகங்க ளுடனும் இருப்பீர்களாக.”

இதன்பிறகு முனிசிபல் மண்டபத்தில் தேநீர் விருந் தளிக்கப்பட்டது. பிரதமரும், சர். வைத்தியநாதரும் பிரசன்னமாயிருந்தார்கள்.

மனிதனிடம் மலைவராது; மலையிடம்தான் மனிதன் வரவேண்டுமென்றும் சொல்லுவார். ஆனால் சுவாமி சிவானந்தர். இமயமலையிலிருந்து, இந்த தீவாந்தரத்திலுள்ள நம்மைப் பார்க்கவும், நமக்குத் தரிசனம் கொடுக்கவும் வந்துள்ளதைக் கண்டதும், "நம்மைப் பார்க்க மலையே வந்துவிட்டது" என்றார்.

"இமயமலைக்குப்போய் சுவாமியைக் காண நம்மில் எத்தனைபேருக்கு முடியும்? இதை உணர்ந்துதான சுவாமியே, நமக்குக் காட்சி அளிக்க நேரில் வந்துவிட்டார்; இமயமலை இப்படி வருமா? கம்பீரத்தில் இமயமலை போன்ற இவர், அன்பும் கருணையும் நிறைந்துள்ளதால், இமயமலைக்கும் மேம்பட்டவரே!" என்று அவர் வாதித்தார். இதற்கு என்ன பதில் சொல்வது?

சுவாமிகளைத் தரிசிக்க யாழ்ப்பாணம், மட்டக்களப்பு கண்டி பகுதிகள் முதலிய இடங்களிலிருந்தெல்லாம் ஏராளமானவர்கள் கொழும்புவந்துள்ளனர்.

வயதான தன் தாயையும், சின்னக் குழந்தையையும் கூட்டிக்கொண்டு வந்த ஓர் அன்பர், தாம் சுவாமியை தொட்டு வணங்கியதாகப் பெருமையுடன் சொன்னார். அவருடைய தாயும் கூட சுவாமியைத் தொட்டதாக உள்ளம் பூரிக்கத் தெரிவித்தார். ஆனால் எல்லாரும் சுவாமியை இப்படியே தொடுவதாயின், அவர் பாடு மிகவும் சிரமமாகிவிடும். ஆகவே தயவுசெய்து அவரைத் தொட முயற்சிக்காமல், தூரத்திலிருந்தே தரிசிக்கும்படியும் சிதம்பரத்திலே ஏகக்குழப்பம் ஏற்பட்டதுபோல் செய்யாமல், எல்லாரும் ஒழுங்காக அமைதியாக இருக்கவேண்டுமென்று வரவற்புக் காரியதரிசி பன்முறையும் ஒலிபெருக்கிமூலம் கூட்டத்தினரை வேண்டிக்கொண்டார்.

ஆனால் நமது மேயரே, சுவாமியின் பாதத்தைத் தொட்டு வணங்கி வழிகாட்டியதைப் பார்த்த மற்றவா களுக்கு காரியதரிசியின் உபதேசம் காதில் ஏறுமா? இந்தச சமயம் அவரைத் தொடாவிட்டால் வேறு எப்போதுதான் தொடுவது!

கூட்டத்தின் தள்ளுமுள்ளு தாங்க முடியவில்லை. சுவாமியின் பக்கத்திலேயே சா. வைத்தியநாதன் இருந்து வந்தார். காலையில் புதுப்பட்டு ஷர்ட்டும் வேட்டியும் கட்டியிருந்தார்.

பின்னர் கைலாசநாதர் கோவிலில் அவர் ஷர்ட்டு பின்புறத்தில் கிழிக்கப்பட்டிருந்தது. இதிலிருந்து, தள்ளு முள்ளுகள் எவ்வளவு பலமாக இருந்திருக்குமென்பதை உணரலாம.

போலீஸ் பந்தோபஸ்துகள பலமாக இருந்தது. என்றாலும் அவர்கள் என்ன செய்ய முடியும்? இந்து தொண்டர் படையை அமைத்தால், இவ்வித சமயங்களில் அவர்கள் நல்ல சேவை செய்யலாம். இவ்விஷயங்களில் கிறிஸ தவர்களைப் பார்த்து, இந்துக்கள் கற்றுக்கொள்ள வேண்டியது அதிகமுண்டு.

குருணாக்கல் சைவ மகா சபையினர் இன்று இரவு 9 மணிக்கு ஸ்டேஷனில் இந்தியா வண்டி வரும்போது, அதில் வரும ஸ்வாமியை தரிசித்து, அவருக்கு ஒரு உபசாரப் பத்திரம் வாசித்தளிக்க ஏற்பாடு செய்துள்ளனராம

—o—

# "புதிய சகாப்தத்தின் அருணோதயமாக வந்திருக்கிறீர்கள்"

## சுவாமி சிவானந்த சரஸ்வதிக்கு கொழும்பு மேயரின் நகர வரவேற்பு

கொழும்பு, அக்டோபர்—13, ரிஷிகேச தபோதனரான ஸ்ரீமத் சுவாமி சிவானந்த சரஸ்வதிக்கு கொழும்பு மேயர் டாக்டர் குமாரன் ரத்தினம், நேற்றுப் பிற்பகல் கொழும்பு முனிசிப்பல் சபையில கொழும்பு நகரமக்கள் சார்பாக வரவேற்பு உபசாரப பத்திரமொன்றை வாசித்தளித்தார். முனிசிப்பல் சபை அங்கத்தினர்களும், மற்றும் பிரமுகர்களும பிரசன்னமாயிருந்தனர்.

வரவேற்பு உபசாரப் பத்திரத்தில் பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது :—

"ஸ்ரீ லங்காவின் தலைநகராகிய கொழும்புமாநகருக்கு விஜயம்செய்துள்ள தங்களுக்கு, கொழும்பு நகர மக்களின் சார்பாக எமது மனமார்ந்த வரவேற்பை அளிக்கிறோம்.

"சமாதானம், அன்பு, சாந்தம், ஐக்கியம் ஆகியவற்றின் தூதராகவும், புதிய சகாப்தத்தின் அருணோதயமாகவும் நம்மிடையே இன்று வநதுள்ளீர்கள்.

"சாசுவதமான ஆன்மீக சாந்தியை அடையப்பெற்ற தாங்கள், கடந்த 20 வருடங்களாக உலகின் நாற்புறங்களுக்கும், ஒன்றுடனொன்று மோதுண்ணும் தேசங்களுக்கும், மதப்பித்துப் பிடித்தவர்களுக்கும், சமாதானத்திறகும, அமைதிக்கும், சுபீட்சத்திற்கும் இட்டுச் செல்லும் உண்மைவழியைப் போதித்துள்ளீர்கள.

"தாங்கள் துறவறத்தை மேற்கொள்ளு முன்னர், பன்னிரண்டு ஆண்டுகளாக ஏழைகளென்றும், தனவந்தர்களென்றும பாகுபாடு காணபிககாமல் புகழையும், பொருளையும கவனிககாமல டாகடராக வைததியத் தொண்டாற்றி வநததைக் கேள்விப்படும்பொழுது நாம் பேருவகை அடைகிறோம டாக்டர் தொழிலுக்கே பூஷணமாக விளங்கி அதன் அநதஸதை உயர்த்தியிருக்கிறீர்கள.

லௌகிக வாழ்க்கையை நீதது, பல்கோடி மக்கள் பேரானநதம எய்துவதற்கு வழியைக் காண்பிப்பதற்காகத் துறவறத்தை மேறகொண்ட பிற்பாடும், தன்னலமற்ற பணிபுரியும் இலட்சியத்தைக கடைப்பிடித்து வந்திருக்கிறீர்கள்.

"கர்மம் புரிவதே பிரார்த்தனை"

"கர்மம் புரிவதே பிராரத்தனை செய்வதாகும்; எத்தகைய கருமங்களைசசெய்தாலும் அவற்றை இறைவனுக்கு 'அர்ப்பணம் செய்துவிடு' என்று சமீபத்தில் தஙகளுடைய அன்பர்களுக்கு உபதேசித்திருந்தீர்கள். சத்தியம், அஹிம்சைமூலமே மனிதவர்க்கத்தின் இன்றைய பிரசனைகளைத் தீர்க்க முடியுமென்று வலியுறுத்தி யிருந்தீரகள. தங்களுடைய இந்தப் போதனையானது மகாத்மா காந்தியின் போதனையை ஒத்திருக்கிறது. அன்னாரை இங்கு வரவேற்கும் பாக்கியம 23 வருடங்களுக்கு முன்னர் நமக்குமுன் இங்கு பதவி வகித்தவர்களுக்கு இருநதது.

ஜாதி, மத பேதமின்றி சாதாரண மக்களிடையே ஆன்மீகப் பிரசாரத்தைக் கூட்டுப் பிராரத்தனைகள், பஜனைகள்மூலமும், உபநியாசங்கள மூலமும், துண்டுப்பிரசுரங்

களை விநியோகிப்பதன்மூலமும் செய்வதற்காக 2 மாத அகிலஇந்திய யாத்திரையை ஆரம்பித்தீர்கள். அந்தத் திக் விஜயத்தில் கொழும்பையும் மனதுவந்து சேர்த்ததற்கு நமது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளு கிறோம்.

தாங்கள் பல்லாண்டுகள் திட ஆரோக்கியத்துடன் வாழ்ந்து, தாங்கள் மேற்கொண்டுள்ள உயரிய லட்சியத் தைத் தொடர்ந்து தொண்டாற்ற வேண்டுமென்பதே நமது அந்தியந்த விருப்பமும், பிரார்த்தனையுமாகும்."

—வீரகேசரி 13—10—50

—o—

# இலட்சிய வாழ்வு

## பணத்தை நம்ப வேண்டாம்
## சுவாமி சிவானந்தரின் அமுதமொழி

வேதாந்த போதனை ஒன்றுதான் சகல சமயங்களை யும் இணைக்கும் சக்தி வாய்ந்ததென சுவாமி சிவானந்த சரஸ்வதி அவர்கள் கொழும்பு நகர சபையினர் அன்று ருக்கு அளித்த வரவேற்பின்போது குறிப்பிட்டார். அவர் தொடர்ந்து பேசியதாவது :

இலங்கை ஒரு புனிதமான தீவு. இராமபிரான், புத்த பிரான் போன்ற மகான்களின் பாதம்பட்ட இடமல்லவா இலங்கை! சிவனொளிபாதமும் திருக்கதிர்காமமும், திகழும் இடமல்லவா இலங்கை? இறைவனை, முதல்வனை இந் திறத்தன் என்று குறுகிய உள்ளத்தால் அளந்து அறிந்து கொள்ள முடியாது.

புத்தக நிலையங்களிலிருந்துகொண்டு ஏடுகளைப் புரட்டுவதனால் இறைவனை உணர்ந்து கொள்ள முடியாது. நல்லொழுக்கம் மிக முக்கியமாகும். இந்த நல்லொழுக்கமானது ஆத்ம விசாரணையாற்றான் பிறக்கும். இராணுவ சேவைக்கு ஒழுக்கம் மிக முக்கியமாக இருக்கும்போது ஆத்மீக சேவைக்கு ஒழுக்கம் எவ்வளவு முக்கியமென்பதைப்பற்றிச் சொல்லவேண்டியதே இல்லை.

சிற்றின்ப சுகபோகங்களும், இன்பங்களுமே துன்பத்தின் பிறப்பிடமாகும். எனவே, ஐம்புலன்கள் வழியே செல்லும் உள்ளத்தைத் தியானத்தின்மூலம் ஒருவழிப்படுத்திக் கொள்ளவேண்டும்.

இலங்கை இந்துக்கள் இருஷிகேசத்தில் வசிக்கும் அடிகளாருக்குக் கொழும்பு நகர மண்டபத்தில் அளித்த வரவேற்பின்போது அவர் கூறியதாவது :—

" உள்ளத்தை ஒரு வழிப்படுத்துவதற்கு உணவு பெருந்தவி புரிகின்றது. தூய்மையான உள்ளமே நமக்கு உற்ற நண்பனுந்தம். அதுவே மிகச் சிறந்த குருவுமாகும். வாழ்க்கையில் ஒரு திட்டம் அவசியமாகும். குறித்த ஒரு காலத்தின் பின்னர் இறைவழிபாட்டிலும் தியானத்திலும் காலத்தைக் கழிப்பதற்குத் திட்டமிடவேண்டும். வாழ்க்கையிற் குறித்த ஒரு காலம் வரை உலகத்துக்காக உழைத்தாற் போதுமானது.

"சொற்ப உணவை உட்கொள்ளுங்கள்; சொற்பபானம் அருந்துங்கள்; சொற்பமாகப் பேசுங்கள்; தக்கவருடன் சேருங்கள்; சாந்தத்துடனும் கட்டுப்பாடுடனும் வாழுங்கள். "

பல்கலைக் கழகத்திற் சுவாமி பேசும்போது எளிய வாழ்க்கையும் உயரிய சிந்தனையுமே ஒவ்வொருவரதும் இலட்சியமாக இருக்கவேண்டுமெனப் போதித்தார்.

வெள்ளவத்தையிலுள்ள ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் மண்டபத்திற் சுவாமி சிவானந்தா பேசியதின் சாரம் வருமாறு:—

பாங்கியிற் சேமித்து வைக்கும் பணத்தை நம்பிப் பலர் வாழ்கின்றனர். அஸ்ஸாம பூகம்பத்தின் விளைவாகப் பெரும் பணக்காரர்கள் திடீரெனப் பிச்சைக்காரர்களாகி விட்டனர். எனவே, வெறும் பணத்தை நம்பியிராமல் இறைவனை நம்பி வாழவேண்டும் 'நான்' என்ற ஆணவம் அகன்று விடவேண்டும். 'துறவு' என்பது அனைத்தையும் அகற்றிவிட்டுக் காட்டுக்குச் செல்வதல்ல. 'நான்' என்ற அகம்பாவத்தை விடுவதுதான் உண்மையான துறவாகும்.

## ஆத்மீக மறுமலர்ச்சி

கொழும்பு நகரமண்டபத்தில் நடைபெற்ற பகிரங்க வரவேற்பின்போது சர். க. வைத்தியநாதன் அவர்கள் சுவாமி சிவானந்தருக்கு வாசித்து வழங்கிய உபசாரப் பத்திரத்தின் ஒருபகுதி வருமாறு:—

ஸ்ரீராமர், கௌதமபுத்தர் ஆகியோரின் பாதங்கள் படிந்த புனிதத் தீவாகிய ஸ்ரீலங்காவுக்குத் தங்களை வரவேற்கின்றோம். இப் புனிதத் தருணத்திற் சொற்ப காலத்துக்கு முன்னர் அமெரிக்க—ஐரோப்பிய யாத்திரை செய்து திரும்பிய சுவாமி விவேகானந்தர் அவர்களை வரவேற்ற வைபவம் எமக்கு நினைவுக்கு வருகின்றது 50

வருடங்களுக்குப் பின்னா இமாசலத்திலிருந்து உதிக்கும் ஆத்மீக மறுமலர்ச்சியின் உதயதாரகையான தங்களை வர வேற்கும் பாக்கியம் கிடைக்கப்பெற்றுள்ளோம்.

## எங்கள் தமிழ்

இதன்பின்னர் சர். வைத்தியநாதன் பேசியதாவது :

இலங்கை இந்துக்களாகிய நாங்கள் சிறப்பாகச் சைவ சமயத்தைச் சேர்ந்தவர்களாவோம்.......... நாங்கள் பேசும் தமிழ் கலப்பற்ற தூய தமிழ் என்று சில சமயம் நாங்கள் பெருமையடைவதுண்டு. ஆனால் இதன் காரணமாக நவீன சக்திகளுக்கு இதைப் பயன்படுத்துவதிற் சிரமம் ஏற்படுவது உண்மையே..........

கௌதம புத்தரின் போதனைகளையும், சைவ வைஷ்ணவ அடியார்களின் அருள் உபதேசங்களையும் இலங்கையிலிருந்து பிரித்தெடுத்து விட்டால், இலங்கையில் ஏதாவது நாகரிகம், பண்பாடு என்பன எஞ்சியிருக்குமெனக் கூற முடியுமா?

—ஈழகேசரி, 15—10—50

—o—

# கோட்டையிற் பக்தகோடி

## சிவானந்த சரஸ்வதிக்கு வரவேற்பு

இந்தியா முழுவதும் யாத்திரை செய்து வரும் சுவாமி சிவானந்த சரஸ்வதி அவர்கள் இன்று காலை (12—10—50) கொழும்பு, கோட்டைப்புகையிரதஸ்தானத்தில் வந்திறங்கி

ஞர்கள். கொழும்பு மேயர் டாக்டர் குமாரன் ரத்தினம், சர். கந்தையா வைத்தியநாதன் முதலியோர் உட்பட 3000 இந்துக்கள் கோட்டையிற் சுவாமி யவர்களை வரவேற்றனர்.

சுவாமியவர்கள இன்று காலை கப்பித்தாவத்தையி லுள்ள கைலாசநாதர் கோயிலில் ஒரு பிரசங்கம் செய்வார் கள. இன்று சாயந்திரம் நகரசபை வரவேற்பு வைபவம நடைபெறும். அநேக இந்துக்கள் கோட்டையில் வந்து நின்றபடியால், எல்லாருக்கும் தரிசனம் கொடுக்கும பொருட்டுச் சுவாமியவர்கள் ஒரு மேடைமீது சிறிதுநேரம ஏறி நின்றார்கள.

அதிகாலையிலேயே கோட்டைப் புகையிரத ஸ்தானத் திற் பக்த கோடிகள் வந்து சேர்ந்து விட்டனர்.

சுவாமி அவர்கள் புகையிரதத்தினின்றும் இறங்கியது தான தாமதம் 'அரோகரா அரோகரா' என்ற சத்தம் எழுந்தது. புகையிரத ஸ்தானம் மலர் மாலைகளாலும் தோர ணங்களாலும் நன்கு அலங்கரிககப்பட்டிருந்தது.

சுவாமியை வரவேற்பதற்கு விசேஷமான ஒரு மேடை அமைக்கப்பட்டிருந்தது. பக்திரசம் ததும்பும் பாடல்கள் இன்னிசையுடன் ஓதப்பட்டன.

சர். கநதையா வைத்தியநாதன் சுவாமிகளுக்கு மலர் மாலை சூடி வரவேற்றார்.

சுவாமியின் தரிசனத்தைப் பெறுவதற்கு ஆண்களும் பெண்மணிகளும் குழநதைகளும் வரிசையாக நின்றனர்.

புகையிரத நிலையத்துக்கு வெளியேயும் மக்கள் திரண்டு நின்றனர்.

பிற்பகல் 3 மணிக்குக் கொழும்பு நகரசபையின் சார்பில் வரவேற்பு உபசாரம் நடைபெற்றது.

பல்கலைக் கழகத்தில் சுவாமி சொற்பொழிவு நிகழ்த்திய பின், நகர மண்டபத்தில் அன்னாருக்குப் பகிரங்க வரவேற்பு நடைபெற்றது. நாளை சாயந்திரம் விவேகானந்தசபையில் ஒரு பிரசங்கம் செய்வார்கள்

ஈழகேசரி, 15—10—50.

13-10-50 தேதியன்று காலையில் ஞானச் செல்வர் ஸ்ரீ சிவானந்தருக்கு பக்தகோடிகள் பாதபூஜை செய்து பணிந்தார்கள். பின்னர் ஸ்ரீமதி சிவானந்த தமையா அவர்களின் சத்திரத்துக்கு விஜயம் செய்துவிட்டு கெலனியா புத்த ஆலயத்துக்குச் சென்று தரிசித்தார். பின்னர் சைவ மங்கையர் கழகத்துக்கும் திருவாளர்கள் K.V., K.A., பிள்ளை, டாக்டர் ரத்னம், S. K. மூர்த்தி ஆகிய அன்பர்கள் இல்லங்களுக்கும் அன்னாருடைய அன்புக்கிணங்கிச் சென்று ஆசிகள் வழங்கினார்.

அடுத்தபடியாக விவேகானந்த சொசைட்டிக்கு விஜயம் செய்தார்.

இத்துடன் கொழும்பு நிகழ்ச்சிகள் முடிவடைந்தன இரவு பக்தகோடிகளால் பிரியா விடை தந்தனுப்பப்பட்டுப் புறப்பட்டார்.

தலைமன்னார் வரும் வழி மத்தியில் குருணாக்கல் என்னுமிடத்தில் ரயில் நிலையத்திலேயே ஸ்ரீ சுவாமிகளை சைவ மகா சபையினர் தரிசித்து ஆசி பெற்றுச் சென்றனர்.

14-10-50 ரயில் வண்டி தலைமன்னாரை யடைந்தது. மறுபடியும் யாத்திரா மண்டலி கப்பலேறி தனுஷ்கோடி வந்து திவ்ய ஜீவன சங்கக் கிளையில் ஓய்வெடுத்துக் கொண்டனர்.

ஸ்ரீ சுவாமிகளின் இலங்கை விஜயத்தால் அம்மக்கள் பெற்ற பெரும் பேறை வியந்து 'ஈழகேசரி'யின் தலையங்கம் கூறுவதாவது :—

## சுவாமி சிவானந்தர்

இருஷிகேசத்திலிருந்து பல்லாண்டாகத் தவஞ்செய்து வந்த சுவாமி சிவானந்தா அவர்கள் இப்போது தமது யாத்திரை மார்க்கத்தில் இலங்கைக்கும் வந்து சென்றுள்ளார். அவர் இலங்கை விஜயம் சகல நலங்களையும் நல்குவதாக. இலங்கைககு இவர் விஜயம் செய்ய நேர்ந்தமை இலங்கை மக்களின் நற்றவப் பயன் போலும். இலங்கைப் பிரதம மந்திரியார், கொழும்பு நகர சபைத் தலைவர், சர். கந்தையா வைத்தியநாதன் முதலிய பிரமுகர்கள் இவரை வரவேற்றனர். இவரின் அரிய நல்லுரைகள் மக்கட்கு நல்லறிவுண்டாக்கும் என்பதில் ஐயமின்று. தாம் மாத்திரமன்று உலக மக்களும் உய்யவேண்டு மென்ற பரோபகார சிந்தையுடையவர். •இக்காரணத்தாற்றான் யாத்திரையை ஆரம்பித்து நற்போதனைகளை எடுத்துரைக்கின்றனர், சமாதானம் நிலைபெற வேண்டில் உண்மையும் அஹிம்சையும் கைக்கொள்ளப்பட வேண்டுமென்றனர். இறை வழிபாடும், சமய வாழ்க்கையும் ஏற்பட்டவிடத்துச் சன்மார்க்கநெறி வளர்ச்சியுறுமெனத் தெரிவித்தார். அப்போதுதான் உலக சமாதானமும் அமைதியும் தளர்ச்சியின்றி நிலைப்பெறக்கூடுமென்றனர். இப் பெரியார் •இந்துக்கள் அதிகமாக வசிக்கும் யாழ்பாணத்தைத் தரிசியாது திரும்பியது பெருங்குறையேயாகும். என்றாலும் யாழ்பாண மக்கள் அவர் நல்லுரைகளைநற்போதனைகளைப் பத்திரிகைகள்மூலமாகஅறிந்து ஆறுதலடைந்தனர். இவருக்கு நமது வணக்கம் உரியதாகுக.

ஈழகேசரி. 15-10-50.

கொழும்புவில் அன்பர் பாடியளித்த சில பாடல்கள்.

பல்லவி

குருநாதன் அவனே அவனை நீ
கும்பிடு நன் மனமே

அநுபல்லவி

இருவினைப் பகையின் இடர்களைக் களைந்தவன்
இருந்தபடியிருக்கும் ரகசியம் அறிந்தவன் (குரு)

சரணம

யாரையும் இகழாமல் யாரையும் புகழாமல்
யாரையும கெஞ்சாமல் யாரையும் கொஞ்சாமல்
ஊருக்குபகாரியாய் யாருக்கும் பாரமின்றி
உணமைப் பொது வெளியில் உலவும் யோகியாம்.

உலகனைத்திலே முழுதாகி ஆங்காங்குள்ள
உயிராகி உயிர்க்குயிராம ஒளிதானுகிப்
கலகனிலையறியாத காட்சியாகி
கதியாகி மெய்ஞானக் கண்ணதாகி
இலகு சிதாகாசமதாய் பரமாகாச
இயலபாகி யிணையொன்று மில்லாதாகி
அலகிலறிவானநதமாகி சச்சிதானநத
மயமாகி அமர்ந்ததேவி.

மோனமாங் கைலாயத்தின
முகட்டில் ஊற்றெடுத்துவேத
கானகத் தோட றங்குங கங்கைக்
கரைதனில் தவத்தமாநதே

தீனரை காப்பதற்காய் திவ்ய
ஜீவியத்தை நாட்டி
ஞானமுதளிக்கும் சுத்த சிவானந்தர்
திருத்தாள் போற்றி.

—o—

ஓம்

(1) சத்தியமும் அன்பும் எந்தச் சமயத்திற்கும் பொதுவாய்
எத்திசையும் பரவச் செய்வோம் எல்லையில் பேரின்பம்.
(2) கீதையும் குருனும் குறளும் கிருஸ்துவர் நாதர்சொல்லும்
சாதிபேதமில்லாச் சுத்த சமரச சன்மார்க்கம்.
(3) ஓருயிர்க் குலமே இந்த உலகமென்றறிந்தால்
பேர்வடிவ பேதம் பேசும் பிரிவினைகள் உண்டோ.
(4) சாமிபேரால் சாதிமதச் சண்டைகளை மூட்டிப்
பூமியைக் கெடுத்ததெல்லாம் போதும், போதும், போதும்.
(5) அத்வித வஸ்துணரும் அறிவதனை வளர்த்தே
எத்திசையும் பரவச்செய்வோம் எல்லையில பேரின்பம்.
(6) இந்த அரிய உபதேசத்தை எமக்களிக்க வந்த
சுவாமி சிவானந்தர் பாதம் என்றும் வாழி வாழி.

—o—

ஓம்

ஆத்ம ராமா

ஆத்ம ராமா ஆனந்த ரமண அச்சுதா கேசவா ஹரி நாராயண
ஆத்ம ராமா ஆனந்த ரமண அச்சுதா கேசவா ஹரி நாராயண

(1) அன்பும் அருளும் ஆண்டிட அருள்வாய்
இன்பும் எழிலும் இலங்கிடச் செய்வாய்.

(2) சாதி மத வெறிச் சண்டையைத் தீர்ப்பாய்
நிதியும் அறிவும் நிலமிசைக் காப்பாய்.

(3) பூத்த மலர் போலே புன்னகை புரிவாய்
பூரண சக்தியை மழையெனப் பொழிவாய்.

—o—

ஓம்

## சிவானந்தர் வாழ்த்து

வாழ்க ! வாழ்க ! வாழ்க ! வாழ்க !
வாழ்க ! வாழ்க ! வாழ்கவே !
வாழ்க ! சிவானந்தர் என்றும்
வாழ்க ! வாழ்க ! வாழ்கவே !

1. பத்த மடை சிறக்க வந்த
பகவன் நாமம் வாழ்கவே !
சுத்த சத்சிதானந்த
சொரூபன் பாதம் வாழ்கவே !

2. பத்தி ஞான கர்ம யோகப்
பாதை செல்லும் சாதகர்
சித்தி சேரச் சக்தி நல்கும்
சீரோன் பாதம் வாழ்கவே. !

3. சத்தியமும் அன்பும் கூடில்
சாந்தி தானே வருமென்று
எத்திசையும் கேட்கச் சொல்லும்
ஏந்தல் நாமம் வாழ்கவே !

4. கீதையுடன் குரானும் குறளும்
கிறிஸ்து நாதர் செய்த
போதனையும் ஒன்றே என்ற
புனிதன் பாதம் வாழ்கவே!

5. வேதாந்தத்தின் வீரகாஜனை
விளக்க வந்தோன் வாழ்கவே
போதாந்தத்தின் நிலையுணர்ந்த
புண்யன் நாமம் வாழ்கவே!

6. சகல உயிர்கள் உய்யவும்
சகோதரத்வம் பரவவும்
அகில இந்திய யாத்திரை ஏற்ற
அண்ணல் பாதம் வாழ்கவே!

7. பாரதத்தின் பரமார்த்திகத்தைப்
பரப்ப வந்தோன் வாழ்கவே!
பார்வதியின் தவத்துதித்த
பரமஹம்ஸன் வாழ்கவே.!

ஓம்
சாந்தி! சாந்தி! சாந்தி!

—o—

## சிவானந்தர் அர்ச்சனை மாலை

பத்த மடைதனிற் பார்வதி தனக்கு
உத்தம மகனா யுதித்தனை போற்றி!
தாசில் தாரார் தவமுடை வெங்குவின்
மாசிலா மணியாய் வந்தனை போற்றி!

அப்பைய தீட்சிதர் ஆண்ட நல்மரபில்
குப்புச் சாமியாய்க் குலவினை போற்றி!
அன்னவர் ஆத்மாவே உனனுட ஆற்றதாய்
பன்னுலகேத்த மன்னினை போற்றி!
தந்தையைப் போல தளரா முறையில்
சிந்தனையில் சிவனுரு வைத்தனை போற்றி!
சின்ன வயசில் சிவநாம ஜெபத்தை
உன்னத நெறியா யுணர்ந்தனை போற்றி!
திருச்சியை யடைந்து திறமுடன கற்றே!
மருத்துவநூல் பயில் மருந்தே போற்றி!
மக்களுடற் பிணி மாற்றுந் தொழிலில்
மிக்கவுஞ் சித்தி யடைந்தனை போற்றி!
சிங்கப் பூரிலுஞ் செம்பி லானிலும்
எங்கும கீர்த்தி எயதினை போற்றி!
தண்ணளி கொண்டு தாய்போற் பேணி
புணயவான் பட்டம் பெற்றனை போற்றி!
விவேகா னந்தரின் வீர காசசனையால்
விவேக வைராக்கிய முற்றனை போற்றி!
பகவான் ரமணரின் பார்வை பெற்றபின்
சுகவாழ்வு துறந்த சுத்தனே போற்றி!
சிவநா மத்துடன் சேவையி லிறங்கி
நவமான சித்திகள் நண்ணினை போற்றி!
பவப்பிணி போக்க பத்திரிநாத் செல்லுந்
தவத்தின் குடற்பிணி தவிக்கும நோக்கால்
சுவர்க்காஸ் ரம சேவை சுமந்தனை போற்றி!
அஷ்டாங்க யோகம் அனைத்தையும் பயின்று
இஷ்ட சித்திகள் எய்தினை போற்றி!
வேதம் ஆகமம் வேறுள கலையெலாம்

ஓதும் முறைகளில் ஒப்பிலாய் போற்றி!
எம்மதத்தினரும் ஏற்றிடும் முறையில்
எம்மதக் கொள்கை இயம்புவாய் போற்றி!
வசிஷ்டர் தொடக்கம் வள்ளலார் வரைக்கும்
விளரும் ஞானிகள் விளம்பிய வெல்லாம்
தெளிந் தந்தருள் தேவே போற்றி!
பகவத் கீதையின் பாதை நான்கினையும்
சகமுழு தறியச சாற்றுவாய் போற்றி!
சரியை கிரியை சாற்றிடும் யோகம்
உரிய நல்ஞான மெனும்படி நான்கையும்
சரிவர விளக்கும் சைவனே போற்றி!
ஆதி சங்கரர் ஆரிய மொழியில்
ஓதிய தெல்லாம் உலகு நன்கறிய
ஆங்கிலந் தன்னில் அருளுவாய் போற்றி!
ஆனந்த குடீரில் அடியரோ டுறைந்து
ஞானம் பொழியும் நாதனே போற்றி!
அன்புடன் வந்து அடைக்கலம் புகுவோர்
துன்பந் துடைக்கும் துரையே போற்றி!
தன்னை யடைபவர் தாளினை தொடுமுன்
அன்னவ ரடிபணி அண்ணலே போற்றி!
இருளிடர் போக்கு மிரவி போலிருந்தும்
குருவெனுஞ் செருக்கிலாக் குணமே போற்றி!
தெய்வ நெறியாந் திருக் கழகத்தால்
உய்வழி உலகுக் குணர்த்துவாய் போற்றி!
நாயினேன் உடலம் நடுக்கா டுறுது!
தாய்போற் காத்த தற்பரா போற்றி!
அத்தனே போற்றி! அழகனே போற்றி!

முத்தனே போற்றி! முதல்வனே போற்றி!
பக்தனே போற்றி! பகவனே போற்றி!
வித்தனே போற்றி! விமலனே போற்றி!
சித்தனே போற்றி! சிவானந்த போற்றி!
போற்றி! போற்றி! நின் பூங்கழல் போற்றி!
வாழ்க! வாழ்க! சிவானந்த ஜோதி!
வாழ்க! வாழ்க! யாத்திரை கோஷ்டி
வாழ்க! அன்னார் அத்யாத்ம சேவை!
வாழ்க! என்றும் பாரத மாதா!
வாழ்க! வாழ்க! அவனி யெல்லாம!

க. இ.

—o—

## கொழும்பு பொது வரவேற்பில் சுவாமி சிவானந்தரின் அறிவுரை

இலங்கை இந்துக்களின் சார்பாக வரவேற்புக் கமிட்டியின் தலைவர் சர். கந்தையா வைத்தியநாதன் வாசித்தளித்த உபசாரப்பத்திரத்தின் ஒரு பகுதி வருமாறு:—

"ஸ்ரீ ராமர், கௌதம புத்தர் ஆகியோரின் பாததூளி பட்ட புனிதத் தீவாகிய ஸ்ரீ லங்காவிற்கு தங்களை மனமுவந்து வரவேற்கிறோம். இப்புனித தருணத்தில், சொற்ப காலத்திற்கு முன்னர் அமெரிக்க-ஐரோப்பிய திக் விஜயத்தின் பின் திரும்பிய சுவாமி விவேகானந்தரை வரவேற்றது நமக்கு ஞாபகத்திற்கு வருகிறது. 50 வருடங்களுக்கப்புறம் இமயமலையிலிருந்து உதிக்கும் ஆன்மீக மறுமலர்ச்சியின் உதய தாரகையான தங்களை வரவேற்கும் பாக்கியம் கிடைக்கப் பெற்றுளளோம்."

மேற்படி உபசாரப் பத்திரத்தை வாசித்து முடிந்ததும் சர். கந்தையா வைத்தியநாதன் பின்வருமாறு கூறினார்.

"இலங்கை இந்துக்களாகிய நாம முக்கியமாக சைவ சமயத்தைச் சார்ந்தவர்களாவோம; நம்முடைய சமயத்தின் புனிதத் தன்மையில் ஆழ்ந்த நம்பிக்கையுடைய எளிய மக்கள் நம்முடை சமயத்தின் அகண்ட தலைமையினுலும அதில் பொதிந்து கிடக்கும் அரும பெரும் தத்துவங்களினுலும் நாம் சில சமயஙகளில் மலைத்து தடுமாறுவதுமுணடு.

"நாம் பேசும் தமிழ், கலப்பற்ற தமிழ என்று சில சமயம் நாம் பெருமையடைவதுமுண்டு. ஆனுல் இதன் காரணமாக நவீன சக்திகளுக்கு அதைப் பயன்படுத்துவதில் சிரமம இருப்பதும் உண்மையே, இது சம்பந்தமாக நம்முடைய தமிழ்மொழி சிறிது 'தூசு தட்டப்படவேண்டியது' அவசியமாயினும் 'பிரம்பை' உபயோகிக்கவேண்டிய அவசியம் இல்லை. இத்தகைய புராதன எளிமையினுல் பயனும் இருக்கத்தான் செய்கிறது. அன்பும், அந்தரங்க சக்தியுமே ஒரு குருவுக்கு நாம் அளிக்கக்கூடிய காணிக்கையாகும்"

மாயா பந்தக் கட்டுகளையெல்லாம் அறுத்தெறிந்த ஞானதீர வீரபுருஷராகிய தங்களின் ஆதரவையும் வழிகாட்டலையும் நாம் வேண்டி நிற்கிறோம். தயவு செய்து 'தடுத் தாட்கொள்ள வேண்டும்.'

ஆசியாவில் இன்று நடைபெறும் புரட்சிகளின் மத்தியில், இந்தியாவும் இலங்கையும் ஆன்மீகத்துறையில்

ஒன்றென்பதை நாம் மனதில் பதிக்கவேண்டும். கௌதம புத்தரின் போதனை செல்வாக்கையும் சைவ வைஷ்ணவ அடியார்களின் அருள் உபதேசங்களையும் இலங்கையிலிருந்து பிரித்தெடுத்துவிட்டால், இலங்கையில் ஏதாவது நாகரிகம், கலாசாரம், பண்பு ஆகியவை எஞ்சியிருக்குமென்று கூறமுடியுமா? நாசரெத், மெக்கா ஆகிய இடங்களில் உதித்த சோதிப்பிழம்புகள்கூட பாரதகண்டத்தில் கும்பித்து, பின்னர் இலங்கைக்கு ஒளியைப் பரப்பியுள்ளது. பாரதகண்டத்தின் சமயமே நம்முடைய சமயமாகும்'. இமயமும், கங்கையும் நம்முடைய ஆன்மீக புகலிடங்களாகும்.

—வீரகேசரி 13—10—50

—o—

*தனுஷ்கோடிக்கு அடுத்தபடியாக மதுரை நகரில் ஸ்ரீ சுவாமிகளை வரவேற்க மிகப் பெரிய ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. கீழ்க்கண்ட மதுரை D. L. S. கிளை அறிக்கையால் அவ்வேற்பாடுகளை அறியலாம்.*

## *மதுரை*

மதுராபுரி வாசிகளான மகனீயர்களுக்கு

பெரியோர்களால், பூஜிக்கத்தகுந்தவர்களே!

*ஆச்சரியம், இதுபோல் கிடைக்காது. இதுவரை இது போல் ஏற்படாதது. ஸ்ரீசிவானந்த யாத்ரா மண்டலி மதுரை மாநகரத்திற்கு விஜயம் செய்கிறது. வருகிற அக்டோபர்மீ 14உ நடுராத்திரி முதல் 17உவரை மதுரையில் தங்கும். செப்டம்பர்மீ 9உ ரிஷிகேசம் ஆனந்த குடீரி லிருந்து ராமேஸ்வரயாத்திரையாக புறப்படுகிறது. 12உ முதல் 14உ சாயங்காலம்வரை ராமேஸ்வரம் தனுஷ்கோடி முகாம் அக்டோபர்மீ 31உ ரிஷிகேசம் சேரும்.*

*மண்டலியின் பொதுவான முக்கிய நோக்கம், அளவு கடந்த சக்தி வாய்ந்த அத்யாத்ம பிரசாரமே.*

நோக்கங்களும், உத்தேசங்களும் :-

1. *பொதுக்கூட்டங்கள் ஸத்ஸங்கங்கள் ஸங்கீர்த்தனம். சாதனங்கள் மூலம் மிகுதியான ஆத்மிக க்ஷேமம் ஜனங்களிடையே உண்டாக்கிவைப்பது.*

2. *தீராத நோயுள்ள வியாதியஸ்தர்களுக்கு பலமுறைகளின்படி தகுந்த ஔஷதம விளக்கி குணமடையச் செய்து வைப்பது.*

3 *பக்தியோகம் வேதாந்தங்கள் ஸம்பந்தமாக எல்லா பாஷைகளிலும் துண்டுப்பிரசுரங்கள் அச்சடித்து எல்லோருக்*

கும் இலவசமாக அளித்து ஜனங்களிடை தைவிக அறிவை பரவச் செய்தல்.

4. பள்ளிகள் கல்லூரிகளிலுள்ள மாணக்கர்களுககு அறிவைப் புகட்டி யோகஸாதன முறைகள் மூலம் அவா களினிடை அத்யாத்மசக்தி புத்துயிர்பெற்று விளங்கும்படி செய்வதும்.

உலகத்தின் தற்கால நிலை யாவரும் அறிந்ததே. எங் கும குழப்பமே ஒழுங்கின்மையே. பலமுள்ளவனே ஜய முள்ளவன். பொது மக்களிடையே சாந்தியில்லை, திருபதி யில்லை ஸம்ருத்தியில்லை. சண்டைகளில் த்வேஷம் மோசடி தாண்டவமாடுகின்றன. பயம், அபாயம், வறுமை பஞ்சம, பிணி, துக்கமேதான் உலாவிநிற்க காணப்படுகிறது. கண டதே காட்சி கொண்டதே கோலம் என்பதை அடிப்படை யாக உள்ளம உலகவாஸனை ஐச்வர்யங்களே கொண்டாடப பட்டு வருகின்றன. பரலோகம், பகவானொருவரிருக்கிறார் என்ற ஞாபகமே இல்லாது ஆக்கப்பட்டுவருகிறது. ரிஷி கள் ஞானிகள் நிறைந்துள்ளதும் ஸம்ருத்தியே பொங்கி வரும் புனிதமான இந்த பாரத நாடும் 150வருஷ அன்னிய அரசாக்ஷியினால் மற்ற தேசங்களைப் போலவே ஆத்மசக்தி யிழந்த துர்தசையை அடையும்படி செய்யப்பட்டு விட்டது. ஏதும் பகவதவதாரம் ஏற்பட்டு தர்மம் நிலைநாட்டப் பட்டா லன்றி நாடு முந்திய மஹோன்னத நிலைமையை அடையா தென்றும் ஒவ்வொருவருமே உணருகிறார்கள். விரும்பவும செய்கிறார்கள். குறைவு இருப்பது மட்டும் எல்லோராலும அறியப்படுகிறதேயன்றி தகுந்த பரிகாரம் சொல்லுவாரு மில்லை. செய்வாருமில்லை. ஸரியான ஸந்தர்ப்பம் வந்துவிட் டதை உத்தேசித்து கருணை மூர்த்தியான பகவான் தா மத்தை நிலைநாட்டிவைத்து, சாந்தி ஸமாதானம் உலாவச

செய்து நாடுசெழிக்கச்செய்து ஜனங்களை ஆத்மோன்னதி அடையச்செய்ய தற்காலம் அவதரித்து ரிஷிகேசத்தில் ஆனந்தகுடீர் ஆச்சரமத்தில் ஸன்யாசி சிரேஷ்டரான ஸ்ரீ சிவானந்த ஸரஸ்வதி மகராஜின் உருவத்தில் பிரகாசித்துக் கொண்டிருக்கிறார். அவர்களை புதிதாக அறிமுகப் படுத்திவைக்க தேவையில்லை. தற்காலத்தில உதித்த ஒரு உத்தம மஹாத்மாக வ்யகத்தியாகவே யாவரும் அறிந்து கொண்டு விட்டிருக்கிறார்கள். அவர் ஒருவருடையவரென்று மட்டுமில்லாது உலக முழுவதற்குமே சொந்தமானவராகி நிற்கின்றார். அதனாலேயே கிழக்கு, மேற்கு, எல்லா திசை களிலும் அவருடைய மகத்வத்தை அறிந்து அவரை எல் லோருமே ஏகமனதுடன் போற்றி வருகிறார்கள். 'ஜகத் ஜோதி' யென்றும் உலக ஆசான் யென்றும் பட்டங்கள் கொடுக்கப்பட்டுவருகிறார். அவர் ஞானிகளில் சிறந்த ஞானியாகவும் உத்தம பக்தராகவும உயர்வான யோகியாக வும் ஒப்பில்லாத காம யோகியாகவும எல்லாம் ஒருங்கே அமையப் பெற்ற ஸ்வரூபத்துடன் விளங்கிவருகிறார். அவர் எல்லாமே தான், எதுவாக அவர் இல்லை யென்பதைத்தான் சொல்ல முடியாது. ஆனால் ஆத்ம ஸாக்ஷாத்காரமடைந்து கருணையினால் அன்பினால் துக்கஸாகரத்தில உழன்று உண் மையறியாது தத்தளிக்கும் ஜீவர்களை கைதூக்கிவிட்டு அவ ரவருக்கு சொநதமான ப்ரம்மானநத நிலையில் ஸ்தாபித்து வைக்கதானாகவே முன்வந்துள்ள மஹானிடத்தில் இவை கள் பிரகாசிப்பது ஒரு அதிசயமல்ல. பாரத நாட்டில் இது வரை தோன்றி மறைந்த மஹனியர்களின் தற்காலத்திற குரிய திரண்ட புதிய உருவமென்றே கொள்ளவேண்டும். ஸ்ரீசைதன்ய மஹாப்பிரபு ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவர், ஸ்ரீரமணபகவான் இன்னும் எத்தனையோ மஹானீ

யர்களின் ஸ்வாபவம குணங்கள் தன்மை நிரம்பப்பெற்றவர், எல்லா மதாச்சாரியர்களின் ஒருங்கே சேர்க்கப்பட்ட ஸ்வ ரூபமே கணக்கிலடங்காத அவருடைய வ்யாஸங்கள் உபன் யாஸங்கள் ஸம்பாஷணைகள் உபதேசங்கள் அவருடைய ஸர்வஞ்ஞத் தன்மையைக்காட்டியும் மிகவும் தைகக்க் கூடி யவைகளாகவும் சிறந்த பலனை அளிக்கக கூடியனவாகவு மிருப்பதை இதுவரை எத்தனையோ ஜீவர்கள் அடைந்து நல்வழிப்பட்டு ஆத்ம லாபம் பெற்றுமிருக்கிறார்கள். இநதப புனிதமான நம் நாட்டை அதற்கேற்பட்ட துர்தசையி லிருந்தும் காப்பாற்றி அதன் மூலம் உலகத்தையே க்ஷேம மடையச் செய்துவைககக்கூடியவர் மஹராஜ் ஒருவரேதான். அவர் ஒருவரேதான் நாட்டின் இடுக்கண்களைப் போக்கி மீண்டும் சாந்தி ஸமாதானம் ஸநதோஷம் ஸம்ருத்தி உலா வச்செய்து வைக்கக்கூடியவர்

அப்படிப்பட்ட மஹான் ஸ்ரீ சிவாநந்த மஹராஜ் அவர் களை நேரில் தரிசித்தும் அவருடன் இரண்டு தினங்கள் கூடியிருநது ஸத்ஸங்கம் செய்து மேல்கண்ட உத்தம லாபங் களை அடைந்து கொள்ளும் பாக்கியம் இந்த தக்ஷிண பார தத்திலுள்ளவர்களுக்குக் கிடைக்கப்போகின்றது. மஹராஜ் அவர்களின் விஜயம் ஸாமான்யமாக ஏற்படக்கூடியதல்ல வாகையால் ஒவ்வொருவரும் இந்த அரிய சந்தர்ப்பத்தை கைவிடக்கூடாது. இநத உத்தமரை உண்டாக்கி உலகத் திற்கு அளித்ததும் இந்த தக்ஷிண பாரதமேதான். அவரை நேரில் தரிசிக்ககிடைத்து ஆசிர்வாதம் பெறுவது நம்மு டைய பாக்கியமென்றே கருதவேண்டும்.

மஹாராஜை வரவேற்று உபசரிக்க வடக்கே உள்ள உயர் நகரங்கள் எல்லாம் போட்டியிட்டுக் கொண்டிருக்கின் றன. முக்கியமாக தென்தேசத்திலுள்ள நாமும் அவரை

தகுந்தபடி வரவேற்று சிறந்து உபசரித்து அனுப்புவது நம்முடைய ஹிந்து தர்மத்தைச் சார்ந்த முதல் கடமையாகும். தாமசிந்தனை உள்ளவர்களுக்கு அவரவர்கள் மனதில் விரும்பியபடி தாமகாரியங்களை செய்து முடித்து குறித்த பலன் நன்மையை அடைந்து கொள்ள இது ஒரு அரிய சந்தர்ப்பமாகும் மஹராஜ் அதற்கு தகுந்தபடி உதவியளித்து காரியங்களை இனிது முடித்துக்கொடுக்கக் கூடுமாகையால் எல்லா தர்மங்களையும் நடத்திக்கொள்ள மஹராஜே உத்தமமான பாத்திரமுமாகிறார்.

மஹராஜின் இந்த ஒப்பில்லாத புனித கோஷ்டி யாத்திரைக்கு தகுந்த அமைப்புகள் ஏற்பாடுகள் செய்துகொள்ள ஏராளமான பொருள் தேவையாக விருக்கும். அதற்காக தக்ஷிண பாரதத்திலும் எல்லோரும (1) கோஷ்டியின் யாத்திரையினால் பொது ஜனங்களுக்கு மிகுந்த லாபம் க்ஷேமம் கிடைக்கவேண்டியும் (2) அந்த அந்த தேசபாஷைகளில் துண்டுப் பிரசுரங்கள் ஏராளமாக அச்சடித்து இலவசமாக ஜனங்களுக்கு வழங்குவதற்காகவும் (3) வைத்திய உதவிக்கு போதுமான அளவு மருந்துகள தயார்செய்து வைத்துக் கொள்ளுவதற்காகவும் ஏராளமாக, விட்டுப்பொருதவி செய்து இந்த ஸத்காரியத்தில் ஈடுபட்டு அதன் உத்தம பலனையும புண்ணியத்தையும் அடைந்து கொள்ள மிகவும் வணக்கத்துடன் பிரார்த்திக்கப்படுகிறார்கள்.

15-10-50 தேதியன்று காலை ஸ்ரீ சிவானந்தர் மதுரை வந்ததும் பெருத்த வரவேற்பு நடந்தது. பாத பூஜையும் விமரிசையாக செய்யப்பட்டது. பின்னர் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயத்துக்குச் சென்று தரிசனம் செய்தார். ஆலய நிர்வாகிகளால் தவச் செல்வர் ஆடம்பரமாக வரவேற்று உபசரிக்கப்பட்டார்.

சிறிது ஓய்விக்கப்புறம் சேதுபதி உயாதரப் பாடசாலையிலும், திவ்ய ஜீவன சங்கக்கிளையிலும் ஸ்ரீ மீனாட்சியம்மன் கோவில் பிரகாரத்திலும் அரிய சொற்பொழிவுகளும் சங்கீர்த்தனமும் நடைபெற்றன. பல நல்லுபதேசங்களை அன்பர்களனைவருக்கும் ஸ்ரீ சுவாமி வாரி வழங்கினார். மதுரை மாநகர் மககள் சார்பிலும், ஸ்ரீ சாயிபாபா பக்த சபையாராலும் வரவேற்புப் பத்திரம் வாசித்தளிக்கப் பட்டன.

—o—

பூமண்டல சத்குரு

ஸ்ரீ ஸ்வாமி சிவானந்த சரஸ்வதிஜீ மஹாராஜ் அவர்களுக்கு

மதுரை மாநகர் மஹாஜனங்களால் வாசித்தளிக்கப்பட்ட வரவேற்பு

## உபசாரப்பத்திரம்

**தென் நாட்டின் தவச்செல்வரே வருக! வருக!**

நெல்லை ஜில்லாவை ஜன்மபூமியாய்க் கொண்டு உலக பூஜிதரான அப்பைய தீக்ஷிதரின் அரும் பெரும் மரபிலுதித்து, பிரமச்சரியம், கிருஹஸ்தம், வானப்பிரஸ்தமாகிய ஆஸ்ரமங்களைத்தாண்டி, நான்காவது ஆஸ்ரமத்துக் கணிகலனாய் ஆன்மப் பிரகாசம் அகில உலகும் ஒளிபரப்ப வெள்ளிப்பனி மலைச்சாரலில் ரிஷீகேசமென்னும் திவ்ய க்ஷேத்திரத்தில் ஆனந்த குடிரில் அமர்ந்தவாறே தெய்வீக வாழ்க்கை நெறியை உலகுக்களித்துவரும் உத்தமரே வருக! வருக!

பண்டைப் புகழ் படைத்த பாண்டி மன்னருக்குத் தலை நகரமாகிய இம்மதுரை மாநகருக்குப் பரிவார சகிதமாய் உங்கள் வரவு நல்வரவாகுக!

சேது ஸ்நானமுடித்து சிங்களத்தீவையும் கண்டு களித்து உற்சாகத்துடன் வரும உங்களை வரவேற்கும் பாக்கியத்தைப் பெற்றது இம்மதுரை வாசிகளாகிய எங்கள் பூர்வ புண்ணிய விசேஷமென்றே கருதுகின்றோம. நட மாடும் தீர்த்த ரூபமாய் விளங்கும் உங்களுடைய பாத ஸ்பர் சமும் அருள் நோக்கும் அபூர்வமாய்க் கிடைக்கும் அரும் பேறுகளேயாகும.

தனக்கென வாழாப் பிறர்க்குரியாளரே !

நான்கு வேதங்களிலும் ஜீவாதாரமாயுள்ள பிரண வத்தை பண்டிதர், பாமரர் யாவரும் ஓதவும், பாடவும் பண்ணிவைத்த பேருதவிக்கு உலகம் செய்யும் கைம்மாறு யாதுளது.

பத்திரிகை வாயிலாகவும், புத்தகங்களின் வாயிலாக உங்களுடைய அரும் பெரும உபதேசங்களைப் பார்த்துப் படித்துணர்கிறோமாயினும், நேரில் பொழியும் வாக்கியா மிருதத்தைக் கேட்கும் பேறு இன்றுதான் அடைந்து ளோம். மூன்றுவித தாபங்களால் வாடி வதங்கித் தவிக்கும் எம்போன்றார்க்கு உங்கள் மணிவாசகம் பரம ஔஷதமா யிருக்குமென்பது ஒருதலை.

இப்படிக்கு,
மதுரை மஹாஜனங்கள்.

ஸ்ரீ K. M. S. லக்ஷ்மணமய்யர்,
வரவேற்புக் கமிட்டித் தலைவர்.

ஸ்ரீ ஸ்வாமி சிவானந்த சரஸ்வதி

மஹாராஜ அவர்களுக்கு மதுரை ஸ்ரீ ஸாயிபாபா

பக்த சபையார் வாசித்தளித்த

# வரவேற்பு இதழ்

## ஆனந்தக் குடிரில் மிளிரும் ஞானச்சுடரே வருக! வருக!!

என்றுநாட்டினுமசிறந்த தென்னாடாகிய பாண்டிய நாட்டினர்களின் தலைநகராய் விளங்கும் இம் மதுரையம்பதியில் கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மீனாட்சிசுந்தரேசப் பெருமானின் கிருபாகடாக்ஷத்தால் தங்களை தரிசிக்கும் பாக்கியம் பெற்றது குறித்து அகமகிழ்ந்து தங்களுக்கு நல்வரவு கூறுகிறோம்.

## பிறர்க்கென வாழும் பெருந்தகையீர்!

தங்களின் பிறப்பிடமாகிய அகஸ்தீய மலைப்பிராந்தியத்தின் புகழுக்கொப்ப மானிடவர்க்கத்தின் பிணியைப் போக்கும் பண்டிதனாய் உண்மைத்தொண்டை இளம்பிராய முதலே செய்துவந்துள்ளீர். தாங்கள் மூன்று ஆசிரமங்களைக்கடந்து நான்காவது ஆசிரமத்திற் கனிகலனாய் விளங்கி, மக்களுக்கு பத்திரிகை வாயிலாகவும், புத்தகங்களின் வாயிலாகவும், ஆத்மபோதம்செய்து வருவதுடன், தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தை, அகில இந்தியாவெங்கும் ஸ்தாபித்து தொண்டுசெய்து வருகிறீர்கள்.

தங்களின் ஜீவாதார ஞானபோத விளக்கம், பண்டிதனும், பாமரனும், சிறுவர்களும் எளிதில் அறிந்து கொள்ளும் முறையில் எல்லோர் மனதிலும் பதிந்து வருகிறது. "ஸாயிஸுதா"வில் தங்கள் எழுதிவரும் ஞான

போதக் கட்டுரையைப் படித்து பயனடைந்து வருவதுடன் ஜாதிமத பேதமற்ற சமரஸ சன்மார்க்கத்தை அனுபவத்தில் இமயமுதல் குமரிவரை பரப்பி வருவதைக்கண்டு களிப்புறுகிறோம்.

ரிஷிகேசமென்னும் திவ்விய தெய்வீகபதியாகிய தங்கள் ஆச்ரமத்தை அணுக தனவந்தர்களால்தான் முடியுமென்றிருந்ததை எல்லாமக்களும் தங்களின் தரிசனத்தைப் பெற தங்கள் பரிவாரங்களுடன் எழுந்தருளி காக்ஷியளித்ததை எண்ணி பெரும்பேறெய்துகிறோம.

தங்களின் தரிசனமும், திருவாசகமும் மக்களுக்கு பேர் ஆறுதல் அளிக்குமென நம்புகிறோம்.

மதுரை
15-10-50

தாங்கள் அன்பிற்குரிய,
ஸ்ரீ ஸாயிபாபா பக்த சபையார்.

அறிஞர் தொ. ரா. ப. அவர்களால் செந்தமிழ்ப் பாமாலை ஒன்றும் சூட்டப்பட்டது.

அஃது வருமாறு:—

## மஹாத்மா சிவானந்த சுவாமிகள் திவ்விய சமூகத்திற்கு

சேது தரிசனஞ் செய்திங் கெழுந்தருளும்
சாதுசிவா னந்த சரஸ்வதி நும—பாதமலர்
இன்றியாம சேவித்தோம் இம்மதுரை நன்னகரில்
நன்று பெருகிடவே நாம்.

நாமத்தைக் கேட்டிருந்தோம் நல்ல தெய்வீகநெறி
தாமத்தை அங்கங்கு தாபித்தீர்—நேமத்தால்
பண்புயரத் தானே பகலிரவு பாடுபட்டீர்
கண்பரந்த வையகத்தைக் கண்டு.

கண்டதே காட்சி கடவுளில்லை என்றுற்றும்
சண்டிகள் தாமலிந்த தாரணியில்—பண்டைநாள்
மேன்மை விளங்கிடவே வெற்றிமிகு நாமத்தைத்
தான்மொழிந்தீர் சந்ததமும் தான்.

தானந்தவம வேள்வி தான்மறவா தாற்றியக்கால்
ஆனந்த வாழ்வெய்த லாமென்றே—ஆனந்தக்
கண்ணனருள் வாக்கியத்தை கண்டெவரும் தாம்
பண்ணினீர் அன்புடனே பார்த்து. [தெளிய

பார்த்தோம் பரிசித்தோம் பாதமலர் பூசித்தோம்
ஈர்த்தெம்மை ஆட்கொள்வீர் என்றுரைத்தோம்—சீர்திகழும்
அவ்விருஷி கேசமதில் ஆச்சிரமம் கொண்டவா!
செவ்விய நற்கருணை செய்.

கீதா நிலையம் அடிமை
30, மால் 1-வது தெரு மதுரை. தொ. ரா. ப.

ஸ்ரீ சுவாமிகள் மதுரையில் டாக்டர் ஸ்ரீ சுப்ரமணியம் அவர்கள் இல்லத்துக்கும் D. L. S. கிளைத் தலைவர் ஸ்ரீ C. S. விஸ்வநாத அய்யர் அவர்கள் வீட்டுக்கும் சென்று அனைவரையும் ஆசீர்வதித்து வந்தார்.

இத்துடன் மதுரை நிகழ்ச்சிகள் முடைவடைந்தன.

## மதுரையில் சிவானந்தர்

மதுரை, அக், 15— இன்று காலையில் மதுரை வந்து சேர்ந்த சுவாமி சிவானந்த சரஸ்வதிக்கு ரெயில்வேஸ்டேஷனில் பெரும் வரவேற்பு அளிக்கப்பட்டது. பின்னர் சிவானந்த சரஸ்வதி நகர வீதிகளின் வழியாக ஊர்வலமாகச் சென்று மீனாட்சியம்மன் கோவிலுக்கு விஜயம் செய்தார்.

—தந்தி, 16-10—50

## விருதுநகர்

விருதுநகரில் விசேட வரவேற்பும் ஊர்வலமும் நடந்தன. பல வரவேற்பு இதழ்கள் வாசித்தளிக்கப் பட்டன. அவற்றிற்கெல்லாம் ஸ்ரீ சுவாமிகள் தக்கவாறு பதிலளித்து ஆசிபுரிந்தார்.

ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி ஆலயத்துக்கும் உள்ளூர் கோவிலுக்கும் சென்று தரிசித்தார்.

விருதுநகர் காரைக்காலம்மையார் பெண்கள்
வைதீக வித்தியாலய சங்கத்தார்
பணிவுடன் வழங்கிய வரவேற்பு

### வாழ்த்துப் பா மலர்

நேரிசை யாசிரியப்பா

தெய்வ மணக்கும் செந்தமிழ் நாடு
செய்தவப் பயனாய்த் தீம்புனல் பொருநைத்
தண்கரைத் தோன்றித் தண்டமிழ்க் குறுமுனி
விண்பொரு குடுமி மிளிர்கயி லாயப்
பொருப்பினை நோக்கிப் புறப்பட்டாற்போல்
தமியராய்ச் சென்று தமனிய இமய
மலையினற் சாரலில் வளஞ்சால் பூம்பொழில்
வருடிய சூழல் இருடிகேசந் தனில்
பற்பல ஆண்டுகள் பொற்புறு யோகம்
பண்ணிய மாதவப் புண்ணிய மூர்த்தி!
பவானந்த ஞான சிவானந்த சரஸ்வதி
திருப்பெயர் மக்கள் சிரத்திற் கொண்டு
போற்றிட வந்த புவன சற்குரு!
வேதா கமமும் வேதாந்த சாகரம்
ஆங்கிலம் செந்தமிழ் ஆரியம் பல பல

மொழித்துறை யாவும் பழுத்தமெய்க் கருத்தெல்லாம்
எழுத்தெணிப் படித்த விழுத்தவ முனிவ!
உலகியல் மதங்களின் உண்மைக ளெல்லாம்
பிரமம் ஒன்றினையே பேசுவ தென்ன
அங்கையின் நெல்லிபோல அமுதமா மொழியால்
மழையெனப் பொழியும் செழுமுகில்! யாண்டும்
தெய்வ நெறியாம் செங்கதிர் பரப்பும்
ஞாயிறே வருக! ஞாலம் முழுதும்
வணங்கியும் வாழ்த்தியும் வாழ்ந்திட
வருக வருக! வாழி வாழியவே!

திருச்சிற்றம்பலம்

விருதுநகர்
16—10—50

**காரைக்காலம்மையார் பெண்கள்**
**வைதீக வித்தியாலய சங்கத்தார்.**

—o—

## விருதுநகரிலுள்ள சமூகங்களும் சங்கங்களும் சேர்ந்து வாசித்தளித்த

## வரவேற்பு இதழ்

உலகம் உய்யவந்த உத்தம தவ சிரேஷ்டரே!

தங்களை இவண் வரவேற்று உபசரிக்கக் கிடைத்த பாக்கியம் நாங்கள் முற்பிறப்பில் செய்த நற்பயனே. நம் நாடு வியாசர், யாக்ஞவல்கியர், கபிலர், சங்கரர், புத்தர், வள்ளுவர், இராமகிருஷ்ணர், விவேகானந்தர் முதலிய ஆத்ம ஞானிகளை ஈன்றெடுத்த நாடு. அவர்கள் ஏற்றிய விளக்கு இன்னும் அணையவில்லை. அவற்றைத் தூண்டி

இன்னும் ஒளி மிளிரச் செய்யும திருப்பணியில் வாழ்க்கையை அர்ப்பணித்திருக்கும் தங்களை வரவேற்றுக் களிப்படைகிறோம்.

கண்ணன் காட்டிய வழியில் செல்லும் கர்மயோகியே !!

"தீயைப் புகைசூழ்வது போலவும், கண்ணாடியைக் களிம்பு மூடுவது போலவும் கர்ப்பத்தைக் கர்ப்பப்பைமூடி நிற்பது போலவும் ரஜோ குணம் மனிதன் அறிவைச் சூழ்ந்துகொள்ளுகிறது" என்று கண்ணன் சொல்லியது போல அகங்காரம் இன்று அகில உலகத்தையும் ஆட்டி வைக்கிறது. உலகம் மெஞ்ஞானத்தை மறந்து விஞ்ஞானத்தை நம்பி அஞ்ஞானத்தில் விரைந்து சென்று கொண்டிருக்கிறது. என்று அழிவு வருமோ என்று மக்கள் அஞ்சி நிற்கின்றனர். இச்சமயத்தில் தங்கள் உபதேசம் ஊற்றெடுத்து உலகெங்கும் பரவி உண்மை ஞானத்தைப் பரப்பி உய்விக்குமாக.

உபநிஷத்தின் உண்மைச் சிகரமே !!!

"ஞானிகள், வெவ்வேறு பெயரும் உருவமும் கொண்ட பொருள்களின் ஒருமையைக் கண்டு வேற்றுமை யுணர்ச்சியை அகற்றிவிட்டு ஒளிரும் பரம்பொருளை அடைவார்கள்" என்று முண்டக உபநிஷதம் கூறுகிறது. அவ்வாறு வேற்றுமையில் ஒற்றுமையைக்கண்ட தாங்கள் உலகிற்கும் அவ்வுணர்ச்சியை ஊட்ட இமயம் முதல் குமரிவரை திக்விஜயம் செய்துகொண்டிருப்பது கண்டு மக்களின் கலி நீங்கிவிடுமென ஓர்ந்து நாங்கள் பேருவகை கொள்கின்றோம். "யோக முறையில் நின்று பற்றை நீக்கித் தொழில்களைச்

செய்" என்று நாங்கள் சென்னையில் மூரசொலி கொட்டியது இன்னும் எங்கள் காதுகளில் ஒலித்துக்கொண்டிருக்கிறது.

வேதாந்த விற்பன்னரே!!:

வேதத்தின் உட்பொருளையும் புராணங்களின் சூக்ஷுமப் பொருள்களையும் சாதாரண மனிதனுக்கும் எளிதில் புரியும்படி சொற்பொழிவுகள் நிகழ்த்தியும், பல நூல்கள் எழுதியும் தெய்வநெறிக்கழகங்களை உலகத்தின் பல பாகங்களிலும் ஏற்படுத்தி ஆத்மீக போதனைகளை பரப்பிவரும் தவசிரேஷ்டராகிய தாங்கள் இன்று எங்கள் மத்தியிலிருப்பது கண்டு இந்நகர் சமூகங்கள் சங்கங்களின் பிரதிநிதிகளாகிய நாங்கள் இறும்பூது எய்துகிறோம்.

தவத்தில் சிறந்த யோக சிரேஷ்டரே!!!!

தாங்களே ஞானயோகி, தாங்களே ராஜயோகி, தாங்களே பக்தியோகி, தாங்களே கர்மயோகி, தாங்களே எல்லாம். இமயத்திலிருந்து வீசும் தங்கள் ஞானஒளி உலகெங்கும் சென்று இருளைப் போக்கி ஆத்ம ஞானத்தை நிரப்பி சாந்தியை அளிக்குமாக. சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

இப்படிக்கு

சமரச சன்மார்க்க சங்கம்.

அருணகிரிநாதர் திருப்புகழ்.

சத்தியஞான சபையைச் சேர்ந்த ஜோதி பக்திப் பெண்கள் கழகம்.

காரைக்காலம்மையார் சங்கம்.

கைவல்ய மாதர் சங்கம்.

தெய்வநெறிக் கழகம்.

காரகாத்தார் கல்வி முன்னேற்ற சங்கம்.
ஆயிர வைசிய காசுக்காரச் செட்டியார்கள்.
தேவர் மகாஜன சங்கம். எர்ரகொல்ல ராஜகம்பள மஹாஜன சங்கம்.
விஸ்வகர்ம வாலிபர் சங்கம், விஸ்வகர்ம சங்கீத பஜனாலயம்.
ஸ்ரீகனகசபாபதி சுவாமி கோவில் தேவஸ்தானம்.
ரெட்டியார் சமூகம்.
அல்லம்பட்டி தேவாங்கர் தொழிலாளர் சங்கம்.
சீர்குடி வேளாளர் சமூகத்தார்.
சாமியார் நாகப்ப நாயக்கர் சாதுக்கள் சங்கம்.
தெலுங்குச் செட்டியார் சமூகம்.
தேவேந்திர குலத்தார். அருந்ததியார் சமூகம்.
மருத்துவ குல சங்கம் ஆதித்திராவிட சமூகம்.

விருதுநகர்,
16—10—50.

—o—

அருட்பெரும்சோதி, தனிப்பெருங்கருணை.

ரிஷிகேசம் பூமண்டல சத்குரு ஸ்ரீ சுவாமி சிவானந்த சரஸ்வதி அவர்கள் விருதுநகருக்கு எழுந்தருளியபோது விருதுநகர் சமரச சன்மார்க சங்கத்தார் உவந்தளித்த வரவேற்பு நன்மொழி.

உயர்ஞான சத்குருவே !

உலகமெல்லாம் உண்மை நெறியாகிய தெய்வ நெறியைக் கடைபிடித்து உய்யும்படி அகில உலகத் தெய்வநெறிக்

கழகத்தை ரிஷிகேசத்தில் நிறுவி உயர்ஞானத்தைப் பரப்பி வரும் தங்களது அருஞ் செயலினை எம்மனோரால் என்றும் போற்றுதற்குரியதே.

அருள் அமுதம் பொழியும் தவக்கடலே !!

நிஷ்காமிய கர்மயோகம், நவவித பக்தி, அஷ்டாங்க யோகம், துவைதம் விசிஷ்டாத்வைதம், சுத்தாத்வைதம், அத்வைதம் ஆகிய சாஸ்திர ஞானங்களை கருணையோடு திருவாய் மலர்ந்தருளியும், நூலின் வாயிலாக எழுதியும் உலகினர் சத்விஷயங்களை உணர்ந்து நடக்க அருளும். தவத்திற் சிறந்தோங்கும் நும் வரவால் எங்கள் ஆன்மா புனிதமடைகின்றன.

உடல், உயிர், மருத்துவரே! வருக! வருகவே !!

உடலுக்கு வரும் பிணிகளைப் போக்கும் மருத்துவராகவும் உயிருக்கு வரும் பிறவிப் பிணிகளைப் போக்கும் ஞான மருத்துவராகவும் திகழ்ந்து உடலையும் உயிரையும் காக்கும் அருளாளரே, வருக! வருகவே !!

விருதுநகர் இங்ஙனம்
16—10—50 சமரச சன்மார்க்க சங்கத்தார்.

—o—

துக்க நிவர்த்தியே, பரமானந்த ப்ராப்தி

## ரிஷிகேசம் பூமண்டல சத்குரு

## ஸ்ரீமத்

சுவாமி சிவானந்த சரஸ்வதி மஹாராஜ் அவர்கள் திருமுன்புக்கு விருதுநகர் கைவல்லிய மாதர் சங்கத்தார் பணிவுடன் வழங்கிய வரவேற்பு தோத்திரபாமாலை.

1) வேதநெறி விரித்துரை செய் வியாசமுனி யென்கோ
மாதவ சிரோமணி வசிட்டமுனி யென்கோ
ஓதுமுறை யுணர்த்துமிவர் ஒருகுருவ மென்கோ
சோதி சிவானந்த சரஸ்வதியுருவ மென்போம.

(2) குறுமுனிவன் நெடியவுருக் கொண்டுலவு மென்கோ
சிறுவுவட லூர்முனிவன் சோதவுருவெனகோ
சிறைமதி யேம்தவத திரணடவடிவென்கோ
உறுதவசி வானந்தஒரு முனிவ னென்கோம.

(3) பொன்மலிநற் கொன்றைபுனை புருசடையனிறைங்கு
நின்மலசற் கயிலாயம நிலைபெயர்ந்துவந்த
தன்மயநல் உருவடிவாம சாதுதவஞான
சின்மயசி வானந்தசரசு வதிதோற்றம்.

(4) சிவனெல்லாம் பிரமமயம தெய்வநெறி மார்க்கம்
பாவனைதி யானமென்ப பண்பினொடு கூறி
ஆவலோடு மககள்தமை அன்புநெறி யுய்க்கும்
தேவசி வானந்தசரஸ் வதிகுரவ! வாழ!

(5) விருதுநகர் செய்ததவ மினிர்வடிவ தாகிக்
கருதுபுகழ் ஞானதவ கண்பமொடு புண்ய
திருவுருவி னன்புமலி சிவானந்த ஜோதி
வருகவரு கின்பநிறை வழங்கிடுகவாழி.

விருதுநகர் கைவல்ய மாதர் சங்கத்தார்.
16—10—50

தெய்வநெறிக் கழகத்தின் ஸ்தாபக தலைவரும் லோக குருவுமான ஸ்ரீசுவாமி சிவானந்த சரஸ்வதி மகராஜ் அவர்களின் விருதுநகர் விஜயத்தின்பொழுது மாலைப்பேட்டை மகமை டிரஸ்டிகள் வாசித்தளித்த வரவேற்பு இதழ்.

பூமண்டலம் போற்றும் புனித குருவே. வருக! வருக!

நாமனைவரும் வரவேற்க வாருக. காந்தமும்போல் நாஸ்திகம் பேசி வருகின்ற இக்காலத்தில் இமயத்திலிருந்து ஆத்மீக அணுகுண்டை எறிந்து ஆன்ம அறிவுச் சுடரை வீசி மக்களை ஞானிகளாகவும் ஏகதேவராகவும் வாழச்செய்யும் தெய்வ நெறியைக் காட்டும் தேவ, தேவ, தேவா, உங்கள் வரவுக்கு நாங்கள் இருபூசெய்துகிறோம்.

ஆத்மாக்களுக்கு ஆறுதல் கொடுக்கவந்த ஆத்மீக குருவே,

இந்துமதத்தின் பெருமைகளை அவ்வப்போது உலக மறியச் செய்வதற்கு லக்ஷக்க புருஷர்களாக சுவாமி தயானந்த சரஸ்வதி, ராமகிருஷ்ண பரமஹம்சர், விவேகானந்தர் போன்ற ஆத்மீக அறிவுக்களஞ்சியங்களாக பல ஆன்றோர்கள் தோன்றினர். அவர்களைப் போலவே தென்னாட்டிலே தோன்றி வடநாடு சென்று உபநிஷதத்துக்களின் உண்மைகளை ரிஷிகேசத்திலிருந்து உலகறியச் செய்யும் உத்தம குருவே, தங்கள் எடுத்த சத்சங்க காரியம் இனிது முடிய எங்கள் ஆதரவை தங்களுக்கு என்றும் அளிப்போம் என்னும் மனவுறுதியைத் தங்களுக்குத் தெரிவிக்கின்றோம். பரப்பிரமத்தின் உட்பொருளுணர்ந்த பரமார்த்த குருவே!

அணுகுண்டு போன்ற அற்புத ஆயுதங்கள் நிறைந்த இவ்விருபதாம் நூற்றாண்டிலே எங்களை ஆத்மானுபூதியடையச் செய்து அனுக்கிரகிக்க வேண்டி தென்னாட்டுத் திக்விஜயத்தில் எங்கள் கோவிலை பெரிதென மதித்து இங்கு விஜயம் செய்து எங்களை ஆசீர்வாதம் செய்யவந்த முனிசிரேஷ்டரே! எங்களின் பயபக்தியுடன் கூடிய மகிழ்ச்சியுள்ள வரவேற்பை தங்களுக்கு பெருமையுடன் சமர்ப்பிக்கின்றோம்.

விருதுநகர்
16—10—50

இங்ஙனம் தங்கள் பணிவுள்ள
மாலைப்பேட்டை மகமை டிரஸ்டிகள்

ரிஷிகேசம் ஸ்ரீசுவாமி சிவானந்த சரஸ்வதிஜீ மஹாராஜ் அவர்கள் விருதுநகருக்கு தரிசனம் தந்தபோது ஷெ நகர் சத்யஞானசபையின் தருமச் சாலையைச் சார்ந்த ஜோதி பக்தி பெண்கள் கழகத்தார் வாசித்துத் தந்த வணக்க வசனம்.

தமிழ்நாடு பெற்ற தவக்கொழுந்தே வருக, வருக!

கைலயங்கிரியில் கனகசபேசன் தூக்கிய திருவடியின்கீழ் வீற்றிருக்கும் ஞானவாழ்வே வருக. வருக.

எம்போல்வார் நெஞ்சக் கலகம் அழித்து கதிவழிகாட்டும் கலைக்குருவே வருக! வருக!

சுவாமிஜியின் வருகையால் நாட்டிலுள்ள பஞ்சமும் பிணியும் பறந்தோடவும் கல்வியும் ஞானமும் கதிர்த்து ஓங்கவும் எல்லாம் வல்ல இறைவனின் திருவடி முன்னிலையில் உங்கள் பொன்னார் திருவடியை கும்பிடுகிறோம்.

விருதுநகர் சத்யஞான பையின் தருமச்சாலையை
16—10—50 சார்ந்த ஜோதி பக்தி பெண்கள் கழகத்தார்.

—o—

## திருநெல்வேலி

அங்கு நடந்த முன்னேற்பாடுகள் குறித்து வெளிவந்த அறிக்கை.

பாளையங்கோட்டை திவ்ய ஜீவன கிளைச் சங்கத்தின் (Divine Life Society) ஆதரவின் கீழ் (7-5-50)ல் அடியிற் கண்ட தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

ஷை சங்கத்தின் ஸ்தாபகரும் தலைவருமான ஸ்ரீலஸ்ரீ சுவாமி சிவானந்த சரஸ்வதி அவர்கள் தாம் பிரசாரத்திற்காக பாரத தேச முழுவதும் தம் சிஷ்ய குழாங்களுடன் திக் விஜயம் செய்ய உத்தேசித்திருப்பதால் ஷை யாத்திரைக்கு ஆதரவு கொடுத்து சுவாமிகளின் ஜனன ஜில்லாவாகிய திருநெல்வேலியிலுள்ள பல முக்கியமான இடங்களிலும் ஆத்மபிரசாரத்திற்குஏற்பாடுகள்செய்யவும், ஷைகோஷ்டியாருக்கு இடவசதி, போஜன வசதி, போக்கு வரவு வசதிகள் செய்யவும் போதிய பொருளுதவி, மற்றும் வேண்டும் உதவிகள் அவசியமாயிருப்பதால் ஷை சங்கத்தினர் ஒரு வரவேற்புக் கமிட்டி ஏற்படுத்தவும் ஷை கமிட்டிக்கு கனவான்களை நிர்வாகஸ்தர்களா யிருக்க கேட்டுக் கொள்ளவும் ஏகமனதாக தீர்மானித்திருக்கிறார்கள்.

ஸ்ரீ சுவாமி சிவானந்தர் ஒரு லோக குரு. உலகத்திலுள்ள சர்வ மதங்களையும், சர்வ தேசங்களையும் ஐக்கியப்படுத்த முயற்சித்துக் கொண்டு வரும் ஒரு பெரிய ஆத்ம ஞானி. தீர்க்கதரிசி. உலகத்தில் பல்வேறு பாகத்திலும் அவருக்கு சீடர்கள் இருக்கிறார்கள். அவர் அசுர குணம் படைத்தவர்களை மஹான்களாக்கியிருக்கிறார். நாஸ்திகர்களை ஆஸ்திகர்களாக்கி யிருக்கிறார். ஹிமயத்திலுள்ள ரிஷிகேசத்திலிருந்து ஆத்ம சக்தியை உலகெங்கும் பரப்பி

அருள் புரிகிறார். தீவிர உலகப் புனருத்தாரணத்திற்கு தேச யாத்திரை புறப்படுகிறார். அவர் செய்யும் தாமப் பிரசாரம், அமோஹமான வெற்றியைக் கொடுக்கும் என்பதற்கு எள்ளளவும் சந்தேகமில்லை. அவருடைய யாத்திரையின் முக்கிய நோக்கம் உலகில் ஒற்றுமையும், சாந்தியும், சமாதானமும், தெய்வீகமும் நிலவச்செய்ய வேண்டுமென்பதே. அவர் ஹிந்து தாமத்தை சரியான முறையில் ஸ்தாபிக்க முயற்சிப்பதோடு நிற்கவில்லை. உலகத்திலெல்லாம் பரந்த சமரச ஞானம் நிலவ முயன்று வருகிறார். மகாத்மா காந்தி ஆரம்பித்து விட்ட "ராம ராஜ்யம்" அல்லது "பரலோக ராஜ்யத்தை" பூர்த்தி செய்து தேசத்தையும் உலகத்தையும் ரட்சிக்கப் பிறந்தவர்! ஒரு பெரிய அத்யாத்மிக வீரர், சமாதான தூதர்! எல்லாம் வல்ல இறைவன் அவருடைய தன்னலமற்ற தியாகம் நிறைந்த புனித சேவையை வெற்றி பெறச் செய்வானாக!

ஆகையால் மகா ஜனங்கள் அனைவரும் இம்முயற்சிக்கு ஆதரவு கொடுத்து அம்மாஹானின் ஆசியைப்பெற்று தேசத்திலுள்ள நாஸ்திகத்தை தட்டியெழுப்பி மக்களிடையில் வெறுப்பையும் குழப்பத்தையும் நீக்கி அன்பையும், ஒற்றுமையையும் நிலைநாட்டி பேரானந்தத்தை அடையும்படி இச்சங்கத்தார் மிகவும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறார்கள். அதற்கு வேண்டிய பொருளுதவியும்; உழைப்பும் ஆதரவும், நல்கவேண்டுமென்று பொது ஜனங்களைப் பிரார்த்தித்துக் கொள்கிறார்கள்.

விருதுநகரிலிருந்து திருநெல்வேலி வருமிடையே ஸ்ரீ சுவாமிகள் கோயில்பட்டி அன்பர்களுக்கு ரயில்வே பிளாட்பாரத்திலேயே தரிசனமளித்து நல்லுரைகள் வழங்கி

ஆசி புரிந்தார். பின்னர் ரயில் வண்டி திருநெல்வேலி வந்தடைந்தது. ஏராளமான பக்தகோடிகள் ரயில்வே நிலையத்தில் ஜனசமுத்திரமொத்த திரண்டிருந்தார்கள். ஸ்ரீ சுவாமிகள் அங்கேயே நெடுநேரம் அவர்களுக்குத் தரிசனமளித்தார்.

நகரப்பிரமுகர்கள் வரவேற்புரைகள் பல வாசித்தளித்தார்கள்.

—o—

திருநெல்வேலி மாவட்ட நாட்டாண்மைக் கழகத்தார்

அன்பும், பணிவும், உவகையும், கொண்டளிக்கும்

## வரவேற்புப் பத்திரம்

அன்பெனும் அறிவுரை பரப்பும் அண்ணலே!

மன்னுயிரைச் சேர்வதனில் கொன்றமிழத்தி, மமதை விஷம் குதிரம்போல் தலைக்கேறி, வறுமையிலே மக்களையே ஆழ்த்திவிடும், மாந்தர்கள் வலுத்துவிட்ட இந்நாட்டதனில், சத்தியமும் சாத்வீக அன்புரையும், நன்னெறியும் நல்லுரையும் மிகப் பெற்ற மாந்தருக்குள் ஜோதியென, பத்தமடை புனிதபூமி பெற்றளித்த, பார்புகழ் புண்ணியனே வருக, வருக!

"மாரத வீரர் மலிந்ததின்னாடு, மாமுனிவோர் பலர் வாழ்ந்த பொன்னாடு!" என்று பாடிய, பாட்டுக்கொரு புலவன் பாரதியின் பொன் வாக்கு, பலித்தது கண்டு பரம உவகைபெற்றோம். தாழ்வுற்று வறுமை மிஞ்சி விடுதலை தவறிக்கெட்டு, பாழ்பட்டு நின்ற பாரத தேசந்தன்னில்

பார்புகழ் காந்திஜி அவதரித்தது கண்டோம். அரசியல் வாழ்விலே விடுதலை தந்து, அஹிம்சை, மெய்யெனும் உரைகள் ஈந்து அவனியோர் புகழும் அமரரானார் காந்திஜி. அன்னவன் தோன்றிய அரும பெரும் நாட்டினிலே, அன்பினை மட்டும் அளித்திடாமல், ஆத்மீக ஒளியை அல்லலுறும் மாந்தர்க்கு, அளித்திட வந்தனை, அன்பின் சுடரொன

நன்னெறி காட்டும் நாயகமே!

வாழ்வின் மாயைகள் யாவும் வெறுத்து, மருந்துக்கும் உதவாத கல்வியை உதறி, கடல் தாண்டிச் சென்ற நாடதனில் செய்த, அரும்பெரும் மருத்துவப் பணியையும் தள்ளி, அமைதியைத் தேடி அன்றொரு நாளில் ரிஷிகேசம் சென்று, ஒன்பது ஆண்டுகள் ஓயாத் தவம் செய்து, உண்மையை உணர்ந்து உத்தமனாகி, உலகினைக் காக்க முன் வந்த குருவே! அல்லல் மேகமும், வறுமை இருளும், சாதிச் சண்டையும், பணவெறிப்பேய்களும், நாட்டினைக் கலக்கிடும் இந் நாளிலே நினது, அன்புரை பரம்பிடும் அமைதியைக் கண்டு, அவனியிற் பிறந்த அரும்பலன் பெற்றோம்!

அஞ்ஞானம் அகற்றிடும் அறிவின் ஒளியே!

காலம் செய்திடும் மாயைகளிலே, கைப் பொம்மையாகி கடமை மறந்து, தெய்வத்தின் சக்தியைச் சிறிதும் அறியாது, சிந்தியாது செயல்படும் மாந்தர்கட்கு 'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' என்றதோர் உண்மையை, எடுத்துரைக்கவே எங்கும் விரைந்திடும், தங்கள் திருமுக தரிசனம் கண்டும், பொன்னென மிளிரும் நல்லுரை

கேட்டும், மனதிலே மகிழ்வு நிரம்பப் பெற்றோம்; பிறந்த தின் பயனைப் பெரிதுமுணர்ந்தோம்.

தொன்று நிகழ்ந்ததனைத்தும் உணர்ந்திடும் தொல்கலை வாணரே! நின் அரும்பணி, அல்லும் பகலும் வளரட்டும்; அல்லல்படும் அவனியோர்க்கு அமைதி அளிக்கட்டும்; மாந் தர்கள் உய்ந்திட மார்க்கம் தரட்டும். இதுவே எங்கள் மனதின் முடிவற்ற ஆசை. உலகிலே மாந்தர் அனைவரும் சோதரர்; உன்மத்தர்களாகி, உற்ற தோழமை பூணுது. வீணிலே பகைத்திடும் மனித சமூகம், உண்மை நிலை அறிந்து ஊக்கமும் உள்வலியும் பெற்று, உயர்ப் பிறவிக ளாய் வாழ உயரிய தத்துவ போதனை நாடெங்கும் பரப்பி வருகின்றனை. எல்லோரும் ஓர் குலம் எனும் இன்பப் போதனையை துலங்கச் செய்கின்றனை. நீங்கள் செய்து வரும் செப்பரிய தொண்டதனை, எவ்விதத்தில் செப்பிடு வோம்?

மாந்தருக்குள் மாமணியே!

அங்கிங்கெனாதபடி எங்கும் தங்கள் உரை பரவட்டும். ஆனந்த வாழ்விலே, அமைதியுடன் வாழ, அனைவருக்கும் வழி காட்டட்டும். அன்பெனும் கதிரவன், தங்கள் வருகை யாலே, அணையாத ஒளியுடன், அவனியெங்கும் சுற்றி வந்து, இன்பமெலாம் பரப்பிடவே, இறைவனருள் வேண்டுகின்றோம்.

திருநெல்வேலி,
16—10—50

இங்ஙனம்,
நெல்லை மாவட்ட நாட்டாண்மைக்
கழகத்தார்.

—o—

மேலப்பாளையம் நகர் மன்றத்தாரால் ஸ்ரீலஸ்ரீ சிவானந்த சரஸ்வதி அடிகளாரவர்கட்கு வாசித்து வழங்கிய வரவேற்பிதழ்.

அடிகளார் அவர்களே

மேலப்பாளையம் பொதுமக்கள் சார்பில் நகர்மன்றத் தலைவரும் உறுப்பினரும் தங்களை வரவேற்கும் பொறுப் பேற்றதற்கு பெரிதும் மகிழ்ச்சியடைகின்றோம். எங்களது நகர மன்றம் அண்மையில் தான் துவக்கப்பட்டது. சமய சார்பற்ற நம் அரசாங்கத்தின் ஒரு சிறு கிளையாகிய இம் மன்றத்திற்கு இந் நகரின் பெரும்பான்மை குடிகளாகிய முசலமான்கள் சார்பில் நாங்கள் எம்மதமும் தம்மதம் என எண்ணிப் பணியாற்றும் தங்கட்கு வரவேற்பு வழங்கும் வாய்ப்பை பெற்றதற்கு நாங்கள் பெருமை யடைகிறோம். பல்வேறு சமயத்தாரும் இங்கே வேறுபாடின்றி உடன் பிறந்தோர் போலவே வாழ்கின்றோம்.

நாட்டில் நலிவுற்று வாடும் மக்களினத்துக்கு அமைதி அளிக்க அவ்வப்போது தோன்றும் அண்ணல்களில் தாங் களும் ஒருவராய் திகழ்கின்றீர்கள். தங்களது நுண் ணிய ஆத்மார்த்த அறிவையும் புனிதத்தன்மையையும் மக்களிடையே பரப்பி மன்பதைக்கு மருந்தென விளங்கு கின்றீர்கள். இயல்பாகவே அமைந்த ஆற்றலின் காரண மாகத் தாங்கள் எதையும் ஆழ்ந்து சிந்தித்து கண்ட முடிவு களை மக்களுக்குப் பயன்படுத்தியுள்ளீர்கள். எனவே தன் பிறப்பால் பொருனையாறு பாயும் பகுதியைச் சேர்ந்தவ ரெனினும் தங்களை அறிவு ஆராய்ச்சி நிறைந்த மக்கள் வாழும் மாநிலமே தமதென உரிமை பாராட்டுகிறது கற்றோரும் மற்றோரும் போற்றுகின்றனர்.

இன்று நாம் உலகில் காணும் காட்சி என்ன, எங்கும் இருள் சூழ்ந்தே இருக்கிறது. வாழ்க்கை நெறியிலும் ஆத்ம துறையிலும் மக்கள் செல்லாது மாக்களைப் போன்று மதியிழந்து மாளகின்றனர். 'நெஞ்சு பொறுக்குதிலையே இந்த நிலைகெட்ட மாநதரை நினைததுவிட்டால்' இன்நிலையில் மக்களை செமமைபடுத்தி நலவழியில் இட்டுச செல்லத் தங்களைப்போன்ற அண்ணல்களும் இருககின்றூர்கள், என்பதை எண்ணி ஆறுதலடையத்தான் வேணடி யிருக்கிறது. இன்று தாங்கள் எஙகளிடையே இருப்பது எங்கட்கு பேராதரவாய் இருப்பதுடன் எஙகள உள்ளொளி கட்கு தூண்டுகோலாகவும இருக்கின்றீாகள. தஙகள் அருளொளி மக்களை நல்வழிப்படுதத பயன்பட வேண்டும் என்பது எஙகள் அவா ! வணக்கம்.

மேலப்பாளையம<br>16—10—50

இஙஙனம்,<br>நகா மன்றத்தார்.

—o—

# நெல்லையில் சிவானந்தருக்கு குதூகலமான வரவேற்பு

## எல்லா வகுப்பினரும் கலந்து கோண்டனர்

பாளையங்கோட்டை, அக். 17—பாளையங் கோட்டை நூற்றாண்டு மண்டபத்தில் நேற்றுமாலை ஏராளமாக ஹிநது முஸ்லிம், கிறிஸ்தவ ஆண் பெண் குழந்தைகள் கூட்டம் ஸ்வாமி சிவானந்தஜியைப் பார்க்கவும். அவருடைய உபதேசங்களைக் கேட்கவும் வந்திருந்தனர்.

ஸ்ரீ சிவானந்த யாத்திரை கோஷ்டி வரவேற்புக் கமிட்டி சார்பாகவும், பாளையங் கோட்டை நகாசபை

சார்பாகவும் அதன் தலைவர் ஸ்ரீ பி. எஸ். சுப்பிரமணிய பிள்ளையும், மேலப்பாளையம் நகரசபை சார்பாக ஸ்ரீ. வ செ த. முகம்மது இபுராகீம் நெல்லை ஜில்லா போர்டு சார்பாக ஸ்ரீ டி. எஸ். ஆதிமூலமும் வரவேற்பிதழ்களை படித்துக் கொடுத்தனர்.

ஸ்வாமிஜி வரவேற்புகளுக்கு நன்றி கூறிவிட்டும் பேசியதாவது: எல்லா மதங்களும் சம்மதமே, ஒன்றுக் கொன்று ஏற்றதாழ்வு என்று நினைக்ககூடாது எல்லா வற்றிலும் அடிபடைதலம் ஒன்றேதான். மதமென்பது ஓய்வு நேரங்களில் சர்ச்சை செய்யும் விஷமல்ல. ஸ்வானு பவமாகும், அதை உணர எப்பவும் உண்மையாக பேசி அதன்படி நடக்கவேண்டும். அன்பால் எல்லாரையும் அணைக்கவேண்டும். எல்லாருக்கும் மேலான கடவுளை எப்படி வேண்டுமானாலும் அழையுங்கள்.

ஸ்ரீ ஸ்வாஜி மேலும் கூறினார்:— எல்லா தீர்க்கதரிசி களையும் நாம் த்யானம் செய்யவேண்டும். சகிப்புத் தன்மையே ஞானத்தையும் நுண்ணிய அறிவையும கொடுக் கும். அதன் அடிப்படையில்தான உலக சமாதானமும் உலக சமத்வமும் உருவாகும்.

தியானத்தாலும், சமாதியாலும், மோக்ஷம் நிச்சய மாகக்கிட்டும். விரிவான போகமார்க்கம் வேண்டுமென்ப தல்ல. ஏதாவது ஒரு தெய்வத்தின மனதைப் பதிந்து தியானம் பண்ணினால் போதும். வீட்டிலேயே கோவி லென கருதி, மனமுருகி ஆனந்த சாகரத்திலிருக்க பழக வேண்டும்.

ஸ்ரீ டி. ஆர். கணபதிராமய்யர் வந்தனம் கூறினார்.

நேற்று மத்தியானம ஸ்வாமி சிவானநத சரஸ்வதி ரயிலில் வந்தார். ரயில்வே ஸ்டேஷனில அவரை சிவானநத யாத்திரை கோஷ்டி வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ பி. எஸ். சுப்பிரமணியப்பிள்ளை உபதலைவர் ஸ்ரீ டி. ஆர். கணபதிராமய்யா, ஜில்லா நீதிபதி ஸ்ரீ கே. எஸ். வெங்கட்டராமன் முதலியவர்கள் வரவேற்றனர்.

நெல்லை ம. தி. த. ரா. ஹிந்து கலாசாலையின் மாணவர்கள் சுவாமிஜியை வவேற்றனர். சமஸ்கிருதப் பேராசிரியர் ஸ்ரீ ராமமூர்த்தி ஸ்வாமிஜியை வரவேற்றுப் பேசினார்.

## மாணவருக்கு உபதேசம்

ஸ்வாமிஜி தனது மாணவர்களுக்குச் செய்த உபதேசத்தில கூறியதாவது:—

மனதை பக்குவப்படுத்திக்கொண்டு தியானம் பண்ணினால்தான் மோக்ஷம் கிட்டும். வாலிப பருவத்தில் படிக்கும் பொழுதே ஆத்மஞான வித்தை ஊன்றிவிடவேண்டும். ஏனெனில் பின்னால் வாழ்க்கையில் கிடந்து பலவித இடைஞ்சல்களில் அகப்பட்டுக்கொண்டு கஷ்டப்படும் பொழுது ஒரு நிமிஷம்கூட தியானம் பண்ண வசதியில்லாமல் போய்விடும். ஆத்ம ஞானம் வயதான பிறகு தேடிக் கொள்ளலாமென்றால் அது பெருந் தவறுதலாகும். தியானம் பண்ணும்பொழுது நிம்மதியாயிருக்க வேண்டும்.

ஸ்வாமிஜி மேலும் கூறினார்:— மாணவர்கள் ஞாயிற்றுக் கிழமைகள் தோறும் 1008 காயத்திரி ஜெபம் பண்ணவேண்டும். மாணவர்கள் பஜனை செய்து பக்தியைப் பெருக்கினால், பிற்காலத்தில் வாழ்க்கையில் ஏற்படக்கூடிய கஷ்ட நஷ்டங்களைச் சமாளித்துப் பேரானந்தமடைய முடியும்.

"மாணவர்கள், சமூக சேவை செய்வதில் ஈடுபட வேண்டும். உங்கள் ஆத்மாவுக்குள் புத்தி விவேகம் ஞானம் பெரிய களஞ்சியமாயிருக்கிறது. இரவு ஆகாரம் லேசாயிருந்தால்தான், காலையில் சீக்கிரம் எழுந்திருந்து ஸ்வாமியை தியானம் செய்யவும் படிக்கவும் முடியும்.

யோகாசனங்களின் மகிமை இவ்வளவு அவ்வளவு என்று கூற முடியாது. அவைகளுக்கு ஈடான தேகத்தை வலுப்படுத்தி பாதுகாக்க வேறு வழி கிடையாது என்றும் உங்களை வாலிபர்களாகத் திகழச்செய்யும். ரத்தத்தை சுத்தி செய்து சக்தியைப் பெருக்கும்.

ஸ்வாமிஜி மேலும் கூறினார் :— நம்மீது எத்தனையோ அன்னிய நாட்டார் பிற மதஸ்தர்கள் படையெடுத்து ஆண்டு ஆதிக்கம் செலுத்தினாலும் இன்று ஹிந்து மதமாகிய புராதன நாகரீகம் அழியாமலிருப்பதற்குக் காரணம் ஸ்திரீகள் தான் ஆகவே ஸ்திரீகள் பகவன் நாம வைபவ பஜனை செய்யவேண்டும்.

—தினமணி 18—10—50

இவ்விரு நிகழ்ச்சிகளுக்கிடையே சுவாமிகள் தர்மபுரம் ஆதீன மடத்துக்கு விஜயம் செய்து அவர்கள் உபசரிப்பை ஏற்றுக்கொண்டார். மறுநாள் (17-10-50) மிகவும் விசேடமான முறையில் பாத பூஜை நடைபெற்றபின்னர் சுவாமிகள் ஸ்ரீ நெல்லையப்பர் ஆலயத்துக்குச் சென்று தரிசித்தார். மந்திர தீக்ஷை விரும்பியடைந்த பக்தர்கள் பலருக்கு அவர்கள் நிலையை யனுசரித்து தீக்ஷைகள் செய்யப் பட்டன.

—o—

## ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் ஆசி

ஆண்டவனின் அருமைக் குழந்தைகளே!

இன்று புனித நாள். நம் தெய்வ நெறிக் கழகத்தின பக்தி, அறிவு, தொண்டு புத்துயிர் பெற்று புது ஒளி பெறும நாள். இந்த நாளில நீங்கள் ஆண்டவன் ஜோதியில் மலர்நத இதயத்தோடும், விரிந்த எண்ணததோடும் புக வேண்டும தினந்தோறும், மணிதோறும், ஏன், நிமிடந்தோறும் இறைவனோடு பேசுங்கள அதில்தான் நிரந்தர இன்பமும், அழியா வாழ்க்கையும் அடங்கியிருக்கிறது. இப்போது உங்கள் வாழ்க்கை நக்ஷத்திரங்கள் அவைகளின் உச்ச நிலையை எட்டிப்பிடிக்கின்றன. உன்னதமான எதிர் காலம் உஙகளுக்காகக் காத்துக்கொண்டிருக்கிறது. நீங்கள் கடவுளின் செலவக் குழநதைகள். வரப்போகும் சத்ய யுகமாகிய புது உலகில் இன்பமும் சாநதமும் அடையப் போகிறவர்கள்.

தெயவீக ஜோதிச் சுடரே! நான் எப்போதும் உங்கள் அடிச்சுவடுகளைக் கவனித்துக் கொண்டிருக்கிறேன். இன்று முதல் கிடைக்கும் பேரானந்தத்தில் எனக்கும் பங்கு உண்டு. கடவுளின் நாமமாகிய தேவாமிர்தக்தைப் பருகி, புயல் நிறைநத வாழ்க்கைக் கடலைத் தாண்டி, அமைதியும் ஆனநதமும் நிறைந்த இன்ப உலகை இப்போது அமையுங்கள்.

தெய்வீக வாழ்வாகிய ஒளியில் கலக்கும் வரையில் தங்கள் ஆத்மீக வளர்ச்சிக் காரியங்களைத் தொடர்ந்து செய்க. உங்கள் மனக் கோயிலில் எரியும் பக்தி ஒளியை மேலும் சுடர்விட்டு எரியச் செய்யுங்கள். அப்படியானால்

இப்பூலோகத்திலே சுவர்க்கத்தைக் காணமுடியாது. நீங்கள் அயர்ச்சியடையாமல் முயற்சியுடன் தெய்வ சக்தியை உணர்ந்தால் இறைவன் பேரொளியால் பிரகாசித்து அவர் ஞானத்தையும், சக்தியையும் பெறமுடியும். அழியாக்குழந்தைகளே! இதுதான் நான் விடுவிக்கும் செய்தி! முயன்று உணருங்கள்.

தெய்வீக வாழ்க்கை வெறும் தத்துவங்களில் மூழ்கி இருப்பது அல்ல; வெறும் சிந்தனையில் ஆழ்ந்து இருப்பது இல்ல; ஆனால், விருப்பு வெறுப்புக்களைக் கடநது ஞான வழியில் நடப்பதுதான தெய்வீக வாழ்க்கை. உங்கள் பார்வையில் அன்பும் அமைதியும் திகழட்டும். மனோவாக்கு காயங்களில் ஞான ஒளியும், பக்தி ஒளியும் வீசவேண்டும். இதுதான் நான் விடுகரும் செய்தி!

ஆனால், தெய்வீக வாழ்வு எளிதல்ல. அதை அடைய அதிக விலை கொடுக்க வேண்டும். நீஙகள் மனிதத் தன்மையிலிருந்து அமரத்தன்மையடைய அரும்பாடுபட்டு தகாதவைகளை ஒழித்து வாழ்க்கையை அமைக்க வேண்டும். வாழ்க்கையின் நோக்கமே உலக சுகதுக்கங்களைக் கடப்பதுதான். அதற்கு நாம் கடவுளின் பாத கமலத்தில அடைக்கலம் அடைய வேண்டும். எனவே உங்கள் வாழ்க்கையை அன்பிலும், ஊழியத்திலும், பஜனையிலும், ஜபத்திலும், சிந்தனையிலும் செலவிடவேண்டும்.

எனவே, நீங்கள் புது வாழ்க்கைக்குத் தயார் செய்து கொள்ளவேண்டும். இறைவன் நியதிப்படி உள்ளத்தைச் சுத்தமாக வைக்க வேண்டும். உங்களுக்குள் ஒருவித ஞான சக்தி ஓடுவதை உணரவேண்டும். எல்லோருக்கும் தொண்டு செய்து ஆத்மீக வறுமையில் வாடும் மக்களுக்கு ஆத்மசக்தியை ஊட்டவேண்டும். தெய்வ நினைவில் மூழ்கி வறுமை

யில் அல்லற்படும மக்களைக் கைதூக்கி அறிவு ஒளியையும், இன்ப ஒளியையும் பாய்ச்ச வேணடும். எனவே, கடமை யைச் செய்து கடவுளை உணருஙகள்!

கடவுள் உங்களை ஆசீர்வதித்து உங்கள் குறைகளை நீக்கி பூரண வெற்றியை அளிப்பாராக!

—o—

## சுவாமி சிவானந்தரின் சிறந்த கருத்துக்கள்

கடவுள், அல்லா, ஈசுவரன் அல்லது பரமன் என ஒருவர் இருக்கிறுர். இவ்வுலக இன்பங்களைத் துறந்தும் பிரமஞானத்தைப் பெற்றும் அவரை அடைதல் வேண்டும்.

சமயமென்பது கடவுளையறியவும் அவரை வழிபடவும் வேண்டும் என்ற நம்பிக்கையே சங்கப் பலகைகளின் சர்ச் சைக்குரிய விஷயமல்ல அது. உண்மை ஆத்மாவை அனுப வித்தறிவதே அதுவாகும். அதுதான் மனிதரின் ஆழ்ந்த இச்சையின் பூர்த்தி. ஆதலால், சமயத்தை நமது வாழ்க் கையின் உயர்ந்த வெகுமதியாகக் கொள்ளவேண்டும். தங்கள் ஜீவிதத்தின் ஒவ்வொரு நிமிடமும் அதைஅனுபவித் தர் பொருட்டு வாழவும். சமயமற்ற வாழ்கை மரணத்திற் கொப்பானதே!

முக்கியாம்சங்கள் எல்லா மதத்திற்கும் சமமானதே. முக்கியமில்லாதவைகள் தான் வித்தியாசப்படுகின்றன. முக்கியமில்லாதவைகள் அனுவசியமானவைகளே. உண்மை உரைத்தல, எல்லோரிடத்தும் அன்பு கொள்ளுதல், ஒருத் தருக்கும் தீஙகினையுஈனுமை, ஒன்றையும் கொள்ளாமை, ஒரு பொருளையும் கள்ளாமை, பிரமச்சரிய விரதத்தைப் பேணுதல், மனித சமுதாயத்திற்குத் தொண்டு புரிதல், கடவுளை வழிபடுகல், கடவுளை யடைதலே ஜீவிதலக்ஷ்ய

மாகக் கொள்ளுதல், புனிதத்தன்மை வாய்ந்த நூற்களைக் கற்றல், தானதர்மம் செய்தல், சரியான ஒழுக்க முறைகளை அப்பியாசித்தல், சரியான சிந்தனை, மனிதக் கடவுளின் உருவமெனப் பாராட்டுதல், மனதையும் பஞ்சேந்திரியங்களையும் கட்டுப்படுத்தல், இதயத்தைப் பரிசுத்தமாக்குதல், முதலியவைகள் தாம் எல்லா சமயங்களிடையவும் முக்கியதத்துவங்கள்.

சரீர உணர்ச்சியை விட ஒருவன் மேற்சென்றபின் தான் உண்மைச் சமயம் ஆரம்பமாகிறது. அற்பமான பழக்கவழக்கங்களையும் சகவாசத்தையும் ஒருவன் தாண்டிச் சென்றபின் தான் உண்மை மதம் ஆரம்பமாகிறது. சரீர உணர்ச்சியை விட்டுத்தளளாமல் இன்னமும் பற்றிக்கொண்டிருப்பவர்களுக்கு இவைகளெல்லாம் அர்த்தமற்ற சமூக விலங்குகளேயாகும. விகாசமடைநத மனிதனுக்கு இவைகள பொருட்டன்று. ஒரு உண்மை சன்னியாசியோ, சாதுவோ இவைகளுக்கெல்லாம் அப்பார்ப்பட்டவனாகயிருக்கிறான். பிராரம்பிக சமூக அல்லது சமய விலங்குகளுக்கு விகாசமடைநத மனிதனொருவன் கட்டுப்படுவான் என்பதை உலகிலுள்ள யாவரும் எதிர் பார்க்க மாட்டாரகள்.

உலகப்பற்றுடையோனே! ஆஸ்திகனயும, உதார சீலனயும, சமஸத ரட்சண்ய வாதியாயும், எல்லாவற்றையும் போற்றுபவனயும, எல்லாவற்றிற்கு மடங்கினவனயும் இரு. எல்லாரிடத்தும் அன்புடனிரு. எல்லாவற்றினிடத்தும் இரக்கம் காட்டு. விகாசமடை. விரிவடை, தனக்கு விஷம் கொடுக்க எணணும் ஒருவனுக்கும் தன் கழுத்தையே யறுக்கக் கோடாரியை உருவும் ஒருவனுக்காக வேண்டியும் கூட, உன் இருதயத்தில் இடமளி. அப்பியாசியாயிரு. வீணத்தனத்தை விட்டொழி. அற்பத்தனமான பழக்க

வழக்கங்கள், சடங்குகள், ஸ்பரிசனத்தன்மை, அடுக்களைத் தன்மை சமயக்குறிகளணியும் தன்மை, இவைகளுக்கப்பாற் பட்டவனாக விளங்கு. உள்ளடங்கிய மூலாதாரக் கருத்துக் களையோ, முக்கிய தத்துவங்களையோ நோக்கு. அப் பொழுது சமய ஒற்றுமையையும் ஆத்ம ஐக்கியத்தையும் காண்பாய். அதே சமயம் நீ உயர்ந்த பேரானந்தத்திலிருப் பாய்!!

தெய்வச்சுடர் தங்களிடம் தெளிவுடனே திளங்கிடுக!
தெய்வக்கலை தங்களது திருமுகத்தை யலங்கரிக்க!!
தெய்வவொளி தங்களது தவவழியைத் தெளித்திடுக!
தெய்வஇசை தங்களுடை திருவுளத்தை நிரப்பிடுக!!

ஓம் தத் ஸத்

—o—

(அடுத்தபடியாக மகரிஷி சிவானந்தர் கோபால சமுத் திரத்துக்கு விஜயம் செய்து ஆண்டு குழுமியிருந்த அன்பர் களனைவருக்கும் அருளுரை வழங்கி கீர்த்தன ரசத்தைப் பருகுமாறு செய்தார்.

அங்கிருந்து ஸ்ரீ சுவாமிகள் தமது பூர்வாசிரம பிறப் பிடமெனப் பெருமைப் பெற்ற பத்தமடைக்குச் சென்றார் அங்கும் திரளான மக்கள் கூடி வரவேற்றுப் பத்திரம் வாசித்தளித்தனர்.

## ஸ்ரீ சிவானந்தசுவாமி சந்நிதானத்திற்கு

உலகம் போற்றும் உத்தமரே வருக! வருக! வருக!!
அண்ணலே!!! தங்கள் வரவு நல்வரவாகுக;
பாரதம் பரவும் புண்ணியரே வருக! வருக! வருக!! வருக!!!
எங்கள வாழ்வு நலம் பெறுவதாகுக.

பாரதத் தாயின் அருந்தவப் புதல்வரே, பற்றற்ற புண்ணியமூர்த்தியே, தங்களைக் கண்ட இந்நாளே நன்னாள். இன்றே நாங்கள் பிறவிப்பயனை அடைந்தோம்; கண் பெற்ற பயனைப் பெற்றோம். எங்கும் போரும், பொறாமையும், பசியும், பிணியும் மலிந்து மக்களை வாட்ட, மக்கள் இவ்வுலக மாயையில் ஈடுபட்டு ஆத்மானுபவத்தை மறந்து கடல்நடுவே திசையறியாது தவிக்கும் கப்பல்போலத் துன்பக் கடலுள் தத்தளிக்க, அறியாமையாகிய இருளில் வழியறியாது திகைக்க, அம்மக்களை உய்விக்க, கலங்கரை விளக்கம்போலவும், செஞ்ஞாயிறு போலவும் தாங்கள் அருள்கூர்ந்து இப் புண்ணிய பூமியாம் பத்தமடையில் அவதரித்தீர்கள். தங்கள் பிறப்பிடமாகிய இப்பத்தமடையில் வசிக்கும் எங்கள் பாக்கியமே பாக்கியம். தங்களது பிறப்பால் இவ்வூரும் நாங்களும் பெற்ற பெருமையை ஆயிரம் நாப்படைத்த ஆதிசேடனும் அளவிட முடியாதென்றால், அப்பெருமைக்குக் காரணம் தங்கள் அருளே அல்லவா ?

ஹே பரப்பிரும்மமே! இவ்வுலகில் பல மதங்கள் தோன்றி தனித்தனி தங்கள் கொள்கைகளை நிலைநாட்டின. ஆனால் அம்மதங்களிடை ஒற்றுமையைக் கண்டுகளித்து, அவற்றை ஒன்றுபடுத்தி யாவரும் போற்றும் திவ்விய மதம் ஒன்றைக் கண்டு, இவ்வுலகிலேயே மறு வுலக இன்பத்தை அடையலாம் என உலகுக்கு எடுத்துக் காட்டிய தங்கள் ஆத்ம பலத்தை என்னென்பது !

தாங்கள் இமயமலைச் சாரலிலிருந்து, அவ்வப்பொழுது வெளியிடும் பொன்மொழிகளைப் புத்தகங்கள் வாயிலாக அறிந்த நாங்கள், தங்கள் திருமேனி அழகை என்று கண்டு களிப்போம் என ஏங்கினோம். அத்தகைய எங்களுக்கு, இன்று தங்களது திவ்விய தரிசனம் அளிக்கும் மகிழ்ச்

சியை எவ்வார்த்தைகளால் வர்ணிப்பது? ஞானத்தை அடையவிரும்பும் ஒருவனை நல்ல ஆசிரியனே தேடி வந்தால் அவன் எவ்வாறு மகிழ்வானோ, காடு சென்று நாடு திரும்பிய இராமனைக் கண்ட அயோத்தி மக்கள் எவ்வாறு மகிழ்ந்திருந் தார்களோ அவ்வாறே நாங்களும் மகிழ்கின்றோம் என ஒரு வாறு கூறலாம்.

எங்கள் அன்பைக் கொள்ளை கொண்ட சாந்தஸ் வரூபியே! என்றும் இந்மகழ்ச்சி நிலைத்திருக்க அருள்புரிய வேண்டுகிறோம். தங்கள் பொன்னுடல் என்றும் இன்று போல் நிலைப்பெற்றிருந்து மக்களை ஆத்மானுபவத்தில் ஈடு படுத்த அருள்புரிய வேண்டுகிறோம்.

" தாயது வருகை கேட்ட தனியிளங் குழவி போன்று
நேயமிகக் குடையோராகி நெஞ்சினில் உவகை பூப்ப"
எங்களது மனம் உவநத நல்வரவைக் கூறுகின்றோம்.

பத்தமடை }
17-10-50 }

## பத்தமடை மகாஜனங்கள்

வரவேற்புக்குப் பதிலளிக்கையில் ஸ்ரீசுவாமி மக்கட் பிறவியின் நோக்கமும் அதை யடையவேண்டிய சாதன மார்க்கங்களையும் அனைவருள்ளத்திலும் பசுமரத்தாணி போலப் பதியுமாறு போதித்தனர். ராமநாம சங்கீர்த்தனத் தில் அனைவரும் பங்கு பெற்றுப் பரவசமடைந்த பின்னர் அங்குள்ள ராமசேஷய்யர் உயர்தரப் பள்ளிக்கு விஜயம் செய்து மாணவர்களையும் ஆசிரியர்களையும் ஆசீர்வதித்து அங்கிருந்து அடுத்துள்ள காவல கிணறு தர்மஸ்தாபனத் தைப் பார்வையிட்டார்.

அங்கிருந்து புறப்பட்டு ஸ்ரீ சிவாசாருத மகரிஷிகள் நேராக நாகர் கோவிலை நோக்கிப் பிரயாணமானார்

—o—

## நாகர்கோவில்

17-10-50 தேதி இரவு ஸ்ரீ சுவாமிகள் நாகர் கோயிலை அடைந்தபோது நகரமக்களனைவரும திரண்டுவந்து பூரண கும்பத்துடன் அவரை எதிர்கொண்டழைத்து ஊர்வலமாக இருப்பிடத்துக்கு இட்டுச்சென்றனர்.

மறுநாள் 17—10—50 காலை அங்குள்ள ஆலயத்தில் நாம சங்கீர்த்தனம் பக்தி பரவசத்துடன நடநதது. பின்னர் கன்யாகுமரி சென்று குமரியம்மையை ஆலயத்தில் போய் வழிபட்டார். அடுத்து மகாதானபுரம் ஆலயத்திற்கும் சென்று வழிபட்டனர். திருமபிவரும் வழியில சுசீந்திரம் சென்று ஸ்ரீ தாணுமாலயனையும் மனமொழிமெய்களால் அழுத்திவிட்டு மறுபடியும் நாகர் கோவில வந்தடைந்தனர்.

சிறிது ஓய்வு எடுத்துக்கொண்டதும் ஸ்ரீ சிவானந்தர் சொற்பொழிவு நடைபெறவேண்டிய பந்தரை அடைந்து அங்கு திரண்டு இருந்த பக்தகோடிகளனைவருக்கும் ஆன்ம ஒளியின் ஆழ்ந்த கருத்துக்களை எடுத்துத் தெளிவான உரையில் வழங்கி இடையிடையே நாம சங்கீர்த்தனத்திலும் அனைவருள்ளத்தையும் ஆழவைத்தனர். பிரசங்கம் முடிந்ததும் மக்களுடைய வந்தனோபசாரங்களை ஏற்றுக்கொண்டு எல்லோரையும் ஆசீர்வதித்துத் திருவனந்தபுரத்துக்கு பிரயாணமானார்.

கீழே நாகர் கோவிலில் வரவேற்புக் கழகத்தார் விடுத்த முன்னறிக்கையும் பின்னர் வாசித்தளித்த உபசாரப் பத்திரமும் இலவச விநியோகப் பிரசுரமும் தரப்பட்டுள்ளன.

—o—

## ஸ்ரீ சிவாநந்தா யாத்திரை மண்டலி

### (ரிஷிகேசம் முதல் குமரிவரை)

"அவன் படைத்த பாரினில் ஆஸ்திகம் ஓங்கவும நாஸ்திகம அகலவும், அதற்கு மூலகாரணமாம தர்மம் நிலைக்கவும், ஒவ்வொரு யுகததிலும் அவனே தோன்றி, வழிகாட்டுவான்" என்பது தெய்வமொழி. இதை தெய்வம அவனியே வழிபடும் ஞானிகளாக, அதது காலங்களில் நிறைவேறறுகிறார். தன்னையறியாது மக்கள உழலும்வேளை தானே அறியீனமகற்றி தன்னைக் காண பிக்கிறார்.

தற்போதைய உலகம் அவரைக்காண அலறும் அரிய வேளை. மக்களின் நாஸ்திக கொள்கையும், அறிவற்ற ஆர்பாட்டமும் ஒருபுறம், ஹிம்சை எனும் பேய்பிடித் தாடும் மக்கள் சண்டையால் இறக்கும் கோர காட்சிகள் மற்றொருபுறம். கருணைககடலாம் கடவுள் உதயமும் ஆனது.

ஸ்ரீ சுவாமிஜி சிவானந்த சுவாமிகள் இங்ஙிலை மாற பல்லாண்டுகள் இமயத்தில் திரிந்து யோகாப்பியாசத்தாலும், தபத்தாலும், சகல 'மதவேங்களாலும் விடைகண்டார். 1936-ல் ரிஷிகேசம் என்ற புண்ணிய பூமியில் ஆனந்த குடீரத்தில் "The Divine Life Society" என்ற கழகத்தை ஸ்தாபித்து உலகத்தின் எல்லா பாகங்களிலும் பரவ ஆங்காங்கு இதன் கிளை ஸ்தாபனஙகளையும் உண்டு பண்ணினார் ஆத்ம சாந்திக்கு கணக்கற்ற மக்கள் இவாது ஆசிரமத்தை அடைகின்றனர். 1845-ல் (All World Religions' Federation) எல்லா மதங்களின் முன்னேற்றத்திற்கும், 1947-ல் (All World Sadhus' Federation)

அகில உலக சாது முன்னேற்றத்திற்கும் வழி, காட்டுவித்தார்.

அூர தேசத்தில் ஆசிரமம் கொண்டதால் இங்குள்ள மக்களின் ஆவலை தணிக்கவே வருகிற அக்டோபர் மாதம் 17-ம் தியதி இங்கு வந்து தரிசனம்தர இசைந்துள்ளார். அவரது யாத்திரையின் முக்கியம் இறைவன் பெருமையை வெளிப்படுத்தவும் சாந்தியை பரப்பவும் மத ஒற்றுமையை புகட்டவும் தான்.

ஆகவே ஸ்ரீ சிவானந்த சுவாமிகளையும், சிஷ்யகோடிகளையும் தரிசிக்க ஆவல் கொண்டிருக்கும் பக்த கோடிகளிடம், இவ்வரிய சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் வந்திருந்து, சுவாமிகளின் அருள் பெற்று யாத்திரையை சிறப்பிக்க அன்போடு வேண்டிக்கொள்ளுகிறோம்.

அக்டோபர் 17, 1950. சிவாமிகள் அடியாருடன் திருநெல்வேலி நின்றும் புறப்படுதல். பத்தமடை வழி நாகர்கோவில் வருகை. பூரண கும்பம், வேதபாராயணம், நாதஸ்வரத்துடன் எதிர்கொண்டழைத்தல்.

அக்டோபர் 18. 1950. கடலில் நீராடி தெரிசனம் செய்ய குமரிக்கு யாத்திரை செய்தல். குமரியினின்றும் வருகை. விநாயகர் கோவிலில் கும்பாபிஷேகம், பூஜை வேதபாராயணமும், பாத பூஜையும் 3 முதல் 4 வரை சொற்பொழிவு பொதுக்கூட்டம் 4-30 மணிக்கு திருவனந்தபுரத்திற்கு யாத்திரை.

பொறுப்பாளர்

D கிருஷ்ணய்யர், ரிட்டயர்ட் அஸிஸ்டண்டு அக்கவுண்டண்டு ஜெனரல்.

A. ராமனுத சர்மா, அக்ரகாரம், நாகர்கோவில்.

நாகர் கோவில் விஜயத்தன்று சமர்ப்பித்த

## வந்தனோபசார மங்கள பத்திரம்

பூஜிக்கத்தக்க மஹாதத்துவ ஞானியாகிய ஸ்ரீ சுவாமிகள் விக்ருதி வருஷம் ஐப்பசி மாசம் 1௳ (17-10-50) அன்று நாகர்கோவில் விஜயம் செய்தும் மறுநாளும் பக்தகோடிகள் இஷ்ட பூர்த்திக்காக தெரிசனம் தநதது யென்றும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும்படியான புனித நாட்களாக கொண்டாடவும் சுவாமிகளின் திவ்ய உருவத்தை தெரிசித்தவர்களுடைய இருதயங்களில் ஆத்மராமராக பதிந்ததும் மஹாஜனங்களின் பாக்கியமே சுவாமிகளின் யாத்ரா மண்டலி பூர்ண சௌகயத்துடனும் மிகுந்த புகழுடனும் ரிஷிகேச ஆனந்தகுடீர் ஆச்ரமம் சேர்ந்து உலகமக்கள் பூராவும் மேன்மை பெற திவ்ய ஆத்மஞானத்தை பரப்புகிற சுவாமிகளும் அடியார்களும் தேவ ஜீவசங்கங்களும் என்றும் அழியாப் புகழுடன் உலகெங்கும் ப்ரகாசித்து எல்லோரையும் தெய்வநெறியில் நடக்கும்படி தூண்டவும் சுவாமிகளுக்கு தீர்காயுசும் கணக்கற்ற பக்தர்களையும் அளிக்கும்படி நாகர்கோவில் மஹாஜனங்களும் மேல தெரிசனம் கோப்பு தேவஜீவசங்கமும் கிராமவாசிகளானே வரும், மனமார கடவுளைப்ப்ரார்த்தித்து வந்தனத்தை தெரிவிக்கும அறிகுறியாக இந்த மங்கள உபசார பத்திரம் ஸமர்ப்பித்து சந்திரனை குளிரச்செய்ய விசிறியதுபோல் இருப்பினும் இதை ஏற்று சகலரையும் ஆசீர்வதித்து அடியார்பால் சுவாமிகளின் பூர்ண கடாக்ஷத்தை வர்ஷிக்கும்படி தாழ்மையாய் அபேக்ஷிக்கின்றோம்.

வாயுரயமேக்னிர் வருணச் சசாங்க:
ப்ராஜாபதிஸ்த்வம் ப்ரபிதா மஹச்ச

நமோ நமேஸ்தேஸ்து ஸகஸ்ரக்ருத்வக
புனச்ச பூயோபி நமோ நமஸ்தே
நமப் புரஸ்தா தப ப்ருஷ்டதஸ்தே
நமோஸ்து தே ஸாவ்ந ஏவ ஸர்வ
அனந்த வீர்யா மித விக்ரமஸ்த்வம்
ஸர்வம ஸமாப்னோஷி ததோஸி ஸர்வ:

விச்வரூபத்தை கண்டு அர்ச்சுனன் நமஸ்காரமாத்திரமே செய்ததுபோல் நாங்களும் ஏக மனதுடன் ஸ்ரீபரப்ரஹ்ம ஸத்குரு சுவாமிகளின் சரணார விந்தங்களை அர்ச்சித்து நமஸ்கரிப்பதையும் தேவஜீவநெறியில் ஒழுகுவதையுமே ப்ரதானமாகக் கொண்டோம்.

ரா. சங்கரநாராயணய்யர்
பிரஸிடெண்டு
தேவஜீவசங்கம் கிளை
மேலதெரிசனங்கோப்பு

D. கிருஷ்ணய்யர்
ரிட்டயர்டு அஸிஸ்டெண்டு
அக்கவுண்டெண்டு ஜெனரல்
வரவேற்பு கமிட்டி ஆர்கனைஸர்
நாகர் கோவில்.

## ஸ்ரீ சுவாமி சிவானந்தர்

### அன்பர்களுக்கு அளித்த அமுதகவி என்ற

### 20. ஆத்மார்த்த போதனைகள்.

(1) முனிவர் மொழியும் பிரம்ம முகூர்த்தத்தில்
இனிது துயிலெழுவா யென்னும்

(2) கற்கப்ராணாயாமம் ஆசனங் கற்றபின்
நிற்க அதற்கு தக

(3) மனதிற் கிசைந்த தொரு மந்திரத்தை
தினமும் ஜெபித்தல் நலம்

(4) சாதனைக் கேற்றது சாத்வீகம் அஃதடைய
சாத்வீக உணவைக் கொள்

(5) பூசனைக் கெனதனித்து எக்கணமு மோர் அறையை
மாசிலாது வைத்தல் நன்று

(6) பெருஞ் செல்வம் செல்வமல்ல பத்திலொரு பங்கு
தருமந்தான் செய்யாவிடின்

(7) வேதமும் கீதையும் நுண்ணிய நூற்களும்
ஓதுவாய் நாளும் உவந்து

(8) சோாவு விடுத்துச் சுயேச்சை பெறவுதவும்
வீரியம உயிரினும் மேல்

(9) தோத்திரஞ் செய் ஆத்ம சிந்தனைக கமருமுன்
ஏத்தியே நிற்பவனுகி

(10) குடித்தலும் ஊனுண்ணல் தீ நட்பும் சூதும்
விடுத்துமே நல்வினைத்தைச் சேர்

(11) பட்டினியாயிருந்தால் ஏகாதசி தனில்
கிட்டுமாம சித்த சுத்தியே

(12) இரவும் பகலு மொருமாலையைக் கழுத்தில்
பிரியாமலணிதல் நன்று

(13) மனச் சாநதிதானடைய தாளுமிருமணி
மோனமிருத்தல் நலம்

(14) உண்மை யுரைப்பாய் மிதமாய் அளவாய் நன்
றெண்ணி இனிதுரைத்தல் மேல்

(15) வேண்டியது நான்கெனில் அன்புடனுங்கணு
மூன்றுகவே குறைத்தல் மேல்

(16) இன்னுசெய்யாமை இனிதென எவ்வுயிர்க்கும
இன்புறுதல் ஆனநதமாம்

(17) தன்கை தனக்குதவி யென்று முற்றுப்பெற
தன் கருமஞ் செய்தல் நலம்

(18) அநநாட் செயுமனைத்தும ாசனடி சேர்த்துமே
எநந ளுைம நாட்குறிப்பைக் கொள

(19) காலன் வருமுன் கடைமையை நன்ருக
காலமறிந்து செய்தல் நன்று

(20) சரணம் துயிலுறுமுன்னும் எழுந்த பின்னும்
சரணமென ாசனடிச் சோ.

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

(இதைக் கண்ணுடி சட்டமிட்டு தினம் ஒருமுறை படியுங்கள்)

சுவாமிகள் நாகர்கோவில் விஜய ஞாபகார்த்த இலவச வெளியீடு.

## கன்யாகுமாரியிலிருந்து திருவனந்தபுரம்

நாகர்கோவில் பஜனை வெகு மும்மரமாக நடந்தது. அதில் சுவாமிகள் கலந்து பாடினர். அது முடிநததும் கன்யாகுமாரிக்குப் போவதற்காக, காலை 6½ மணிக்கு சுவாமிகள் தயாராஞர். இந்த யாத்திரை ஒரு பெரிய ஊர் கோலமாகக் காணப்பட்டது. ஆறு மோட்டார் கார்களும் ஒரு ஸ்டேஷன் வாகனும் ஜனங்களைக் கொண்டு சென்றன. கன்யா குமாரி முனையைக் கண்டதும் அங்கு எத்திசை யிலும் பரந்து கிடந்த சமுத்திரத்தைப் பார்த்து சுவாமிகள் வெகு ஆனந்தமடைந்தார்.

பின்னர் கோவிலுக்குள்ளே போய் தேவியைக் கும்பிட்டு, உட்பிரகாரம் முற்றும் சுற்றி, வெளிவந்து ஆயிரக்கணக்கான ஜனங்களுக்கு தரிசனம் அளித்தார்.

திரும்பும்பொழுது மகாதானபுரத்தில் ஒரு தர்மசாலை யில் சிற்றுண்டி ஏற்றுக்கொண்டபின் சுவாமிகள் கீர்த்தனம் நடத்தினார். அங்கிருந்த ஒரு சிறு ஆலயத்துக்குப்போய் தெய்வத்தைத் தொழுதார். ஊருக்குள்ளே சென்ற பொழுது சுவாமிகள் போனது ஊர்கோலமாக இருந்தது. அவ்வூர் மக்கள் அதற்காகவே தெருக்கள்தோறும் வெண் மணலைப் பரப்பியிருந்தனர்.

சுசீந்திரம் வந்து சேர்ந்ததும் சுவாமிகள் அங்கிருந்த முக்கிய ஆலயத்தையும் வேறு பல சிறு கோயில்களையும் சென்று பார்த்தார். பெரிய ஆலயத்தின் முன்பு வைத் திருந்த அனுமான் சிலை வெகு கம்பீரமாக இருந்ததைப் பார்த்த சுவாமிகள் மகிழ்ச்சியுற்றார்.

அங்கிருந்து வந்தபொழுது சுவாமிகள் மோட்டாரி லிருந்து கீழே இறங்கி கீர்த்தனம் நடத்தவேண்டி யிருந் தது; ஏனெனில் வழியை மறித்து சுவாமிகள் தரிசனத்துக் காக நின்றுகொண்டிருந்த ஜனங்கள் தொகை அளவிட முடியாததாக இருந்தது. அப்பொழுது எழுப்பப்பட்ட ராமநாமத்வனி விண்ணுலகத்தையே பிளந்து சென்றது எனலாம்.

நாகர் கோயிலில் பாதபூஜை முதலிய சடங்குகள் நடைபெற்றபின்பு கனம் பரமேசுவரன் பிள்ளை அவர்கள் முன்வந்து ஸ்வாமிகளைத் திருவனந்தபுரம் வர அழைத்தார். அவர் திருவிதாங்கூர் மகாராஜாவால் அனுப்பப்பட்ட மேஜர் ஜெனரல் V. N. பரமேசுவரன்பிள்ளை-ஓ-பி-இ. வெளியே மகாராஜா அனுப்பியிருந்த மோட்டார்கார் நின்றுகொண்டிருந்தது. அதன் உருவம் தெரியாதவாறு புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. சில நிமிஷங்

களுக்குள்ளே சுவாமிகள் திருவனந்தபுரம் போகத் தயாராய் விட்டார்.

வெகு மனோகரமாய் அமைக்கப்பட்டிருந்த சிமிண்டு ரஸ்தாவிலே மோட்டார் கார் அதிவேகமாகச் சென்றது. வழியிலே பரமேசுவரன் பிள்ளையுடன் சுவாமிகள் சில வார்த்தைகள் பேசி யதிலிருந்து அவருடைய மனோபாவம் வெளியானமையால் சுவாமிகள அவரைப்பார்த்து "நீங்கள் அவசியம் ரிஷிகேசம் வரவேண்டும். வயது 56 ஆகியும் 35 வயதென்று மதிக்கும்படி இருக்கிறீர்கள். ஆத்ம விசாரம் செய்துகொண்டு உங்களுடைய வாழ்நாட்களைக் கழிக்க அங்கே வாருங்கள்" என்றார். தாம் அப்படிச் செய்வதாக ஏற்கனவே தீர்மானம் செய்திருப்பதாக பிள்ளை கூறினார்.—

சுவாமிஜியின் திருவனந்தபுரம் விஜயத்தையொட்டி நடந்த ஏற்பாடுகள் குறித்து 20—8—50 சுதேசமித்திரன பத்திரிகை கூறுவது:

## திருவனந்தபுர விஜயம்

### வரவேற்க கமிட்டி நியமனம்

திருவனந்தபுரம் ஆக. 19—தமது அகில இந்திய ஆத்மீகப் பிரசார சுற்றுப் பிரயாணத்தின்பொழுது அக் 18ந் தேதி திருவனந்தபுரத்திற்கு விஜயம் செய்யும் ரிஷிகேசம் சுவாமி சிவானந்தருக்கு ஒரு குதூகல வரவேற்பளிப்பதற்காக பலத்த ஏற்பாடுகள் திருவனந்தபுரத்தில் செய்யப்பட்டு வருகின்றன.

மாஜி ஹைகோர்ட் ஜட்ஜ் ஸ்ரீ கே. பி. கோபால மேனன் தலைமையில் ஒரு வரவேற்பு கமிட்டி நியமிக்கப்பட்டதும் மேஜர் ஜெனரல் ஸ்ரீ வி. எ. பரமேச்வரன்பிள்ளை

ஸ்ரீ கே சங்கர சுப்பைய அய்யா ஆகியோர்கள் பேறபடி கமிட்டியின் உபதலைவர்கள். கிராம பஞ்சாயத்து மாஜி டைரகடர் ஏ. பிச்சுமணி அய்யங்கார் ஸ்ரீ கே. நீலகண்ட அய்யா ஆகியோர்கள் கூட்டுக் காரியதரிசிகளாகவும் ஸ்ரீ. எஸ். பரமேஸ்வரன் பொக்கிஷதாரராகவும் இருப்பர் பல பிரபலஸ்தர்கள் இக்கமிட்டியின மெம்பர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

—o—

## சுவாமி சிவானந்தரின் திருவனந்தபுரம் விஜயம்

திருவனநதபுரம், செப். 29—அகடோபர் 18-ம் தேதி யன்று இஙகு விஜயம செய்யவிருக்கும ரிஷிகேசம் சிவானநத சரஸ்வதி சுவாமிகள், இஙகு 2 தினங்கள் தங்குவாரெனறும அவர் வெளளை யமபலம அரண்மனையில் தங்கியிருப்பாரென்றும் சிவானந்தசரஸ்வதி யாத்திரா மண்டலி வரவேற்புக் கமிட்டிக் காரியதரிசி அறிவிக்கிறார்.

திருவனந்தபுரத்தில் அனந்தபத்மாலய சுவாமிகள் கோவில் முன் பூர்ணகும்பத்துடன் சுவாமிகள் அழைக்கப்பட்டார். அவர்கள் வரவை யெதிர்பார்த்து கோவிலிலே தங்கியிருந்த பேர் தொகை ஏறக்குறைய மூவாயிரம் இருககும. உயர்வாகச் செய்யப்பட்டிருந்த ஓரிடத்தில் சுவாமிகள் இருத்தப்பட்டார. அங்கே இருந்துகொண்டு கீர்த்தனம் ஆரமபித்தார். அது முடிநசதும் நாம ஸங்கீர்த்தனததின் மகிமையைப பற்றியும மகாமந்திரக்கீர்த்தனத்தின் அநதரத்தைப் பறறியும் ஒரு சிறு சொற்பொழிவு நிகழ்த்தினார்.

திருவனந்தபுரத்தில் சுவாமிகள் தங்க ஒரு பெரிய அரண்மனை ஒதுக்கப்பட்டிருநதது. அது மகாராஜா

வுடைய சொந்தக்காரர்களுக்கு மாத்திரமே விடப்படுவது. அங்கே போக சுவாமிகளை ஒரு திறந்த காரில் அமர்த்தி, பிள்ளை அவர்கள் அழைத்துச் சென்றார். இப்படிச் சென்றதால் திருவனந்தபுரம் வாசிகள் யாவரும் சிரமமின்றி சுவாமிகளைப் பார்க்கமுடிந்தது.

டௌன் ஹாலின் வெளிப்புறத்து பிரகாசத்தால் ஜ்வலித்துக்கொண்டிருந்த "ஓம்" என்னும் எழுத்து வெகு தூரத்திலிருந்தே காணக்கூடியதாக இருந்தது. அவ்விடம் சென்றதும திருவனந்தபுரத்து மேன்மக்களுள பலரும் ஸமஸ்தானத்து உத்தியோகஸ்தர்களும் முன்வந்து சுவாமிகளை வரவேற்றார்கள். அப்பொழுது இரவு மணி ஏழு. சுவாமிகளைக்கண்ட ஜனங்கள் மெய்மறந்து உரக்க ஜெய மொழிகள் உரைத்தார்கள்.

பிரார்த்தனை முடிந்தபின் இரு பெண்கள் ஒரு பாட்டைப்பாடினார்கள். அது திருவனந்தபுரம் மகாராணியால் எழுதப்பட்டது, அதில் சுவாமிகள் சரித்திரம முற்றிலும கூறப்பட்டிருந்தது.

பின்பு ஹைகோர்ட்டு ஜட்ஜாக இருந்து பென்ஷன் வாங்கிக்கொண்டிருந்த ஸ்ரீ கே. பி. கோபாலமேனன் என்ற பெரியார் சுவாமிகளைப் பற்றிய புகழ்மொழிகள் சில விடுத்தார். அவர் அதற்குமுன் ஒரு சமயம் ரிஷிகேசம் வந்து சுவாமிகளின் அன்றாட அலுவல்களைப் பார்வையிட்டிருந்தவர். அப்பொழுது அவர்கொண்டிருந்த அபிப்பிராயங்களை இந்தச சந்தர்ப்பத்தில் கூறினார்.

அதன்பின் வரவேற்புப் பத்திரங்கள் ஆங்கிலத்திலொன்றும், ஸம்ஸ்கிருதத்திலொன்றும் படிக்கப்பட்டன. அவை வெகு நேர்த்தியான வெள்ளிப் பேழையிலிட்டு

சுவாமிகள் கையில் கொடுக்கப்பட்டன. அந்தப் பேழையின்மேல் ஸ்ரீ பத்மநாப சுவாமிகள் உருவம் செதுக்கப்பட்டிருந்தது.

இவற்றைப் பெற்ற சுவாமிகள் விடையாக ஒரு சிறு பிரசங்கம் செய்தார். அப்பிரசங்கத்தில் புகுத்தப்பட்டிருந்த வேதாந்தக்கூறுகள் நெடுநாளாகத் தாம் நிகழ்த்தி வந்த தவத்தின் பயனாகக் கிடைத்த அனுபவங்கள் நிறைந்திருந்தன

கூட்டம் கலைந்ததும், பெரிய கடைத்தெருவழியாக சுவாமிகளுடைய கார் மணிக்கு 70 மைல் வீதம் செல்லும் வேகத்தில் போயிற்று. வழிமுற்றிலும் நிறுத்தப்பட்டிருந்த மிலிட்டரிக்காரரும் போலீசுக்காரரும் ரஸ்தாவைக் காலிப்படுத்திக்கொண்டிருந்தார்கள். இறுதியில் அரண்மனையின் முன்பு கார் நிறுத்தப்பட்டது. மகாராணியம்மையார் மேடைப்படிகளின் மேலே கைகளைக் கூப்பி நின்றுகொண்டு சுவாமிகளை வரவேற்றார். "இங்கே நடக்கின்ற 'வேட்டை"யைப் பார்க்க உங்களை அழைத்துவந்தது எனக்கு மிகுந்த சந்தோஷத்தை அளிக்கிறது" என்று ராணியார் கூறியதிலிருந்து மோட்டார் ஏன் அவ்வளவு வேகமாக வந்ததென்று தெளிவாயிற்று. இரண்டொரு நிமிஷங்கள் கழித்து வந்திருந்தால் கார் உள்ளே வந்திருக்க முடியாது. "வேட்டை' உற்சவம் முடிந்த பின்பே வந்திருக்க முடியும்

திருவனந்தபுரத்தில் அரசர்கள் தொன்றுதொட்டு ஆதரித்து வரும் மத நம்பிக்கையைப்பற்றி சுவாமிகள் இரண்டொரு புகழ்மொழிகள் கூறினார். அப்பொழுது மகாராணியார் "சுவாமிஜி, இந்த நாட்டில் எதுவும் மதத்தையே ஆதாரமாக வைத்துக்கொண்டிருக்கிறது" என்றார்.

"வேட்டையும்" துடங்கிற்று. அந்தச் சடங்கை சுவாமிகள் முற்றிலும் பார்த்தார். மிகுந்த ஆனந்தம் கொண்டார். வரிசை வரிசையாக வந்துகொண்டிருந்த பட்டாளத்துக்காரர் அவரவருக்கு ஏற்பட்டிருந்த ஸதானங்களிலே அமர்ந்து நின்று தத்தம கடமைகளைச் செவ்வனே செய்து வந்ததைப் பார்க்க அழகா யிருந்தது. உதஸவ விக்கிரகங்கள் மூன்று எடுத்து வரப்பட்டன. அவற்றின முன் மகாராஜாவும் வந்தார். அவர் ஆலயத்துக்குள் போனதும், மிகுந்த பக்தியுடன் அமபு எய்ததும பார்த்தவர் மனதை உருக்கின. எங்கும் ஜனக்கூட்டம; ஆனால ஒரு சிறு சத்தமும் இல்லை. அப்படிச் சில நிமிஷங்கள் சென்ற பின்பு "பாண்டும" நாதஸ்வரமும் கேட்டன. ஊர்கோலமும ஆரம்பித்தது. மகாராஜாவும் யுவராஜாவும மௌனமாக வெறும் காலோடு நடந்து சென்றார்கள்.

இந்தக் கண்காட்சி விருந்து முடிவுற்றதும சுவாமி சிவானந்தர் மகாராஜாவிடத்தும் ராணியாரிடத்தும் விடை பெற்று தம் இருப்பிடம் சென்றார்.

மறுநாள் காலை (19—10—50) அரண்மனையிலே ஆயிரககணக்கான ஜனங்கள கூடிவிட்டார்கள. கனம பரமேசுவரன் பிள்ளையவர்கள் வந்து சுவாமிகளை அழைத்துச்சென்றார். அரண்மனையில் சுவாமிகள ஒரு சிறிது பிரசங்கம் நடத்தினார்; சுவாமி சிவானந்தா த்யானததைப் பற்றியும், ஸாதன முறைகளைப்பறறியும் பிரசங்கம் செய்தார்.

இநநிகழ்ச்சிக்குபபின், சுவாமிகள பத்மநாப சுவாமி கோவிலுக்குப் போனார். அஙகே பள்ளிகொண்டிருந்த மிகப்பெரிய விக்கிரகத்தைப் பார்த்தார். கோவில் அர்ச

சகர் புஷ்பமாலையிட்டு, அவ்விக்கிரகத்தின் தலை, வலக்கை இடக்கை, நாபிக்கமலம், பாதம் என்னும் உறுப்புக்களை யெல்லாம் காண்பித்தார்கள். அப்படிப் பார்க்கும்பொழுது சுவாமிகள் மாத்திரமே உள்ளே அழைத்துச் செல்லப் பட்டார்.

பின்பு மற்ற க்ஷேத்திரங்களுக்கும் சுவாமிகளைக் கூட்டிக்கொண்டு போனார்கள். எவ்வளவோ பெரிய கூட்டம் கூடியிருந்தபோதிலும் போலீசாரும் தொண்டர்களும் வெகு சாமர்த்தியமாகவும் அமைதியுடனும் கூட்டத்தை அடக்கினார்கள்.

கோவிலிலிருந்து வெளியே வந்ததும் திவ்ய ஜீவன சங்கத்துத் தலைவர் ஸ்ரீ நீலகண்டய்யர் வீட்டுக்குப்போய் அங்கே பார்வையிடவேண்டியவற்றையெல்லாம் பார்வை யிட்டு அதன்பின்பு கனம் பரமேசுவரன் பிள்ளை அவர்கள் வீட்டுக்குச் சென்று அங்கே பிள்ளைக்கும், அவர் மனைவிக் கும சுவாமிகள மந்திர தீக்ஷை கொடுத்தார். அங்கே கீர்த்தனையும் ஆரம்பித்தார் அது பிள்ளை யவர்களுடைய பூஜை அறை. பிள்ளைக்கும் அவர் மனைவிக்கும் உண்டான ஆனந்தத்துக்கு அளவில்லை. அவர்கள் அன்புடன் அளித்த பிக்ஷயை சுவாமிகள் ஏற்றுக்கொண்டார் அவர்கள் மகனை ஆசீர்வதித்தார்.

இவை யெல்லாம் முடிந்தபின்பு, சுவாமிகள் மீண்டும் அரண்மனைக்கே போனார். பாதபூஜை செய்வதற்காக அங்கே சுமார் ஐந்நூறுபேர் காத்திருநதார்கள். ஒருமணி நேரம சுவாமிகள் சும்மா இருநதார். வேண்டியபேர்கள் ஒவ்வொருவராக வந்து பாதத்தில் புஷ்பம் இட்டுச் சென் றார்கள் போகும்பொழுது சுவாமிகள அனுக்ரகித்து

அவர்களுக்குப் பிரசாதம் கொடுத்தார். வெகு ஒழுங்காக இந்தக் காரியம் நடைபெற்றது.

பின்பு, ஸ்ரீ பரமேசுவரன் பிள்ளை சுவாமிகளை மகாராஜாவிடத்துக்கு அழைத்துச்சென்றார். அரண்மனை வாயிலண்டை பூமாலையுடன் காத்துக்கொண்டிருந்தார்; மகாராஜா. அவர் முகத்தில் பக்தி தெளிவாகக் காணப் பட்டது. அவரும் பாதபூஜை செய்தார். பிறகு சில நிமிஷங்கள் குசலப்ரசினங்கள் நடந்தன. இரண்டு சிஷ்யர் களும் சுவாமிகளும் அரண்மனையிலே பிக்ஷை ஏற்றார்கள். மகாராணியாரும் ப ராஜாவும் யுவராஜாவும் ஒரு பாய்மீது உட்கார்ந்து சுவாமிகளுடன் பேசிக்கொண்டும் விருந்தை மேற்பார்வை யிட்டுக்கொண்டும் இருந்தார்கள். அப் பொழுது ஹடயோகத்தைப்பற்றியும் ஆஸனப் பயிற்சியைப் பற்றியும் ராணியம்மையார் சில கேள்விகள் கேட்டதி லிருந்து அவர் யோகத்தில் சில முறைகள் பயின்று வருவ தாகத் தெரியவந்தது.

உணவுக்குப் பின்பு இருபது நிமிஷநேரம் யாத்திரை சினிமா காண்பிக்கப்பட்டது. அதைப்பார்த்த ராணி யம்மையார் மிகவும் சந்தோஷமடைந்தார். அப்பால சுவாமிகள் கீர்த்தனம் ஆரம்பித்தார். ஆங்கிலத்திலும் தாமியற்றியிருக்கும் கீர்த்தனைகள் பாடினார். அவற்றை யெல்லாம் கேட்ட மகாராஜாவும் ராணியம்மையாரும் மகிழ்ச்சிபெற்றார்கள்.

—o—

## கொச்சி

ஆலப்புழை ஸ்ரீ கே. ஸ்ரீநிவாஸன் சுவாமிகளுடன் விமானத்தில் யாத்திரை செய்தார். கொச்சியைச் சேர்ந

ததும் ஆலப்புழை, கொச்சி, முதலிய இடங்களைசசார்ந்த பல பெரியவர்கள முன்வந்து சுவாமிகளுக்கு மாலை யி[redacted]னர். அங்கே சிறிதுநேரம கீர்த்தனம் செய்து அதன்பின்பு மீண்டும் விமானமேறி இரண்டுமணிக்குக கோயமபுத்தூரில் இறங்கினார். இப்படிக் கோயம்புததூரில் இறங்குவதற்குச சம்மதிக்கவேண்டுமென்று விமான அதிகாரிகளை முன்னதாகவே கோயம்புத்தூர வாசிகள் கேட்டுக கொண்டிருந்ததனாலேயே அங்கே சுவாமிகள் சில நிமிஷங்கள் தஙக முடிந்தது. அச்சிறு சநதாப்பத்திற்குளளே சுவாமிகள் ஒரு சிறு ஸத்ஸங்கம நடத்திவிட்டார். கீாததனையும் உபநியாசமும் நடைபெற்றன. ஈசுவரன் நாமத்தை உச்சாரணம் செய்துகொண்டே வாழ்க்கையை தெய்வீகமாக நடத்தவேண்டுமென்று சொன்னார். அத்தருணததிலே கோயமபுத்தூர் வாசிகள் வாசித்த வரவேற்புப் பத்திரிகை இது :—

புனிதவதியார் மாதர் சன்மார்க்க சங்கம் திருப்பூா

ரிஷிகேஸ் சுவாமி சிவானந்த சரஸ்வதி அவர்களுக்கு

—o—

## வரவேற்பு

**பேரன்புகொண்ட ஆத்மஜோதியே வருக, வருக. வணக்கம்**

எங்கள் கோவை ஜில்லா தலைநகருக்கு தாங்கள் வர பெரும் பாக்கியமுற்றோம். தங்கள் உபதேச ஆத்ம விளக்கத்தை பத்திரிகை மூலம் அறிந்துள்ளோம். ஈங்கோய்மலை அத்வையானநத சுவாமிகள் வாக்கின் மூலமாயும் தங்கள மகிமையை உணர்ந்துள்ளோம். தாங்கள் அருட்பணி நீடூழிபுரிந்து மக்களுக்கு சாநதிநிலவ இறைவன் அருள்

புரிவாராக. எங்கள் சிறப்பூராகிய திருப்பூருக்கு தங்களை அழைத்துவரவும் நாங்கள் விரும்பி இருந்தோம். அருள் வாய்க்கவில்லை. தங்கள் அருட்பெரும் கருணையை யாங்கள் பெரிதும் வேண்டுகின்றோம்.

இங்ஙனம் அன்புமிக்க
சிதம்பரம் சிவகாமி அம்மை புனிதவதியார்
மாதா சன்மார்க்க சங்கம், திருப்பூர்.
கோவை ஜில்லா

—o—

## பெங்களூர்

கொச்சி விட்டதும் விமானம் கிளம்பி 3-30 மணிக்கு பெங்களூர் அடைந்தது. மைசூர் முதிய மகாராணியார் தம்முடைய ஆள் ஸ்ரீ வேணுகோபால் என்பவரை மாலையுடன் அனுப்பியிருந்தார். அவர் மாலையுடனும் சில மோட்டார் கார்களுடனும் விமான நிலையத்திற்கு வந்து சுவாமிகளையும் அவர் சிஷ்யர்களையும் வரவேற்றார்.

டெக்கான் ஏர்வேஸ் அதிகாரிகளும் வரவேற்றார்கள். அவர்களிடத்தும் மாலை பெற்று சுவாமிகள் உயர்வான ஒரு மேடையிலிருந்து ஆயிரக்கணக்கான ஜனங்களுக்கு தரிசனம் அளித்தார். மேடையில் நின்றுகொண்டு கீர்த்தனமும் செய்தார். தெய்வநாமம் சொன்னபொழுது சுவாமிகளைப் பின்பற்றி எல்லோரும் நாமஸங்கீர்த்தனம் செய்தார்கள். ஒரே முழக்கமாயிற்று. பலர் மெய்ம் மறந்து ஆனந்தக்கண்ணீர் விடுத்தனர். சுவாமிகள் அப்பொழுது செய்த சிறு உபந்யாசத்தில் ஜனங்களுடைய பக்தியைப் புகழ்ந்து பேசினார். நாம ஸங்கீர்த்தனம் செய்ய வேண்டுமென்றும், ஆஸனம் பயில வேண்டுமென்றும்

அஹிம்ஸை, ஸத்யம், பிரமசரியம் என்பவற்றை ஒரு பொழுதும் நழுவவிடக்கூடாது என்றும் வற்புறுத்தினார். இச்சிறு உபநிஷத்தைக் கேட்ட ஜனங்கள் பெரு மகிழ்ச்சியுற்றனர்.

—o—

## மைசூர் தர்பார்

சுவாமிகளுக்குக் கொடுக்கப்பட்டிருந்த இடம் ஸம்ஸ்கிருதக் கல்லூரி அதற்கும் மைசூர் அரண்மனைக்கும் உள்ள தூரம் மிகவும் கொஞ்சம். அக்கல்லூரியிலுள்ள போதகாசிரியர்கள் அனைவரும் சுவாமிகளை வந்து வணங்கி ஆசீர்வாதம் பெற்றார்கள்.

மாலை 7 மணிக்கு சுவாமிகள் அரண்மனைக்குச் சென்றார். அவ்வரண்மனையில் எங்கே பார்த்தாலும் மின்ஸார விளக்குகள் பிரகாசித்து இரவைப் பகலாக மாற்றிக் கொண்டிருந்தன.

அரண்மனை வாயிலிலேயே நின்றுகொண்டிருந்தார். ஸ்ரீ கே. நரசிம்மய்யங்கார். அவர் மகாராஜாவுடைய அஸிஸ்டண்டு ஸெக்ரடரி தர்பார் உள்ளே நடந்து கொண்டிருந்தது. சுவாமிகள் அதனைப் பார்ப்பதற்காக அவர்களுக்கென்று உயர்வான ஓரிடம் அமைக்கப்பட்டிருந்தது. (அது பால்கனி) இங்கே இருந்துகொண்டு மைசூர் மகாராஜா நிகழ்த்திவந்த தர்பாரை சுவாமிகள் பார்த்துக் கொண்டிருந்தார். மகாராஜா ஒரு ஸிம்மாஸனத்தில் உட்கார்ந்திருந்தார். அரசாங்க உத்தியோகஸ்தர்களிற் சிறந்தோர் ஒருவர்பின் ஒருவராய் வந்து காணிக்கைகளை ஸமர்ப்பித்தனர். அவற்றை மகாராஜா தம்முடைய கதையால்

தொட்டார். அதுவே அககாணிக்கைகளை ஏற்றுக கொண்டதன் அறிகுறி. பின்பு, பல்வகையான ஆட்டங்கள் முதலியன நிகழ்நதன. உதாரணமாக, பாட்டு, பாண்டு, குஸ்தி, குதிரைக்காட்சி, ஸாக்கஸ் வித்தைகள முதலியனவாம.

தர்பாா நடநதுகொண்டிருக்கும்பொழுதே முதிய மகாராணியம்மையார் பால்கனிக்குவநது சுவாமிகளுக்கு நமஸ்காரம் செய்தாா. "நீங்கள் வநதது எங்களுககெல்லாம் பரமானநதம் விளைவிக்கிறது" என்றார். பினபு சுவாமிகளுக்கு அரச குடும்பத்தார் யாவரையும அறிமுகப் படுத்தினர். ஒவ்வொருவரையும் ஸ்வாமிகள் ஆசீர் வதித்தார்.

தர்பார் முடிநததும், ஸ்ரீநரசிமமய்யங்கார் வநது சுவாமிகளை அரண்மனை முற்றும் கூட்டிச்சென்று அங்குளள படங்கள், சிங்காதனம் முதலிய எல்லாவற்றையும காண்பித்தாா "ஸ்வாமிஜி! இதுவே ஸ்வர்ண ஸிம்மாஸனம். விசேஷ தினஙகளில மகாராஜா இதிலேதான் கொலுவிருப்பார். இதிலே ஏழுபடிகளிருக்கினறன அப்படிகள் ஏழாக இருப்பதில் ஏதோ அநதராாத்மம இருப்பதாகக் கேள்வி" என்று ஐயங்காரவர்கள் சொன்னா. அபபொழுது சுவாமிகள் "இந்த ஏழுபடிகளும ஏழுஞான பூமிகளை உணர்த்துகின்றன. அவையாவன சுபேசசை, விசாரணை, தனுமானஸி, ஸத்வாபத்தி, அஸம்ஸக்தி, பதார்த்த அபாவனை, துரியம, என்பவை இவற்றைத தாண்டின பிற்பாடு ஸாதகன் பரமபதத்தை அடைகிறான். பரமபதம் என்பதே மகாவிஷ்ணு வீற்றிருக்கும் பதம். அரசன் மகாவிஷ்ணுவின் அம்சம். இநதத் தத்வத்தைத்

தான் இங்கே அறியவேண்டியது" என்று விளக்கிக் கூறினார்.

அன்றிரவு 10-30 மணிக்கு சுவாமிகள் தம்மிருப்பிடத்திலிருந்து கிருஷ்ணராஜ அணைக்கட்டையும் பிருந்தாவனத் தோட்டத்தையும் பார்வையிடச் சென்றார். அணை அஸிஸ்டண்டு எஞ்சினீயிர் சொன்ன விளக்கங்களைக் கேட்டு சுவாமிகள் வெகு சந்தோஷம் அடைந்தார். சாதாரணமாக அங்கே விளக்குகளெல்லாம் இரவு 10 மணிக்கே அணைக்கப்படுமாயினும் அன்றிரவு சுவாமிகளுக்காக அவை அணைக்கப்படாமல் இருந்தன. பிருந்தாவனத் தோட்டத்தில் அழகுமிகுந்த அருவிகள் மின்ஸார வெளிச்சத்தில் பிரகாசித்துக்கொண்டிருந்தவற்றை சுவாமிகள் பார்த்து பெருத்த மகிழ்ச்சிகொண்டார். மயில்போன்ற ஒரு மின்சார ஜோதி இரக்கைகளை விரித்தும் சுருக்கியும் காட்டிக்கொண்டிருந்தது. மைசூர் ஸமஸ்தானததுக் குலதெய்வப் பக்ஷியான கெண்டபெருண்டர் என்பது மின்ஸாரத்தால் விளக்கிககாட்டப்பட்டு அது தோன்றியும் மறைந்தும் நின்றது இவற்றை எல்லாவற்றையும்விட அங்குகேர்த்தியாக இருநதவை ராதாகிருஷ்ண உருவமும் காவேரியம்மனுமே

இவை யெல்லாம் சுவாமிகளுக்கு ஆனந்தத்தைக் கொடுத்ததுமன்றி ஆழ்ந்த தெய்வச் சிநதையிலும் அவரை அமர்த்தின இவறறைப் பார்த்து பின்னர் ஸம்ஸ்கிருதக் கல்லூரிக்குத் திரும்பிவநதபொழுது நள்ளிரவாயிற்று.

அக்டோபர் மீ 20உ காலையில் சுவாமிகள் பஞ்சகவி மடத்துக்குப் போனபோது அங்கே அவர்களை கௌரி சங்கர் சுவாமிகள் வரவேற்றார். அந்த மடத்தை வெகு சிரத்தையுடன் முதிய மகாராணி பாவித்துவருகிறார்.

அங்கே சுவாமி சிவானநதர் பஞ்சாக்ஷர கீர்த்தனம் செய்தார்.

பின்பு காலை 10 மணிக்கு சுவாமிகள் அரண்மனைக்குத் திரும்பிவநதார். மகாராஜா முன் செல்ல அவர் பின சென்றுகொண்டிருநத ஊர்கோலத்தை அவர் பார்த்தார். அங்கே ஐரோப்பிய தம்பதிகள இருவா சென்றுகொண்டிருந்தார். சுவாமிகள் அவர்களிடம "ஆனநதகீதை" என்ற புத்தகத்தைக் கொடுத்தார். அந்த ஐரோபபிய அம்மையார் ஒன்றும தெரியாதவளாய்த் திகைத்து நின்ருள். அப்பொழுது அஙகிருந்த ஒரு பெரியவா அநத அம்மையைப்பார்த்து "இவர் ஹிமாலயா பர்வதத்திலிருநது வநதிருக்கின்ற ஒரு பெரிய சுவாமிகள" இவர் இந்தியா முழுவதும் சுறறுப் பிரயாணம் செய்துகொண்டு ஆத்மீக ஞானம் பரப்பிவருகிருர்" எனறு அறிவிததார். அப்பொழுது அநத அம்மையார் சுவாமிகளை மிக வணககத்துடன் நமஸ்கரித்தாா

விநாயகர் கோவில் சென்று வழிபட்டபின்பு சிவானந்த சுவாமிகள் அரண்மனைக்குள்ளே கொண்டுபோகப் பட்டார். எலட்ரிக் எலிவேட்டர்விட்டு கீழே இறங்கின உடனேயே முதிய ராணியார் முன்வந்து "உங்களுக்காக இங்கே கார்த்துக்கொண்டே இருக்கிறேன்" என்று கூறி வரவேற்ருர். அதன் பின் ஒன்றரைமணி நேரம் சுவாமிகள் உள்ளே அரசகுடும்பத்தாருடன் இருந்தாா. நேரிலே கண்டபொழுது கேட்டுக்கொள்ளவேண்டும என்று நெடுநாளாக நினைத்திருந்த கேள்விகளெல்லாம் ராணியமமையார் கேட்டிருப்பார். அவற்றிற்குத் தக்க விடைகளை சுவாமிகள் அளித்திருப்பார் என்று மாத்திரம் ஊகிக்கலாம். ஆனல் சுவாமிகள் கூறிய சில வார்த்தைகளிலிருந்து ராணி

அம்மையார் யோகத்திலேயும் தத்வஞான நூல்களிலும் பயின்றுவந்திருந்தார் என்பது மாத்திரம் தெளிவாயிற்று.

அச்சமயத்திலே மகாராஜா அவர்கள் சுவாமிகளுக்கு ஸால்வைகளும், வைர மோதிரமும் பரிசளித்தார்.

அதன்பின் சுவாமிகள் முதிய மகாராணியார் பூஜை அறையில் கீர்த்தனை நிகழ்த்தினர். அவ்விடம் விட்டு சுவாமிகள் வெளிப்போந்தபொழுது மாலை $1\frac{1}{2}$ மணியாயிற்று.

—o—

## மாண்டியா

மூன்று மணிக்கு சுவாமிகள் மைசூர்விட்டுப் புறப்பட்டார். மகாராணியார் வேண்டுகோளுக்கிணங்கி அவருடைய காரிலேயே சுவாமிகள் பெங்களூருக்குப் போனார். அப்படிப் போகும்போது வழியிலே மாண்டியா என்னும் இடத்தில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் வழியில் நின்றுகொண்டு சுவாமிகளைப் பார்க்கவேண்டும் என்று முறையிட்டனர். சுவாமிகள் கீழே இறங்கினர். அங்கே ஒரு விநாயகர் கோயிலிருந்தது. அதிலே சுவாமிகள் கீர்த்தனம் செய்ய ஆரம்பித்தார்.

—o—

## பெங்களூர்

பெங்களூருக்குப் போனபொழுது அங்கே அரண்மனையொன்று தயாரிக்கப்பட்டு சுவாமிகள் தங்க அளிக்கப்பட்டது. சாதாரணமாக அங்கே அரச குடும்பத்தார் மாத்திரமே தங்குவது வழக்கம். அது அறுநூறு ஏகர்

கொண்ட ஒரு விசாலமான தோட்டத்தின் மத்தியிலே கட்டப்பட்டிருந்தது. எங்கு பார்த்தாலும் சோலைகளும் மரங்களும் இருந்தமையால் அவ்விடம் மிகவும் ரமணீயமாயிருந்தது.

சிறிதுநேரம் ஓய் வெடுத்தபிறகு ஸ்வாமிகள் அங்கிருந்த கமலாபாய் பள்ளிக் கூடத்துக்குப் போனார். அங்கே வந்து கூடியிருந்த ஜனங்கள் ஆயிரக்கணக்காக இருந்தார்கள். வாயிலிலே கொட்டை எழுத்தில் "சிவானந்தர் நீடூழி வாழ்க" என்று எழுதப்பட்டிருந்தது. வேறொரு வாயிற்பக்கம் "சாந்தித்வாரம்—சிவானந்தருக்கு ஜெய்" என்றும் மற்றோரிடத்தில் இரண்டுதூண்கள் நிறுத்தப்பட்டு அவற்றில் "நேசி, பணிசெய், த்யானம்செய், அனுபூதி பெறு" என்றும், எழுதப்பட்டிருந்தன. இந்த வாயிலைத் தாண்டிச் சென்றதும் உள்ளே கொடிகளாலும் தோரணங்களாலும் அமைக்கப்பட்ட ஒரு சுவர்க்கம் போன்ற நகர் காணப்பட்டது. அத் தோரணங்களுக்கிடையே சிவானந்தருடைய படமும் அதைச்சுற்றி "உள்ளே யிருக்கிறது ஆனந்தம்" என்ற எழுத்துக்களும் காணப்பட்டன. பல வகையான நன்மொழிக் கூற்றுக்கள் தோரணங்களுக்கிடையே அமைக்கப்பட்டிருந்தன. அவற்றுள் சில "தாழ்மையாகவும் எளிமையாகவும் இரு," "உன்னைப்போலவே உன் அண்டைவீட்டுக்காரனையும் நேசி," "ஏழைகளிடத்துத் தெய்வத்தைக்கண்டு தொழு," "மோசம் நினைக்காதே," "நல்லவனாயிருந்து நன்மைச்செய்," "பணிசெய், நேசி, கொடு," "சேவையே அன்பின் அறிகுறி," "தைரியமாயிரு" "எப்பொழுதும் மகிழ்ச்சியுடனிரு" என்பவை.

முதலில் ஸ்வாமிகள் "சாந்தித் வாரத்தின்" வழியாய்ச் சென்றார். போகும்பொழுதே திடீரென்று ஸ்வாமிகள் மீது ஒரு பூமாரி சொரிந்தது, அது வெகு நேர்த்தியாக அமைக்கப்பட்ட ஒரு விநோதச் செயல்.

உள்ளே சென்று ஸ்வாமிகள் தமமிடத்திலமர்ந்ததும் அவரைக் காணவந்தவர்கள் ஒவ்வொருவராக உள்ளே விடப்பட்டார்கள். அவர்களுக்குள் ஒருவர் பஞ்சாப் தேசத்திலிருந்து வந்திருந்த ஒரு கணக்கர். அவரைக்கண்ட மாத்திரத்திலேயே ஸ்வாமிகள் "நான பலவருஷங்களுக்கு முன் உங்கள் வீட்டிற்கு வந்திருந்தேனல்லவா! உங்கள் வீட்டில் எல்லா விடத்திலும் வேதாந்த மொழிகள் பதித்த பலகைளை மாட்டியிருந்தீர். ஸதாகாலமும நீங்கள் ஓம் என்று உச்சாரணம செய்வது வழக்கமாயிருந்தது." என்று சொன்னார். ஸ்வாமிகளுடைய ஞாபக சக்தியைக் கண்டு அந்தப்பிரபு மிகவும் ஆச்சரிய மடைந்தார்.

பின்பு கூட்டம் கலைந்து ஸ்வாமிகள ஆர். பி.ஏ.என். எம்-ஹைஸ்கூலுக்குப போவதற்காக வெளியேவந்தார். அவர்மீது ஜனங்கள வந்து விழாமல் தடுக்க கயிறுபிடித்த பல தொண்டர்கள் இரு வரிசைகளாக நின்றனா எனினும் யாரோ ஒரு ஸிந்தி அம்மையார் அக்கயிற்றை யறுத்து உள்ளே போய் நூற்றொன்று ரூபாய் வைத்திருந்த ஒரு காகிதக் 'கவரை' ஸ்வாமிகளிடம் கொடுத்து வெளியே போய் விட்டார். அவர் பெயா எதிலும் எழுதியிருக்க வில்லை. அது வன்றோ உண்மையான தர்மம்!

ஹைஸ்கூலில் தமிழிலும கன்னடத்திலும் வரவேற்புப் பாடல்கள பாடபபட்டன. ஸ்வாமிகள் செய்த பிரசங்கமே வழக்கமபோல் வேதாந்த உணமைகள நிறைந்த சொல் மாரியாக இருந்தது—இறுதியில் கீர்த்தனம செய்த

பொழுது கூட்டத்திலிருந்தவர் யாவரும் கலந்துகொண்டமையால் வெகு நேரம் நாம ஸங்கீர்த்தனம் நடைபெற்றது. நேரம்சென்றது ஒருவரும் கவனிக்கவில்லை அதறகுமேல் யாத்திரை சினிமா காண்பிக்கப்பட்டது. இரவிலே களைப் பாறுவதற்கு அரண்மனைக்குச் சென்றபொழுது எவவளவோ நேரமாய்விட்டது.

அக்டோபர் 21 உ பகல் பன்னிரண்டுமணிவரை ஸ்வாமிகள் ஒவ்வொரு இயக்கத்தையும் அனுக்கிரகம செய்து கொண்டே இருந்தார். யார் யார் அழைததாரோ அஙகே போய் கீர்த்தனம செய்வது, பேசுவது, வாழ்ததுகிறது என்ற தொழிலையே செய்து கொணடிருநதார். அப்படி அவரை அழைத்து சென்ற இயக்கங்களுக்குள் சில திவ்ய ஜீவன சங்கஙகள், விசுவேசு வரபுரத்து ஆஸ்கத போஷக ஸபை, பஸவங்குடியிலுள்ள சங்கரமடம, சாலை ரஸதாவிலுள்ள யுவவைசிய ஸமாஜம் எனபவை.

மாலையில் பத்திரிகை நிருபர்கள வநது தரிசனம் செய்து ஸ்வாமிகளிடம பொன் மொழிகளைப் பெறறுச சென்று, அவற்றைப் பிரசுரம் செய்தனர்.

இவை முடிநதபின்பு ஸ்வாமிகள் நாடகம் ஒன்று பார்த்தார். கெமப கௌடா ரோடிலுள்ள எஸ்.எஸ். நாடக மண்டலி ஸ்வாமிகளை அழைததுசசென்று தங்களுடைய வித்தையை ஸ்வாமிகளுக்குக் காண்பிததாரகள். அவர் நடத்திய நாடகம அம்பரீஷ சரிதம். சிவானந்தரோ நாடக சாலையில கண்டது அம்பரீஷரின பக்தி ரஸத்தை மாத்திரமே. அஙகே ஸ்வாமிகள் இருக்கும்பொழுதே பள்ளிக கூடத்துப்பிள்ளைகள ஸ்வாமிகளுக்காகக காததிருக்கின்றனர் என்ற செய்தி வநதது. அதைக்கேட்டு ஸ்வாமிகள நாடகமண்டலி நண்பரிடம் விடை பெற்றுக்கொள்வதற்

காக அரங்கத்தின மேலே ஏறிச்சென்றார். உடனே எல்லா நடிகர்களும ஸ்வாமிகளைச் சூழ்நதுகொண்டார்கள். அவா பாதததில் விழுவதும் கால்களைப் பற்றி வருடுவதுமாய் அவாகள தஙகள அன்பை வெளியிட்டார்கள். ஸ்வாமிகள அபபொழுது வெகு அழகாக ஒரு சிறிய உபநியாசம் நிகழ்ததினார் குறிப்பாக அவர் ஸாதனையின் எட்டுப் பாகங்களைக கூறினா. அவையாவன சுத்தம செய்துகொள்ளல், தாரணை, மனனம், தயானம், வஸ்துவை அறிதல். அதனுடன கலத்தல், ஒன்றுதல், விடுதலை பெறுதல், இதைக் கூறினபின்பு சில பாடலகளைத் தமமுடைய அழகிய குரலில் பாடினார். "நீஙகள சிவானநத ஸ்வரூபிகள என்பதை மறககாதீாகள்" என றும், "அமபரீஷரைபோல்பக்தியை வளர்ததுஙகள" என்றும, அவர்களுககு எடுத்துக் கூறினர். பினபு அவாகள ஆட்டததைப்பற்றிப் புகழ்நது பேசினார். இந்த நாடகம எழுதியிருககும நரஹரிசாஸ்திரி மிகவும் சாமர்ததியசாலி, அறிவாளி." எனறார். சாஸ்திரியார் எழுநது "ஸாக்ஷாத நாராயணரே இநத நாடகத்தைப் பாாக்க வநதிருக்கிறா" என்று சொல்லி ஸ்வாமிகள் பாதத்தில விழுநதாா.

பின்பு ஸவாமிகள பள்ளிக் கூடத்துககுப் போனா. அஙகேயும பிரசஙகம, கீர்த்தனம், பஜனைஎல்லாம் வெகு விமர்சையாக நடைபெற்றன. பல பெண் மணிகளும கலநது கொணடார்கள. அவாகளைப்பார்த்து ஸ்வாமிகள் "நீஙகள பக்தியைக கைப்பற்றவேண்டும். புருஷர்கள ஞானததைப பெரிதென்று நினைத்து பக்தியை மறநது விடுவாாகள ஈசுவரனுககுக கண உண்டா மூக்குண்டா என்று தாககம செயவாாகள் நீஙகள விரதமான பக்தியு

டன் இருக்கவேண்டும். நாம ஸங்கீர்த்தனம் எவ்விதத்தி லும் ராஜயோகம், ஞானயோகம் என்பவற்றுக்கு குறைந்த தல்ல'' என்றார். பிற்பாடு அவர்களுக்கு ''ரொட்டி''க் கீர்த் தவம் கற்றுக் கொடுத்தார்.

மறு நாட்காலை (22-10-50) ஸ்வாமிகள் மல்லேசுவ ரம் போய் அங்கே திவ்ய ஜீவன சங்கத்தை ராம மந்திரம் என்ற இடத்தில் பார்வையிட்டார். அங்கேயும் ஆயிரக்க ணக்காக ஜனங்கள் வந்திருந்தார்கள். நேரம் மிகக் குறை வாக இருந்தபோதிலும் ஸ்வாமிகள் ஒரு சிறு சொற்பொழி வும் கீர்த்தன ஸத் ஸங்கமும் நடத்தினார்.

அதன்பின் ஜலஹல்லிக்கு வந்து அங்கே அமைக்கப் பட்டிருந்த பந்தலுக்குள்ளே புகுந்து ஸ்ரீ-டி-கே-கணேஷ் என்னும் பிரபு அளித்த வரவேற்பைப் பெற்றார் பட்டா ளத்துத் தலைவர்களும் சிப்பாய்களும் கூடியிருந்த அந்தக் கூட்டத்தில் ஸ்வாமிகள் நிகழ்த்திய சொற்பொழிவைக் கேட்டுக்கொண்டிருந்த ஜனங்களுக்குக் கொடிய வெயில் தங்கள்மீது காய்ந்து கொண்டிருந்தது தெரியாமலிருந்தது. ஸ்ரீ தேச ராஜஸிங் என்னும் நண்பர் பாட்டு பாடிக் கொண்டே ஸ்வாமிகளை வரவேற்றார். அவருக்குப்பின் கணேஷ் முதலிய சில பிரபுக்கள் புகழ் மொழிகள் கூறினா கள் ஸ்வாமிகளும் அருமையாக விடை கூறினார். அஹிம்சை, ஸத்யம் முதலிய குணங்களை வளர்த்தவேண் டும் என்று வற்புறுத்தினார்.

இந் நிகழ்ச்சிகளுக்குப் பின் ஸ்வாமிகள் அமெரிக்க மாது ஸ்ரீமதி ஷமாஷ் அம்மையார் இருக்குமிடம் சென்று தரிசனம் அளித்தார். அந்த அம்மையார் நெடுநாளாய் அனுபவித்துவரும் நோயிலிருந்து இன்னும் விடுதலை

பெருத தனமையைக கண்டு ஸ்வாமிகள் அவருக்குத் தேறு தல் மொழிகளை, கூறி விடைபெற்றார் மாலே அநேகா சுவாமி களே பள்ளிக்கூடததில் வநதுபாாத்தார்கள. அவாகளை வெகு ஒழுஙக-க ஒருவா் பின ஒருவராக வநது மநதிர தீக்ஷை பெற்றுச சென்றாாகள.

பினபு டெளன ஹாலிலே ஒரு பெரிய கூட்டம கூடிற்று. இதறகுமுன இவவளவு பெரிய கூட்டம் கூடி னதே யில்லேயென்று மேயர் சொன்னார். குருஸ்தோத்தி ரம சொல்லிக கூட்டம ஆரம்பிததது. இதுவே ஒரு புதுமை. மேயா வரவேற்புப் பத்திரிகையை வாசித்தார். ஸ்வாமிகளும் தக்க விடையை ஒரு சொற்பொழிவாக அளிததார். அதன் முடிவில் கீர்த்தனம சாந்திபாடம முத லியவற்றைச் சொல்லி முடித்தபொழுது பொதுக்கூட்டம பிரார்த்தனைக் கூட்டமாக முடிவு பெறறது. வந்து கூடியி ருநத ஜனஙகளுககுண்டான ஆனநதததுககு அளவே யில்லே.

—o—

## ஹைதராபாத்

அக்டோபர் 23உ அதிகாலே 5 மணிக்கு டாஸ்கா டெளன் D.L S. பிராஞசைச் சார்நத தொணடர்களை ஸ்வா மிகளை தரிசனததுககாக வந்தார்கள். இரவு பகலாக வேலே செய்திருந்த இவாகள் இதுவரை ஸ்வாமிகளிடம் வந்து பேசவோ நமஸ்காரம் செய்யவோ அவகாசம் இல்லாமல் தவித்திருந்தார்கள். இப்பொழுது அவர்கள் வந்து அவா மிகளுக்கு மாலேயிட்டார்கள். அவர்களே அன்புடன் ஆத

ரித்த சுவாமிகள் "ஒத்துழையுங்கள். பேத புத்திக்கு ஒரு பொழுதும் இடம் கொடாதீர்கள். நீங்கள் கூட்டுறவினால் எவ்வளவோ சாதித்துக்கொள்ள முடியும்" என்று ஆரம் பித்துப் பல பொன் மொழிகள் கூறினார்.

அவர்களுக்கு விடை கொடுத்தபின்பு சுவாமிகள் பெங்களூர் விட்டு புறப்படச் சித்தமானார். அப்பொழுது மைசூர் பிரதமமந்திரி கே-ஸி-ரெட்டியாரும் அவர் மனைவி யாரும் விமானஸ்தலத்துக்கு வந்து சுவாமிகளை வணங்கி னார். அவர் சுவாமிகளைப்பார்த்து "இன்று ஸ்ரீ ராஜகோ பாலாச்சாரியார் இங்கே இருக்கிறார். தங்களைப்போன்ற குரு இப்பொழுது இந்தியாவுக்கு மிகவும் அவசியம் என்று சொன்னார்." என்றார். சுவாமிகளும் "அவர் இந்தவார்த்தை சொன்னதற்கு நான் மிகவும் நன்றி பாராட்டுகிறேன் அவருக்கு என் வந்தனங்களை அறிவியுங்கள்" என்றார். அதற்குப்பிறகு ரெட்டியார் அரைமணி நேரம்வரையில் பேசிக்கொண்டே இருந்த தம் மனைவியாரையும் கூட்டிக் கொண்டு விடைபெற்றுச் சென்றார்.

அவர் போனபின்பு சுவாமிகளை நாகப்பூர் பிரபுவின் மனைவி பார்க்க வந்தார். அவர் "சுவாமிகளுக்குத் தமிழ் தெரியாதென்றே நினைத்திருந்தேன். நேற்று சுவாமிகள் தமிழ்ப் பாடல்களைக் கேட்டபின்புதான் சுவாமிகள் தமிழ் தெரிந்தவர் என்று அறிந்தேன்" என்றார். அவருடன் சில வார்த்தைகள் பேசி அவர்களுக்கு சில உபதேச மொழிகள் கூறி விடை கொடுத்தனுப்பினார்.

காலை $7\frac{1}{2}$ மணிக்கு விமானம் கிளம்பியது. இரண்டு மணி நேரத்தில் ஹைதராபாத் போய் சேர்ந்தது. ஹைதராபாதிலே பேகம்பேட்டை நிலயத்தில் விமானம் இறங்கி

யது. அங்கே ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடியிருந்தார்கள் சுவாமிகள் ஹைதராபாதில் ஒரு நாளதான் தங்குவார் என்று தெரிந்திருந்த காரணத்தால் அங்கே கூடியிருந்த கூட்டத்துக்குக் கணக்கில்லை. வந்தவர்கள் புஷ்பங்கள் பழங்கள் முதலியவற்றைக் கொண்டு வந்திருந்தார்கள்.

சுவாமிகளை வரவேற்றவர்கள் லேபர் மந்திரி ஸ்ரீ-வி-பி-ராஜூ அவர்கள். மஹந்த் புராண்தாஸ்ஜீ, ப்ரொபஸர் துரைஸாமி அய்யங்கார். முதலியவர்கள் தொண்டர்களும், சாரணர்களும் இருவரிசைகளாக நின்றுகொண்டு மரியாதை செய்தார்கள். வழியிலே நடந்து சென்றபொழுது சுவாமிகளை மாலையிட்டுச் சென்றவர் நூற்றுக்கணக்கானவர்.

ஹைதராபாதிலே தங்கின சமயம் பிரதாப்கிரி அரசர் தம்முடைய விடுதியை சுவாமிகள் தங்குவதற்குக் கொடுத்தார். அக்கட்டிடத்துக்குப் போகுமுன் சுவாமிகளைப் பூரண கும்பத்துடன் வரவேற்றார்கள். நாகஸ்வரமும் வாசிக்கப்பட்டது. பஜனையும் நிகழ்ந்தது. கட்டடத்துக்குள்ளும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் காத்திருந்தார்கள். அவர்களுக்குத் தரிசனம் அளித்து நாம சங்கீர்த்தனமும் செய்து சுவாமிகள் ஓய் வெடுத்துக் கொண்டார்.

மாலை மூன்றுமணிக்கு ஊஸ்மானியா ஸர்வகலாசாலைக்குப் போனார். அங்கே சுவாமிகளை பேராசிரியர் எம்-எஸ்-துரைசாமி என்பவரும், வேறு பிரபலப் பிரபுக்களும் வரவேற்றார்கள். ஸ்ரீ துரைசாமி சுவாமிகளைப் புத்தகசாலைக்குக் கூட்டிச் சென்றார் பிறகு வெளியே வந்து ஹாலிலே கூடியிருந்த மாணாக்கர்களுக்கு ஒரு சொற்பொழிவு அளித்தார். அதற்குமுன் கனம் துரைசுவாமி அவர்கள் சுவாமி

களின் குணாதிசயங்களைப்பற்றிச் சில வார்த்தைகள் சொன்னார்.

உஸ்மானியா ஸர்வகலாசாலையிலிருந்து நைஜாம் கலலூரிக்கு சுவாமிகள் சென்றார். அங்கே மாணக்கர் மாத்திரமன்றி, பொது ஜனங்களும் கூடியிருந்தார்கள். அங்கே சுவாமிகள் பேசின பிரசங்கத்தில் மற்ற விஷயங்களுக்கிடையே யமதர்மராஜன் அனுப்பும் நான்கு அழைப்புப் பத்திரிகைளாகிய வெண்மயிர், திருஷ்டிக் குறைவு, பல் விளகல், ஊன்றுகோல் என்பவற்றைச் சொன்னார். சுவாமிகள் பேசினது வேடிக்கை நிறைந்திருந்ததால் ஜனங்கள் சிரித்த வண்ணமே இருந்தார்கள்.

பிரசங்கமுடிவில் கீர்த்தனங்களில் எல்லாரும கலந்து கொண்டார்கள். சுவாமிகள் தம்முடைய ஆங்கிலக் கீர்த்தனைகளையும் பாடினார்.

அதற்குப் பிறகு ஸெகந்தரா பாதில் மாப்பூப் காலேஜ் ஹைஸ்கூலுக்கு சுவாமிகள் போனார். அங்கே கட்டடத்துக்குள்ளே இடமில்லாமையால் எல்லோரும் திறந்த வெளியிலே கூடினார்கள். பல்லாயிரம் ஜனங்கள் வந்திருந்தார்கள். சில வரவேற்புப் பத்திரங்கள் வாசிக்கப்பட்டதில் ஒன்று ஓரழகிய குழாய்க்குள்ளே வைக்கப் பட்டிருந்தது.

மேடைமீது சுவாமிகள் இருக்கும்பொழுது கணக்கற்ற போட்டோக்கள் எடுக்கப்பட்டன. 'பளிச்' பளிச் சென்று மேலும் மேலும் வெளிச்சம் தம் முகத்தில் அடிக்கப்படும் அவற்றை முன்னமெல்லாம் பொறுத்திராத சுவாமிகள் இப்பொழுது பொறுத்துக் கொண்டிருந்தார். போட்டோக்காரர்களும் ஓயாமல் இந்த வெளிச்சங்களால் சுவாமிகளைத் தாக்கிக்கொண்டே இருந்தார்கள்.

ஸ்வாமிகள் அளித்த சொற்பொழிவு வழக்கம் போலவே தத்துவங்கள் நிறைந்திருந்தது அதற்குப்பின்பு கூட்டம் அதிகமாக இருந்ததால் பக்கத்திலுள்ள சந்து ஒன்றின் வழியாக சுவாமிகளை வெளியே கொண்டுபோக வேண்டியிருந்தது அங்கே ஒரு சிவன் கோவிலிருந்தது. அதற்குள் புகுந்து அங்கே கீர்த்தனம் செய்தார். அப்பொழுது ஜனங்கள் ஓடிவந்து அங்கேயும் ஆயிரக்கணக்காகக் கூடி விட்டார்கள். எப்படியோ ஒரு விதமாக வெளியே சுவாமிகள் சென்று விட்டார்.

திரும்பித் தம்மிடத்துக்குப் போகும்போது தாகசாந்திக்காக ஒரு சோடாக்கடையண்டை கார் நிற்க வேண்டியிருந்தது. அதுவேசமயம் என்று பலர் கூடிவிட்டார். சோடாக்கடை முதலாளியும் பணம்பெற மறுத்துவிட்டார். மீண்டும் கூட்டத்தைவிட்டு விலகி சுவாமிகளும் அவர் சிஷ்யர்களும் காருக்குள் புகுந்தார்கள்.

பிரதாப்கிரி கோடிக்குள்ளே நுழைந்தபோது சுவாமிகளுக்கு மிகுந்த களைப்புத் தட்டியிருந்தது. "நான் இனிமேல் ஒரு நிமிஷம்கூட தங்கமாட்டேன், நேரே ரிஷிகேசம் போய்விடுவேன்" என்றார். ஆனால் அரைமணி நேரத்திற்கெல்லாம் கீர்த்தனம் நடக்குமிடத்துக்கு வந்துவிட்டார். யாத்திரையில் சுவாமிகளுக்கு ஓய்வேது? அன்றிரவு நாலு மணிநேரம் நித்திரை செய்தார். மறுநாட் காலை (24-10-50) வழக்கம்போலத் தம் காரியங்களைச் செய்ய ஆரம்பித்து விட்டார். தாம் இருந்த இடத்திலோ ஆண் பெண் குழந்தைகள் என்று கணக்கற்ற ஜனங்கள் வந்து தரிசனத்துக்குக் காத்துக் கொண்டிருந்தார்கள், ஆகையால் சுவாமி

கள கீர்த்தனையும நடத்தி நன்னடத்தையைப் பற்றி ஒரு பிரசங்கமும செய்தார.

பின்பு அ இ ரே. ஸ்டேஷனுக்கு சென்று ஒரு பேச்சைப் பதிப்பித்தார அங்கு இருநதபோது ஒரு பெரிய தனவான் தம்முடைய மோட்டார் காரை சுவாமிகள் உபயோகத்துக்குக கொடுததார். அநதப் பிரபுவுக்குச் சில நாட்களுக்கு முன் பக்ஷவாதம் தோன்றியிருநதது அவர் சுவாமிகளுக்குப பாதபூஜை செயதார. சுவாமிகளும அவர் வீட்டிலே மிருதயுஞ்செய ஜபம செய்ததுடன் அம மநதிரத்தை அப் பிரபுவிக்குக கற்றுக கொடுத்தார அவர் மக்களைப் பாரத்து "நீஙகள் உக்கள் தகப்பனைரைச செம்மையாயத் தெய்வம்போலப் பார்ததுக கொள்ள வேண்டும்" என்றா. அவரைப் பார்த்து "நீங்கள் உங்கள் வேலையாட்களை பிள்ளைகளென்று நினைககவேண்டும்" என்று உபதேசம செய்தார.

இந நிகழ்ச்சிகள எவ்லாம் நடைபெற்று முடிநததும மணி $11\frac{3}{4}$ ஆயிற்று. அதன்பின் ஓய் வெடுத்துக கொளளாமலே தெளளிபுரம சென்று அங்கிருந்த திவ்ய ஜீவன சங்கக்கிளையையும், புத்தக சாலையையும், வைத்யசாலையையும பார்வையிட்டார. கீர்த்தனமும் நடத்தினர். ஜனங்கள கூடிநின்ற பநதலுக்குப் போனர். மணி ஒன்று. அதுவரையிலும ஆகாரம் எதுவும எடுத்துக் கொள்ளவில்லை ஆனல் அதைப்பற்றிய சிந்தையே யில்லாமல் பநதலுக்குள்ளே சென்று உபநியாசம் செய்ய ஆரம்பித்து விட்டார். இதெல்லாம முடிந்தபின்பு பிரதாப் கோடிக்கு வநதபோது மணி இரண்டு.

ஏதோ சிறிது ஆகாரம் முடித்தபின், மீண்டும் தரிசனம கொடுக்கச் சித்தமானர். அநேகர் ஒவ்வொருவராய்

வந்தார்கள். பிரதாப்கிரி ராஜாவும் அவர் குடும்பத்தாரும் வந்தார்கள்.

மாலை 5 மணிக்கு சுவாமிகள் கோடியிலே கீர்த்தனம் நடத்திவிட்டு ரெயில்வே ஸ்டேஷனுக்குப் புறப்பட்டார். அங்கே ஸ்டேஷன் மாஸ்டரே சுவாமிகளை வரவேற்றார். நூற்றுக்கணக்கான பக்தர்கள் வந்து கூடினர். முதல் வகுப்பு வண்டியில் வாடிவரை பிரயாணம் செய்து நள்ளிரவில் நீரிஸ்ட்காருக்குள் மீண்டும் சுவாமிகள் நுழைந்தார். அங்கே ஆவலுடன் காத்திருந்த பூரணபோதா முக்கிய சிஷ்யர்கள் காணமற் கண்டெடுத்த புதையல் போல சுவாமிகளைப் பெற்றனர்

—o—

## புனா

அக்டோபர் மாதம் 25ம் தேதி காலை 10 மணிக்கு சுவாமிகள் புனா வந்து சேர்ந்தார் அஸிஸ்டண்டு ஹெல்த் டைரக்டர் டாக்டர் டி. கே. விசுவநாதன் அவர்கள் வரவேற்றார். ரெயில்வே ஸ்டேஷனிலேயே வந்து கூடியிருந்த பெருத்த ஜனசங்கியையப்பார்த்து சுவாமிகள் ஆச்சரியமடைந்தார். ஏனெனில் புனாவிலே சுவாமிகள் வருவார் என்று பழைய நிகழ்ச்சிப் பத்திரத்தில் எழுதப் பட்டிருக்கவில்லை. ஆயினும் பக்தஜனங்கள் எப்படியோ விஷயத்தைத் தெரிந்து கொள்கிறார்கள். யாத்திரை வண்டி கொண்டுபோகப்பட்ட இடத்தில் ஸ்டேஷனில் இரண்டுவரிசையாக தொண்டர்கள் நின்றுகொண்டிருந்தார்கள். ஒரு மூலையில் ஒருமேசை வைக்கப்பட்டிருந்தது சுவாமிகள் அதன் மீதி லேறி நின்றார். அப்பொழுது. எல்லாவரும சுவாமி

களைப் பார்க்க முடிந்ததுடன் அங்கே சுவாமிஜி கீர்த்தனம் ஆரம்பித்து விட்டார். கலவரம் அடங்கவும் எல்லாவரும் ஒன்றாகத் தெய்வத்தை நினைக்கவும் அதுவே வழி என்று சுவாமிகள் யாத்திரையில் அறிந்திருந்தார். புனாவில சுவாமிகள் பல மராத்திக் கீர்த்தனங்களைப் பாடினார். "விட்டல" "பாண்டுரங்க" "ஞானதேவ்" "துகாராம்" என்ற பெயர்களைக் கேட்கக் கேட்க அங்கு கூடியிருந்த மராத்திய ஜனங்களுக்கு ஆனந்தம் பொங்க ஆரம்பித்தது.

ரெயிலவேஸ்டேஷனிலிருந்து சுவாமிகள் ஸரஸ்வதி வித்யாலயத்துக்குப் போனார். அங்கேயும கீர்த்தனமும் பிரசங்கமும் நிகழ்ந்தன, கீர்த்தனம் செய்து கொண்டிருந்தபொழுதே வெளியே பெண்மணிகள் வெய்யிலில் நிற்பதும புருஷர்கள் நிழலில் நிற்பதும் சுவாமிகள் திருஷ்டியில் பட்டுவிட்டது. அது அனுசிதம் என்று அவருக்குத் தோன்றிற்று. உடனே அத்தவறுதலை எடுத்துக்கூறி, "நாம் சொல்வது ஸீதாராம். ராம்ஸீதா அல்ல. ராதேஷ்யாம், ஷ்யாம்ராதே யல்ல" என்று விளக்கிக் காட்டினார்

பின்பு மஹாமந்தரம் பாடி, ஆங்கிலம் தமிழ் முதலிய பாஷைகளில் தாம் இயற்றிய பாடலைப் பாடினார்.

இந்நிகழ்ச்சிகளுக்குப் பின் பம்பாய் பப்ளிக் ஹெல்த் டிபார்ட்மெண்டைச சேர்ந்த மலேரியா ஆர்கனைஸேஷன் காரியலாயத்திற் குச் சென்றார் அங்கே டாக்டர் விசுவநாதன் அவர்கள சுவாமிகளை அங்கிருந்த ஆபீசர்களுக்கு அறிமுகப் படுத்தினார் அவ்விடத்தில் பார்க்க வேண்டியவற்றையெல்லாம் பார்வையிட்டபின் அங்கேயும் மகா மந்திரக் கீர்த்தனமும் மிருத்யுஞ்ஜய ஜபமும் செய்தார். பின்பு ஒரு சிறு பிரசங்கமும் செய்தார். அவர் கூறியவற்றில் முக்கியமானவை பின் வருமாறு :—

"உழையுங்கள், நேசியுங்கள், கொடுங்கள், சுத்தம் செய்து கொள்ளுங்கள், தியானம் செய்யுங்கள், அனுபூதி பெறுங்கள். நன்மையே செய்யுங்கள், நல்லவர்களாகவே யிருங்கள், கருணை காட்டுங்கள், இரக்கம் காட்டுங்கள், இவையே போதும். இவையே எல்லா மதங்களும் கூறும் போதனைகள். உழைப்பு கர்மயோகம், நேசித்தல் பக்தி யோகம, சுத்தி செய்துகொள்வது ராஜயோகம், அனுபூதி பெறுவது ஞானயோகம், விட்டொழிதல் வேண்டும், ஒத்துப்போக வேணடும், பிறருக்கு இடங்கொடுக்க வேண்டும் இவை மூன்றும் வெகு முக்கியம். இவையில்லாவிட்டால் எங்கும் சண்டை சச்சரவும்தான. அபீசிலும் அப்படித் தான்." இதற்குமேல் என்னதான் சொல்லவேண்டியிருக் கிறது.

பின்பு மீரா ஸ்கூலுக்குப் போனார். அப்பள்ளிக்கூடம் கராச்சியிலுள்ள மீரா இயககத்தைச் சேர்நத ஸாதுவாஸ் வானிஜி என்ற மகானால் காக்கப்பட்டு வருவது. அங்கே சுவாமிகள போனபோது பள்ளிக்கூடத்து காரியதரிசியான ஸ்ரீ கங்காராம வரவேற்றார். சுவாமிகளைப் பற்றிய வரலாறுகளை மற்ற போதகாசாரியர்களுக்குக் கூறினார். அங்கிருந்த பெண் பிள்ளைகள் ஹரே ராம கீர்த்தனை மதுரமான குரலில் பாடினார்கள அன்றியும் அவர்கள் பகவத்கீதையிலுள்ள பன்னிரண்டாவது அத்தியாயத்தையும் சுவையுடன் ஒப்பித்தார்கள். பின்பு சுவாமிகள் ஒரு சிறு உபந்யாசம் செய்தார்.

அதன்பின் டாகடர் விசுவனுதன் வீட்டுக்கே திரும்பி வந்தார். அந்த வீட்டில் எங்கே பார்த்தாலும் தோரணங்களும் புஷ்பக் குவியல்களும், விளக்குகளும், தெய்வப்படங்

களும். அவையாவும் அந்த நண்பருடைய குருபக்தியை எடுத்துக் காட்டின. அவ்விடத்தில் சுமார் ஐந்நூறு ஜனங்கள் வந்து கூடியிருந்தனர். அவர்களைப் பார்த்ததும் சுவாமிகள் கீர்த்தனம் ஆரம்பித்துவிட்டார். பின்பு பிரசங்கம் நடந்தது.

ஒரு மணியாயிற்று பிக்ஷை அங்கேயே ஏற்றுக்கொண்டார்.

சாயங்காலம் 4 மணிக்கு சுவாமிகள் நேராக ஆலந்திக்குப் போனார். அங்கே ஞானேசுவர் மகராஜ அவர்களுடைய ஸமாதிஸ்தானத்தைப் போய்ப் பார்த்தார். கீர்த்தனம் செய்து தெய்வ வழிபாடும் நிகழ்த்தினார். கோவில் பிரதக்ஷிணம் முடிந்த பின்பு அருகாமையிலுள்ள மௌன பாபாவைப் பார்க்கச் சென்றார் சில நிமிஷங்கள் அங்கே தங்கின பின்பு திரும்பினார்.

அப்பால் போனது கிர்கிக்கு. அவ்வூரில் தங்கினது எட்டு நிமிஷங்களே. ஆனால் அதற்குள் எவ்வளவோ காரியங்கள் நடைபெற்றன. பூர்ண கும்பத்துடன் அவ்வூரார் வரவேற்றார்கள். ராம மந்திரில் ப்ரவேசமும் ஆரசசனையும் நடந்தன. சுவாமிகளுக்குப் பல பாதபூஜைகள் செய்யப்பட்டன. ஒரு வரவேற்புப் பத்திரிகை வாசிக்கப்பட்டது சுவாமிகள் விடைகூறி ஒரு பிரசங்கமும் செய்தார். இவையாவும் எட்டே நிமிஷங்களுக்குள் நடைபெற்றன.

அத்தருணத்தில் ஸ்ரீ என். எம். இ. தாஸ் அவர்கள் ஒரு ஞான கைங்கரியம் செய்தார். அதாவது சிவானந்த சுவாமிகள் புரிந்துள்ள ஞானோபதேசம் ஒன்றை கிர்க்கியை விட்ட பின்பு சில நிமிஷங்கள் டாக்டர் விசுவநாதன் அவர்

கள் வீட்டிலே சுவாமிகள இருநது அதற்குப் பிறகு அவசர அவசரமாக திலக மநதிருககுச சென்றார். அஙகே ஒரு பெரிய கூட்டம கூடிறறு. ஸ்ரீ பி. ஜி. கெர் அவர்கள் சுவாமிகளை எதிர் கொணடழைததார பின்பு சுவாமிகளைப் பற்றிப் புகழ்மொழிகள் பேசினா. டாக்டர் விநோத் அவர்களும சுவாமிகளுடைய சரிததிரததைச் சுருக்க மாய்ச சொன்னா. அதன பின் சுவாமிகள் ஓர் உபநியாசம் அளிததார. ஸத்யம அஹிமஸை முதலியவற்றின் அவ சியததைப பற்றியும ஆதமஞான அடைவதற்காகவே நாம் பூமியில வந்திருக்கிறோம் என்பதைப பற்றியும், உலக சாநதி நிலை நிற்க வேண்டுமாயின் நாம் செய்ய வேணடியவை எவையெனபதைப் பறறி வெகு அழகாகப பேசினர். டாகடா வநதனோபசாரம கூறினர். கூட்டம கலைநததும அதிகக கஷடமிலலாமல சுவாமிகள் வெளியே வர முடிநதது.

பினபு ஸாய்தாஸ் மணடலத்துக்கு சுவாமிகள் போனர். அமமண்டலததுத தலைவர் வரவேற்றார். ஸாய் பாபா மநதிரததுக்குப போய அங்கே கீர்த்தனங்கள் செய்து ஒரு பிரசஙகமும் முடிந்து வெளியே வந்தார்.

இரவு 10 மணிக்கு டாக்டா விஸ்வநாதன அவர்கள் வீட்டுக்கு வந்தார். அதற்குப் பிறகு ஸ்டேஷனுக்குப்போக ஏற்பாடுகள் செயயப்பட்டன. போகுமுன் டாக்டர் அவர் கள மனைவியிடம் லிகித ஜபத்தின மேன்மையைப் பற்றிப பேசினா பினபு எலலோரையும பாாத்து “ ஒத்துழைப்பு, விட்டொழிதல், தாழ்மை, நேர்மை என்பவையாவும வேண் டும். இவையிலலாவிட்டால ஒரு காரியமும் நடக்காது.

ஒரு தொழில் செய்ய சாமார்த்தியம் இருந்தால் மாத்திரம் போதாது.'' என்றார்.

## பம்பாய்

அக்டோபர் 26-ம் தேதி காலை 8 மணிக்கு யாத்திரை வண்டி பம்பாய்க்கு வந்துவிட்டது. முன்னமே குறிப்பிட்டிருந்தது மத்தியானம் 1 மணி என்பது. ஆகவே ஐந்து மணி நேரம் முன்னமேயே பம்பாய்க்கு வந்துவிட்டார். இந்த மாற்றத்தை அறிவித்து வரவேற்புக் கமிட்டியாருக்குத் தந்தி அனுப்பப்பட்டிருந்ததால் அவர்கள் ஸ்டேஷனுக்கு வந்திருக்க முடிந்தது. அவர்கள் ஸ்ரீ பி. ஜி. புரோஹித், ஸ்ரீ எச். எம். மேத்தா, அவர் குடும்பம், ஸ்ரீ டாக்டர் கே. கே பாட்டியா என்பவர்களும் வேறு சில நண்பர்களும் பெருத்த கூட்டங்களில்லாததால் சிறிது சௌகரியமாக இருந்தது

கனம் எச். எம். மேத்தாவின் மகன் அஜித் மேத்தா என்பவர் சுவாமிகளை ஸாண்டஹர்ஸ்ட் ரோட்டிலுள்ள லக்ஷ்மிபாக்குக்குக் கூட்டிச் சென்றார். அங்கு அங்கேயே தங்குவதாக நிச்சயமாயிருந்தது. மேத்தா குடும்பத்தினர் சுவாமிகளுக்கு முன்னமேயே தெரிந்தவர்கள். அவர்கள் மீண்டும் சுவாமிகளைப் பார்த்ததால் மிகுந்த மகிழ்ச்சி பெற்றார்கள்.

காலை $9\frac{1}{4}$ மணிக்கு டாக்டர் ஜோஷியிடம் சென்று சுவாமிகள் தம்முடைய தேக நிலைமையைத் தெரிந்துகொண்டார் திரும்பி வந்த நேரத்தில் பழைய நண்பர் ஒருவரைப் பார்த்து அவர் வீட்டில் கீர்த்தனமும் நடத்தினார்.

ஒரு மணிக்குப் பெருத்த கூட்டம் ரெயில்வே ஸ்டேஷனுக்குப் போயிற்று, சுவாமிகள் 8 மணிக்கே வந்துவிட்

டார் என்ற செய்தி தெரிந்து கொண்டு அந்தக் கூட்டம் அப்படியே லக்ஷ்மிபாகுக்கு வந்தது. சுவாமிகள் கீர்த்தனம் ஆரம்பித்தார். ஒரு ஸத்ஸங்கம் ஏற்பட்டது. ஆங்கிலப் பாடல்களும் பிரசங்கமும் முறையே நிகழ்ந்தன பக்தியின் மேன்மையைப் பற்றியும், 'ஸத்வ்யவஹாரம்' அடக்கம் முதலியவற்றைப் பற்றி சுவாமிகள் தெளிவாகப் பேசினார். ஏராளமான புஸ்தகங்கள் கொண்டுவரப்பட்டுப் பலருக்கும் கொடுக்கப்பட்டன. இந்த தானத்தைக் கண்டு ஜனங்கள் ஆச்சரியப்பட்டார்கள்

நாலரை மணிக்கு பத்திரிகை நிருபர்கள் வர ஆரம்பித்தார்கள். உபதேசம் வேண்டும் என்று அவர்கள் கேட்ட பொழுது சுவாமிகள் "நான் எல்லா மதங்களிலும் எல்லா வேதங்களிலும் உள்ளவற்றை வெகு சுருக்கமாகச் சில வார்த்தைகளில் அடக்கியிருக்கிறேன், அவை சூத்ரம் போன்றவை, அவற்றைச் சொல்கிறேன், கேளுங்கள் "உழை, நேசி, கொடு, சுத்தி செய், த்யானம் செய், அனுபூதி பெறு, நன்மை செய், நல்லவனாயிரு, கருணை காட்டு, இரங்கு, 'நான் யார்' என்று சிந்தித்து பார், ஆத்மாவை அறி; சுதந்திரமாக இரு—அவமானம பொறு—பிறர் செய்யும் தீமையை பொறுத்தேற்றுக்கொள, இதுவே உயர்ந்த ஸாதனை, விட்டுக்கொடு, இணங்கு, இடம் கொடு" இவற்றையும் சொல்லிச் சில கீர்த்தனங்களும் பாடல்களும பாடினார்.

இரவு ஏழு மணிக்கு ஸத்ஸங்கம் ஆரம்பித்தது. கீர்த்தனம் பாடும் பெண்மணிகள் ஒரு கூட்டத்தார் வந்தனர். அவர்களுக்கிடையே ஸ்ரீமதி பார்வதி கைலாஸபதி, லலிதா வெங்கட்டராமன், என்னும் பெரிய பாடகி

களும் வந்தார்கள். அவர்கள் வெகு உயர்வான சங்கீத விருந்து அளித்தார்கள். அது முடிந்ததும் சுவாமிகள் கீர்த்தனம் பாடினதுமல்லாமல் "அகடபம்" என்ற பாட்டைப் பாடி நடராஜ நாட்டியமும் நடித்துக் காட்டினர். இரவு 9½மணிக்கு இந்த உத்ஸவம் போன்ற நிகழ்ச்சிகள் முடிவுற்றன

அக்டோபர் 27-ம் தேதி காலை லக்ஷ்மி பாகத்தில சுமார் இரண்டாயிரம் பக்தர்கள் சுவாமிகளை வந்து வணங்கினர். வந்தவர்கள் புஷ்பம், பழங்கள் முதலியன கொண்டு வந்தார்கள் அவற்றை வந்தபொழுது வாங்குவதும் உடனுக்குடன் மற்றவர்களுக்குக் கொடுத்துவிடுவதும் சுவாமிகள் தொழிற்களாயிருந்தன. இந்த காக்ஷி அபூர்வமென்று பலரும் கூறினர். ஏன்? கொடுக்கும் மகாத்மாக்கள் குறையன்றோ ?

இப்படிப் பிரஸாதம் கொடுத்து முடிந்ததும் சுவாமி ஆத்மானந்தர் என்பவரும், ஸத்யானந்தரும் யோகத்தைப் பற்றியும் த்யானத்தைப் பற்றியும் பிரஸங்கம் செய்தார்கள் ஆத்மானந்தர் குஜராத்தியிலும் ஸத்யானந்தர் ஸம்ஸ்கிருதத்திலும் பேசினார்கள். அவற்றிற்குப் பின் சுவாமிகள் கர்மயோகத்தைப் பற்றி ஓர் அபூர்வமான இணையற்ற சொற்பொழிவு பொழிந்தார் கர்மயோகத்தை தன் வாழ்க்கையிலேயே எடுத்துக்காட்டவே அவதரித்து வந்துள்ள நம குருசுவாமிகள் அதைப் பற்றி பேசினால் அது எப்படியிருக்கும் என்று யோசித்துப் பார்த்துக் கொள்ளலாம். முக்கியமாக "நாம் யாருக்குப் பணிவிடை செய்கிறோமோ அவரே தெய்வம் என்ற மனோபாவத்துடன் நாம் உழைக்கவேண்டும்" என்று சுவாமிகள் கூறியது அதைக் கேட்டவர்கள் மனதில் பசு மரத்தாணி போல் பதிந்தது.

அடுத்த சொற்பொழிவு மாதுங்காவிலே தென் இந்திய வித்யாஸங்கத்திலிருந்தது. கட்டடத்தின் வெளிப்புறத்து சுவாமிகள் கார சென்றபொழுதே ஒரு பெருத்த மகிழ்ச்சி ஆரவாரம் உண்டாயிற்று. அச்சங்கத்துத் தலைவர் சுவாமிகளை உள்ளே அழைத்து சென்றார். அப்பள்ளிக்கூடத்து ஸம்ஸ்கிருத பண்டிதர் தாம் சுவாமிகள்பால் இயற்றியிருந்த ஸமஸ்கிருத கவிதையைப் படித்தார் தலைவர் அழகிய வரவேற்பு வார்த்தைகள் சில கூறிய பின்பு சுவாமிகள் எழுந்து ஓம் என்ற தீர்க்கப்பிரணவ த்வனி எழுப்பினார். அவ்வொலி கேட்டதுமே எல்லாருடைய உள்ளமும பூரிக்கத் தொடங்கிற்று. ஒவ்வொருவரும் ஒத்து ஓம் என்று சொல்ல ஆரம்பித்தனர். அதைக் கண்ட சுவாமிகள் புன்னகையுடன் "எல்லோரும் என்னுடன் ஓம் என்று சொல்லுங்கள்" என்றார். அதுகேட்டு எல்லாரும் ஓம் என்று ஆனந்தம் பொங்க உரைத்தார்கள. அப்பொழுது சுவாமிகள் சொன்னார் :—"ஆஹா! பேஷ்! ஆனந்தம் ஆனந்தம் இப்படிப்பட்ட பிள்ளைகளை நான எங்குமே பார்க்கவில்லை, நாம் இப்பொழுது சொல்லும் ஓம் உலகத்தையே துளைத்துச் செல்லும். ட்ரூமன், ஆட்லி, ஸ்டாலின் என்பவர்கள் உளளத்தையும் பிளந்து செல்லும். குழந்தைகளாகிய உங்களுடைய ஓங்கார உச்சரணம் எவ்வளவு வலிமை கொண்டது தெரியுமா? அதன் மகிமையை எடுத்துரைக்க இயலாது".

பின்பு பெரிதான ஒரு பிரசங்கம் ஆரம்பமாயிற்று அதில் வேதாந்தஸாரம், உபநிஷத உண்மைகள் முதலியன இருந்தன. இந்த உபந்யாசம் முடிந்ததுமே சுவாமிகள்

விரைவாக மாதவபாகத்துக்குத் திரும்பினர். அங்கே அவர்களை எதிர்பார்த்துக் கொண்டு ரமணி ஸ்ரீ மனோஹர பாய் ஸேத் காத்திருந்தார். அவர் லக்ஷ்மி நாராயணமந்திர் டிரஸ்டிகளில் ஒருவர். முதலில் மந்திர் ஹாலுக்கும் பின்பு மந்திருக்கும் சுவாமிகளை அவர் அழைத்துச சென்றார். அங்கே அமைக்கப்பட்டிருந்த மூர்த்திகளின் அழகை வர்ணிக்கமுடியாது. மந்திர் சிகரததில தபஸ்விகள், யோகிகள், மகான்கள் முதலியவர்களுடைய உருவங்கள் இருந தன. அவை பண்டைக்காலத்திய தவத்தின் அங்கங்கள் ஒவ்வொன்றையும் விளக்கிக் காட்டின. ஹாலிலோ ஸ்ரீ மனோஹர்பாய் ஸேட்டின் முன்னோர்கள் படங்கள் தொங்க விடப்பட்டிருநதன.

அந்த ஹாலில் மனோஹர், அவருடைய தமையனார் ஆகிய இருவருடைய உருவப் படங்களையும் சுவாமிகள் திறந்து வைத்தார்கள்.

சாயங்காலம் 6 மணிக்கு நடக்க ஏற்பாடாயிருந்த கூட்டத்தைப் பார்ப்பதற்கென்றே மண்டலேசுவரர் மகேசுவரானந்த மகாராஜ் வநதிருநதார். அவர் ஹரித்வாரிலிருப்பவர் அவருக்கு விலிப் பார்லாவில் ஒரு பெரிய ஆசிரமம உண்டு ரிஷிகேச வாசியான, கைலாஸாச்சிரமத்து மண்டலேசுவரர்களும் புரிஜி என்பவரும் வந்திருந்தார். ஆகவே நம்சுவாமிகள் உள்பட இமமூன்று மகா மணடலே அவரவர்களும ஒன்றாய் சேர்நது அங்கிருந்ததே பெரிதான ஒரு விசேஷமாயிருநதது.

ஆறு மணிக்குக் கூட்டம் ஆரம்பித்தது. சிவானநத சுவாமிகளைப் பற்றி முன்னுரை குஜராத்தி பாஷயில் ஸ்ரீ எச. எச். மேத்தாவால் கூறப்பட்டது. ஆங்கிலத்தில்

எழுதப்பட்டிருந்த வரவேற்புப் பத்திரிகையை மேத்தா அவர்கள் மகன் ஹேமலதா மேத்தா எம். ஏ. எல். பி. படித்தார். ஸ்ரீ நட்வர்லாலாஜி குஜராத்திப் பத்திரிகையை வாசித்தார். இவ்விரண்டையும் ஸ்ரீ மஹேச அவரானந்தாஜி நம் சுவாமிகளுக்கு ஸமர்ப்பித்தார்.

சுவாமிகளும் மிகவும சாந்தமாக ஒரு பிரசங்கம் செய்தார். அப்பிரசங்கததின் கம்பீரம் எல்லாவரையும் நிசப்தமாக இருக்கச் செய்தது. அவர் உரைத்த மொழிகள் ஸாக்ஷாத் ஜகதீசுவரன் முகத்திலிருநதே வந்ததாகத் தோற்றமளித்தன. விஷயமோ பகவத்கீதையின் ஸாரம். இப்பேச்சை ஸ்ரீ மோட்வானி என்பவர் ஒலி பரப்பியில் பதித்துள்ளார்.

சுவாமிகளுக்குப் பின் மண்டலேசுவரர் மகேசுவரானந்தர் மேடையிலேறி "இத்தகைய மகானைக் காண பம்பாய் நகர் எவ்வளவோ தபஸ் செய்திருக்கிறது" என்று தொடங்கி, சுவாமிகள் அன்பின் அவதாரமாயிருப்பதையும, அவர் கஙகை கரையில ரிஷிகேசத்தில் நெடுநாளாய்த் தவம் செய்து தெய்வானுபூதி பெற்றிருப்பதைப் பற்றியும், இபபொழுது தெய்வானுக்கிரகத்தால் புறப்பட்டு வெளியே வநது லோகோத்தாரணம் செய்து வருவதைப் பற்றியும் வெகு நன்றாகப் பேசினார். அன்றியும சுவாமிகள் அன்னிய நாடுகளுக்கும் போக வேண்டும் என்றும் சொன்னார்.

கூட்டம முடிநதபின்பு, சுவாமிகள் மேடையிலிருந்து இறங்கினார். எவவளவோ பாடுபட்டும கூட்டத்தை விலகக முடியவில்லை. ஒவ்வொருவருக்கும் சுவாமிகள் பாதபர்சம் கிடைக்கவேண்டும் என்ற அவா உண்டாயிற்று. எவ்வளவோ தொண்டர்கள் அங்கஙகே ஜனக்கூட்டத்தைத்

தடுத்து நின்றார்கள். ஆயினும் ஒரே நெருக்கமும், குழப்பமும் இருந்தது. அத்தருணத்தில எப்படியோ சுவாமிகள் வெளியே வர முடிந்தது, ஒரு விநதை. அங்கே ஏதோ ஒரு மோட்டார் கார் காலியாக இருநதது. அதற்குள்ளே அவர் நுழைந்தார். வேறொரு சிஷ்யரும் புகுந்தார். ஒரு நொடியில் டிரைவர் வண்டியை "ஸ்டார்ட்" செய்துவிட்டார். அது சென்று கொண்டிருந்த பொழுது "இது யாருடைய காரோ?" என்று சுவாமிகள் கேட்டதற்கு "இது தங்கள் கார்தான் என்றான்" "இல்லையே"— "ஆமாம் சுவாமிஜி இப்பொழுது இது தங்களுடையது தான்" என்றான். பிற்பாடு அவனைக் கேட்டுப் பயனில்லை என்று தெரிந்தது. யாருடையதானால் என்ன ? எல்லாருக்கும் சுவாமிகள் சொநதம் ஆகையால் எல்லாருடைய காரும் அவருக்குச் சொந்தம் தானே. அந்தக் காரிலேயே தம்மிருப்பிடம போல் சேர்ந்தார்.

அக்டோபர் 28-ம் தேதி காலை 6 மணிக்கு சுவாமிகள் தம்முடை காரியங்கள் செய்யத் தயாராகிவிட்டார். முதலில் ஸ்ரீ எச். எம். மேத்தா வீட்டிற்குப் போனார். அங்கிருந்த வனித விச்சிராம பெண் பள்ளிக்கூடம் சென்றா. அங்கிருநது ஸங்கீத பெண்கள் பள்ளிக்கூடம் போனார். அவ்விரண்டு இடங்களிலும் அபூர்வமான உபதேசங்கள் கொடுத்தார். பின்பு மலபார் ஹில்லுக்கு சுவாமிகளை அஜித்மேத்தா அழைத்துச் சென்றார்.

திரும்பி வந்தபிற்பாடு மூன்று மகா மண்டலே சுவார்களும மீண்டும் சந்தித்தார்கள். லக்ஷ்மீ பாகத்தில் அவர்களுக்குச சிற்றுண்டி அளிக்கப்பட்டது. அவர்கள் பக்ஷ

ணங்களை தின்னும்பொழுது மேத்தா குடும்பத்தார் கீதை 15-வது அத்தியாயத்தை ஒப்பித்தார்கள். மஹாமந்திர கீர்த்தனம் சொல்லப்பட்டது. அதன் சாந்தி பாடமும் கூறப்பட்டது. இவையெல்லாவற்றிற்கும் மேல் தேவிஸ் தோத்திரங்கள் முதலியனவும உரைக்கப்பட்டன.

மாலை 4 மணிக்கு சுவாமிகள் லக்ஷ்மிபாகத்தை விட்டு வெளியே கிளம்பினர். அவர் சென்றது கமால் கெமிக்கல் வர்க்ஸ் அதிபரான பி. எல். ஸாப்ரு என்பவரைப் பார்ப்ப தற்காகவே. அங்கே சில நிமிஷங்கள் இருவரும் உரை யாடின பின்பு ஸ்வாமிகள் ஸ்ரீ மனு ஸுபேதார் அவர்கள் வீட்டிற்குப் போனார். அந்தப்பிரபு சாப்ரு வீட்டிற்கு வெளியே காருடன் காத்துக் கொண்டிருந்தார். அவரைப் பின்பற்றி வேறு பல கார்களில் பல பெரிய பிரபுக்கள் வந் துகொண்டிருந்தார்கள்.

ஸுபேதார் அவர்கள் காருக்குள் புகுந்ததும் ஸ்வாமி கள் அவருக்கு ஒரு கீதாப் புஸ்தகம் கொடுத்தார். அப பொழுது ஸுபேதார் அவர்கள் "ஸ்வாமிஜி, இதுவரையில் இந்தமாதிரி எத்தனையோ புத்தகங்கள் அனுப்பி அனுக்ர கித்திருக்கிறீர்கள். ஆனால் தங்களை நேரில பார்க்கும் பாக் கியம இப்பொழுதுதான் இடைத்தது என்றார்.

அவர் வீட்டில் நேர்த்தியான ஒரு சிற்றுண்டி விருந்து ஸ்வாமிகளுக்கு அளிக்கப்பட்டது. அப்பால் கீர்த்தனம் வழக்கமபோல் சுவாமிகள் ஆரம்பித்தார். எல்லா, வரும் அதில் கலந்துகொண்டார்கள். பிற்பாடு சுவாமிகள் வெளியேவந்து விட்டார்.

பின் ஒரு பெரிய அரண்மனைபோன்ற கட்டிடத்துக்கு ஸ்வாமிகள் அழைத்துச் செல்லப்பட்டார் அதைச் சுற்றி அடுக்கடுக்காக ஒன்றன் மீதொன்ருகக் கட்டப்பட்டிருந்து வீடுகள் வரிசை வரிசையாக இருநதன. சுவாமிகள கேட்டார் அப்பாதையாகச் சென்றதைக் கவனித்திருநத அந்த இடத்து ஜனங்கள் உள்ளிருந்து வெளியேவந்து அவ்ரவர்கள் திண்ணைகளில் நின்ருர்கள். அவர்களுக்குள் ஒரு பெண்மணி கீழே இறங்கி ஓடிவந்து "ஸ்வாமிஜி! நீங்கள் முன்பு இப்படிக் கீர்த்தனம் செய்வீர்கள். இப்பொழுதும் அப்படியே செய்யவேணும்" என்று சொல்லிப் பாட ஆரம்பித்தார். அப்பொழுது அந்த அம்மை இருகைகளை தலைமீது உயர்த்திவைத்துக் கொண்டே கீர்த்தனம் செய்தார்.

அப்பால் சுவாமிகள் நட்வர்லால் மேத்தா அவர்கள் வீட்டுக்குப் போனர். அவர்தாம் நெடுநாளாக எழுதிவரும் லிகிதஜப நோட்டுபுத்தகத்தை சுவாமிகளிடம் காண்பித்தார். அப்பொழுது சுவமிகள் "நீங்கள் இன்னும் கொஞ்சம் இடம் விட்டெழுதவேண்டும். மசியால் எழுத வேண்டும். பாருங்கள் ஸரஸ்வதி மேத்தா எவ்வளவு அழகாக எழுதுகிருர்."

மாதுங்கா வாசிகள் சுவாமிகளை சங்கரமாத்துக்கும், ஆஸ்திக ஸமாஜத்திற்கும், பஜன ஸமாஜத்திற்கும் அழைத்திருநதார்கள். அதற்காக சுவாமி மாதுங்கா நோக்கி போனர். ஆனல் மாதுங்கா தெருக்கள்தோறும் இரட்டை வரிசையாக சுவாமிகள் வரவைப் பார்த்துக்கொண்டு ஆயிரம் ஆயிரமாக ஜனக் கூட்டங்கள் அமர்ந்திருந்தார்கள். சங்கர மடத்திலாவது பஜனஸமாஜத்திலாவது கார் நிற்க

இடமிருக்கவில்லை. ஓரிடத்திலாவது சுவாமிகள் காரை விட்டிறங்க வழி காணவில்லை. இந்த நிலைமையில் பரமானந்தர் எழுந்து "நீங்கள் வழி விடாவிட்டால் சுவாமிகள் திரும்பிப் போய்விடுவார்" என்று உரக்க கூவினார். உடனே ஒரு வழி உண்டாயிற்று எனினும் நூறு கஜம் தூரத்திலிருந்த மேடைக்குப் போக பத்து நிமிஷங்களாகின. மூன்று நிமிஷங்கள ஜனங்கள் சும்மாயிருந்தார்கள் அவற்குமேல் அவர்களுக்குப் பொறுமை இருக்கவில்லை. ஒருவர்மீதொருவர் மோதி விழுந்து கொண்டு சுவாமிகளைப் பற்றிக்கொள்ள முயன்று முன்வரத் தொடங்கினர். சிலர் தோள்பட்டையை தொடுவதும், சிலர் பாதத்தைப்பற்றி யிழுப்பதுமாக மிகுந்த குழப்பம் ஏற்பட்டுவிட்டது, ஏதோ அபாயம் இல்லாமல் சுவாமிகள் மேடைக்குப் போய் சேர்ந்தார்.

அருமையான ஸங்கீத மழை பெய்தது அது வந்தது ஸ்ரீ பார்வதி கைலாஸபதி அம்மையார் கண்டத்திலிருந்தே அதைக் கேட்டுக் கூட்டத்துக் குழப்பம் சிறிது அடங்கிற்று.

வரவேற்புப் பத்திரிகைகள் ஒன்றன் ஒன்றாக வர ஆரம்பித்தன. அவற்றுள் இரண்டு இங்கு தரப்படுகின்றன.

—o—

நமோ நாராயணாய.

உடம்புஎனும் மனை அகத்துள் உள்ளமே தகளியாமே
மடம்படும் உணர் நெய் அட்டி உயிர் எனும் திரிமயக்கி
இடம்படும் ஞானத்தியால் எரி கொள இருந்துநோக்கில்

கடம்பமர் காளைதாதை கழல் அடி காணலாமே
(அப்பர்)

அற்புதன் காண்க !! அனேகன் காண்க !!
சொற்பதங் கடந்த !! தொல்லோன் காண்க!!
சித்தமும் செல்லாச் !! செட்சியன் காண்க !!
பக்தி வலையிற் !! படுவோன் காண்க.!!
(மாணிக்கவாசகர்)

சத்குரு ஸ்ரீ சுவாமி சிவானந்த சரஸ்வதி அவர்கட்கு 27-10-50 அன்று பம்பாய் விஜயத்தின் போது பம்பாய் தமிழ்ச் சங்கத்தார் வாசித்து அளித்த வரவேற்புப் பத்திரம் !!!

அருளுடைத் திருவே ! ஞானச் சுடரே ! வருக ! தங்கள் வரவு நல் வரவாகுக !!! மக்களின் அறிவும் அன்பும் மழுங்கி ஆன்ம வளர்ச்சி தடைப்பட்டு வாழ்வில் தேக்கம் ஏற்படும் பொழுதெல்லாம் தெய்வத் திருவின் அம்சமாகப் பெரியோர்கள் உருவெடுத்து சமுதாயத்தை உய்விக்க முற்படுவது கண்கூடு, அவ்வாறு வேதவியாசரும, ஆதிசங்கரரும் வள்ளுவரும் நாவுக்கரசரும் விவேகானந்தரும் அவதரித்த வரிசையிலே இந்த தலைமுறையில் தோன்றி இம்மாசல மலையருகே மறைமலையாகத் திகழ்ந்து அறநெறி போதித்து புனித தொண்டாற்றி வரும் தாங்கள் இன்று பம்பாய்க்கு விஜயம் செய்திருப்பது அடியார்கள் செய்த பெரும் பாக்யமாகும்.!

அன்று மௌன குருவாக தக்ஷிணாமூர்த்தியாக உமைந்த பரமன் வசால்லாலும் செயலாலும் எழுத்தாலும் ! சவை செய்ய முற்பட்டதுபோல் பாரதம்செய்த பெரும்

பயனாகத் தாங்கள் எழுந்தருளியுள்ளீர்கள் விரிந்த வேதாந்த கருத்துகளையும் தெய்வ நெறியையும் கடவுள் தத்துவத்தையும் எல்லாவற்றிற்கு மேலாக சமரஸ சன்மார்க்கத்தையும் உபதேசிக்கும் தங்களது ஆங்கில எழுத்துக்கள் நாடினை ஆதமீக வளர்ச்சிக்கு உதவி புரிகின்றன தங்களது தலைமையில் தொடங்கப்பட்ட தெய்வநெறிக் கழகம் இன்று பாரெங்கும் பரிணமித்து ஆற்றும்பணி போற்றற்குரியது.!!!

பின்பு ஸாண்டாக்ரூஸ் பி. ஜி. புரோஹித் வீட்டிலே சுவாமிகளுக்கு வரவேற்பு வெகு ரும்மரமாக நடந்தது. எங்கிருந்தோ சுவாமிகளுடைய "அகடபம" என்னும் பாட்டு கேட்கப்பட்டது. அந்த ஸங்கீதம் எங்கிருந்து வந்ததென்று என்று சுற்றிச் சுற்றிப் பார்த்தபொழுது அது வீட்டின் மேன்மாடத்திலிருந்து வருவதாகத் தெரிய வந்தது. அங்கே லௌட்ஸ்பீக்கர் வைக்கப்பட்டு அதன் வழியாக க்ராமொபோன் ரெக்கார்டு சப்தம் வந்துகொண்டிருந்தது. வீட்டிற்கு வெளியே ஒரு பந்தல் அமைக்கப்பட்டிருந்தது. அதில் சுமார் ஆயிரம் ஜனங்கள் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள்.

வெண்மாடத்துக்கு சுவாமிகள் அழைத்துச் செல்லப்பட்டார். அவர் சில நிமிஷங்கள் களைப்பாற வேண்டும் என்பது நண்பர்கள் விருப்பம். சுவாமிகளும் படுத்துக் கொள்ள ஆரம்பித்தார். ஆனால் அப்பொழுது அண்டையிலிருந்த வீடுகளிலிருந்து சுவாமிகளை எட்டிப் பார்த்தபேர் பலர் இருந்ததாக சுவாமிகள் அறிந்தார். உடனே வெளியே வந்து பால்கனிகளில் நின்றுகொண்டு எல்லாவருக்கும் தரிசனம் கொடுத்தார். இரண்டு கரங்களையும் கூப்பிக்

கொண்டு நின்றார். பின்பு வெண்மாடத்தின் மேலே ஏறி உபந்யாசம் ஆரம்பித்துவிட்டார். கீழே நின்றவர் ஆச்சரியத்துடன் மேலே பார்த்தார்கள். அப்பொழுது சுவாமிகள் "நான் பிரணவம் உச்சாரணம் செய்யப்போகிறேன் என்னுடன் கலந்துகொள்ளுங்கள்" என்றார். எல்லோரும் அப்படியே செய்தார்கள். அதன்பின் மகாமந்திரக் கீர்த்தனம் பின்பு இங்கிலீஷ் பாடங்கள், நாமசங்கீர்த்தனம். உபந்யாசம்—எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாய் வெளிவந்தன. சாதனா முறைகளைப்பற்றியும் எடுத்துச்சொன்னார். சில மாணக்கர் குறிப்புக்கள் எழுதிக்கொண்டிருந்ததைப் பார்த்து சுவாமிகள் "சிலர் குறிப்புக்கள் எழுதுகிறார்கள். அவர்களுக்கும் ஞாபகமும் சொல்கிறேன்" என்று சொல்லித் தம்முபதேசங்களை நிறுத்திக் கொஞ்சம் கொஞ்சமாகச் சொல்லிக்கொடுத்தார். பின்பு "ஸீதாராம் கஹோ!" என்று ஆரம்பித்துப் பெருத்த குதூஹலத்துடன் கீர்த்தனம் நடத்தினார்.

இவை முடிந்தபின் பாதபூஜை நடந்தது. புரோகிதர்கள் வந்து மந்திரங்கள் உச்சரித்தார்கள். ஸ்ரீ புரோகித்தும் அவர் மனைவியாரும் பூஜை செய்தார்கள். அப்பொழுது மண்டலேசுவரர் மஹேச சுவரானந்தரும் அங்கே இருந்தார்.

அதன்பின் பக்த ஜனங்களுக்குத் தம்மிடம் வந்து வழிபட விடைகொடுத்தார். ஒரு ஆங்கில இந்தியப் பெண்மணியும வந்து நமஸ்காரம் செய்தார். மிஸ்ஸஸ் மெஹ்ற, வக்கீல் அவருடைய தாயார் லேடி காஞ்சியாவும் வந்திருந்தார்கள்.

பூஜை முடிந்தது சில நிமிஷங்கள் களைப்பாறினபின்பு அவ்வீட்டை விட்டு விலகி ஸென்ட்ரல் ஸ்டேஷனுக்கு சுவாமிகள் போனார். சரியாக 4 மணிக்கு அஜித்மேத்தா வந்து சுவாமிகளைக் காரில் ஸ்டேஷனுக்குக் கூட்டிக் கொண்டு போனார். போகும் வழியில் $4\frac{1}{4}$ மணிக்கு பாரத வித்யா பவன் கட்டடங்களைப் பார்வையிட்டார். அங்கே யும் ஒரு சிறு உபந்யாசம் நிகழ்த்தினார். அந்த இடத்தில் ஒரு ஸம்ஸ்கிருதக் காலேஜ் அமைக்கப்பட்டிருக்கிறது. அதன் பிரின்ஸ்பால் ஸ்ரீ வெங்கடேச தீக்ஷிதர். சுவாமி கள் அங்கே போனபொழுது பம்பாய் ஸர்வகலாசாலை உப அத்யக்ஷகர் ஜஸ்டிஸ் பகவதி, சுவாமிகளை எதிர்கொண் டழைத்தார்.

பின்பு ரெஜிஸ்திரார் அவர்கள் சுவாமிகள் ஜீவ்ய சரித் திரத்தைபற்றி அழகிய பிரசங்கம் ஒன்று செய்தார். அதன்பின் சுவாமிகள் வேதாந்தத்தின் பெருமையைப் பற்றியும் அதன் தற்கால அவசியத்தைப்பற்றியும் வெகு கம்பீரமான ஒரு சொற்பொழிவு அளித்தார். வந்து கூடி யிருந்தவருள் பலர் பெரிய வித்வான்களாக இருந்ததால் சுவாமிகளுடைய பிரசங்கம் மிகவும் மெச்சப்பட்டது.

முடிவில் வெளியே வந்தபொழுது சுவாமிகளைக் கூட் டங்கள் உபத்ரவம் செய்யாமலிருப்பதற்காக அவரை பால் கனிக்குக் கூட்டிக்கொண்டுபோய் அங்கிருந்தே தரிசனம் அளிக்கச்செய்தார்கள். இத்தரிசனம் முடிந்ததும் முக்கால் வாசிக் கூட்டமும் கலைந்தது.

அதன்பின், புஸ்தகாலயத்தைப் பார்வையிடல், விஸிட் டர்கள் புத்தகத்தில் குறிப்பெழுதல் முதலிய சடங்குகளை யெல்லாம் சீக்கிரமாக முடித்துக்கொண்டு சுவாமிகள்

வெளியேவந்தார். அங்கிருந்து சௌப்பிரத்தியில் மிகப் பெரிய தனவானான ஸ்ரீ கட்டா என்பவர் சுவாமிகளை அழைத்துச் சென்றார். அவருடைய மகள் பெரிய பக்தப் பெண்மணி. யோக சாதனையில் பயின்று வருபவள். அவள் சுவாமிகளை நமஸ்காரம் செய்தபின் வெகு இனிமை யான குரலில் கீர்த்தனம் பாடினாள்.

அந்த வீட்டைவிட்டு கிர்காம் ரோட் வழியாகப் போய் வான்கார்டு ஸ்டூடியோவை வந்தடைந்தார். அந்த ஸ்டூடியோவுக்குச் சொந்தக்காரா ஸ்ரீ ஜயந்திலால் ஸாங்கவி என்பவர். அவர் சுவாமிகளைப் படம் பிடித்தார்.

இதுவும் முடிந்தபின்பு சுவாமிகள் ரெயில்வேஸ்டேஷனுக்குக் கொண்டுபோகப்பட்டார். நல்லவேளையாக வண்டி புறப்பட இரண்டுமணி நேரம் இன்னும் இருந்தது. அங்கே மிஸ்ஸஸ்மெஹ்ரா வகீல் வந்திருந்தார். வேறு எவ்வளவோ பேர்கள் வழியனுப்பவும் வந்திருந்தனர். ஏறக் குறைய ஐந்நூறு ஜனங்கள் இருந்திருக்கலாம். அவர்களிடம் சுவாமிகள் விடைபெற்றுக்கொண்ட பின்பு ரெயில் இரவு $9\frac{1}{2}$ மணிக்குப் பம்பாயை விட்டுப் புறப்பட்டது.

## அமல்ஸாத்

அக்டோபர் 30-ம் தேதி அதிகாலையில் வண்டி அமல்ஸாத் வந்து சேர்ந்தது. ஸ்டேஷனிலே வந்து கூடியிருந்த ஜனங்கள ஆயிரத்துக்குக் குறைவில்லை. வரவேற்புக் கமிட்டி அங்கத்தினர்களும், தொண்டர்களும் அங்கே தயாராகவந்து இரண்டு வரிசையாகக் காத்து நின்றனர் அவர்கள் அநேகமாக கதர் குர்த்தாவையும் காந்திக் குல்லாவையும் அணிந்துகொண்டிருந்தார்கள். ப்ளாட்பாரத்தை அடுத்த ஒரு தகரக் கொட்டகையில் பெண்மணிகள் நின்

றார்கள். பஜனை கோஷ்டி யொன்று யாத்திரை வண்டிக்கு முன் நின்றுகொண்டு ஸங்கீர்த்தனம் ஆரம்பித்தது.

வண்டியை விட்டிறங்கினதும் சுவாமிகள் பிரார்த்தனை மந்திரைச் சார்நத ஸ்ரீ மத்ரசங்கர் பட்டு என்பவர் வரவேற்றார். பின்பு திறந்த கார் ஒன்றில் சுவாமிகளை யிருத்தி, அந்த வண்டிக்கு முன் பாண்டுடன் தொண்டாகள் செல்ல ஊர்வலம் தொடங்கிற்று. சுவாமிகளுக்காக அமைக்கப் பட்டிருந்த பங்களாவுக்குப் போனபொழுது காலை மணி 8-15 அமல்ஸாத்தில இருந்த ரஸ்தாக்களின் அழகை சுவாமிகள் மெச்சினர். அது ஒரு சிறு ஊராக இருநத போதிலும வெகு நேர்த்தியாகவும் சுத்தமாகவும் இருந்தது.

பங்களாவில் சுவாமிகளை அவ்வூரார் வரவேற்றனர். அதன்பின்பு கீர்த்தனம செய்து தம்முடைய பிரசஙகத்தை சுவாமிகள் ஆரமபித்தார். அமல்ஸாத் ஒரு ஸாதவீக ஸ்தலம் என்று சொல்லி அங்கே வசிப்பவர்கள் கீர்த்தனம் செய்வதில் வெகு ஊக்கமா யிருப்பது சுவாமிகளுக்கு மிகுந்த இன்பம் அளித்தது என்றும் கூறினர். பின்பு மகாமநதிர கீர்த்தனம் செய்தார். அதன் மகிமையை எடுத்து விளக்கினர். தன்னடக்கம முக்கியமான சாதனை என்றார். யம ஜபஙகளை மிகுநத சிரத்தையுடன் அப்பியசித்தாலன்றி ஆத்மஞான நெறியில் முன்னேற்றம் பெற முடியாது என்று வற்புறுத்தினர். இப்படிப பல உண்மைகளை எடுத்துச் சொன்னபின்பு சில ஹிநதி கீர்த்தனைகளைப் பாடிக் காட்டினர். ஜபம் செய்யவேண்டும் என்று உபதேசித்தார்.

பிரசங்கத்துப் பின்பு, பாதபூஜை நடைபெற்றது. டாக்டர் மதன்லால் வைதியா எனபவர் புரோஹிதர்கள்

ல்லிவந்த மந்திரப்படிப் பூஜை செய்தார். அது முடிந்
ம் மிருத்யுஞ் ஜெய ஜெபமும் சொல்லப்பட்டது.

சாயங்காலம் அவ்வூர் பள்ளிக்கூடத்தில் ஒரு பெரிய
டம கூடிற்று. சுற்றுவட்டாரங்களிலிருந்து பல்லா
ம் ஜனங்கள சுவாமிகளைப் பார்க்க வநதிருநதார்கள்.
ர்கள் வந்தது ஒரு சிறுயாத்திரை மாதிரியே இருந்தது.
னில் சிலர் 50 மைல் தூரத்திலிருந்து வநதிருந்தார்
அவ்வளவு கூட்டமிருநதும் கூட்டம நடநதபொழுது
விதமான குழப்பமும் இருக்கவில்லை. தொண்டர்
ள உழைப்புமவெகு நன்ருக இருந்தது.

சுவாமிகள் பேச ஆரம்பித்ததன் முன்பு சிதானந்த
ாமிகள் ஆஸனங்கள் காண்பித்தார. அதன்பின் பஜ
ும் கீர்த்தனமும் நிகழ்ந்தன. இவற்றையெல்லாம்
வபவித்துக் கொண்டிருநத கூட்டம் ஸ்வாமிகள் பேச
ந்தபொழுது ஏகாக்கிரசித்துடன் அமைதியாக இருக்க
ந்தது. சுவாமிகளை கூட்டத்திற்கு அறிமுகப்படுத்திப்
சினவர் டாக்டர் மகன்லால் வைத்யா என்பவர். அவர்
ரதியிலே சுவாமிகளைப்பற்றி வெகு விரிவாகவும் சுவா
யமாகவும் பேசினுர். அவர் பேசி முடிந்தபின் ஸ்ரீமதி
னிபாய் என்னும் அம்மையார் பேசினுர். அமாஸாத்
ாமிகள் வநத காரணத்தால் ஒரு புண்ய தீர்த்தமாய்
டதாக அம்மையார் சொனஞர். சுவாமி ஆத்மா
தஜி சிவானந்த சுவாமிகளுடைய ஜீவிய சரிதையைச்
க்கிக் கூறினா. பின்பு சுவாமி வழக்கம்போல் பேசினுர்.
ச்சு முடிந்த பின்பும் கீர்த்தனம் நடந்துகொண்டே
ந்தது. இரவு பத்துமணிக்குத்தான் இந்த உத்ஸவம்
ான்ற நிகழ்ச்சிகளெல்லாம் முடிவுபெற்றன.

இந்தப் பொதுக்கூட்டத்தின்பொழுது சுவாமிகளுக்கு ஒரு வெள்ளிப்பேழையில வரவேற்புப்பத்திரம் தரப் பட்டது.

அக்டோபர் மாதம் 31 ம் தேதி அதிகாலையில் அமல ஸாத்தை விட்டுககிளம்பி யாத்திரைவண்டி 10–மணிக்கு பரோடா வந்து சேர்ந்தது. அங்கே ஸடேஷனுக்கு வர வேற்புக்கமிட்டியார் வந்திருந்தார்கள். அவர்களுக்குள் முக்கியமானவர் ஸ்ரீ கே. பி பாண்டியா என்பவர். சுவாமி களுக்கு மாலையிட்டபின் அன்றைய நிகழ்ச்சிகள் எல்லாம் $3\frac{1}{2}$-மணிக்குமேலேதான் என்று பிரசுரித்து ஜனங்களைப் போகச் செய்து ஸ்டேஷனிலேயே சுவாமிகளுக்குக் களைப் பாறச் சிறிது அவகாசம் அளிக்கப்பட்டது.

$3\frac{1}{2}$–மணிக்கு ஸ்டேஷன்மாஸ்டர் சுவாமிகளைப்பார்க்க அனுமதி கேட்டுக்கொண்டார். அதுமுதல் சுவாமிகளைப் பார்க்க ஒவ்வொருவராக வர ஆரம்பித்தனர். முதலில் ஸ்ரீ பாண்டியா அவர்கள் தமமுடைய சில நண்பர்களுடன் வந்தார். ஸடேஷனில் சுவாமிகளுககென்று கொடுத்திருந்த ஒரு கட்டடத்தில் வநதவர்களை ஏற்க இடம் இருந்தது. பதினைந்து நிமிஷம் இப்படி தரிசனம கொடுத்தபின்பு, சரியாக $3\frac{3}{4}$ மணிக்கு ஸடேஷனை விட்டு வெளியேவந்தார். திறந்த மோட்டார் கார் ஒன்றிலேறிக்கொண்டு சுவாமிகள் ஊர்வலம் போகும்போது காரின் புட்போர்டிலேயே இரு பக்கங்களிலும் பாண்டியா அவர்களும் வேறொருநண்பரும் சிவானநத மகாராஜிகி ஜெய் எனறு சொலலிக்கொண்டே இருநதார்கள். சிறிது நேரம் சென்றதும் ஒரு போலீஸ் உததியோகஸ்தர் ஒரு மோட்டார் சைககிளிலேறிவந்து சுவாமிகளை வணங்கினார். பின்பு அவர் சுவாமிகள் காருக்கு

முன் வழிகாட்டிக்கொண்டே பாதையில் நடந்த ஜனங்களை இருபுறமும் விலகச்செய்துகொண்டே போனார். தெருக்கள் சேரும் சந்துகளில் எல்லாம் போலீஸ் சிப்பாய்கள் நிறுத்தப்பட்டிருந்தனர். வண்டிகள் முதலியன சுவாமிகள் போகும் ரஸ்தாவில் வராதபடி தடை செய்யப்பட்டிருந்தன. ஜில்லா போலீஸ் ஸூப்பரிடெண்டேநேரில் வந்து வழி காண்பித்திருந்தார் என்ற விஷயம் பின்னாலே தெரிய வந்தது.

சுவாமிகள விட்டல் மந்திருக்குக் கொண்டுவிடப் பட்டார. அங்கே அவ்வூர் பஜனை கோஷ்டியார் வெகு ஆனநதமாக பகவன் நாம சங்கீர்த்தனம் செய்துகொண டிருந்தார்கள். சுவாமிகள் வநதபின்பு அந்த பஜனை நின் றது. சுவாமிகளுடைய கீர்த்தனமும் பிரசங்கமும ஆரம்ப மாயின. "ஜய ஜய ராதே கோவிந்த" என்று தொடங்கி ராம் ராம் என்று தொனிகொடுத்து இங்கிலீஷ் கீர்த்தனை களைப் பாடினார். அபூர்வமாக ஒரு உபநியாசம் நிகழ்ந்தது. அதில் எடுத்துக்கொண்ட விஷயம் சாதனமுறை என்பதே.

கோவிலை விட்டு வெளியே வநதுகொண்டிருநத பொழுது சுவாமிகள் ஸ்ரீமதி நட்வர்லாலைப் பார்த்தார். அநத அம்மையார் அமல்ஸாத்திலிருந்து வநதிருந்தார். கையில் மிட்டாய்களையும் எடுத்துவந்திருந்தார். அதை சுவாமிகளுக்குக் கொடுப்பதற்காகவே பரோடாவுக்கு வந்திருந்தார். அவள் பக்திக்காகவே சுவாமிகள் அத்தின் பணடங்களை உட்கொண்டார். பின் நியாயமந்திர ஹாலுக்குச் சென்றபொழுது அங்கே ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடியிருந்ததைப்பார்த்தார். அங்கே போன பொழுது மாலை மணி $6\frac{1}{2}$.

அவ்விடத்துக்குச் சென்றதும் ஸ்ரீமதி ஹன்ஸா மேத்தா சுவாமிகளை வரவேற்றார். அநத அம்மையாா மிகவும் படித்தவர். பேய்க்வார் யூனிவர்ஸிட்டிக்குத் தற போதைய வைஸ்சான்செல்லராக இருப்பவர்.

மகாமநதிர உச்சாரணத்துடன கூட்டம் ஆரம்பித்தது. ஸ்ரீ கோவிநதலால் எச். பட் என்பவர் பேசினார். அவர் பரோடா காலேஜ் ஸமஸ்கிருத போதகாசிரியர். அவருக் குப்பின் தோடர்மால் சிமனலால் சமன் பீஹார் சேட் என்பவர் பேசினார். ஸ்ரீ ஜி எச் பட் சுவாமிகளுடைய பூர்வ சரித்திரத்தைப்பறறிப் பிரசங்கித்தார். இவையெல் லாம் முடிநதபின் சுவாமிகள எழுந்து தம்முடைய சொற் பொழிவை ஆரம்பித்தார். சுவாமிகள் இரண்டொரு வார்த்தைகள் சொல்லுமுன வெளியே இருந்த ஆயிரக் கணக்கான ஜனஙகள் உளளே வரவேண்டும் என்று கூக் குரலிட்டார்கள். உடனே எல்லாககதவுகளும திறக்கப் பட்டன. எங்கெங்கே இடம கிடைத்ததோ அங்கஙகே ஜனங்கள் உட்கார்ந்தார்கள. சிறிது அமைதி ஏற்பட்ட பின்பு உபநியாசம் ஆரமபித்தது. ஆனால் "ஹிந்தியில் பேச வேண்டும்" என்று இரைச்சலிட்டார்கள். அதற்கு சுவாமிகள் "ஓ ஜி! எனக்கு ஹிந்தியில் நன்றாகப் பேச வராது, ஆனால் ஒரு ஹிநதிப் பாட்டுப்பாடுகிறேன்" என்று சொல்லிப் பாடினார். பிறபாடு யாரும் உபத்திரவம் செய்ய வில்லை. உபநியாசம் முடிந்தபின்பு இரண்டு வரவேற்புப் பத்திரிகைகள் அளிக்கபபட்டன. குஜராத்தியிலிருந்ததை சேட் சத்னலால ஹரிபகதிஜி அவாகள படித்தார். இங்கி லீஷில் இருந்ததை டாகடா எஸ். எஸ். பாவே வாசித்தார். ஸ்ரீமதி ஹம்ஸ மேத்தா இவறறை சுவாமிகளிடம் கொடுத்

தார். அதன்மேல் ஒரு பணப்பையும் கொடுத்தார். அந்த அம்மையார் சில மொழிகள் பேசினார்.

பின்பு சுவாமிகள் யாத்திரை வண்டிக்குத் திரும்பி விட்டார்.

நவம்பர் 1ம் தேதி காலை 8 மணிக்கு பாண்டியா அவர்கள் வநதார். அவர் வீட்டுக்கு சுவாமிகளை அழைத்துச சென்றா. அங்கே கீர்த்தனங்களும குருஸ்தோத்திரங்களும் பாடப்பட்டன. பின்பு சுவாமிகள் அநேகம் பேருக்கு மந்திர தீக்ஷை கொடுத்தார் அதன் பின்பு பாதபூஜை நடந்தது. பாண்டியா அவர்கள் வீட்டுக்குச் சில கஜங்கள் தூரத்தில் ஒரு பந்தல் அமைக்கப்பட்டிருநதது. அங்கே ஒரு கிளை திவ்ய ஜீவன சங்கம் அமர்த்தப்பட்டது. அதற்கு சுவாமிகளே திறப்புவிழா நடத்தினார். அத தருணத்தில் ஒரு சிறு உபந்யாசமும் செய்தார். மாகா மந்திரக்கீர்த்தனம சொன்னார். ஜபம் செய்வது மந்திரம் எழுதுவது முதலிய அப்பியாசங்களை ஒவ்வொன்றாக விளக்கிக் காட்டினார். பாண்டிய அவர்கள் தாம் அச்சிட்டிருந்த சுவாமிகளுடைய பொன்மொழிகளை ஜனங்களுக்கு விநியோகம் செய்தார்.

அதன்பின் சுவாமிகள் பரோடாவிலிருந்து அகமதாபாதுக்கு முதல் வகுப்பு வண்டியிலேறிப்போனார். வண்டி புறப்படும வரையில் ஸ்டேஷனில் ராம நாம உச்சாரணம் நடந்தது. வழியில ஆனந்த், நதியாத், முஹம்மதாபாத் என்னும ஸ்டேஷன்களில் ஜனங்கள் சுவாமிகள் வரவை, எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு திருப்தியாக வேண்டி சுவாமிகள் தரிசனமும் கொடுத்துக் கீர்த்தனமும் பாடினார். நதியாதில் ஜனங்கள் ப்ளாட்பாரத்திலே

உட்கார்ந்து ஒரு சத்சங்கம நடத்தினார்கள். அவர்கள் மனம்பூரிக்கும்படி சுவாமிகள சமஷ்டிக் கீர்த்தனையாக 'ஜய ஜய ராதே கோவிந்த்'' என்று ஆரமபித்தார்.

அஹமதாபாத ஸ்டேஷனில் ஸ்ரீ ஹரிதாஸ் அசரத்லால், ஸ்ரீ சாந்திலால் மேத்தா, ஸ்ரீ என். பி. தாக்கோர், ஸ்ரீ சிமான்லால தாக்கோர், மிஸ்ஸஸ் கேவல்ராம் பி செல்லாமணி, ஸ்ரீ சுவாமி மாதவ தீததர்ஜி முதலியவர்கள் சுவாமிகளை எதிர்கொண்டழைக்க வந்தார்கள. "சந்தேச" என்னும் பத்திரிகைக்குப் பத்திராதிபரான ஸ்ரீ என். வி, போடிவாலா எனபவர் பக்ஷவாதத்தால் வருந்திக்கொண்டிருநதபோதிலும் சுவாமிகளைப் பார்க்கவேண்டும் என்ற ஆத்திரத்தால் ஒரு நாற்காலியில் எடுத்துக்கொண்டுவரப் பட்டார். அவர் சுவாமிகள் தம் கையால் தலையைத்தொட்டு ஆசீாவதிக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். அது போலவே சுவாமிகளும் செய்தார்

ஸ்ரீ என். பி. தாக்கோர் என்பவர் சுவாமிகளை மணிக்லால் பங்களாவுக்கு அழைத்துச் சென்றார். அங்கே ஆயிரக் கணக்கான ஜனங்கள் தரிசித்தார்கள். முதலில் மணிக்லால் சில மொழிகள் கூறினார். அப்பால் சுவாமிகள் எழுந்து பேச ஆரம்பித்தார் ஆரம்பததில் மகா மந்திர கீர்த்தனம், அதன்பின் அந்த மந்திரத்தின் மகாத்மியம். பின்பு கீர்த்தனை செய்வதால் பெறககூடிய நன்மைகளும் ஆத்மீக முன்னேற்றமும. இவற்றைப்பற்றி முதலில் சுவாமி வெகு தெளிவாகப் பேசினார் ஆஙகிலத்திலுள்ள "ஒரு சிறிது" என்ற பாடலைப்பாடி அதன் பொருளை எடுததுச் சொன்னார். உபந்யாசம கேட்டால் மாத்திரம் போதாதென்றும், சாதனை செய்யவேண்டும் என்றும் சொன்னார்.

இச்சொற்பொழிவு முடிந்தபின்பு கீதாமந்திருக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அங்கே கீர்த்தனம் செய்தார். பிற்பாடு சிறிது ஆகாரம் ஏற்றுக்கொண்டார். இரவு 11 மணி வரையில் மீண்டும் கீர்த்தனம் செய்தார். அப்பொழுது குமாரி ஹரிபால. ஆர். தாவே வெகு அழகாகப் பகவன் நாமத்தைப்பாடினாள்.

நவம்பர் மாதம் 2-ம்தேதி காலையிலும் கீதாமந்திர் பூஜையை சுவாமிகள் பார்த்தார். பின்பு அங்கிருந்த குகைகளைப் பார்வையிட்டார். அங்கேயிருந்த சுவாமிஜி பெயரும் சிவானந்தரே. நம் சுவாமிகள் அந்த சிவானந்தரைப் பற்றிச் சிலவார்த்தைகள் புகழ்ந்து பேசினார்கள். அவர் பெரிய கர்மயோகி என்று கூறினார்.

காலை 9 மணிக்கு கீதா மந்திரிலேயே ஒரு ஸத்ஸங்கம் நிகழ்ந்தது. குமாரி ஹரிபாலாவும் வேறு சிலரும் பாடினார்கள். ஸ்ரீ சாந்திலால் மேத்தா, ஸ்ரீ ராம லக்ஷ்மணாச்சாரிய பிரபுக்கள் சுவாமிகளுடைய குணாதிசயங்களை மெச்சிப்பேசினார்கள். இவற்றிற்குப்பின் சுவாமிகளும பேசினார்கள். அதன்பின் ஸ்ரீ சாந்திலால் எழுந்திருந்து "நம் சுவாமிகள் வெளிநாடுகளுக்குப் போய் கர்ம, ஞானம், பக்தி என்பவற்றின் பெருமையைக் காட்டிக்கொள்ளவேண்டும்" என்று பேசினார்.

மாலை 3 மணிக்கு பத்திரிகை நிருபர்கள் வந்து சுவாமிகளைக்கண்டார்கள். அவர்களுக்குமுன் சுவாமிகள் ஒரு சிறு உபந்யாசம் செய்தார். சுவாமி சிவானந்தர் சில கேள்விகளுக்கு விடையளித்தார. சுவாமி பேசினது மாயைப்பற்றியிருந்தது. பின்பு சுவாமிகள்போய் ஒரு அச்

சாலயத்தைப் பார்வையிட்டார். எப்படி ஒரு பத்திரிகை வெகு சீக்கிரத்தில் தயார் செய்யப்படுகிறதென்பதை அச்சாட்கள் சுவாமிக்கு விளக்கிககாட்டினார்கள்.

பின்பு சுவாமிகள் 'சபர்மதி' ஆச்சிரமத்தைப் பார்க்கச் சென்றார். அங்கு காநதியடிகள் வசித்த ஒவ்வோரிடத்தையும் பார்வையிட்டார். அதற்குப்பின் சுமார் 300 ஹரிஜனபிள்ளைகள் படித்துவருகின்ற பள்ளிக்கூடத்தைப் போய்ப்பார்த்தார். ஸ்ரீ ப்ரதாப்பாய் என்பவர் வரவேற்றார். அவரை சுவாமி உடனே தெரிந்துகொண்டார். வெகு காலத்துக்குமுன் அவரை ஸ்வாமிகள் கங்கைக்கரையில் பார்த்திருநதார்.

பிள்ளைகளுக்குமுன்சென்று சுவாமிகள் ஒரு சிறுபிரசங்கம் செய்தார். அப்பொழுது மகாத்மா காந்தி அவர்கள் யம நியமங்களை எப்படி அனுஷ்டித்தார், என்பதை விரிவாய்க கூறினார். "நாமும் ஒத்துழையாமையில் இறங்க வேண்டும. சர்க்காருடன் அல்ல. நம்முடைய இந்திரியங்கள் நம்மைத்தீய வழியிலேயே இழுத்துச் செலலும்போது அவற்றுடன் ஒத்துழையாமை முறையைக் கைப்பற்ற வேண்டும்" என்றார். இபபடியே பல அரிய போதனைகளை அளித்தார். கீர்த்தனம் செய்தபொழுது பெண்குழந்தைகள் ஒரு பக்கம், ஆண்குழந்தைகள் ஒரு பக்கம் நிறுத்தி இருககூஷிக் கீர்த்தனை நடததினார். அதன் பின் ராம நாமக் கீர்த்தனம். இவற்றின் முடிவில சுவாமிகளுக்கு அப்பள்ளிக் கூடத்தார் ஒரு காதி ஆடையும் காதி மாலையும் பரிசாகக் கொடுத்தார்கள்.

பின்பு சுவாமிகள் காந்தி அடிகள் வசித்திருந்த குடிசையைச் சென்று பாாத்தார். அங்கிருந்து மீராபென்

இருந்த இடம் பார்த்தபொழுது ஒரு பெண்மணி தமிழில் பேசினாகள். அது வெகு ஆச்சரியமளித்தது. அநத அம்மையார் ஸ்ரீ நநதலால் என்பவா. அவரே சுவாமிகளுக்கு தேயிலைபானம முதலியன கொடுத்தார். எல்லாவற்றிலும் கொஞ்சம் கொஞ்சம் சுவாமிகள் ஏற்றுக்கொணடார். அதற்குப்பின சபர்மதிக்கரையில் சுவாமிகள் சிறிது உலாவினர்.

திரும்பிவந்த பிறகு ஸ்ரீ என். பி. தாக்கோர் சுவாமிகளை ப்ரேமாபாய் ஹாலுக்கு அழைத்தார். அஙகே வநது கூடியிருந்த ஜனங்களின் தொகை மிகவும் அதிகம். குஜராத்தியில் ஒரு வரவேற்புப் பத்திரிகையை ஸ்ரீ அசரத்லால வாசித்தார், சுவாமிகளும் விடையளித்தார்.

பின்பு போதகாசிரியர் தாவார் என்பவர் சுவாமிகள் பிரசங்கத்தை குஜராத்தி பாஷையில் மொழிபெயர்த்துக் கூறினர்.

அன்று கீதாமந்திர் சுவாமி சிவானந்தர்நம் சுவாமிகளுக்குப் பிக்ஷை அளித்தார். பின்பு ஸ்டேஷனுக்குப் போய் பரோடாவுக்கு புறப்பட்டார். முதல் வகுப்பு டிக்கெட் கிடைக்காததால் இரண்டாவது வகுப்பு ஏறிபிரயாணம் செய்தார். வண்டி புறப்படும்வரை ஸ்டேஷனில் ராம நாம் முழங்கிற்று. அர்த்தராத்திரிக்கு பரோடா வந்துசேர்ந்தார். அதிகாலை மீரட் எக்ஸ்பிரஸ் ஏறி டெல்லிக்குப் பிரயாணம் செய்தார. சுவாமிகள் புறப்படும்பொழுது ஸ்ரீ பாண்டியா முதலிய நண்பர்கள் வழியனுப்ப வந்திருந்தார்கள். வண்டி புறப்படும்வரை ஹரே ராம கீர்த்தனம் சொல்லிக் கொண்டேயிருந்தார்கள்.

## டெல்லி

நவம்பர் 4-ம் தேதி காலை 7½ மணிக்கு மீரட் எக்ஸ்பிரஸ் புதுடெல்லி ஸ்டேஷன் வந்து சேர்ந்தது. அங்கு ஏற்பட்ட வரவேற்பு எதிர்பாராத விதத்தில் வெகுப் பிரமாதமாக இருந்தது. மகாமீர் தொண்டர்களும் சாரணச் சிறுவர்களும் வந்திருந்தார்கள். ஒரு பஜனை கோஷ்டியார் ஹரே ராம கீர்த்தனம் செய்துகொண்டிருந்தார்கள். திவ்ய ஜீவன சங்கத்தின சின்னம் பதிக்கப்பட்ட இரண்டு கொடிகள் உயர்த்தப்பட்டிருநதன.

கோசுவாமி கணேச தத்தாஜி பூர்ண கும்பம் கொண்டுவந்து வரவேற்றார். அதன்பின்பு ஸ்ரீ டி. நாராயணசுவாமி செட்டி, ஸ்ரீ சோப்ரா, ஸ்ரீ ஆர். ராமகிருஷ்ண, ஸ்ரீ எஸ். சுவாமிநாதன், ஸ்ரீமதி காந்தாராணி, முதலியோர்கள் வந்து வணங்கினார்கள். புதுடெல்லிக் காங்கிரஸ் கமிட்டி அக்ராசனதிபதியான டாக்டர் ரிஷியும் வந்து வரவேற்றார். மற்ற பிரதானிகள் பிர்லா ட்ரஸ்ட்டு காரியதரிசி, ஸ்ரீ நாராயண தாஸ்ஜி, ஸ்ரீ பி. எல். பாத்ரா, ஸ்ரீ ஏ. வி ராமன், கர்னல் ஏ. என். எஸ். மூர்த்தி, ஸ்ரீ சியாம்தாஸ் கித்வானி, டாக்டர் விசுவநாதய்யர், என்போர்.

பிர்லா மந்திர் காரியதரிசி தம்முடைய காரிலே சுவாமிகளை பிர்லாமந்திருக்கே அழைத்துச் சென்றார், அங்கே எல்லா சௌகரியங்களும் செய்துகொடுக்க கோசுவாமிகள் முதலியோர் முயற்சி எடுத்துக்கொண்டார்கள். அன்று சாயங்கால நேரத்தில் சுவாமிகள் கர்னல் மூர்த்தியுடன் தங்கினார்.

மாலை நேரத்தில் ஸ்ரீ ஜுகல் கிஷோர் பிர்லாஜீ வந்து சுவாமிகளை வணங்கினார். சிறிது நேரம் பேசிவிட்டு ஹிந்து

முஸல்மான் சச்சரவைப் பிர்லா ஆரம்பித்தார் இவ்வித சண்டைகளெல்லாம் ஒழிய சுவாமிகள் ஆசீர்வதிக்க வேண்டும் என்றார். அதற்கு சுவாமிகள் "எல்லாமே தகுந்த சமயத்தில் ஆண்டவன் பார்த்துக்கொள்வார்" என்று விடையளித்தார்.

சிறிது நேரம் கழித்து ஸ்ரீ லக்ஷ்மண சர்மாவும் அவருடைய இரண்டு புத்திரர்கள் கணேச சர்மாவும் P. ராமசந்திர சர்மாவும் சுவாமிகளைப் பார்க்க வந்தார்கள். லக்ஷ்மண சர்மா என்பவர் மிகவும் வயதானவர், இயற்கை வைத்ய ஆலயம் ஒன்று நிறுவியிருப்பவர். மிகுந்த பிரயாசைப் பட்டுப் படிகள் எல்லாம் ஏறி வந்திருந்தார். அவருடனும் மற்றவர்களுடனும் சிறிது நேரம் பேசி அவர்களை அனுப்பினார்.

பின்பு ஒவ்வொருவராக ஜனங்கள் தரிசனத்துக்கு வர ஆரம்பித்தார்கள். கோசுவாமி கணேச தத்தர் அவர்கள் சுவாமிகளை மேடைக்குக்கொண்டுபோனார். அங்கே அவர் பிரார்த்தனையை முடித்தபின் சுவாமிகளைப்பற்றிச் சில மொழிகள் கூறினார். அவர் கூறியதாவது:-

"சாதாரணமாக இந்த சநாதன தர்மப பிரதிநிதி சபையின் வருஷாந்திர விழா டிசம்பர் மாதமே நடைபெறுவதாகும். ஆனால் சுவாமிகள் யாத்திரை புறப்பட்டு வருகிறார் என்று கேள்விப்பட்டதால் இந்தவருஷம் இவ்விழாவை இப்பொழுதே நடத்துகிறோம். அவர் அக்கிராசனத்தின் கீழ் இச்சபை இன்று கூடியிருக்கிறது. நம்பாரத நாட்டிலே முன்போல ஏராளமாக ஐஹிக சம்பத்துக்கள் இல்லாமற் போனாலும் நம்மிடைய இன்னும் நம் சுவாமிகளைப்போன்ற பெரிய மகான்கள் இருக்கிறார்கள். இது பெரியபாக்கியம். இத்தகைய மகானைக்காண்பது பெரிய புண்ணியம்" இப்படி

ஆரம்பித்து சுவாமிகளுடைய குணாதிசயங்களை விஸ்தார மாக எடுத்துக்கூறினார். பிற்பாடு சுவாமிகள் பேச ஆரம்பித் தார். ஆங்கிலத்திலும இடையிடையே ஹிந்தியிலும் பேசினா. உபநிஷத்திலிருநதும், கீதையிலிருநதும், மந திரங்களும, சுலோகஙகளும், பலகூறப்பட்டன. அப்பிர சங்கம் ஒரு பெரிய ஞான விருந்தாகவே யிருந்தது

வேறு சிலரும் பேசினார்கள. உதாரணமாக கனம் என். வி. காட்கில் (மநதிரி) ஸ்ரீ தினேசஜி. என்பவர்கள் பிரசங்கம் செய்தார்கள்.

நவம்பர் 5-ம்தேதி காலையில் ஸ்ரீ ஆத்மா ராம் பேஹ்கீ நடத்திவரும் யோகாசரமத்தை சுவாமிகள் பார்க்கச் சென் றார். அஙகே ஆத்மராம்ஜீ அவர்களும் ஸ்ரீ பண்டித் ப்ரிஜ் லால் நெஹ்ருவும சுவாமிகளை வரவேற்றார்கள். இந்த நெஹ்ரு இந்தியப் பிரதம மந்திரி நெஹ்ரு அவர்களின் மருமகன். அநத ஆச்சிரமத்து மாணாக்கர் சில ஆசனங்கள் காண்பித்தார்கள். பின்பு நெஹ்ரு அவர்கள் சுவாமிகளைப் பற்றி இரண்டொருவார்த்தைகள் சொன்னார். அதற்குப் பிற்பாடு சுவாமிகள் பிரசங்கம் செய்தார். அது முடிந் ததும் ஸ்ரீ ப்ரகாச தேவ்ஜீ எழுந்து "லாஹூரில் ஒரு சமயம் சுவாமிகள் கீர்த்தனம் செய்தார். அப்பொழுது பெருத்த கூட்டம் கூடியிருந்தது. லாஹூர் நகரம் முற் றிலும் வசீகரிக்கப்பட்டது. பல இடங்களிலும் போய் சுவாமிகள் கீர்த்தனம் செய்யவேண்டி வநதது. பலர் அழைத்தார்கள். அப்பொழுது சுவாமிகள் எனக்கு ஒரு புத்தகம் கொடுத்தார். அன்றுமுதல் நான் சுவாமிகளைப் பார்க்க ஆசைப்பட்டுக்கொண்டே இருக்கிறேன். இப் பொழுதுதான் அது பலித்தது" என்று சொன்னார்.

அதன் பிறகு பண்டிட் தாகூர்தாஸ்பார்கா என்பவர் முடிவுரை கூறும்பொழுது சுவாமிகளைப்பற்றி மிகவும் புகழ்ந்து பேசினார்.

கூட்டம் கலைந்தபின்பு நேராக பிர்லா வீடுதிக்கு சுவாமிகள் திரும்பினார். அங்கே சுவாமிகளை வரவேற்க சேத் ஜுகல் கிஷோர் பிர்லா காத்துக்கொண்டிருந்தார். சுவாமிகள வந்ததும் அவரைப் புஷ்பங்களால் அர்ச்சித்து ஆசனத்தில் அமர்த்தினார். பிறகு சிறிது நேரம் பிர்லாஜீ சுவாமிகளிடம் தம்முடைய சந்தேகங்களைக் கேட்டு நிவர்த்தித்துக் கொண்டார். அவற்றின் முக்கியம்சங்கள் பின் வருவன. தெய்வசிந்தையில் எப்பொழுதும் இருப்பதுதான் எல்லா சாதனையிலும் பெரிதானது. 'அந்தச் சிந்தையில் எப்பொழுதும் இருக்க வேண்டுமானால் நீடித்த அப்பியாசம் வேண்டும் நிஷ்காம்ய பக்தியில் கிடைப்பது ஈசுவர ஸாக்ஷாத்காரம். கல்லிலும் ஈசுவரசைதன்யமிருக்கிறது. ஈவரனைப் பிரத்யக்ஷமாய்ப் பார்க்கமுடியும். அப்படிப் பார்த்தவர்களிருக்கிறார்கள். அவதாரங்கள் இந்தியாவில் மாத்திரமல்ல, எல்லா இடங்களிலும் தோன்றினதுண்டு. ஏசுகிருஸ்து ஒரு அம்சாவதாரம். முகம்மதும் அதுபோலவேதான்.

இந்த சம்பாஷணை நடந்தபின்பு சுவாமிகள் கொஞ்சம் கீர்த்தனை நடத்தினார். அதன்பின் காந்தியடிகள் அமரரான இடத்தில் சென்று அங்கும் கீர்த்தனை செய்தார்.

பிர்லா மந்திருக்கு முன் பக்கத்தில் அமைக்கப்பட்டிருந்த பந்தலில் சுவாமிகளுக்கு டெல்லி ஜனங்கள் பாத பூஜைநடத்தினார்கள்.

இவையெல்லாம் முடிவதற்கு முன் மத்தியானம் ஒரு மணியாயிற்று. அதன்பிறகு சுவாமிகள் கர்னல் மூர்த்தி வீட்டுக்குப்போனார். அங்கிருந்து ஸ்ரீ வை. எஸ். சுக்தங்கார் வீட்டிற்குப்போனார். அவர் ஐ. சி. எஸ். வியாபார மந்திரிக்குக் காரியதரிசி. அவரும் அவருடைய மனைவியாரும் சுவாமிகளை வெகு அன்புடன் ஆதரித்தார். சிற்றுண்டிக்கு அழைத்தார். அப்பொழுது சுவாமிகள் "முதல் பஜன், பிற்பாடு போஜன்" என்று சொல்லி பூஜைபறைக்குப்போனார். அங்கே நிலயத்தில் உட்கார்ந்துகொண்டு கீர்த்தனை ஆரம்பித்தார். அதன்பின் வேறு ஓர் அறையில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தபொழுது அவர்களை சௌபால என்ற மந்திரி கலந்துகொண்டார். அவர் சுவாமிகளைப்பார்த்து "உலகத்திலும் நம் தேசத்திலும் சாந்தி ஏற்படவேண்டும். அதற்காக நாட்டில் எல்லா இடங்களிலும் பிரார்த்தனை நடத்த வேண்டும், இது நீங்கள் செய்ய வேண்டியது" என்றார். சுவாமிகளும அது சரி என்றார். ஸ்ரீ சுக்தங்கர் சில நாட்களாக வியாதியால் வருந்திக்கொண்டிருந்தார். அதை சுவாமிகள் அறிந்தபொழுது அவருக்கு மிருத்யுஞ் ஜெய ஜெபம் கற்றுக்கொடுத்து அதை உபதேசம் செய்தார். அங்கிருந்து ஸ்ரீ மோஹன் லால் சாக்செனு வீட்டுக்குப்போனார். அங்கேயும் கீர்த்தனம் செய்தார்.

டெல்லி வரவேற்புக் கமிட்டியார் டெல்லி டௌன் ஹாலில் ஒரு பொதுக்கூட்டத்துக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். அங்கு சென்றபொழுது சுவாமிகள் ஓர் உயர்வான மேடையில் அமர்த்தப்பட்டார். ஜஸ்டிஸ் பதஞ்சலி சாஸ்திரியார் அக்ராசனம் வகித்திருந்தார். பல பெரிய உத்

யோகஸ்தர்கள் இதரப்பிரமுகர்களும் வந்திருந்தார்கள். அதன்பின் குருஸ்தோத்திரம், பின்பு, ஸ்ரீ டி. நாராயண சுவாமி செட்டியின் வரவேற்புப் பிரசங்கம், பிற்பாடு ஸ்ரீ ஆனந்த சுவாமி சரஸ்வதியின் பேச்சு, அவர் சுவாமி களை சுவர்க்காச்சிரமத்தில பார்த்திருநதார். அந்த காலத் தில் நிகழ்நத சம்பவங்களையெல்லாம் பற்றி அவர் பேசினார்.

கோசுவாமி கணேச தத்தாஜி பின்பு பேசினார். "இதென்ன ஆச்சரியம்! இந்த ஒரு மஹான் டெலலியி லிருப்பதால் இநதப் பெரிய நகரத்திலெங்கே பார்த்தாலும் கீர்த்தனையும் பஜனையும் ஆய்விட்டதே" என்று அவர் கூறினார். பிறகு ஸ்ரீ மோஹன்லால் ஸாக்ஸேனா அவர்கள் பேசுமபொழுது "ஆண்டவன் சுவாமிகளுக்கு தீர்க்காயு ளையும கொடுதது நோயற்ற சரீரமும கொடுக்கவேண்டும். இபபெரியாரால் மாத்திரமே பொய் முதலிய தீய குணங் கள் யாவும ஒழிய வேண்டும்" என்றார்.

ஸௌதி அரேபியர் மகாதூதராயிருந்த ஸ்ரீ அப்துல் மஜித்கான் என்பவர் சுவாமிகளுடைய புத்தகங்களின் மேன்மையைப் பற்றியும் வாழ்க்கையின் பரிசுத்தத்தைப் பற்றியும் பேசினார்.

இவற்றிற்கெல்லாம் விடையளிப்பதற்காக சுவாமிகள் ஒரு பிரசங்கம் செய்தார். அது முடிந்ததும் தென்னிந்திய புரோகிதர்கள் சுவாமிகள் முன்வந்து வேதம் ஓதினார்கள்.

அன்று சாயங்காலம் யோக ஆஸனங்கள் காண்பிக்கப் பட்டன. ஒரு யாத்திரை சினிமாவும் காட்டப்பட்டது. இவை முடிநது சுவாமிகள பிர்லா மந்திருக்குப் போன போது இரவு மணி 9-30 ஆயிற்று. அங்கே பிர்லா அவர்

கள் பசு ஸம்ரக்ஷணத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். அதன்பின் சுவாமிகள் கீர்த்தனம் செய்தார். பின்பு "எல்லாக் கஷ்டங்களுக்கும் ஒரே வைத்தியம் எப்பொழுதும் ஈசுவரன் நாமத்தைச் சொல்லிக்கொண்டிருப்பதேயாகும்" என்று கூறினார். அப்பால் இருக்கூஷிக் கீர்த்தனை நடந்தது. அது முடியும்முன் நடுநிசியாய்விட்டது. ஆயினும் அங்கு கூடியிருந்த ஜனங்கள் அந்த இடத்தைவிட்டுப் போகப் பிரியப்படாமல் அங்கேயே இருந்துகொண்டிருந்தார்கள்.

நவம்பர் 6-ம் தேதி காலை $8\frac{1}{2}$ மணிக்கு சுவாமிகள் காரைவிட்டிறங்கி ராஜகாட்டில் மகாத்மாஜியின் ஸமாதி தலத்துக்குப் போனார். யாத்ராமண்டலிக்காரர்கள் அங்கே முன்னமே போயிருந்தார்கள். எல்லாரும் 'ராம்' நாமம் ஜெபித்தார்கள். டெல்லிவாசிகளும் கலந்துகொண்டார்கள். காந்தியின் ஸமாதி ஸ்தலத்தில் சுவாமிகள் ஒரு மாலை சாத்தினார். பிறகு அங்கே உட்கார்ந்து எல்லாவரும் கீர்த்தனம் செய்தார்கள்.

பின் காஷ்மீரித்வாரத்துக்குப்போய் ஸ்ரீ பி. ஆர். மல்ஹோத்ரா அவர்கள் வீட்டில் சுவாமிகள் இறங்கினார். அங்கேயும் கீர்த்தனம் நடத்தப்பட்டது.

மத்யானம் $1\frac{1}{2}$ மணிக்கு சுவாமிகள் கார் கம்மாண்டரின் சீப் ஸ்ரீ கரியப்பா அவர்கள் வீட்டின் முன் நிறுத்தப்பட்டது. அவர் சுவாமிகளை உள்ளே அழைத்துச் சென்றார். அவருடைய சகோதரியும் மகளும் வேறு சில பிரபு நண்பர்களும் சுவாமிகளுடன் விருந்துண்ண அழைக்கப்பட்டிருந்தார்கள். கரியப்பா அவர்கள் வீட்டில் எல்லா இடத்

திலும் வெகு நேர்த்தியாகவும் ஒழுங்காகவும் எதுவும் வைக்கப்பட்டிருந்ததைப்பார்த்து சுவாமிகள் மிகவும் மகிழ்ச்சியுற்றார்.

கரியப்பா அவர்களும் சுவாமிகளும் வெகுப் பிரியமாக பேசிக்கொண்டார்கள். நகைச்சுவை நிறைந்திருந்தது, அவ்விருவர்கள் சம்பாஷணை.

உணவுக்குப்பின் கீர்த்தனம். அதில் இங்கிலீஷ் கீர்த்தனங்களும் மிகுதியாக இருந்தன. 2-45 மணிக்கு அவ்விடம் விட்டு சுவாமிகள் வெளியே வந்தார்.

பின்பு ஏ. ஐ ஆர். ரேடியோ ஸ்டேஷனுக்கு சுவாமிகள் போனபோது அங்கே பெரிய உத்தியோகஸ்தர்கள் அந்த ரேடியோ ஸ்டேஷனுக்கு வெளியே காத்து நின்று கொண்டிருந்தார்கள். சுவாமிகளுடைய ஒரு பேச்சு பதிக்கப்பட்டது.

அதற்குமேல் டிலலி ஸர்வகலாசாலைக்கு சுவாமிகள் அழைத்துச் செல்லப்பட்டார். ரெஜிஸ்திரார் அவர்கள் வரவேற்றார். அங்கேயும் சுவாமிகள் ஒரு சிறந்த சொற்பொழிவு அளித்தார்.

பின்பு பழைய கான்வொகேஷன் ஹாலுக்கு சுவாமிகள் போய் அங்கே வித்யார்த்திக் கூட்டமொன்றுக்கு ஒரு பிரசங்கம் கொடுத்தார். தாம் எழுதியிருந்த ஆங்கிலப் பாடல்களையே அந்தப் பிரசங்கத்தில் அதிகமாகப் பயன்படுத்தினார்.

அப்பால் ஸ்ரீ எ. நந்தா பி. ஏ. என்பவர் வீட்டிற்குப் போனார். அவர் ஒரு திவ்ய ஜீவன ஸங்கத்தின் கிளை ஸ்தாபித்திருந்தார். அதில் குழந்தைகளுக்காக ஒரு கண்

காக்ஷி விழா நடத்த ஏற்பாடு செய்திருந்தார். அதைத் திறக்க சுவாமிகளை அழைத்தார். சுவாமிகளும் அதைத் திறந்து வைத்தார். அங்கே காட்டப்பட்டவை பலவகை யான சித்திரங்கள். அவையாவும் பதினெட்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட குழந்தைகளால் வரையப்பட்டவை. சுவாமிகள் அவற்றைப் புகழ்ந்து பேசி, கீர்த்தனம செய்து, பிள்ளை களையும ஆசிர்வதித்தார்.

பின்பு அதிவேகமாகப்போய் சரியாக 6½ மணிக்கு காலனியியே பெருத்த ஒரு கூட்டத்துக்கு ஒரு வியக்கத் தக்க பிரசங்கம் செய்தார். அங்கேபேசின விஷயம் அந்தரியாமியாக எல்லாருடைய ஹிருதயத்திலும் இருக்கும் பரமாத்மா எப்படி ஒவ்வொருவருக்கு வல்லமையும் வலி மையும் கொடுக்கிறார் என்பதே. இந்தப் பெரிய தத்வத் தைப்பற்றிப் பேசினபொழுது ஆங்காங்கே உபநிஷத்து வசனங்களும் எடுத்துககாட்டுகளாக உபயோகப்படுத்தப் பட்டன. தாமே பல இடங்களிலும் எழுதியிருந்த பாடல் களையும் இவ்விஷய நிருபணத்துக்கு பயன்படுத்தினார்.

பின்பு பெண்மணிகளைப் பார்த்து "நான் இதுவரை யிலும் இங்கிலீஷிலே பேசிக்கொண்டிருந்தேன். இனிமேல் உங்களுக்காக கீர்த்தனை" என்று சொல்லி ஹிந்திக்கீர்த் தனைகளை ஆரம்பித்துவிட்டார். இப்படியே அந்த இடத்தில் எல்லாவற்றையும் மெய்மறக்கச் செய்து அந்த இடத்தையே தேவலோகமாக மாற்றிவிட்டார்.

பின்பு ஜெனரல் சர்மா அவர்கள் வீட்டுக்குபோகப் புறப்பட்டார எவ்வளவோ களைப்பாயிருந்தபோதிலும் தன் தேக நிலைமையைப்பற்றி ஒரு சிந்தனையுமே சுவாமி களுக்கிருக்கவில்லை. சர்மா அவர்கள் வீட்டுக்குப் போகு

முன் ஸ்ரீ எஸ். எ. ராவாச்சாரியார் வீட்டுக்குப்போய் அவரும அவர் மனைவியும் செய்த பாதபூஜையையும் பெற்றுக்கொண்டு அங்கே கீர்த்தனங்களும் பாடினார்கள்.

பின்புதான் சர்மா வீட்டுக்குப்போனது. சர்மா அவர்கள் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார். அவருடையமகள் சாப்பாடு தயாரித்திருந்தார். முதலில் சுவாமிகள் பூஜை அறைக்குள்ளே போனார். அப்பால் கீர்த்தனமே. இப்படி அரைமணிநேரம சென்றபின்பே உணவுக்குச் சென்றது. சாப்பாடு நடந்துகொண்டிருக்கும் பொழுதே பிர்லா மந்திரிலிருந்து டாக்டர் வைத்யநாதன் அவர்களுடைய டெலிபோன் வந்தது. “இரண்டு மணிநேரமாக ஜனங்கள் இங்கே தர்சனத்துக்குக் காத்துக்கொண்டிருக்கிறாகள்” என்று உடனே சுவாமிகள் கிளம்பிவிட்டார.

அங்கே கீாததனம் நடந்துகொண்டிருந்தது. அதில் சுவாமிகளும் கலந்துகொண்டார். அதன் பிறகு பிரசங்கம ஆரம்பித்தார். நலலொழுக்கம மிகவும அவசியமென்றும அதுவே எதற்கும் அடிப்படை என்றும், எடுத்துக்கூறின பின்பு, த்யானத்தின் தத்துவம், ரகசியம, முறைகள, அனுபவம் என்பவற்றை விரிவாய்ப் பேசினார். பின்பு சில தமிழ்ப்பாடலகளைப பாடினார். இந்தப் பிரசங்கம் முடிந்ததும். சநாதன தர்ம மண்டலத்துக்கு அழைத்துச செல்லப்பட்டார். அஙகே மறுபடியும் பேசினார். இது முடியும்பொழுது இரவு 12 மணியாய் விட்டது.

நவம்பர் 7-ம் தேதி பிர்லா மந்திர் கீதா ஹாலிலே வேறு பலருடன் கலந்துகொண்டு சுவாமிகள் மஹாமநதிரக் கீாததனம செயதார். அதன்பின பல பாடல்களைப் பாடி

ஞா. காணுகவே ஒரு பிரசஙகம ஆரமபமாயிற்று ஒருவரையொருவர் குற்றம் கூறிக்கொள்ளும் வழக்கத்தை அறவே ஒழிக்கவேண்டும் என்று தொடஙகி சாதனையின் இயல்பைப் பற்றிப்பேசப புகுந்துவிட்டார். இப்படியே பலவிஷயஙகளையும் பற்றிப்பேசி, இடையிலே ராமநாமம செய்ய ஆரம்பித்தார். படித்தவர்களும் வேதாந்திகளும் கீர்த்தனத்தை மதிப்பதில்லை. அது தவறு, அதன் மகிமை அலாதி. அதை அறிய வேண்டும். வாய் வேதாந்தம் பயன்படாது" என்றார். பின்பு நித்யப்பழக்கத்தில் வேதாந்தத்தைக்கொண்டு வருவது எவ்வளவு கஷ்டமான தென்பதைப்பற்றிக் கூறினார்.

பின்பு ஸ்ரீ எஸ். டி. ஷராப் வீட்டிலே சில நிமிஷஙகள கழித்தார். அதற்குமேல், ஸ்ரீ திருமல்ராவ் வீட்டில் சிறிதுநேரம தங்கினார். பின்பு அத்வானி அவர்களுடைய ரேடியோ ஷாப்பைப் பார்வையிட்டு அங்கே கீர்த்தனமும் செய்தார். மாலை $3\frac{1}{4}$ மணிக்கு டாக்டர் எம். ஸி. தாவார் வீட்டிற்குப்போய் அவா சேகரித்திருந்த திவ்ய ஜீவன சங்கத்து புத்தகாலயத்தின் திறப்பு விழாவை நடத்தினார். அப்பொழுதும் ஒரு உபந்யாசம் நடைபெற்றது. அப்பால் லஜ்ஜீ மண்டியில் அநாதைகள் சாலனிகருப்போய் அவர் களுக்குப் பிரசாதம விநியோகம் செய்தார்.

மாலை $5\frac{3}{4}$ மணிக்கு ஒய். எம். ஸி. ஏ. மெம்பர்களுக் காக ஒருபிரசங்கம செய்ய மாஸ்ஸி ஹாலுக்கு வந்தார். ஸ்ரீ திருமல்ராவ் அக்கிராசனம் வகித்தார். திருமல்ராவ் அவர்கள் முன்னுரை கொடுத்தார். அதில் சுவாமிகளு டைய பல அபூர்வ குணங்களை எடுத்துககூறினார். அவ

ருடைய சபை, சாதுசங்கம், படிப்பு, ஆட்டபாட்டம் முதலியன கூறப்பட்டன. பின் வழக்கம்போல் சுவாமிகள் உபந்யாசம் செய்தார்.

அங்கிருந்து ரெயில்வே ஸ்டேஷனுக்குப் போனார். அங்கே பலர் கூடியிருந்தார்கள். யாத்ரா மண்டலி வண்டி ஸ்டேஷனை விட்டுப் புறப்படும்வரையில் கீர்த்தனமும் நாமஜபமும் நிகழ்ந்தன.

நவம்பர் 7-ந் தேதி சுவாமிகள் ரிஷிகேசம் வந்தார். அங்கே தாயைவிட்டு விலகி ஏங்கி நின்ற கன்றுகள்போல ஆவலுடன் சுவாமிகள் வரவைப்பற்றியே எப்பொழுதும் தியானம் செய்துகொண்டிருந்த ஆனந்த குடீர சிஷ்யர்கள் “பாண்டு,” பாஜா, அலங்கார மோட்டார்கார்கள் எல்லாம் தயாரித்துக்கொண்டு ரிஷிகேச ஸ்டேஷனுக்குச் சென்றிருந்தார்கள். யாத்ரா வண்டி வந்ததும் சுவாமிகளைப் பூர்ண கும்பத்துடன் ப்ளாட்பாரத்துக்கு அழைத்து வந்தார்கள். அங்கே இரண்டு வரவேற்புப்பத்திரங்கள் படித்து சுவாமிகள் கையில் கொடுக்கப்பட்டன. ஒன்று ஆனந்த குடீரத்தாலும், மற்றொன்று ரிஷிகேசவாசிகளாலும், எல்லாவரையும் சுவாமிகள் ஆசீர்வதித்தார். பின்பு அழகாக ஜோடிக்கப்பட்டிருந்த ஒரு மோட்டார்காரில் சுவாமிகளும் யாத்திரைமண்டலத்தாரும் ஊர்வலம் வந்தார்கள். வழியில் எவ்வளவோ இடங்களில் ஊர்வலம் நிறுத்தப்பட்டது. அங்கங்கே பலர் சுவாமிகள் காலில் விழுந்து நமஸ்காரம் செய்தார்கள். குஷ்டரோகிகளுக்கு வழக்கப்போலப் பணம் அள்ளிக்கொடுக்கப்பட்டது.

ஆசிரமத்துக்கு வரும் வழியில் அலங்கார வாசல்கள் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றின் வழியே போய

மேலாக விசுவநாத மந்திரில் ஸ்வாமிகள் ஸ்வாமி தரிசனம் செய்தார். அப்பொழுது ஆசிரமவாசிகள் ஸ்வாமிகளுக்கு ஸ்வாமி சதானந்த ஸரஸ்வதி இயற்றியிருந்த அஷ்டோத்தர சதநாமாவளியால் பாதபூஜை நடத்தப்பட்டது. அது முடிந்ததும் ஸ்வாமிகள் கீழே இறங்கி வந்தார். தத்தாஜி என்பவர் ஸ்வாமிகளை அழைத்துச்சென்று தாம் வைத்திருந்த சிற்றுண்டிக் கடையை அனுக்கிரகம் செய்து திறந்து வைக்கக்கேட்டுக்கொண்டார். அதையும் முடித்த பின்பு ஸ்வாமிகள் தம்முடைய குடீருக்குப்போய் ஓய்வெடுத்துக்கொண்டார்.

முற்றும்

— c —

சுவாமி சிவானந்த சரஸ்வதி அவர்கள் திருச்சி, கலகுழி பந்தலில் 8—10—50 மாலை மணி 7—30க்கு விஜயம் செய்தபோது—

சௌ. லக்ஷ்மி—ஸரோஜா—வரவேற்புப் பாடல்களை தோத்திரங்கள் அளித்தது.

## ஸ்ரீ சிவானந்த ஸ்தோத்திரப் பாடல்கள்

சுந்தரானந்த சோபிதாகுரு சுவாமியே சயமே நம:
அந்தமாதியில்லாததூயறி வானகின்மயமே நம:
தந்தைதாய்குரு தைவமேசர்வ சாக்ஷிதன்மயமே நம.
பந்துவாகி உகந்தவா நம: பிர்மமே பரபிர்மமே

அச்சுதாத்விதவஸ்துவே நம: அற்புதப்பொருளே நம
உசிதப்பர வஸ்துவே நம உண்மைமெய்ப்பொருளே நம
சச்சிதானந்த வஸ்துவே நம: சாந்தமாம் பொருளே நம
பிச்சர்நெஞ்சுறு வஸ்துவே நம: பிரமமே பர பிர்மமே

முக்தமே பரிசுத்தமே நம: மோனவாழ்வே நமோ நம
புத்தமே பிரசுத்தமே நம போதவாழ்வே நமோ நம
அர்த்தமே மறையர்த்தமே நம வாதிவாழ்வே நமோநம
பெத்தநீக்கிடும் சத்தமே நம பிர்மமே பர பிர்மமே

அன்னைதந்தையும் இல்லையே உறவாளரும எனக்கில்லையே
சொன்ன தானியம் இல்லையே ஒரு தோழரும எனக்கில்லையே
பின்னை ஓராதுணை யில்லையே பிறகு உனனருள் வரவில்லையே
பின்னையார் உள்ளார என்னைக கார்ப்பவா பிர்மமே பரபிர்மமே

அன்னை நீயலோ தந்தைநீயலோ அன்பும் இன்பமும
நீயலோ
சொன்ன நீயலோ அன்னை நீயலோ ஸ்தூல மூலமும
நீயலோ
என்னையாள்பவா நீயலே இடாதன்னை காப்பவா நீயலோ
பின்னையும் குரு நீயலோ பரப்ருமமே பரப்ருமமே.

ராகம் நாதநாமக்கிரியை

ஸத்துசித்தானந்த சமரசம் பொருந்திய சற்குணரே குருநாதா
நித்ய நிரஞ்சன நிர்மலனே எந்தன் நிர்க்குணரே குருநாதா
அடிமுடி நடுவுமற்ற ஆனந்த நிர்மலமான ஆரணனே குருநாதா
அடிமலர்தனில் சேர்த்து அல்லால் துலைத்துமே இப்போ ஆதரிப்பாய குருநாதா
பஞ்சகோசகுகையில் அகப்பட்டு பரதவிக்கிறேன் குருநாதா
தஞ்சமென்றே உன் தன் தாளடியில் பணிந்தேனை தயவு வைத்தாள குருநாதா
காமக்ரோதக் களவா கூட்டத்தில் கட்டுப்பட்டேன் குருநாதா
தாமதமின்னியில் வந்தென்னை ஆதரிப்பாய் சத்தியனே குருநாதா
பாடும் வகையறியேன பக்திசெய்தும் அறியேன் பாபி என செய்வேன் குருநாதா
தேடி துதிப்போமென்றால் தேகம் சொந்தமில்லையே சிறியேன் என்செய்வேன் குருநாதா.
பாரதத இடமெல்லாம மூர்த்திவடிவாய் நின்று கிலேசப படுத்தலாமோ குருநாதா
ஆர்த்திதனை தீர்த்து காத்திட வேணுமிப்போ கருணை கடலே குருநாதா
அல்லும் பகலும் உன் சொல்லை நினைந்துள்ளம அனலில் மெழுகாச்சே குருநாதா
சொல்லொண்ணாதுபால சோகக்கடலில் ஆழ்ந்தேனை துரைசுடன் வந்தாளும் குருநாதா
அதவைத வெளிதனில் அன்பருடன் உலாவும் ஆரணனே குருநாதா
ஸ்ரீ சிவானந்தா என்னுன் பாதத்தில பணிந்தேன் பாது காத்திடு குருநாதா

## காவடி சிந்துமெட்டு

ஸத்குருநாதனே உந்தன் தாளடி தனைப்பணிய
சக்தியற்ற பாவியானேன் ஐயனே
என் ஸஞ்சலம் யாரிடம் சொல்வேனா துய்யனே.
ஜோதி ஐந்துட தான் விளக்கி ஜோதியாக நின்றுட
உன்னை கண்டிட கண் அற்றேன் ஐயனே
என் கவலையை யாரிடம சொல்வேன துய்யனே.
மானிட உருவெடுத்து மானிலத்திலே திரிந்து
மயங்கி மிகப்ரமித்தேன் ஐயனே
இப்போ மனக்கவலை தீர்த்திடுவாய் துய்யனே

சந்ததமும் உந்தனை என் சிந்தையில் நினைந்து நகி
சங்கடம் மிகுதியானேன் ஐயனே
என் சஞ்சலம் யாரிடம் சொல்வென் துய்யனே.
சங்கைதனை வேறறுத்து தத்வநிலையுரைத்து
சந்தேக விபரீதம் தீர் ஐயனே
உந்தன் தாளடியில் சேருமேனா துய்யனே.
உந்தனை அல்லாமல்வேறு உற்றவா ஒருவருமில்லை
உண்மையாக சொல்லிவிட்டேன் ஐயனே
என்னை உற்று இப்போ பாரும் என துய்யனே
உந்தனுட சொல்படிக்கி பிரணவ மந்திரதை சொன
னேன் எனதய்யனே என் சோகம்தனை தீர்த்திடுவாய்
இப்போ சொந்தமாய் உன்பாதம்தனில் சேர்த்திடுவாய்
என் சிவானந்த ஐயனே.

—o—

ஆனந்த ஆனந்த ஆனந்தபாதம் அற்புதமான
சிவானந்தபாதம ப்ரும்மானந்தபர மானந்தமஹா
ஆனந்த பாதம் சிவானந்தபாதம் (ஆனந்த)

மூவர்கள்தேட காணாதபாதம் முற்றும் துறந்தவர்
அறியாதபாதம் சுத்த ஜோதிமய ஆனந்தபாதம்
சிஷ்யர்க்கு ஆர்த்தி தணிக்கும் அந்தபாதம் (ஆனந்த)
சக்தி குண்டலி சமேதானந்தபாதம் சகல சித்திபரி
பூர்ணானந்தபாதம் சுத்த தத்வமசி போதானந்தபாதம்
சகலர்க்கும் முக்தி அளிக்குமந்த பாதம் (ஆனந்)தம்.
ஆனந்த ஆனந்தபாதம் அற்புதானந்த சிவானந்த
பாதம்.

சுதய சாந்தகன ஜோதி நமோ நமோ
ஸகஜநிஷ்டானுபூதா நமோ நமோ
ஸச்சிதானந்த ஸொரூபா நமோ நமோ
வாரும் ஹிமாசல தவராஜா.

நித்யமங்கள ப்ரஸன்ன நமோ நமோ
நிர்குணத்ரிபுர ஸூன்யா நமோ நமோ
நிர்விகல்பஸுக போகா நமோ நமோ
வாரும் ஹ்ருதயேசா.

சக்திகுண்டலி சமேதா நமோ நமோ
பரிபூர்ண நமோ நமோ
சுத்த தத்வமஸி போதா நமோ நமோ
வாரும் ரிஷிகேசா.

பக்த சங்கபரி பாலா நமோ நமோ
பரம ஹம்ஸகுரு நாதா நமோ நமோ
பாஹி பாஹி பரமாத்மா நமோ நமோ
வாரும் சிவானந்த பகவானே.

—o—

வந்தார் சிவானந்தர் பேதையாள குடிசைக்கு தந்தார் ஆனந்தபாத திவ்ய தரிசனத்தை ப்ரும்மானந்தருடைய பாலாள் வீடெங்கே என்று பரம கிருபையுடனே பகவான் எழுந்துவந்தார்.

வந்தார் மகானுபாவா என் வறுமையகற்றிட தந்தார் ஆனந்தபாத திவ்ய தரிசனத்தை மூவர் தேட காணாத புதல்வனுடைய பாதத்தில் சுத்த தத்வமஸி போதானந்த பாதத்தில் பாதபூஜை செய்யாத பெரும் பாவியாய் நின்றேன். பிரதக்ஷணங்கள் செய்தேனே, பாவத்தை போக்கிடாமல் சுத்த ஜோதி ரூபர்க்கு கர்பூர ஹாரத்தி எடுக்காமல் பண்ணின பக்ஷணத்தை பகவானுக்களிக்காமல புசியும் என்று சொல்லாமல் பெரும் ஜடமாய் நின்றேன். என்னைப்போல் பாவியர்கள் இச்சகம் தனில் உண்டோ என் பாதகங்கள் தீர என் குருநாதர் கிருபைவேணும் (வந்தார் மஹானுபாவர் என்வறுமையகற்றிட தந்தார் ஆனந்தபாத திவ்ய தரிசனத்தை.)

இன்னும அவர் அன்பை என்னாவு சொல்லபோதுமோ பேதையானுக்கிரஹகி பூர்ண கிருபையுடனே சாமவேதப் பொருளை அமிர்தமாரியைப்போல் பொழிந்தார். கேட்டு ஜடமாய் நின்றேன். அவர் பாதம துதிக்காமல் பார்த்து ஜடமாய் நின்றேன். பாத காணிக்கை வைக்காமல் என் போல் பாவியர்கள் இவ்வுலகத்திலுண்டோ என்பாதகம தீர என்குரு நாதர் கிருபை வேணும் (வந்தார் மஹானுபாவர்.)

இன்னும அவர் அன்பை சொல்ல என் புத்தி எட்டவில்லை. ஈசனுடைய அன்பை என்னவென்று சொல்வேன் அன்றலர்ந்தவெண் தாமரைபோல அவர் முகமலர்ந்திட

வரயா ரிஷிகேசமெனும் வெகு வாஞ்சையுடன் அழைத்தார். பூர்ண சந்திரோதயம் போன்ற திருமுகத்தை பார்த்து பதில் சொல்லாத பெருஞ் சடமாகி நின்றேன். (வந்தார் மஹானுபாவர்)

பக்கத்தில் நின்ற பயமானந்தா அப்பொழுது போய் வரோமென்று மஹாகிருபையுடனே உரைத்தார். அப்பொழுதும் காணிக்கையை அறவே மறந்து நின்றேன். பகவான் செல்லும்பொழுது கூட 2 அடி செல்லாமல் என்னைப்போல் பாவியர்கள் இவ்வுலகத்தில் உண்டோ என பாதகங்கள் தீர என் குருநாதர் கிருபை வேணும். (வந்தார் சிவானந்தா பேதையாள் குடிசைக்கு கந்தார ஆனந்தமான திவ்ய தரிசனத்தை.)

## ஊஞ்சல் லாலிமெட்டு

சித்தமென்னும ஊஞ்சலிலே சின்மயனார் ஆட
சிவானந்தர் ஆட, சுத்தஜோதிர்மய ஆனந்தா ஆட
சிவானந்தா ஆட காணீர் ஊஞ்சல்

வெட்டவெளி மண்டபத்தில் வேதாந்த ஊஞ்சலிலே
திட்டமுடன் தத்வ சிவானந்தர் ஆட
ஆனந்தர் ஆட காணீர ஊஞ்சல்.

புருஷோத்தம நாலும் புகழ்பெற்ற சங்கிலிகளாக
பொருந்தவே போதமய ஊஞ்சலிலே பூட்டி
அஷ்டாங்க போகங்களும் ஊஞ்சல்,

பலகையாய அஷ்டமா சித்துக்களும
ஊஞ்சல் சட்டமாகி சிவானந்தர் ஆட
காணீர் ஊஞ்சல்.

## தாராட்டு

திருமால் அயனை ரசனை போற்றும்
தேஜோஸ்மயமானந்த சிவா
ஆனந்த ஸத்குருவே
பரப்ருஹ்மமே தாலேலோ

சித்தர் பக்தர் நற்றவரும் ஜீவன்முக்தர் பணிப்ருஹ்மம்
அறிஞர் வசிஷ்டர்களுள் அகண்டானந்த பரப்ருஹ்மம்
அரியஜனகர் சுகமுனிவர்க்கு அன்போடறைந்த ப்ருஹ்மம்
அருவாய் உருவாய் அருவுருவாய் ஐம்பூதமாம் பரப்ருஹ்மம்.

அருளாய் பொருளாய் அனுபவமாய் யதார்த்தஞான ப்ருஹ்மம்
குருவாம் ப்ருஹ்மம் குணப்ருஹ்மம் குணமும் கடந்த பரப்ருஹ்மம்
குழியில் பிரமன் தன்னைத்தொழுது கொடுபதத்துக்கு விடை கொடுப்பாய்
சுத்தஜோதிமயானந்த சிவானந்தா தாலேலோ

—o—

## உதயராகம்

ஜகபதி சுத்த சுயஞ்சோதி எழுந்திரும் ஜய ஜய
தேவ பரஞ்சோதி எழுந்திரும் சிவானந்த
சாம்ப சதாசிவா எழுந்திரும் சின்மயசக்தி
மகேஸ்வரா எழுந்திரும் எழுந்திரும் எழுந்திரும்.

சத்து சித்தானந்த ரூபரே எழுந்திரும்
சிவானந்த மூர்த்தியே எழுந்திரும்
சின்மயரூபரே ஸ்ரீ சிவானந்தரே ஹிமாசலவாசரே
எழுந்திரும் எழுந்திரும் எழுந்திரும். [எழுந்திரும்

அருவே உருவாகி அவனிதனில் வந்து அல்லல்
தீர்த்தாய் எழுந்திரும்
ஸமஷ்டி வியஷ்டி போதங்களை மாய்த்து சந்தேகம
துலைத்தவா எழுந்திரும
சின்முத்திரை காட்டி சிஷ்யர் ஆர்த்தி தணித்த
சிவானந்த மூர்த்தியே எழுந்திரும்

சின்மயானந்த சிவானந்த மூர்த்தியே
அத்வைதானந்தரே எழுந்திரும்
ஓங்கார ரூபரே எழுந்திரும்
எழுந்திரும், எழுந்திரும், எழுந்திரும்

## ஸ்துதி

பூவலம் வந்தும் காணு புண்ணியம செய்தும் காணு
நாவினல் துதித்தும் காணு நற்கிரியை இன்னும காணு
ஆவியை மறந்தும் காணு அஷ்டசித்தியினும காணு
மூவரும் காணு மோன சிவானந்தமுதல்வனை வணங்கு
[வாய் மனமே.

குகையினில் இருந்தும காணு கோவிலுட் புகுநதும் காணு
பகப்பல செய்தும் காணு வாழ்வினை துறநதும காணு
அகமுகமுறுமானந்த அறிவினுற் கண்டும் காணு
பகவானை அகண்டானந்த சிவானந்த பரமனை வணங்குவாய்
[மனமே.

## நமஸ்காரம்

ஓங்கார ஸொரூபமே ஓங்கும் சிவானந்தமே
ஒப்புமை யற்றரே நமஸ்காரம்
பாங்காய் பாரில் உதித்து பக்தர் ஆர்த்திதணித்து
ஆங்காரம மாற்றுவரே நமஸ்காரம்.

அகண்ட சச்சிதானந்த அப்ரமேயஸ்வரூபா
ஸ்வப்ரகாசா நமஸ்காரம்.

மந்தகாச முகார விந்தமாக ஜொலிக்கும்
சிந்தைக்கிசைந்தவா நமஸ்காரம்

ஸ்ரீ சிவானந்தராக பரமகுருவாகவந்த
பரிபூர்ண நமஸ்காரம்.

ஜகபதி சுத்த சுயஞ்சோதி
ஜய ஜய தேவ பரஞ்சோதி
சிவானந்த சாம்பசதாசிவ ஓம்
சின்மய சக்தி மகேஸ்வர ஓம்

## மங்களம்

ஸ்ரீ ராமச் சந்திரனுக்கு ஜயமங்களம்
ஸ்ரீ சிவானந்தருக்கு சுப மங்களம்

ஹிமாசல வாசியர்க்கு எங்கள் குரு நாதருக்கு
பக்தர்கள் கொண்டாடும் பரமசிவானந்தருக்கு
பக்தர்கள் ஸ்துதித்திடும் பரமகருணாகரர்க்கு (ஸ்ரீ ராம)

ஸத்குரு சிவானந்தர்க்கு ஜயமங்களம் தினம்
ஸத்வகுண போதருக்கு ஸுப மங்களம்.

ஆதிமத்ய அந்தமற்ற அற்புத ஸ்வரூபருக்கு
அன்பர் கருள்பொழியும் அத்வைத நாதருக்கு (ஸத்குரு)

அண்டபிரமாண்டங்கட்கும் ஆதாரமானவர்க்கு
தொண்டர்கள் கொண்டாடி ஸ்தோத்தரித்திடுவோர்க்கு
விண்டிட கூடாத விமல ஆனந்தருக்கு (ஸத்குரு)

தாலாட்டு

பாவனாதீதமாக பாருமுழுதும் நிறைந்த
பரவடிவான சிவானந்தமே தாலேலோ
தருவதுவாக இந்த குவலயந் தன்னில்வந்து
சொரூபமயமாம் சின்மயமே தாலேலோ சிவானந்தரே
தாலேலோ

ஏகமான சச்சிதானந்த அப்ரமேய சொரூபா
சொப்ரகாசமாய ஸ்ரீ கணபதியே தாலேலோ
ஓமகார சொரூபமே ஓங்கும சிதானந்தமே
ஒப்புவுமை அற்ற ஸ்ரீ சுப்ரமண்யா தாலேலோ.
எல்லா உயிர்களுக்கும ஏகமான பொருதேதி
சொல்லவொண்ணாததான ஸ்ரீ ராகவனே தாலேலோ.
நித்ய நிர்மல சுத்த ஸத்யசொரூபா
சாஸ்வதமான சிவ சங்கரனே தாலேலோ.
போதா போதங்களற்று பேரின்பமாய் நிறைந்த
நாதாந்தமாகிய நான்முகனே தாலேலோ.
அம்சோகமாய் விளங்கும அந்தர் முகவாஸி
சித்தத்தில் வந்துதிக்கும் சிவசங்கரியே தாலேலோ
திரியம்பிகையே தாலேலோ.
உபநிஷத்து மேடையினில் உலாவும் சொரூபனே
உபசாந்தியாகிய சிவானந்தமே தாலேலோ.

உதயராகம்

எங்கும் நிறைந்தவா ஏகஸ்வரூபரே சத்தஜோதிர்மயா
எழுந்திரும
சத்குரு நாதரே எழுந்திரும ஸ்ரீ குரு நாதரே
எழுந்திரும

சிஷ்டபரிபாலகா ஸ்ரீ முருகேசா சிவசுப்ரமண்ய
யோகம எழுந்திரும்,
சர்வராகத்வேஷாதி களைக்கொன்ற ஸத்குரு நாதா
எழுந்திரும்
சுத்தஜோதிர்மய ஆனந்தரூபா சிவானந்தரூபா
எழுந்திரும்
பருமம முகூர்த்தத்தில் ப்ராதகாலந்தன்னில் பக்தாளை
ரக்ஷிக்க எழுந்திரும்
சிஷ்யாகளை ரக்ஷிக்க எழுநதிரும.

—o—

௨

1. ஓம சிவானந்த நமோ பகவதே வாசுதேவாயா நம:
2. ஓம சிவானந்த ஸர்குரு தேசிகாயா நம
3. ஓம் ரிஷிகேச ஹிமாசல வாசாயா நம
4. ஓம் பக்தகோடி ரக்ஷ கர்தாய நம
5. ஓம் கணேச ஷண்முக ஓங்கார ரூபாயா நம
6. ஓம பிரம, விஷ்ணு ருத்ராயா நம
7. ஓம் சிவஸ்வரூப சுப்ரமேய சுப்ரகாசாயா நம
8. ஓம் சதா யோக பிரம நிஷ்டாயா நம
9. ஓம ஞான இச்ச கிரிய ஸக்தி ஸொரூபாயா நம
10. ஓம் அண்டாண்ட சராசார பூதாய நம
11. ஓம ஆதி அந்தமற்ற அற்புத ஸொரூபியா நம
12. ஓம் ஸ்ரீ ராம ஸ்ரீ கிருஷ்ண பரமஹம்சாயா நம
13. ஓம் கிருஷ்ண தத்த மாருதியே நம
14. ஓம் விஸ்வானந்த சிவானந்த யோகீஸ்வராயா நம

15. ஓம் நித்தியா நிர்குணா நிர்மலாயா நம
16. ஓம் சிவ ருத்ர மஹாதேவாயா நம
17. ஓம் சங்கரன் பிரம சத்பாயா நம
18. ஓம் பரம் சம்பு ஈசானாயா நம
19. ஓம் ஈசன் சூலி சந்திர கலாதராயா நம
20. ஓம் சர்வன் பசுபதி சாக்ஷியே நம
21. ஓம் ஹர ஸ்ரீகண்ட அர்புதாயா நம
22. ஓம் உக்ரன் கபர்தி கிரிசாயா நம
23. ஓம பவ ஸர்வக்ஞ ஈஸ்வராயா நம
24. ஓம் உமாபதி கபர்பதி பூதேசாயா நம
25 ஓம் திரு புராந்தக அந்தகாரி திருநேத்ராயா நம
26, ஓம் தக்ஷயஞ்ய விநாச தூர்ஜடியே நம
27, ஓம் வாமதேவ ஸ்தாணு ஸர்வ விநாசகாயா நம
28. ஓம் ஸ்ருஷ்டா பாலக தத் புருஷாயா நம
29. ஓம் பிரபு வாமதேவ கபாலியே நம
30. ஓம் ஸத்யோஜாத ஸமன் ஸாகியே நம
31. ஓம் அகோர ஸாகோர ப்ரசாந்தாயா நம
32. ஓம் பாபநாசக பவாரி போகதாயா நம
33. ஓம் புண்யாயா காமத்வம்சி கபிஞ்சராயா நம
34. ஓம் வ்யோமகேச விசாலாக்ஷ வஹ்நிரேதாயா நம
35. ஓம் வரப்ரதன் பீம பார்க்காயா நம
36. ஓம் பிநாகி விருஷாங்க காலகூட திருக்கே நம
37. ஓம் கிருத்திவாஸ கிராத பிக்ஷாடகாயா நம
38. ஓம் மூலகாரண அஹி புத்நியாயா நம
39. ஓம் விரூபாக்ஷ விரூப விசுவவேஷ திருக்கே நம
40. ஓம் சிபிவிஷ்ட, மஹாதேவ கணேசாய நம
41. ஓம் பார்வதீபதி, ம்ருட மேருதராயா நம
42. ஓம் மேதா மஹாமாயீ மகேஸ்வராயா நம

43. ஓம் ஸர்வாதிஷ்டான ஸர்வாதார, ஸர்வாதிகாரணாயா நம

44 ஓம் ஸ்வராட் ஸாவேஸ்வர ஸாவவித்தியே நம
45. ஓம் ஸர்வாத்ம ஸர்வ சாதக கேதுவே நம
46 ஓம் ஸீமா ஸமுத்ர விசஷ்டாடா நம
47. ஓம் விசாரக ஜனடாதி காரணாயா நம
48 ஓம் ஹேது ஸாஸ்திர ரசகாயா நம
49 ஓம் தத்ஸம அதிக அஸங்காயா நம
50. ஓம் ஆத்ம அமலசாதன புராணாயா நம
51. ஓம் புருஷ பூர்ணய அநந்தரூபாயா நம
52. ஓம் புராதந ஸத்யக ஞாணாயா நம
53 ஓம் ஸாக ஆகாச பிராணாயா நம
54. ஓம் ஜோதி பரகாச பிரதிதாயா நம
55 ஓம் ஸ்வயம்பான ஸ்வயமபிரபு ஸொப்ரகாசாயா நம
56. ஓம் ஸ்தந்திரா ஸ்வதாஸ் ஸ்வானுபவாயா நம
57. ஓம் அவம அததா அனசணாயா நம
58. ஓம் சங்கு பரமாத்மா பராத்பராயா நம
59. ஓம் தேவ தேவா தேவாயா நம
60. ஓம ஜகன்னாத நிரஞ்சன நிர்பயாய நம
61 ஓம் நிர்குண நித்ய நிதநியானந்தாயா நம
62 ஓம நிராமய விதன் விதாதியே நம
63 ஓம் வேதாந்த தேவதா பரதேவதாயா நம
64. ஓம பதி பாச ஹராயா நம
65. ஓம பாராய பாரசூன்யாய பிரஜாபதியே நம
66. ஓம் தாத தாரயிதா திருஷ்டாயா நம
67. ஓம் தாமா நாம விவர்ஜிதாயா நம
68 ஓம புவனேச சபாநாத சபாபதியே ந
69. ஓம் ஆதிபிரபு, ஸபயாய ஸ்தூத்பாய நம

98. ஓம் ஸ்வாதிஷ்டான நகாரபீட ஸரஸ்வதிபிரமாய நம
99. ஓம் மணிபூரக மகார ஓம்கார பீட லெக்ஷ்மி நாராயணாயா நம:
100. ஓம் அனாகத சிகாரபீட பார்வதி பதியே நம
101. ஓம் விசுக்திஸ்தானவகாரபீட சற்குரு நாதாயா நம
102. ஓம் ஆஞ்யா சக்ரயகாரபீட சற்குரு நாதாயா நம
103. ஓம் ப்ரும்மாந்திர ஸஹஸ்ரதளமத்ய நிர்குணாயா நம
104. ஓம் தத்வ அத்வைத ரூபாயா நம
105. ஓம் சச்சிதானந்த சின்மய ஸொரூபாயா நம
106. ஓம் ஜோதி ஸொரூப ஸற்குரு தேசிகாயா நம
107. ஓம் நிர்விகல்ப ப்ரம்ம நிஷ்டாயா நம
108. ஓம் ஓம்கார ஜோதிர்மய சிவானந்தாயா நம
109. ஓம் சச்சிதானந்த ஸற்குரு பரப்ரும்மணே நம

ஓம் தத் ஸத்

—o—

## பக்திப் பல்லவி

கவலையகற்றியாண்ட கருணை கடலே எந்தன்
தவநிலையை அளித்த சாஸ்வதமாம் பொருளே,

ஸத்வகுண பூஷணா சத்ய ஸம்பாஷணா
பக்தஜன ரக்ஷணா பவபய பக்ஷணா
உபதேசத்தால் ஸாரம் தன்னை உகந்து அன்பர்களிக்கும்
அபரிமிதானந்தத்தை அகந்தனில் நிறைந்து
மனமென்னும் பவனத்துள் மன்னிய ஜோதியே
அனவரதமுமென்னை ஆட்கொண்ட பதியே

முற்று

ஸ்ரீ சிவானந்தராக பாரில் விளையாட்டம் செய்து
இத்தரையில் இனிமேல் தெரியா வழியளித்து
அன்புடன் ஆட்கொண்ட சற்குருநாதா உன்
திருப்பாதம் போற்றி! போற்றி! போற்றி!!!

—o—

## — ஜெபசிந்தனைக் களஞ்சியம் —

[ஸ்ரீ சுவாமி சிவானந்த சரஸ்வதியவர்கள் நூல்களிலிருந்து திரட்டப்பெற்றது.]

1. தினசரி படுக்கைக்குச் செல்லுமுன்பும் படுக்கையை விட்டு எழுமுன்பும் குறைந்தது 5 நிமிஷமாவது பரமனைத் துதித்துப் பிரார்த்தனை செய்.

2. பிரார்த்தனைகள் மிகுந்த ஆத்மீக சக்தி வாய்ந்த பிரவாகங்கள்.

3 கபடமற்ற பிரார்த்தனைக்குக் கைமேல் பலன் கிட்டும்.

4. முதலில் உலக க்ஷேமத்திற்காகவும், சமாதானத்திற்காகவும் பிரார்த்தனை செய். பிறகு உன் பொருட்டுப் பிரார்த்தனை செய்.

5. பற்றற்ற (அதாவது பலனில் இச்சை வைக்காத) பிரார்த்தனை முடிவில் மோக்ஷத்தையடையச் செய்யும்.

6. கடவுள் மனிதனைத் தன் சாயலாகப் படைத்தார்.

7. மனிதன் பூமியின் மீதுள்ள ஒரு திறன் வாய்ந்த பலம்.

8. மனிதனது முற்ற முடிந்த நிலை பூரண விடுதலை என்னும் மோக்ஷம.

9. இவ்வுலகில உள்ள ஒரே உண்மைப் பொருள் ஒருவரே.

10. மதமென்பது மனிதருக்குள் உறையும் தெய்வீகத் தன்மையின் வெளித் தோற்றமே.

11. ஸ்திரீயானவள் பூமியிலுள்ள தெய்வ பலம்.

12. ஸ்திரீ தெய்வத்தின் சக்தி என்றுணர்.

13. மனிதனது முதல் ஆசிரியர் ஸ்திரீயே ஆகின்றாள்.

14. ஒவ்வொரு ஸ்திரீயிடமும் தாயின் தன்மையைக் காண்.

15. ஸ்திரீயானவள் உயிருடன் கூடிய மாயை அல்லது சைதன்ய மாயையானவள்.

16. மனிதனது முன்னேற்றம் அல்லது பரிணாமத்துக்குக் கடவுள் செய்யும் உபாயமே வேலை.

17. சரியான பருவத்தில் வேலை என்னும் விதையை விதை. அது முடிவில் மிகச் சிறந்த பலன் தரும்.

18. உறுதி தளராத விசுவாசம் சாதகனைப் பரம் பொருளுடன் இணைக்கிறது.

19. முயற்சி இலாவிடத்து ஒரு குறித்த மனோ பாவனை (IDEAL) யைப்பற்றிய ஆவல அவிந்து விடுகிறது.

20. வாழ்க்கையைச் சாரப்படுத்துவது எல்லோருக்கும் நலன் விரும்புவதாகிய நற்பழக்கமே.

21. அன்பு ஒருவனைப்பற்றி ஆராய்வதும் இல்லை· ஒருவனை நிந்திப்பதுமில்லை.

22. உலகில மிருந்த பலம் வாய்ந்த சக்தியாவது வெளிப்பகட்டில்லாத அன்பு ஒன்றே.

23. மனித வாழ்க்கை என்னும் தராசின் இரு தட்டுகள் எனப்படுபவை, அன்பும். அறமுமே. (கடமையுமே)

24. உண்மையினுல் ஆனந்தத்தை பெறு

25. தவத்திஞல ஆனந்தத்தைப் பெறு

26. தயையினுல் ஆனந்தத்தைப் பெறு.

27. ஈகையால் ஆனந்தத்தைப் பெறு·

—o—

## ஆனந்த மார்க்கம்

(ஸ்ரீ சுவாமி சிவானந்தர்)

1. ஸ்ரீ பகவான் அறியாமையும், துக்கத்தையும் பயத்தையும் ஒழிப்பவர். நித்யானந்தத்தை அளிப்பவர். அவரை அறிந்துகொள். எப்பொழுதும் அவர் உன்னிடத்திலிருக்கிருர்.

2. அவரிடம் நம்பிக்கைகொள். நம்பிக்கைதான் தெய்வத் திருவாயில். நம்பிக்கை அற்புதங்களைச் செய்யும்.

3. எந்தச் சின்ன காரியத்தைச் செய்தாலும் சரி, உனது உள்ளம், மனம், புத்தி, அனைத்தையும் அதில் ஒருமைப் படுத்து. இதுதான் வெற்றி தரும் ரகசியம்.

4. உண்ணுதல், பருகுதல், உறங்குதல், விளையாடுதல் எல்லாவற்றிலும் மிதமாயிரு.

5. வாழ்க்கையில் சரியான கொள்கைகளைப் பின்பற்று. ஆரோக்யம், பலம், வெற்றி இவற்றை எய்தவும், பகவத் ஸாந்நித்யம் பெறவும் முயற்சிசெய்.

6. பிறருக்குக்கொடு. கொடு, கொடு, கொடு, தாராளமாகக்கொடு. உனக்குள்ள எல்லாவற்றையும் கொடு. அளவிறந்த செல்வம் பெறுவதற்கு இதுதான் ரகசியம்.

7. முழு நம்பிக்கையோடு, திடத்தோடும் காரியங்களைச் செய். உன் தீர்மானத்தில் உறுதி இருக்கட்டும். உனது திடம் கொழுந்துவிட்டு ஜொலிக்கட்டும். இரும்பு போல் திடமான மனங்கொள்.

8. போனதெல்லாம் போகட்டும். உனது பலஹீன பழங்காலத்தைக்குழியை வெட்டி புதை. உனது எதிர்காலம் ஜொலிக்கின்றது. முயற்சிசெய், உழைத்து முயற்சி செய்.

9. எப்பொழுதும் முகமலர்ந்திரு. உன்னைப் பிடுங்கித்தின்னும் கவலைகளை சிரித்து ஒழி. உள்ளத்தில் எழும் ஆசை, பகை, அகம்பாவம் இவற்றைத் துடைத்து மனதை உயர்த்து.

10 இந்திரிய வேட்டை உன்னை அழித்துவிடும். தியாகமோ அமிர்தத்துவ மளிக்கும். பற்றைவிட்டொழி. எதையும் பிடித்துக்கொண்டு தொங்காதே

11. நல்ல எண்ணத்தால் நல்ல பிரவிர்த்தி. நல்ல காரியங்களால் நல்ல நடத்தை. எனவே நீ நல்ல எண்ணங்களை வளர்.

12. பகுத்தறிவும் புத்தி பரிசுத்தமாக இருக்கட்டும். அகம்பாவ எண்ணங்களை அகற்றிவிடு. யான் யான், எனது எனது என்பதை ஒழித்து விடு, விடுதலை அடை. சுதந்திரம் கொள் ஆனந்தமாயிரு.

13. உழை, அன்புசெய், கொடு. இந்திரிய மனோ வியாபாரங்களை நிக்ரஹம் செய். நல்லவனாயிரு நன்மை செய். அன்பாயிரு. புனிதங்கொள். பெருந்தன்மைகொள்.

14. வளர்ச்சி அடை, விரிவுகொள். உயர்ந்து ஓங்கு. பேதத்தை ஒழி. எல்லாரோடும் கலந்துகொள் அகண்ட அன்பு கொள். தன்னை மறந்துவிடு.

15. உஷார். விழித்திரு. சுறுசுறுப்பாயிரு. கவனி. பிரார்த்தனை செய். உபவாஸம் செய். தியானம் பண்ணு, விடாதே. பயம், கவலை, ஏக்கம் இவற்றை ஒழி.

16. ஸாதுக்களுக்குப் பணிவிடை செய். ஸத்ஸங்கத்தை நாடு. திவ்ய நாம சங்கீர்த்தனம் செய். ஒரு மாதம் தனித்திரு பாலும் பழமும் கொண்டு தியானம் செய்.

17. "நான் யார்? ஸம்ஸாரம் என்பது எது? எது பிரம்மம்? பந்தமெது? முக்தி எது? மாயை அவித்யை என்றால் என்ன?" என்று ஆராய்ச்சி செய்.

18. விருப்பு வெறுப்பை விட்டுவிடு. மனத்தைச் சாந்தப்படுத்து. எப்பொழுதும் ஒருமுகப்பட்ட சம சித்தம் கொள்.

19. ஆத்மார்த்தத்தை தழுவு. பரிசுத்தத்தைப் பழகு. தர்மம் செய். கம்பீரத்தையும், பெருந்தன்மையையும் வளர்த்துக்கொள். தெய்வீகத்தை அடைந்து விடு.

20. புனிதமடை. ஏகாக்ரம் கொள். சிந்தனை செய். தியானம் பண்ணு. பூரணனாய் விடு.

ஓம் சாந்தி! சாந்தி! சாந்தி!!!

## மஹா மிருத்யுஞ்ஜய மந்திரம்

(ரிஷிகேசம், ஸ்ரீ சுவாமி சிவானந்த அவர்கள்)

**ஓம் த்ரயம்பகம் யஜாமஹே ஸுகந்திம் புஷ்டிவர்த்தனம் !**
**உர்வாருகமிவ பந்தநாத் ம்ருத்யோர்முக்ஷீய மாம்ருதாத் !**

பொருள்:—மணம் பொருந்தியவரும் எல்லா உயிர்களையும் காக்கின்றவருமான முக்கண்ணனாகிய சிவபெருமானை வணங்குகிறோம். வெள்ளரிப்பழமானது தன் கொடியினின்று விடுவிக்கப்படுகிற மாதிரி, மோக்ஷத்தை அடைவதற்காக மரணத்தினின்று நம்மைவிடுதலை செய்வாராக.

பயன்:—(1) இந்த மஹா மிருத்யுஞ்ஜய மந்திரம் உயிரளிக்கும் மந்திரம். வாழ்க்கைச் சிக்கல்கள் பெருகியிருக்கும் தற்சமயத்தில் விபத்துக்கள் தினசரி சம்பவங்களாய் விட்டன. இம்மந்திரம் பாம்புக்கடி, விமானம், சைகில், மோட்டார், தீ, நீர் இவற்றால் ஏற்படும் விபத்துக்களிலிருந்து நம் உயிரைக் காக்க வல்லது. மேலும் இம்மந்திரம் வியாதிகளைப் போக்க வல்லது. இது பக்தியுடனும் நம்பிக்கையுடனும் பாராயணம் செய்யப்பட்டால், வைத்ய நிபுணர்களாலும் குணப்படுத்த முடியாத வியாதிகளைக் குணப்படுத்தும். வியாதிகளை எதிர்த்து, மரணத்தைத் தவிர்க்க வல்ல மந்திரம் இது.

(2) இது மோக்ஷம் பெறுவதற்கான உதவும் சிவபெருமானின் மந்திரம். நீண்ட ஆயுளையும் மனச்சாந்தியையும், சீரையும் செல்வத்தையும் பெறுதற்குதவும் மந்திரம்.

3. உங்கள் பிறந்த நாளன்று இந்த மந்திரத்தை ஒரு லக்ஷம் தடவைக்குக் குறையாமல் ஜபியுங்கள். ஹோமம்

செய்து, சாதுக்களுக்கும் ஏழைகளுக்கும், நோயாளிகளுக்கும் அன்று அன்னமளியுங்கள். இது உங்களுக்கு நீண்ட ஆயுளையும், மன அமைதியையும், நல்வாழ்வையும் என்றும் அளிக்கும்.

ஹரி: ஓம் தத் ஸத்

—o—

ஓம்

## சிவானந்த தத்துவம்

ஸ்ரீராம் ஜயராம் ஜயஜய ராம ஓம்
ஸ்ரீராம ஜயராம் ஜயஜய ராம —ஸ்ரீ

1. காலையிலெழுந்திரு கைகால்கழுவு
காலமணிநேரம் கடவுளைவணங்கு
அரிதோராஸனங்கள் அரைமணியில்வாய்
ஆனந்தககளிப்புடன் ஹரிநாமபஜிப்பாய் —ஸ்ரீ

2. ஹரேராமஹரேராம ராமராமஹரேஹரே
ஹரேக்ருஷ்ணஹரேக்ருஷ்ண க்ருஷ்ணக்ருஷ்ண ஹரேஹரே
இவ்விரெட்டு பதங்களை இனிமையாயுரைப்பாய்
இரவும் பகலும் இதனையேஸ்மரிப்பாய —ஸ்ரீ

3. கூர்மையானதோர் எழுதுகோலெடுத்து
கோணலின்றிநேர்மையாய் கைபிடித்து
கண்களைக்கவரும் முத்துப்போலே
எண்ணியோர்நூற்றெட்டு நாமமெழுதுவாய் —ஸ்ரீ

4. திகைத்தேஅர்ஜுனன் தேரினில்சாய்ந்தான்
உரைத்தே கண்ணன் புத்தியளித்தான்
தெவிட்டாவமுதாம் பகவத்கீதையை
தினந்தினம்படிப்பாயி வழிநெறிப்பாதையை —ஸ்ரீ

5. சிறந்தோராஸனத்தில் தூரிமையாயமர்ந்து
திருமணிமாலையைக் கையிற் கவர்ந்தோம்
ஸ்ரீராம்ஜயராம் ஜயஜயராமென்று
சிறுகச்சிறுகப் பலமுறை ஜெபிப்பாய் —ஸ்ரீ

6. அமுதேயெனினும் மிதமாயுண்பாய்
மாதம் இருமுறை பட்டினி கிடப்பாய்
பசித்தேபுசிப்பாய் பலகாரந் தவிர்ப்பாய்
புளியும் மிளகாயும் பகைவரென் றறிவாய் —ஸ்ரீ

7. நன்மொழியைநாள்தோறும் கடைப்பிடித்திட
நாகரீகத்திற்கோர் விடைகொடுத்து
எண்திசைஎலாம் இடிமுழக்கம்போன்று
ஈச்வரநாமத்தை பறையறைவோம்நாங்கள் —ஸ்ரீ

8. பசியும்பிணியும் பறந்திடுமேயெங்கும்
பாரதநாடு செழித்திடுமேயெங்கும்
என்றும்சிவானந்த தத்துவச் சிறப்பை
என்றுமைநாங்கள் வழங்கிடுவோமே —ஸ்ரீ

ஹரி. ஓம் தத் ஸத்

ஓம் சற்குருவே துணை

## சிவானந்த ஸ்துதி

1. சிவானந்த சரஸ்வதி தீரன் வாழ்க
செகத்தோர் என்றும் சிவத்தில் ஒன்ற

2. பவக்கடல் மூழ்கிப் பய மிக அடைந்தேனை
நவப் புணையாகித் தாங்கியே நின்றாய்

3. அவமாம் மாயையில் அல்லலுற்றேன்
சிவமாம் பெருவெளிச் சேர்த்திடும் நாதா

4 குருவாம் பரனே கோதிலா அமுதே
அருவே உருவாய் அமர்ந்தாய் போற்றி

5. உலகவாழ்வை உதறியே தள்ள
அலகில கலைகள் அருள்வாய் போற்றி

6. தென்பரங்குன்றினில் அமர்ந்ததேவா
என்பரம் நின்று ஈவாய் அருளை.

7. முருகன்பெருமை முழுதும் உணர்ந்து
குருவாய் வந்தாய்க் குவலய மோங்க

8. ஆனந்த குடிலில் அமர்ந்தனை யழகாய்
தானந்தமில்லா சதுரினைத் தருவாய்

9. அடியாருளத்தில அமர்ந்தனை யழகாய்
மிடியே தீர்த்துக் கடைக்கண்ணருள்வாய்

10. கருணைப் பொலிவே கருணை மழையை
தருணத்துதவும் தண்ணளி போற்றி

11. செம்பொனே மணியே சிறியாருளத்தில்
சிவமேபொலியச் செய்வாய் போற்றி

12. அருவே உருவாய் குருவாய் வந்தாய்
திருவே பொலியும் திருவே போற்றி

13. உலகம் வாழ உத்தமநீயும்
இலங்கும் திருவருள் ஈவாய் போற்றி

14 மருளைத் துரத்தும் மதியே போற்றி
அருளைத் தருவாய் அரனே போற்றி

15. உண்மை யுணர்ந்து உலகம் வாழ
அண்மையிலிருந்து அருள்வாய் போற்றி

16. ஞான குருவே ஞானானந்தா
மானதபூசை மகிழ்வாய் போற்றி

சிவோஹம் அன்புக்குழந்தை
வை. தில்லைக்காமாக்ஷி அம்மாள்

## தெய்வீக வாழ்க்கை நடத்துங்கள்

[அகில இந்திய சுற்றுப்பிரயாணத்திலே பம்பாய் பிரதம மந்திரி ஸ்ரீ. B. G. கேர் அவர்களின் தலைமையில் பூனாவில் நடைபெற்ற கூட்டத்தில் ஸ்ரீ சுவாமி சிவானந்தஜீ மகராஜ் அவர்கள் செய்த உபந்நியாஸத்தின் ஸாரம்.]

உங்கள் உண்மைப்பெயர் ஓம் என்பது. பானர்ஜீ, ஆப்தே, கார்டே அல்லது மேத்தா அல்ல. பிரஹ்மனின் சின்னம் ஓம். விவிலிய நூலில், "ஆரம்பத்தில் சொல் இருந்தது. அச்சொல் ஆண்டவனிடம இருந்தது. அச்சொல்லே ஆண்டவன்" என்றுள்ளது. புனிதமான ஓரைச் சொல்லாகிய பிரணவம் ஓம் தான். ஓம்—இதிலிருந்தே எல்லா மதங்களும் கிளம்பியுள்ளன. இளம் முமுக்ஷுக்கள் எதைப் பெறும்பொருட்டு பிரஹ்மசரியமனுஷ்டித்து வைராக்கியம் சாதிக்கிறார்கள்? அவர்கள் தியானிக்கின்ற மகோன்னதப் பொருள் எது? அதுவே ஓம். ஓம் என்பது பரம ஆலம்பனம்; பரம ஸிரேஷ்டம் அனைவரும் சரண் புகக்கூடிய புனிதமான அரண் அது. அந்த பிரஹ்மம் அல்லது பரம்பொருள் அல்லது ஓம நீங்கள் அடைந்து விட்டால், உங்களது சகல விருப்பங்களும பூர்த்தியாகி நீங்கள் நிரந்தரமான ஆனந்தத்தைப்பெற்றவர்களாகிறீர்கள். வேதாந்திகள் அல்லது ஞானயோகமார்க்கத்தில் செல்லு பவர்கள் ஓம என்ற மந்திரத்தின் பெருமையை நோக்கிய வண்ணம் முழுதும பாவனையுடன் தியானிக்கவேண்டும். ஓம் ஸச்சிதானந்தம். ஓம ஸத்து-சித்து-ஆனந்தம். ஓம் நித்தியத்துவம், அநந்தமானது அமரத்துவமானது. ஆகையால் ஓம என்று மீண்டும ஜபிப்போமாக. ஓம், ஓம, ஓம்.

### புண்ணிய மஹாராஷ்டிரா பூமி

மஹாராஷ்டிரா என்ற புண்ணிய பூமியில் நான் இருக்கிறேன் இப்போது. இந்தப் புண்ணிய ஸ்தலத்தில்தான்

துக்காராம், ஸ்ரீ ஞானதேவா ஆகிய மஹரிஷிகள் தோன்றினார்கள். ஞானேஸ்வரி உங்களை உயர்த்தி, சந்தேகங்களைப் போக்கி, உங்களைத் தெய்வமயமாக்கி ஆனந்தபுருஷர்களாகச் செய்கிறார். இன்றும் ஞானேஸ்வரி உள்ளார்; பகவத் கீதையின் ஞாபகார்த்த சிலாசாஸனமாய் என்றும் தங்குவார்.

நான் மகிழ்ச்சியடைகிறேன். இப்புனித க்ஷேத்திரக் குழந்தைகளாகிய உங்களுக்குச் சொற்பொழிவாற்றும் வாய்ப்பு கிடைத்ததைப்பற்றி பெரிதும் மனமார மகிழ்கின்றேன். நீங்கள் யாவரும் தைரியமும், வீரமும், பராக்கிரமும், அமைச்சத்துவமும் வாய்ந்தவர்கள். நாட்டின் முன்னேற்றத்துக்காகப் பாடுபட்டு, பிராணத்தியாகஞ் செய்த கோகேலும் திலகரும் ஜனனமான பூமி இது. இங்கே திலகர், கோகலே, ஏகநாதா வசித்தார்கள். அத்தகைய மஹத்தான விசேஷபூமி இது.

## அஷ்டாங்க யோகம்

எல்லா மதங்களின் பிரதானமான ஸத்துக்கள் ஒரே மாதிரியானவை. அங்குமிங்குமாய்ச் சிற்சில அநாவசியமான பகுதிகளே பேதமடைகின்றன. புத்த மதத்தின் அஷ்டாங்க யோகமானது பூரணத்துவமடைவதற்கான தத்துவக்கொள்கைகளைப் பற்றிப் பேசுகின்றது. பின், ஆத்மாவின் அறிவும் பரமாத்மாவின் அறிவும் தானாய்ப் பிறக்கும். கடவுளைப்பற்றி கேள்விகள் கேட்டபோது பதில் சொல்லாததால், புத்தரை ஓர் நாஸ்திகர் என்று மதிக்கலானார்கள். அவர் சொன்னதாவது:—கடவுளைப்பற்றி இப்போது கவலைப்படாதீர்கள். அஷ்டாங்க யோகத்தின் மூலம் உங்கள் நிரூபத்தைச் சுத்தப்படுத்திக்கொள்ளுங்கள். பொறுமை முதலிய நிய விருத்திகளைக் கிளர்ந்தெழுப்பி

புதைகள் ஒருதயம் பரிசுத்தமாகிவிட்டால், மனம் மகேஸ்வரனைக் குறித்து நாட, ஸத்தியம் எது என்பதும் மெய்ப்பொருள் எது என்பதும் உங்களுக்குப் புலனாகும். பார மார்த்திக விஷயங்களைப்பற்றிய கவலை உங்களுக்கு வேண்டாம்.

நிர்வாணம் என்பது கீழ்த்தரமான ஆசைகளை நசிப்பதுவே ஆகும். ஆத்மவிசாரணை, ஆத்மதியாகம், ஆத்ம சரணம் ஆகியவைகளின் மூலம், அகங்காரவடிவமாகிய 'நான்' நசித்துப்போனால், நதிகள் சமுத்திரத்தில் கலப்பது போலவும், கர்ப்பூரம் அக்னியில் உருகிவிடுவதுபோலவும் பரமாத்மாவுடன் நீங்கள் ஒன்றாகி விடுகிறீர்கள்.

## இராஜயோக முறை

யோகமும் வேதாந்தமும் கூடிய அஸ்திவாரமே இயம நியமுமாகும். இதன்மேல்தான் நிர்விக்ல்பசமாதி எனும் கட்டடம் கட்டப்படுகிறது. சித்த சுத்தியாக வேண்டும், ஆசன பிராணாயாமங்களின் மூலமாக சௌரியமான நிலைமையை ஸ்தாபித்து பிராணமய கோசத்தைத் தயார்ப்படுத்திக்கொள்ள வேண்டும். ஏகாக்ரகப்பயிற்சிக்கு மனம் தயாராகிவிடும் பின். ஸத்துவம், தமோ ரஜோகுணங்களினால் மறைக்கப்பட்டிருக்கிறது. பிராணாயாமஞ்செய்தால், தமோ ரஜோ குணங்கள் நாசமாகின்றன. பின் மனம் ஏகாக்ரநிலை அடையும். உபாஸனையும் மன நிலையைச் சமப்படுத்துகிறது. பிறகு ஏகாக்ரஹமடைந்து, வாழ்க்கையின் குறிக்கோளைப்பெற்றுவிடலாம்.

## உண்மைப்பொருளின் இயல்பு

சில விஷயங்களிலிருந்து உண்மைப்பொருள் இருப்பதை ஊகிக்கலாம் "நான் இருக்கிறேன்" என்ற ஒவ்

வொருவனும உணர்கின்ருன். எலலா நாமஙகளிலும் ரூபங்களிலும் ஜீவத்துவம் பொதுவானது. ஆத்மாவின் ஸத்துச்சொரூபம இதுதான். நாம் மரணமடையக்கூடிய வர்கள். ஸ்தூல சூக்ஷ்மக் கூடுகளைத் தள்ளியான பிறகு புத்தி இருக்கவே செய்கிறது. எங்கு புத்தி சுத்தமா யிருக்கிறதோ, அங்கு ஆனந்தம் இருக்கிறது. வலியைச் சகித்துக்கொள்கிறோம். ஏனெனில் நமக்கு ஆசைகள் உண்டு. ஆசை என்பது பரிபூரணமின்மை. பரமபொரு டத்தில் ஆசையோ, காமமோ, வாசனையோ இடையா. பூரணம் அடைந்து விட்டால், ஒரே ஆனந்தத்தை அனுப விக்கிறீர்கள்.

ஒரு நிமிஷத்திற்கு மாத்திரம், நீங்கள் செத்துப் போய்விட்டதாக பாவித்துக்கொள்ளுங்கள். நீங்கள் என்ன அனுபவிக்கிறீர்கள்? செத்த சவம் உங்கள் முன்னால் கிடக்கிறது. நீங்கள் அமைதியான காட்சியாகிவிடுகிறீர் கள். எனவே, என்றும் நீங்கள் நிலைக்கிறீர்கள் என்பது நிரூபணம் ஆகிறது. உங்களில் அந்தர் கதமாயுள்ள இயல்பே சச்சிதானந்தம. கனவிலே இறந்த நிலையில் உங்கள் பந்துக் கள் அழுவதை நீங்கள் பார்க்கிறீர்கள் என்பது நிரூபிக்கப் படுகிறது. இருட்டிலிருந்து உங்களை யாரோ கூப்பிடுகிருர் கள் —"யார் அங்கே?;' என்று. "நான் தான்" என்று நீங்கள் பதிலளிக்கிறீர்கள். மீண்டும் அவர் கேட்கிறார். பின் நீங்கள் "நான்தான் கிருஷ்ணஸ்வாமி" என்கிறீர்கள். இன்னான் என்பதுதான் கற்பனை, அதாவது மனோ சிருஷ்டி. முதலில் கூறப்பட்ட 'நான்' நித்திய வஸ்து.

## உங்களுடைய யதார்த்த இயல்பு

பகலிலே, சூரிய வெளிச்சத்தில் உஙகள் வேலைகளைச செய்து இரவில சந்திர ஒளியினல் பார்க்கிறீர்கள். சந்தி ரன் இல்லாதபோது, நட்சத்திரங்களினுடைய அல்லது

நெருப்பினுடைய உதவியால் நீங்கள் பார்க்கிறீர்கள். இவை களில் எதுவுமே கிடைக்காதபோது, பேச்சின் உதவியை நாடுகிறீர்கள். அதுவும் கிடைக்காவிட்டால், உங்கள் சொந்த ஆத்மாவின் ஒளியின் உதவியால் வேலையைச் செய் கிறீர்கள். உங்களது அநதர்முக இயல்பானது ஒளிகளுக்கு எல்லாம் ஒளி, ஆனந்தம், பரிசுத்த சைதன்யம். சொப் பனங் காண்கிறபோது, உங்களுக்கு உடல் கிடையாது. மரக்கட்டைபோன்று உடல் கிடக்கிறது. உடலிருந்து வேறுபட்டவர்கள் என்பதை இது நிரூபிககிறது. ஆழ்ந்த தூக்கத்திலே உடம்போ மனதோ கிடையாது. உடலி லிருந்தும், மனகிலிருந்தும் நீங்கள் வேறுபட்டவர்கள் என்பதை இது நிரூபிக்கிறது. ராகத் துவேஷ அலைகள் கிடையாது.. காலையில் கண விழித்ததும, "நேற்று நிம்மதி யாகத்தூஙகிவிட்டேன்" என்று சொல்லுகிறீர்கள. இதி லிருநது உங்கள் அத்தியாவசியமான யாதார்த்த இயலபு அத்வைதம் என்று தெரிகிறது.

ஒவ்வொருவரும் அமரத்துவம் அடையவே விருமபு கிறார்கள், "நாளை நீர் செத்துப்போவீர்" என்று பிறரிடம் சொல்லி விட்டால், அவர் வருத்தப்படுகிறார். யாரையா வது "நீர் முட்டாள்" என்று திட்டினால், அவருக்குக் கோபம் வருகிறது. ஏனென்றால் அவர் திட்டினால், அவ ருக்குக்கோபம் வருகிறது. ஏனென்றால் அவர் ஞானத் தின் கொழுந்து. குழந்தை தாயைப் பார்த்து "இது என்ன? அது என்ன?" என்று கேள்வி கேட்கிறது. அறிவுத்தாகம் அங்கே அதிகமிருக்கிறது. ஆத்மாவின் இயற்கையே மேலான அறிவு. ஆத்மாவின் இயற்கை சச்சிதானந்தம்.

## தகுதியான மார்க்கம்

விதவிதமான பங்களாக்களைக் கட்டியும் உலகத்துப் பொருள்களின் மூலம் மனிதன் 'நான்' என்றஹங்கார்வத்தாலும் அமரத்துவம் அடைய முயல்கிறான். இது பெருந்தவறு. உங்களுடைய யதார்த்த இயல்பு அமரத்வமும் பேரானந்தமும் என்பது இதனால் நிரூபணம் ஆகிறது. இதில் சந்தேகம இல்லை. இவற்றை நீங்கள் நிஷ்காம்ய ஸேவை, பக்தி, ஞானயோகம், விசாரணை இவற்றின் மூலம் பெறவேண்டும். வேதாந்த நெறிக்குப் பலரும் தகுதி அற்றவர்கள், இந்நெறிக்கு அற்பசொற்ப மக்களே தகுதி வாய்ந்தவர்கள். முமுக்ஷுக்களில் பெரும்பாலோர் நிஷ்காமிய ஸேவை எனும் கர்மயோகத்துடன் கூடிய பக்தியோகத்திற்கே தகுதி வாய்நதவர்கள். வேதாந்தம் அல்லது ஞானயோகத்திற்கு கர்மயோகம எவ்விதத்திலும் தாழ்ந்ததல்ல. நிஷ்காமய ஸேவையினால் ஹிருதய சுத்தி ஏற்பட்டதுமே, ஆத்மஞானம் தானாக அவதரிக்கிறது. பொதுவாக காமயோகத்தை பக்தியோகம் அல்லது ஞானயோகத்தோடு இணைப்பதுண்டு. ஏன் பக்தியோகம் செய்தல் வேண்டும ? எல்லா உயிர்களும பகவானின் தோற்றங்கள். இந்த பாவனையுடன் ஸேவை செய்தால், அது கர்மயோகமாகிறது. கர்மமும் பக்தியும் செவ்வையாகப் பொருநதுகின்றன. ஆண்டவன் கையிலே ஒரு முமுக்ஷு வெறும் நிமித்தம் அலலது கருவி ஆகின்றான். அகங்கார மமகாரங்கள் அழிபடுகின்றன. பின் ஹிருதய சித்த சுத்தி ஏற்படுகிறது. பின் வேதாந்த ஞானம் தானாய்ப்பிறக்கிறது எவ்வித கஷ்டமும் இல்லாமல், ஸ்ரவணம், மனனம், நிதித்தியாஸம்கூட இல்லாமல்.

உண்மையான வேதாந்தியாகவேண்டுமானால், சித்த சுத்தி தேவை. மலம, விக்ஷேபம, ஆவரணம் ஆகிய முக் குற்றங்கள் மனத்திடம் உள்ளன. நிஷ்காம்ய ஸேவையால் மலத்தையும், உபாஸனை, பகவந்நாமம் உச்சரித்தல், பிராணு யாமம் செய்தல் ஆகியவற்ருல் விக்ஷேபத்தையும், வேதாந்த கிரந்தங்களைப் படித்தலாலும் இடையருத் தியா கப்பயிற்சியாலும ஆவரணத்தையும போக்கிவிடலாம பிரஸவ வைராக்யமோ அல்லது ஸ்மஸான வைராக்யமோ ஏற்பட்டால் போதாது. மனத்திலே உள்ள பற்றுகள் அற்று விடவேண்டும். அந்த விவேகம உதயமானுல் ஞான சாதனைக்கு உகந்தகாலம் உண்டாகும்.

## வைராக்கியம் அத்தியாவசியம்.

ஒழுகும் பாத்திரத்தில ஊற்றிய ஜலம போல வீணு கும் வைராக்கியம இல்லையென்ருல், கடவுள் உங்கள் மனத் திலே ராஜசம், தாமஸம கொஞ்சமாகப் போட்டுவிட்டார். அதனுல் புறஉலகில் பார்வை செல்லுகிறது. ஒரு தீரபுரு ஷன் அந்தர்முகமாகப் பார்வை செலுத்தவேண்டும். அலசி அலசிப்பார்த்து குற்றங்களைப் போக்கவும். அப்பால் ஆத்மீய பாதையில் முன்னேறலாம்.

## துறவு என்பதன் தத்துவம்

துறவின் தத்துவத்தை விளக்க ராணி சூடாலையின் கதையை நூராகப் படித்துக்கொள்ளுங்கள். (* ராணி சூடாலையின கதை 375-ம் பக்கம் பார்க்கவும்.) மனிதனுக்கு முள்ள பேதைபுத்தியும, நான் என்ற அகங்காரமும், வாசனையும தொலைந்தால், அகத்துறவு ஏற் படும் உண்மையான முனிவா ஆகிவிடுவீர்கள்.

## சாக்ஷாத்காரத்தின் மதிப்பு

தண்ணீரிலுள்ள தாமரைபோல உலகில வாழுஙகள். குருஷ்டிமபுத்தியை விருத்தி செய்யுங்கள். ஆத்மாவை சாக்ஷாத்கரிக்கலாம். நீங்கள செய்யும ஒவவொரு காமத்தையும ஆத்மார்த்தமயமாக்குஙகள். பின், ஒவ்வொரு கர்மமும் யோகமாகும்' உலகமுழுவதும் பகவானின் விபூதியாக உணருங்கள். இநத மனோபவத்துடன் விளையாடினுலும, சாபபிட்டாலும், நடநதாலும — யாவும் யோகமயமாகின்றன.

## கடவுள் இருக்கிறார்

நகாகத்தித்தொழிலாளன்கூட கடவுளின் தோற்றமே. ஏளனம் பண்ணுதே; இகழாதே. ஹிருதய சுத்தி ஏற்படும். துக்காராம கலிபோர்னியோவுக்குப் போய் M. A. பட்டம் பெறவில்லை. இராமகிருஷ்ண பரமஹம்ஸரும் அப்படியே கடவுளிடம் ஒன்றாய்க்கலந்து ஞானம் பெற்றார்கள. விட்டல் விட்டல் ஜய ஜய விட்டல் விட்டல். சஙகீர்த்தனை பண்ணுங்கள். படித்த அறிவாளிகளின் சந்தேகங்களையும் தீர்க்கக்கூடிய அதி தீவிர ஞானியாகி விட்டார் பரமஹம்ஸர். ஞானம் எப்படி வநதது?

## யோகசாதனை செய்யுங்கள்

சஙகீர்த்தன யோகம் சாதியுங்கள். பத்மாசனம், சித்தாசனம் பழகி தியானஞ் செய்யுங்கள். சர்வாங்காசனம் ஆரோக்கியத்தை தருகிறது, "எனக்கு 50 வயது. ஆசனங்கள் செய்யமுடியாது" என்பார்கள். உங்களுக்கு 30 வயதானுலும், 18 வயதாகக் கருதுங்கள், நீங்கள யாவரும் படித்தவர்கள். உலகிலுள்ள எதுவும் சாந்தியைத் தராது. உலகத்திலுள்ள பெரிய பணக்காரனைக் கேளுங்கள். சாந்தி கிடையாது. சர்வேஸ்வரனின் நாம சங்கீர்த்தனத்தால்

சாந்தி வந்தடைகிறது. ஜபம், தியானம், சத் சங்கம் - இவற்றினும் சாந்தி வருகிறது. 4 தடவை சாப்பிடுகிறீர்கள். 4 தடவையும் தியானிக்கிறீர்களா? சாதனையில் கடுமையிருக்கவேண்டும். பால் ருசியுள்ளது. ஐந்தாவது, ஆறாவது கோப்பை பாலகுடித்தால், வாந்தி ஏறபடும. பிரம்மசசாரி "எனககு கலியாணம் எப்போது ஆகும்" என்று கருதுகிறான். விவாகமாகி 4, 5, குழந்தைகள பிறந்தால் "நான ஹிருஷிகேசம போய் என்று சந்நியாசி ஆவேன்" என்று எண்ணமிடுகிறான. பொருளின்மேல் பற்று! பொருள கிடைத்த க்ஷணமே பற்றுபோகிறது. "உண்மை ஆனந்தம எது?" என்று அடிக்கடி சிந்திக்க வேண்டும். சத்துவ குணத்தைக் கைப்பிடியுங்கள்.

நான்கு கடிதங்கள

இந்தக் கலியுகத்தில், பகவந்நாமம் சொன்னாலே கடவுளை சாக்ஷாத்கரிககலாம. பாருங்கள கடவுளின காருண்ய நிலையை; எமதர்மராஜா நான்கு கடிதஙகள அனுப்புகிறார். முதல் கடிதம் தலைமயிர் வெளுக்கிறது— நரை ஏற்படுதல். அவித்தையில் மூழ்காமல் சாதனை பணணத்தொடஙகுங்கள். இரண்டாவது கடிதம் பல் விழுந்து போதல். உடனே பொய்ப்பற்களைக் கட்டிக்கொள்கிறார்கள மூன்றாவது கடிதம் கண்பார்வை மழுங்குகிறது. கண்ணாடி போட்டுக்கொள்ளுகிறார்கள. நான்காவது கடிதம கால நடகக முடியாமற்போகிறது. கடைசியில் யமன் வருகிறான. உயிரைக் கவருகிறான். எவ்வளவு தயாளம எம தரும ராஜாவுக்கு என்பதை எண்ணிப்பாருங்கள. ஸ்வாமிஜி பிறகு

"ரகுபதி ராகவ ராஜாராம்
பதீத பாவன சீதாராம்" — என்று பாடலானார்கள்

(கூட்டத்தில் பலரும் கூச்சப்பட்டார்கள். பகவந்நாமம் சொல்லவில்லை) கூச்சம் என்பது லௌகிக முன்னேற்றத்திற்கும் ஆத்மீய முன்னேற்றத்திற்கும் தடையாக நிற்கிறது. கூச்சப்படுகிற அட்வகேட் வழக்கைச் சாங்கோபாங்கமாகப் பேசி ஜயிக்க முடியாது. நல்ல வழக்காக இல்லாவிடினும் வக்கீல், "ஐயா! இது என் கட்சிக்காரனுக்கு அநுகூலமான நல்லவழக்கு" என்று சொல்ல வேண்டும். கூச்சப்படுகிற வைத்தியர் முன்னேறமாட்டார். மருந்து நல்லதாக இல்லாவிடினும் அவர் "இது ஒரு சிறந்த மருந்து" என்றே கூற வேண்டும்.

### மஹாமந்திர கீர்த்தனம்

உங்களை ஒழுங்குபடுத்திக் கொள்ளுங்கள். இனிமையாகப் பேசுங்கள். உங்கள் சக்தியை வீணான காரியங்களில் செலவிடாமல் அதை ஏகாக்ரகத்தில் பயன்படுத்துங்கள் இரவில் எளிய சாத்வீக ஆகாரத்தை உட்கொள்ளுங்கள். 9-30 மணிக்குப் படுத்துக்கொள்ளுங்கள். அப்போதுதான் அதிகாலை 4 மணிக்கு எழுந்திருக்க முடியும். காலைத் தியானம் சாலச் சிறந்தது. ஏனெனில் மனம் சாத்வீகமாயிருக்கிறது. வெற்றுக் கடிதம்போல. ஸ்தோத்திரங்களைப் பாடுங்கள். கீதைசுலோகங்களை உச்சரியுங்கள். என்று சொற்பொழிவாற்றினார். சுவாமி சிவானந்தஜீ மஹாமந்திர கீர்த்தனைகளைப் பாடிப் பிரசங்கத்தை முடித்தார்.

### *ராணி சூடாலை

இராணி சூடாலை ஆகாயத்தில் நடக்கவும். பறக்கவும், பல வடிவங்கள் எடுக்கவும் சக்திவாய்ந்த மகா யோகினி. சிகித்வஜன் என்ற அவளது கணவனுக்கு ஞானம் பிறந்தது யோகசாதனை பண்ணி ஜீவன் முக்தனாக வேண்டுமென்பது அவனது பேரவா. "உங்களுக்கு நான் கற்றுக்கொடுக்கிறேன்" என்றாள் இராணி யோகினி. அவன் அவளையே நம்பவில்லை. காட்டுக்குப் போய் கடுந்தவம் புரிந்து வந்தான்.

மூன்று மாதங்கள் கழிந்தன. அரசன் முன்னால் ஒரு முனிவர் தோன்றினார். தவஞ்செய்துகொண்டிருந்தவன் கண்விழித்தான். என்ன ஆச்சரியம்! முனிவர், கால் பூமியில் படாமல, கொஞ்சம் உயரமாய் நின்றிருந்ததைக்காண வியப்பும் திகைப்பு மடைந்து, அரசன் அவர் முன்சென்று சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்தான். "நான் உலகத்தைத் துறந்தேன். தவஞ்செய்கின்றேன்" என்றான்.

முனிவர்:—உங்களுக்குத் துறவு உண்டாகவில்லையே! உங்களிடம் மூங்கில் தடியும் கமண்டலமும் இருக்கின்றனவே.

சிகித்வஜன் .—(அவைகளை உடனே எறிந்துவிட்டு) முனிவரே! இப்போது?

முனிவர் உடனே, "உம். இல்லை. துறவு இப்போதும் இல்லையே" எனவும், அரசன் தனக்குள், "என்னைச் சார்ந்திருந்தவைகளை விட்டெறிந்தேன். இந்த உடம்புதான் இருக்கிறது. இதை அழித்து விடுகிறேன்" என்று சொல்லிக்கொண்டே, உடனே மரத்தின்மேலேறி, கீழே விழுந்து தற்கொலை செய்யத் தயாரானான். முனிவர் அதைப் பார்த்து "நில். அரசே! உங்கள் உடம்பை அழித்துவிட்டாலும கூட துறவு வந்துவிடாது" என்று மொழிந்தார்

என்ன ஆச்சரியம்! அரசனுக்கு ஒன்றும் புரியவில்லை. மரத்தைவிட்டுக் கீழே இறங்கி வந்து முனிவர் முன்னால் கைகட்டி நின்றான். வணங்கினான். "எனக்கு உபதேசஞ் செய்யுங்கள். நான் ஓர் அறிவிலி" என்று மீண்டும் சாஷ்டாங்க தண்டம் புரிந்தான். "உபதேசத்தின்படி நடப்பீரா?" என்றார் முனிவர். "நிச்சயமாக நடக்கிறேன், சுவாமி!" என்று வாக்குறுதி பண்ணினான் அரசன்.

முனிவர் உபதேசிக்கிறார் :— "இந்த உடம்பைக் கொண்டுதான் உறுதிப்பொருளை அடைய முயலவேண்டும். இது ஒரு நேர்த்தியான கருவி. மானிட சரீரம் பெற்றவர்கள் யாவரும் போற்றத் தக்கவர்கள். தேவர்களகூட மானிட சரீரம் எடுத்து இந்தக் கலியுகத்திலே ஆத்ம ஞானம் அடைய ஆசைப்படுகிறார்கள். காயத்தின் மூலமாகவே கடவுளைக் காணவேண்டும், முதன்முதலில் நான் என்ற அகங்காரம் களையப்படவேண்டும். எனது என்ற அகப்பற்றுக்களை அழிக்கவேண்டும் நான்வேறு, அவன் வேறு என்ற பேதபுத்தி ஒழிய வேண்டும். சமதிருஷ்டி அப்பியசிக்க வேண்டும். நான் செய்தேன், நான் கோபுரம் கட்டினேன் என்கிற கர்த்தாத்துவ அபிமானம் துறக்க வேண்டும். நீ சாட்சிமாத்திரமாய் நில். கண்களா பார்க்கின்றன உலகப் பொருள்களை? குரலோசையைக் கேட்கிறது காதா? பேசுகிறது நாக்குதானா? இல்லை, இல்லை. உன் உள்ளே உட்கார்ந்துள்ள உத்தமனாகிய ஆத்மாதான் இத்தனையும் செய்கிறது. அந்த ஆத்மனை அறிவாயாக."

அரசன் அவற்றைக் கவனமாய்க் கேட்டுக்கொண்டிருந்தான், கண்களை மூடியவண்ணம். முனிவரைப் பார்க்கக் கண்களைத் திறந்தான். முனிவர் இல்லை. என்ன ஆச்சரியம்! "தெரிந்துகொண்டீர்களா?" என்று கேட்டாள் சூடாலை ராணி. "கண்ணே! சூடாலை! நீயா முனிவர்போல் வந்தாய்? உன் உபதேசப்படி. முன்னேயே கேட்கமாட்டேனென்றேனே. பொன்போன்ற புத்திமதிகள். தங்கம் போன்ற தர்ம உபதேசங்கள்." என்று கூறி கண்களில் ஆனந்தக் கண்ணீர் நிரம்ப நாத்தழுதழுக்கப் பேசினான்.

அன்றுமுதல் உபதேசப்படி சிகித்வஜன் நடந்து கொண்டு ஜீவன் முக்தனானான்.

# ஆனந்த குடீரம்

[மு. ஸ்ரீனிவாஸன்]

பாயும் கங்கை அங்குண்டு- அது
பாடும் பாக்கள் பலவுண்டு
ஓம் ஓம் ஓம ஓம் ஓமென்று
ஓல மிசைகளும் அழகுண்டு

வேத முனிவர் பற்பலபேர்
வேள்விக்கூடம் அங்குண்டு
தன்னை மறந்து மாமுனிவோர்
தவமியற்றிய *தலமுண்டு.

அந்த நாளில இலக்குமணன்
அரசுப்படையை அழித்துப்பின்
கொன்ற பாவம தீர்ந்திடவே
குளித்துத் தொழுத தலமுண்டு.

முன்னும் பின்னும் மலையுண்டு
முடிவில்லாத மலையுண்டு

எல்லையற்ற பொருளேபோல்
எங்கும் அந்த மலையுண்டு

முத்துக் குவியல் நடுவினிலே
மரகதத்தை வைத்தது போல்

அத்தனைக்கும் நடுவினிலே
ஆனந்தக் குடீருண்டு.

கர்ம யோக பூமி அது
காணக்கிடையா பூமி அது
காணக்கிடையா பூமி அது
பக்தியோக பூமி அது
பரந்த ஞான பூமி அது

துன்பம் துன்பம் துன்பமென
துடித்துத் தவிக்கும் மாந்தர்க்கு உண்மை இன்பம
உண்மை இன்பம் ஊட்டிடுமோர்
ஒப்பில்லாத பூமி அது

அங்கே—

விந்தை அழகு கொண்டதுவாம்
விசுவநாதர் ஆலயமாம்
எல்லையில்லா சாந்தியினை
என்றும் நல்கும் ஆலயமாம்.

தெய்வ நெறியைப் புகட்டிடவே

தேர்ந்த சங்கமங்குண்டு
உண்மை ஒளியைக் காட்டிடு
மோர
ஒப்பிலாத குணமுண்டு,

அன்னதானம அங்குண்டு
அறிவுத்தானம் அங
குண்டு
வறிய மக்கட் கிலவசமாய்
வைத்திய தானம அங்குண்டு

ஆங்கில வைத்தியம் அங
குண்டு
ஆயுர் வேதமும் அங்
குண்டு
பாரத யோகம் கற்றிடவே
பொருட் காட்சி
யங்குண்டு

பின்னும் அங்கொரு முறை
யுண்டு
புத்தம புதிய முறை
ஒன்று.

சலனப் படங்களின் துணை
கொண்டு
சிந்தை கவரும வழியுண்டு

சிறந்த யோகம் வேதாந்தம்
சீரிய முறையில் கற்றி
டவே
குரு குலத்தின் உருவினிலே
கல்விச் சாலை ஒன்றுண்டு.

பஜனைக் கூடம் ஒன்றுண்டு
பாங்காய் என்றும் பாட்
டுண்டு
இரவும் பகலும் என்றென்
ராம நாம ஜெபமுண்டு.

ஞானச் சுடரின் அரு
ளொளியை
ஞால முற்றும் பரப்
பிடவே
புத்தக சாலை ஒன்றுண்டு
புதையல் பற்பல அங்
குண்டு

விசுவநாதர் பெயர் கொண்டு
விளங்கும் பூங்கா ஒன்
றுண்டு
பசுக்கள் பற்பல அங்குண்டு
பார்க்கப் பார்க்க அழ
குண்டு

அகில உலக சாதுக்கள்
அன்பாய்க் கூடும் குழு
உண்டு
உலக மதங்கள் அத்தனையும்
ஒன்றாய்க் கூடும அழகுண்டு.

இங்கு மங்கும இடை
யிடையே
எளிய குழல்கள் பலவுண்டு
தொண்டர் துறவி சாதகரும்
தவமியற்றும் சிறப்புண்டு.

வீசும் காற்றில் மணமுண்டு
விசுவ நாதர் அருளுண்டு
ஓடும் நீரில் அருளுண்டு
ஓங்காரப் பொருளுண்டு.

சிவானந்தர்

ஓங்குமிவ் வையந்தன்னில்
ஒளி விடும் பரிதி போலும்
பாங்குள வீணை தன்னின்
பேரெழில் நாதம் போலும்

ஈங்கு நம் உடலுள்ளே
இயங்கிடும் உயிரே
போலும்
ஆங்குள அத்தனைக்கும்
ஆவியாம் சிவானந்தர்.

தரிசனம்

கண்டபின் யாருமந்தக்
காட்சியை மறக்கொணாது
பண்டை நாள் முனிவர்
போல
பளிசசிடும் சோதிவண்ணன்

அஞ்சலென்றூர்க்குமையன்.
அருவிழிப் பார்வையுண்டு
கொஞ்சிடும் புன்னகை பின்
குன்றிடா அன்பு முண்டு.

காநதமக் கண்களுடே
காட்டிடும் பார்வையுண்டு
சாந்தமத் திரு முகத்தில்
சுடர் விடும் மேன்மையுண்டு

துள்ளிடும் குழநதையைப்
போல்
தூய நல்லுள்ளமுண்டு
அள்ளிடும் இன்பமதை
அளித்திடும பெருமை
யுண்டு

வடிவிலே கவர்ச்சியுண்டு
வார்த்தையில் குளுமை.
யுண்டு
வநதவர் வணங்கு முன்னர்
வணங்கிடும் பணிவுமுண்டு.

சிந்தையில் தெய்வமுணடு
சொல்லிலும் தெய்வ
முண்டு
விநதையாம் இசையினுள்
ளும்
வேண்டிடும் தெய்வமுண்டு.

உபதேசம்

ஆத்மஞானம் அடைவதுவே
அனைவர் வாழ்க்கை லட்சிய-
மாம்
இறப்பும் பிறப்பும் இல்லாத
இன்பமிதனுல் பெற்றிட
லாம்

இந்த ஞானம் எய்திடுமுன
இடர்கள் பற்பல இங்குண்டு
அவற்றை எளிதில் வென்
றிடவே
அற்புத வழியும் இங்குண்டு.

தன்னலத்தை மறந்தே நீ
தொண்டு என்றும் செய்கு
வையேல்
சித்தமெல்லாம் மாசற்று
சுத்த உள்ளம் உண்டாகும.

தேர்ந்த நல்ல வழியொன்று
தியானமென்று பெயருண்டு
பக்தியொன்று பின்னுண்டு
பயிலப் பயிலப் பயனுண்டு.

தெளிநத உளளத் தூய்மை
யுடன்
தெய்வநாமம் பலவற்றை
என்றும் நன்கு ஜபித்து
விடில்
எல்லையில்லாப பயனுண்டு.
சிறிய இந்த அகமொன்றே
சொல்லற்கரிய சத்துருவாம்
அதனை முயனறு ஒழித்து
விடில்
அல்லலென்பது பின்னில்லை

தூய உள்ளந்தனில் பின்னர்
தூரியஞானம் உண்டாகும்
எய்தும் சாந்தி பேரின்பம்
எடுத்துரைக்க வழி
யுண்டோ?

## சங்கொலி

சிவானந்தர் சங்கொலி இச்
சகமனைத்தும் கேட்குதுபார்
திவ்ய ஜீவன மாநாடும்
தேசமெங்கும் கூடுதுபார்

வருவீர், மக்காள் நீங்களு
மிவ்
விநதை மிக்க சங்கொலியை
நின்றே என்றும் கேட்டிடு
வீர்
நிலைத்த இன்பம் பெற்றிடு
வீர்!

---

# பக்தியும் ஆத்ம ஞானமும்

ஒருவனுக்கு முதலில் பக்தி வெளி ஆசாரமாக ஆரம்ப மாகிறது. குறிப்பிட்ட வேளையில் ஒரு நாளைக்கு ஒரு முறை கோவிலுக்குச் செல்வது என்று பிரதிக்ஞை பண்ணிக்கொள்கிறான். ஒரு நாள் கோவிலுக்குப் போகவில்லை யானால வருத்தமடைகிறான். பல நாட்கள் சென்றால் ஆனந்தம் அடைகிறான். இந்நிலைமையில் அங்குவரும் பக்தர்களைககண்டுத் தான் ஒழுகவேண்டிய முறையை, அவர்களிடமிருந்து அறிந்து கொள்கிறான். உதாரணமாக எவ்வாறு பிரதக்ஷிணம் செய்வது, சிவன் கோவிலுக்குச் சென்றால் 'ஓ'ங்காரப் பிரதக்ஷிணம் செய்ய வேண்டும், நந்தியின் குறுக்கே செல்லக்கூடாது. ஏனெனில் நந்தியிட மிருந்து வரும் மூச்சுக்காற்று எப்பொழுதும் சிவனை நோக்கிச் சென்றவண்ணமாகவே இருக்கின்றது. அஃதாவது நந்தி எப்பொழுதும் சிவன் தியானத்திலேயே இருக்கிறார்.

கோவிலுக்குச்செல்வதினால் பக்தர்களுடைய சத் சஙகம் ஏற்படுகிறது. இதன் விளைவாக இவன் பக்தி பழுக்கிறது படிப்படியாக கோவிலிலுள்ள சான்னியத் தியததை அறிகிறான். பின்பு இவன் உடம்பிலும் இது ஊறி விடுகின்றது இதன் அடையாளம் உடம்பில் மெய் சிலிர்த்தல் ஏற்படுவதே. இது பக்தியின் முதல்படி. இனி இரண்டாவது படியைப் பார்ப்போம்.

இப்பொழுது ஒரு கோவிலுக்குமட்டும் செல்லாது பல கோவில்களுக்கும் செல்ல ஆரம்பிக்கிறான். அங்கும் வீற் றிருக்கும் மூர்த்திகள் யாவும் ஒரே சைதன்யம்தான் என் பதை அறிகிறான். பின்பு ஈஸ்வரசிந்தனையில் ஆழ்ந்து

ஈஸ்வரனுடைய குணாதிசயங்களைப்பற்றி சிந்தனை செய்கிறான். இக்குணாதிசயங்கள உள்ளவர்களை ஈஸ்வரன் அம்சம் என்றும் அறிகிறான்.

மூன்றாவதுபடி, ஈஸ்வரன் பல நாமங்களுடனும் பல ரூபங்களுடனும் இருக்கிறார் என்பதை அறிகிறான்.

நான்காவதுபடி. பல நாமங்களுடனும் பல ரூபஙக ளுடனும் தோன்றும் ஈஸ்வரனை ஒரு ரூபமாக அறிகிறான்.

ஐந்தாவதுபடி, ஈஸ்வரனை அரூபியாகவும அறிகிறான். ஆனால் அரூபமே, கல். மண் முதலியவைகளாய் மாறி இருப்பதாகவும அறிகிறான்.—(அதாவது) ஜடமும் சைதன்யமும கலநது இருப்பது.

ஆறாவதுபடி, சைதன்யமே ஜீவன் என்று புலனாகும். அந்த ஜீவன் மனித வர்க்கத்தின் கீழ் நிலைக்கும் மேல் நிலைக்கும் செல்லும் என்பதை அறிகிறான். படிப்படியாக மேல் நோக்கிச் செல்லவேண்டிய முயற்சிகளை அடைகிறான் மனிதகந்தர்வன், தேவகந்தர்வன், தேவன், ஈஸ்வரன் முதலிய நிலைகள் இருப்பதை அறிகிறான். பின்பு அவை களை அடைய முயற்சிகளை எடுத்துக்கொள்கிறான்.

அடுத்தபடியாக மனித அவஸ்தையிலேயே நல்ல குணங்களும் சக்திகளும கிடைக்கப்பெற்றன. ரிஷியாகவும் ஞானியாகவும் ஆகிவிடுகிறான். இந்த அவஸ்தையில் "நான் பிரம்மனே" என்பதை முற்றிலும் அறிந்துவிடுகிறான்.

—o—

ஓம்

ஸ்ரீ மண்டலேசுவர சுவாமி

# சிவானந்த யோகீஸ்வர மஹராஜ்

அவர்களுக்கு,

பம்பாய் மாதுங்கா தென் இந்திய

உயர்தரப் பள்ளி தமிழாசிரியர்

திரு நா. பிச்சுமணி அய்யரின் தாழ்மையான ஸமர்ப்பணம்

சீர்வள மலிபுரி, திருமகிழ்நகுறைபுரி
பெரும்புகழுரித்த பொம்பாய் அம்புரி
சேண்டத்தோன் பால் செய்தவப் பேற்றான்
சீர்மையின் எழுந்தருள் செய்ய குருவே !

புண்ணியப் பாரதப் பேரருந் தாயரில்
தூயநற்போதத் தூங்கச் செல்வரில்
மன்னு மாமறையின் மாண்தரவாக்கியோன்
பல்பெரு புராணம் பன்னிய பெருமகன்
வியாஸனெனவே வநதுதி வித்தகா !

புத்தனெனவே போகந்துறநது
இல்லறம் துறநது இருந்தனந் துறந்து
இனிமை மிறந்து இகம்பரமாக்கி
இன்ப வெள்ள இளையிலா வருளின்
பேறு விளைந்து மப்பேற்றினை ஈண்டே
பண்பதை யார்க்கும் மன்னுற வழங்கும
மன்னு பேராசையின் மூணடே விரைநதாய் !

செக்கர் மேனியான் செழுமபொன் பாவைபோ
டிலங்கு வெணகிரி இமய மேவியே

ஹ்ருதயங் கனிவுறும் ஹ்ருஷீகேசமெனும்
திண்டூய் தலத்திடை - தனிப்பெருமுதலாய் ஆங்கண
வரையினுச்சி விரிசுடர் விளக்கெனை
மலர் விரை கமழும் மகிழ் பூங்காவென
பயன் மரம் நாமபண் பெரிதும் பழுத்தென
ஊருணி நிறைந்து உறுவள முதித்தென
அறவாழ் வோங்கவும், மறமது வீழவும்
நன்னெறி மல்கவும், நல்லோர் மகிழவும்
பண்பும் பொறையும் பக்தியும் பொங்கவும்
தெய்வ வாழ்வின் தீஞ்சுவை துய்க்கவும்
கழகமொன்றை கூட்டியே நிறுவினை.

## காரியை நீரிருய்!

கைம்மா றெமமனோர் கருதுவதறியோம!
கலைகளாய்ந்தனை, கருமம் வகுத்தனை
கருந்தனமாகும் கண்ணிய கருத்துறை
சஞ்சிகை பலவும் சேமமாய் தொகுத்தனை
மறைகளோர்ந்தே மாவிதி வகுத்தனை
முருகன-மருகன் மயில் வாகனென
நாஸ்திகச் சூரரை நலிய வைத்தனை

தாயுமானவர் தரு பொக்கிஷமும்
பட்டினத்தடிகள் பொன் திருவாக்கும்
திருமூலர் வரை திரு மந்திரமும்
அடியார் வாக்கும் அறமொழி பலவும்
நின்னுரை தன்னொடிணை தற்பெறுமெனில்
கனிவுரை இதன்மேல் கூறுதல் தரமோ.

சிவானந்த மென் செழுமமுதுண்ணும
மண்டலே சராம் மஹரிஷி! மூர்த்தே!
சிவானநதரே! சின்முத்திரையால்
வகைபெற ஓர் நாள் வடதருவின் கீழ்
சீடருக் கோதிய சின்மயானநத
தக்ஷிணா மூர்த்தியாய்த் தோன்றிய வடிவே
வையம் நின் சரணம், வையம நின்னகத்து
அருளினுள் மூழ்க, அறிவு பெருகவும
மறையிருள் மாயவும, கலைநலம பெருகவும
நலநதழைக்கவும், நல்லோர் மிகவும்
அல்லல் தீரவும், ஆன்றருள் புரிவையே!

யாண்டும நும புகழ் மன்னி வாழும
திரு. நா. பிச்சுமணி
தமிழாசான்
27—10—1950

சத்தியம் ஞானம் அனந்தம் ப்ரம்மா தத்வமஸி.

பணியாற்றுக!
அன்புசெய்க!
தியானம் செய்க!
உண்மை யுணர்க!

ஆனந்த குடீரம். P. O.
ரிஷிகேசம்
ஹிமாலயம்

# ஒரு நற்செய்தி

## கடவுளின் ஆசிக்குரிய மக்களே!

மனிதன் ஒரு தெய்வீக உயிர். அவனிடம கடவுள் தன்மையுண்டு. நாம் இறைவனது அறிவொளியினாலே இயங்கி வாழ்கின்றோம். மிகவும் உயர்வான தெய்வீக உணர்ச்சி எல்லோரிடமும் மறைவாக உள்ளது. பனித் துளியை உருண்டை வடிவமாகச செய்வது இறைவனது ஆணையே. மிகச் சிறிய தாவரத்திலும், அற்பப் பிராணி யிடத்திலும், மிகவும் நுட்பமான உயிரணுவிலும், உயிர்ப் பைத் தந்து நிற்பது அவனுடைய ஆன்மாவே. காயரும்பு மலர்வது அவனது சக்தியாலேதான். கடவுளைப்பற்றிய அறிவுக்குறைவே வாழ்க்கையிலுள்ள துயரத்திற்கும், உலகிலுள்ள குழப்பம், துன்பங்கட்கும் ஆணிவேர். அவ னைப் பற்றிய அறிவைக்கொண்டு, அவனது அருள் ஒளியி லேயே நமது அன்றாட நடவடிக்கைகளைக் கொண்டு செலுத்துவதிலேயே உண்மையான சுகமும், வாழ்க்கை யின்பமும் அடங்கியுள்ளன.

வாழ்க்கையைப் பற்றிய அறிவார்ந்த தத்துவக் கொள் கைதான் மக்கள் வாழ்க்கையிலுள்ள எல்லாத் தீமைகட்கும நிகரற்ற மருந்து. எந்தப் பரமபுருஷனின் அணுவானது

சகல புவனங்களிலும் பார்த்து அவற்றைத் தாங்கி நிற்கின்றதோ, அவனிடம் கொண்ட நம்பிக்கையும், பற்றுமே தற்காலம உலகமுழுதும் மக்களைத் தொடர்ந்து பிணித்துள்ள அச்சம், துன்பங்கட்கு உயர்ந்த மருந்தாகும். ஆதலின், அறிவின்பொருட்டு வாழ்க்கையைப் பற்றிய ஓர் அறிவுத் தத்துவத்தைத் தேடிக்கொண்டு ஒளிபெற முயலுங்கள். கடவுளிடம் நம்பிக்கைக்கொள்வது மட்டுமல்ல, அதனை வலுப்படுத்திக்கொள்ளுங்கள். உங்களிடம வெறுக்கத்தக்கன விருப்பின் அவைகளைக் களைந்து கடவுளைக் காண அவாவுங்கள். வளர்ச்சியுறுக, பலவகையிலும் பெருக்கமுறுக. தெய்வீக வாழ்க்கைக் கொள்கைகளை நடைமுறைக்குக் கொண்டுவாருங்கள். உஙகளிடம் உள்ள உண்மை யொளியையோ, உள்ளும் புறம்பும் உள்ள கடவுள் உலகத்தையோ, உங்களுடைய அற்ப ஆசைகளும, உணாச்சிகளும் மறையாமற் பார்த்துக்கொள்ளுங்கள். ஆண்டு தோறும் புத்திசாலியாகவும், பெருந்தன்மை யுடையவராகவும், தெய்வ உணர்வுள்ளவராகவும் வளர்நதுவாருங்கள

பரந்துபட்டதாகவும், தூய்மையும் தெய்வத்தன்மையும வாய்ந்து குற்றமற்றதாகவும் உமது வாழ்க்கை இருக்கட்டும். ஒவ்வொரு துறவியும், அறிஞனும் நிறுவித்துள்ளபடி நீங்கள் அனைவரும் கடவுளின் திருவுருவங்களே என்பதை விளக்கி நில்லுங்கள். ஒவ்வொரு தத்துவ சாஸ்திரி, சித்தன் என்ற இவாகளது வாழ்கை இவ்வுலக வாழ்க்கையில எவரும டம்பத்தைக் காட்டியதோடு ஒவ்வொருவர் அகத்திலிருந்து அவரவரை ஆட்டிநிற்கும் இறைவனையும், அவன் எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்கும் நிறைந்திருக்கும தன்மையையும், மறுமையுண்மையையும் காட்டி நிற்கின்றது இத்தகைய உயர்ந்த ஆன்மக்களின் அடிச்சுவட்டைப் பின

பற்றித் துறவிகளாகவோ, ஞானிகளாகவோ, தத்துவ சாஸ்திரிகளாகவோ, தெய்வீக வீரர்களாகவோ வளர்ந்து பூரண ஆற்றலும், அமைதியும், மகிழ்ச்சியும நிறைந்த வாழ்வை பெய்துவீராக.

சில உண்மையான தெய்வீகச செயல்கள், அருளோடு கூடிய மனம, சேவை செய்யும் கை, சில நிமிஷங்களேனும் ஜெபம செய்தல், இறைவனது தெய்வ சமபந்தமான அம்சங்களில் சிறிது பொழுதேனும் தியானம தூய்மையான உள்ளம், உறுதியான எண்ணம், பொறுமை, விடா முயற்சி என்ற இவைகளே நிரந்தரமான அமைதிக்கும், அழியாத இன்பத்திற்கும் இராசபாட்டைகள் என்ற நேர் வழிகளாகும்.

எல்லாமவல்ல சிதம்பரநாதன் உங்களுககு ஆரோக்கியத்தையும, நீண்ட ஆயுளையும், அமைதியையும், இன்பத்தையும், தெய்வீக அருளையும், தெய்வத் தன்மையையும் அருள்வாளுக. சர்வ சக்திமானுன அவ்விறைவன் உங்களுக்கு ஆன்ம வளர்ச்சிக்கான பலவற்றை அருள்புரிவானுக. உங்களை சுற்றியுள்ள இறைவனுடைய ஒளியும், அன்பும், இன்னும மேலும் மேலும் உங்களிடம் பொருந்தி விளங்குவதாகுக.

# யோக வேதாந்தக் காட்டுப் பல்கலைக் கழகம்

அழியாத இன்பத்தை இவ்வுலகில் நீங்கள் தேட முயற்சிக்கின்றீர். ஆனால் அம்முயற்சி உங்களை ஏமாற்றுவ தோடுகூட, எப்பயனையும அளிக்கவில்லை. மனம உங்களைத தூண்டுகின்றது. "அநதப பொருளை நான் அடைநதுவிட் டால், நான சுகமாக வாழ்வேன்" எனறு நீர நினைக கின்றீர். ஆனால் அப்பொருளை நீர் உண்மையாக அடையும போது நிலையான திருப்தியில்லாமற் போகிறது அடுத்து மறறொரு பொருள் உம்மை அவ்வாறே கைக்கு கிட்டுவது போற் காட்டி ஏமாற்றுகிறது. மனம் மற்றொரு பொருளைப் பெறக் குதித்து ஓடுகிறது. இம்மாதிரியான ஏமாற்ற விளை யாட்டைத் தொடர்ந்து செல்கிறது. உங்களுடைய ஆன் மாவின் உள்ளேயே தேடுங்கள். அப்பொழுதுதான் அழி யாத பேரின்பம எய்துவீர். தனிப்பட்ட நிலையில் மனம் எனறும் அழியாத அமைதியைப் பெறும்.

உஙகள் செயல்கள் எல்லாவற்றையும தெய்வத்தன்மை வாய்நததாகச் செய்துகொள்ளுங்கள். படித்தல், பேசுதல், ஏன், ரப்பர் பந்து விளையாடுதல் முதலிய எல்லாத் தொழில்களையும் கடவுளுக்கே அர்ப்பணம் செய்யுங்கள். உலகம் முழுதுமே கைலாசம் என்று உணருங்கள். உங்க ளது மக்கள் எல்லோரும் இறைவனது வெளிப்படையான உருவங்களே என்று கருதுங்கள். தெய்வம் என்ற பாவனை யிலேயே மக்கட் சமுதாயத்துக்கு உழைப்பீர்களாக. அப் பொழுது உங்களுடைய அன்றாடப் பணிகள் யோகப் பணிகளாக மாறும். வெகு விரைவில் அழியாப் பரம் பொருளாகிய நடராசப்பெருமான் உங்களுடைய இதயத் தில் நடித்து நிற்பதை நன்குணர்வீர்கள்.

கடவுள் உங்கள் அனைவரையும் ஆசீர்வதிப்பாராக.

ஓம் தத்ஸத்

---

# இமாலய யோகி ஸ்ரீ சிவானந்தர்

மோனமாங் கயிலாயத்தின
முகஞ்டில் ஊற்றெடுத்துவேத
கானத்தோ டிறங்கும் கங்கைக்
கரைதனில் தவத்தமர்ந்தே
தீனரைக் காப்பதற்காயத்
திவ்ய ஜீவியத்தைநாட்டி
ஞானமுதளிக்குஞ் சுத்த
சிவானந்தா திருத்தாள் போற்றி!

இருபதாம நூற்றாண்டில் உலகப பிரசித்தம் பெற்ற மகான்களுள் சுவாமி ஸ்ரீ சிவானநதரும ஒருவா. இன்றைய பாரமாாத்திக விண்ணில் ஜொலித்துக்கொண்டிருக்கும் நட்சத்திரஙகளுள் அவா மிகக பிரகாசத்துடன் விளஙகு கிறார். அவரின் பெருமையும புகழும தனியுடைமை ஆட்சி நடக்கும் நியுயார்க்கில் பேசப்படுவதுபோலவே பொது வுடைமைக் கொடி பறக்கும் மாஸ்கோவிலும் பேசப்படு கிறது. அதுமாத்திரமின்றி இவ்விரு கொள்கைகளுக் கிடையே சிக்கித் தப்ப வழியின்றி இடர்ப்படும ஜெர்மனி முதலாய பல நாடுகளிலுள்ள மக்களுக்கு அவரது அரிய நூல்களிலடங்கிய அத்யாத்ம உபதேசங்கள் மனச்சாநதி அளித்துவருகின்றன. இநதியாவைப் பொறுத்தமட்டில் அவர் போரால நூற்றுககணக்கான நிலையஙகள் கன்னிமுனை தொடக்கம் கௌரிமுகடுவரைக்கும பரவியுளளன. இவை கள் தோன்றிய பின்னரும் நாட்டில் ஆத்மீக உணர்ச்சி போதிய அளவு செழிக்கவில்லை யெனக் கருதிப்போலும் இப்பெரிய ஓர் நீண்ட அகில இந்திய யாத்திரையை அடுத்த வாரம் ஆரம்பிக்கின்றார்! அத்தொடர்பில் அவர் அக்டோ பர் மாசம் 13-ந் தேதியளவில் கொழும்பில் காட்சி தரப் போவதை வாசகர்கள் அறிவார்கள்.

ஜயந்தி

1887-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் எட்டாந்தேதி பிறந்த இப்பரம புருஷனுக்கு அடுத்த வெள்ளிக்கிழமை அறுபத்துநான்காவது வயது ஆரம்பமாகும். அன்று அவரது ஜயந்தி வழக்கம்போல் கொழும்பிலும் கொண்டாடப்படும். இதனை ஒட்டி அவரது வரலாற்றுச் சுருக்கத்தை இங்கு தருகின்றோம். பல தமிழர்களுக்கு இவர் சுத்தத் தமிழன் என்ற உண்மையே தெரியாது. அவர் இமயமலை அடிச்சாரலையே தமது உறைவிடமாகக் கொண்ட காரணத்தால், எல்லோரும் அவரை வடநாட்டைச் சேர்ந்தவராகவே கருதிவிட்டனர். அவர் பிறந்தது தென்னாட்டில் தாமிரவருணி ஆற்றோரத்திலுள்ள சேரமாதேவியை அடுத்துள்ள பத்தமடை யென்னும் கிராமத்திலாகும். அவர் வளர்ந்தது புலவர்புறகமனச் சிறப்புற்ற எட்டையபுரத்தில். அங்கே அவரின் தந்தையார் வெங்குவையர் தாசில்தார் உத்தியோகம் பார்த்தார். சிவானந்தரின் பூர்வாச்சிரம நாமதேயரும் குப்புச்சாமி ஐயர்

வளரும் பயிரை முளையிலேயே தெரியுமென்பதற்கிணங்க இளைஞன் குப்புச்சாமி வருங்கால சிவானந்தரை விளக்கி நின்றதாக அறிகின்றோம். படிப்பிலும் முதல்பிள்ளை, பாட்டிலும் முதல்பிள்ளை. பார்ப்போர் மனதை வசீகரிக்கும் உடலமைப்பு; பரோபகாரசக்தி, பக்தி, விசுவாசம் எல்லாம் ஒருங்கே அமைந்திருந்தன. பதினாறுவது வயதில மெட்ரிக்குலேஷனில் சித்திபெற்று, மருத்துவ கல்லூரி சேர்ந்து அங்கும் முதல்மாணவனாக விளங்கி எம். பி. பி. எஸ். பட்டம் பெற்றனர். இந்தச சித்திகளெல்லாவற்றிற்கு மிடையே அவர் தந்தையாரிடம் பெற்ற சிவநாம

சங்கீர்த்தனப் பழக்கத்தை மறந்தது கிடையாது. அடுத்த பத்தாண்டுகளாக அவரை மலாய்நாட்டில் டாக்டர் குப்பு சாமியாகக் காண்கின்றோம். இயல்பாகவே அவரிடம் அமைந்துள்ள தருமசிந்தை காரணமாக, பணத்திற்காக வன்றிபரோபகாரத்தின்பொருட்டே வைத்தியத் துறையில் கடுமையாக உழைத்து புண்ணியவான் பட்டம்பெற்றனர். ஓய்வுநாட்களில சங்கீதம் பயின்று பக்திப் பாடல்கள் பாடு வார்; சமய சாஸ்திரங்களைத் துருவி ஆராய்வார்; நவீன வைத்திய விற்பன்னர் கண்டு பிடித்திராத உடல் தத்துவங் களை அறிந்துகொள்வதற்கு யோகசாதனைகளும் பயின்றார். இவ்விதம் ஆத்மீக வாழ்வில் ஈடுபடவே அவர் உள்ளம் துறவை நாடியது. மக்கள் உடற்பிணி நீக்கும் வைத்திய சேவையிலும் பார்க்க அவர்களின் பிறவிப் பிணிக்கே மருந் தைத் தேடிக்கொடுத்தல விசேஷித்த பணியென்றும் பணியென்றும் உணர்ச்சி உதித்தது. திடீரென ஓர் நாள டாக்டர் உத்தியோகத்தையும, அதனால் கிடைத்த பணம், பதவி, புகழ், சகலத்தையும் துறந்து சிங்கப்பூரில் கப்ப லேறிச் சென்னைசேர்ந்தார். சென்னைக்கு வந்ததும தமது சொந்த ஊரையோ, உற்றார் உறவினரையோ கருதினு ரில்லை. தமது உண்மையான பிதாவும உலகின் தந்தையு மான விஸ்வநாதரைக் காண்பதற்காக காசியென்னும் புண்ணிய க்ஷேத்திரத்தை நாடி ஓடினார். கங்கையில் மூழ்கி அப்பெருமான் தரிசனம் பெற்றதும், பாரதநாட்டின் மகி மைக்குக் காரணமான புண்ணிய ஸ்தலமெல்லாம் பார்க்க வேண்டுமென்ற அவாவினால் உந்தப்பட்டு கன்னியாகுமரி யிருந்து கைலாசமலைவரைக்கும் யாத்திரை செய்தார். தாம கண்ட இடங்களுள், தமது தவத்திற்கும் ஞானசேவைக்குக் தகுந்த இடம் ரிஷிகேசமா என நிச்சயித்து 1930–ம் ஆண

டில் அங்கேயே ஓர் சிறு குடிலில் தங்கிவிட்டார். ஆனந்தக குடீர என்ற பேருடன் ஆரம்பித்து இச்சிறு குடிலைச் சுற்றியே பரந்து விரிந்த சிவானந்தாச்சிரமம் இன்று விளங்குகின்றது. சித்தாந்திகள் விளக்கும் சரியை கிரியை, யோகம, ஞானம ஆகிய நான்கு படிகளும அங்கே பயிலப் படுகின்றன. கீதை உபதேசிக்கும் காமம், பக்தி, யோகம, ஞானம, என்னும் நான்கு பாதைகளிற் செலவோரும அங்கு சந்தித்துச் சாதனைசெய்கின்றனர். வாசகசாலை, தர்ம வைத்தியசாலை, கோசாலை, நந்தவனம, பஜனை மண்டபம், யாகசாலை, ஆரம்பப் பள்ளிக்கூடம், சமஸ்கிருத வித்தியாசாலை எல்லாம் உள்ளன.

நம் நாட்டினுள்ளே வகுப்பு த்வேஷம், ஜாதி த்வேஷம மாகாண த்வேஷம் என்கறெல்லாம் எங்கு பார்த்தாலும் த்வேஷ மயமாக இருக்கின்றது

இவற்றையெல்லாம் குறைக்கவும, மக்களிடை பரஸ்பர நேசம் வளரச் செய்யவும, தெய்வ பக்தி செழிக்கச் செய்யவும், ஆத்மீக அறிவு உதிக்கச் செய்யவும, சர்வமத ஐக்யம் ஏற்படச் செய்யவும், உண்மைய யோகக் கலைக்குப் புத்துயிரூட்டவும வேண்டி, ஸ்ரீலஸ்ரீ ஸ்ரீ சுவாமி சிவானந்த சரஸ்வதி, ரிஷிகேசத்திலிருந்து ராமேஸ்வரத்திற்கு யாத்திரை புறப்படுவதாக இருக்கிறார்.

அவருடன் பல யோகிகளும, பக்தர்களும் ஒரு கோஷ்டியாக வருவதாக இருக்கிறது. ஹரித்வாரம், லக்ஷ்மணபுரி, அயோத்தி, காசி, கயா, பூரி, சென்னை, சிதம்பரம் மாயவரம், கும்பகோணம், திருச்சி, ராமேஸ்வரம், திருநெல்வேலி, பம்பாய், டில்லி ஆகிய இடங்கள வழியாக இந்தக் கோஷ்டியார் யாத்திரையாகச் செல்லப் போகிறார்கள். செப்டம்பர் 9-ந் தேதி இந்த யாத்திரை ஆரம்பமாகப் போகிறதாம்

—கொழும்பு—வீரகேசரியில் வெளியானது.—

—o—

# தெய்வ நெறிக் கழகம், ஆனந்த குடீரம்

தோற்றம்:—சுவாமி சிவானந்தர் 1924-ல் துறவியானர். ஆனல் உலகைத் துறக்கவில்லை. அந்தத் தன்னலமற்ற தியாக மூர்த்தியின் உலக க்ஷேமத்தைத் தவிர வேறு எந்த நினைவுக்குமே இடம் கிடையாது. "யான் பெற்ற இன்பம் இவ் வையமுற்றும் பெறுக" என்ற நினைவுடன் அன்பர்களின் வேண்டு கோளுக்கும், தீன அந்தராத்மாவின் அழைப்புக்கும் இணங்கி 1936-ல் திவ்ய ஜீவிய சங்கம் அல்லது தெய்வ நெறிக் கழகத்தைஸதாபித்தார்

நோக்கம்:—பிறவியின் லட்சியம ஆதம ஞான மெய்துதில் அதறகு அவசியமான ஆத்மீக ஞானத்தைப் பரப்புவதே இக் கழகத்தின் நோக்கம

அலுவல்கள்:—(1) சுவாமிஜி அவர்களின் எளிய, இனிய நடையில் எழுதப்பட்ட வேதாநத, ஆதமீக நூல்களை, அச்சிட்டு மிகக குறைநத விலையில "சிவானநதர் பதிப்பகம" வெளியிடுகிறது.

(2) நடை முறை யோகம், வேதாந்தம, ஆரோக்யக் குறிப்புகள், கீழ்-மேல் நாட்டு யோக முறைகள், பழம பெரும் நூல்களின் விளக்கம-இவைகளைத தாங்கி வெளிவரும் "திவ்ய ஜீவனம்" (Divine Life) "ஞான ஜோதி" (Wisdom Light) யோக வேதாந்த அரண்ய ஸர்வ கலாசாலை வாரப்பதிப்பு The Yoga Vedanta Forest University Weekly என்ற மூன்று பத்திரிகைகள் வெளியிடுகிறது. இக் கழகம்.

(3) மற்றும இது போன்ற உண்மைகளை சிறு சிறு புஸ்தகங்களாகவும், துண்டுப் பிரசுரங்களாகவும் அச்சிட்டு இலவசமாக விநியோகிக்கிறது.

(4) ஆசிரமத்தைச் சுற்றிலுமுள்ள ஏழை மக்களுக்கு உதவும் பொருட்டு "சிவானந்தர் இலவச வைத்திய சாலை" ஒன்று நடத்துகிறது.

(5) அதேபோல் சுற்றிலுமுள்ள ஏழைச் சிறுவர் சிறுமியர்கட்கு கல்வி புகட்டும் பொருட்டு "சிவானந்தா ஆரம்பப் பாடசாலை" ஒன்று நடந்துவருகிறது.

(6) ஆனந்தகுடீரில் விசுவநாதருக்கு ஒரு ஆலயம் அமைத்து, அங்கு தினமும் பூஜை நடத்துகிறது இக்கழகம்.

(7) யோக வேதாந்தத்தில் ஈடுபட்டு, ஆத்மீகத்துறையில் முன்னேற விரும்பும் சாதகர்களுக்கு பண்டை நாளைய குருகுலத் துறையில் "யோகவேதாந்த ஆரண்ய ஸாவ கலாசாலை" ஒன்று நிறுவியிருக்கிறது.

(8) ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் தெய்வநெறி சம்மேளனங்கள் கூட்டுகிறது.

(9) உலகெங்கும் கிளைச் சங்கங்கள் திறந்து இத்தகைய தொண்டுகளை அங்கெல்லாம் பரப்புதல்.

அங்கத்தினர் :—திவ்ய ஜீவனத்தில் பற்றுள்ள யாவரும் இச் சங்கத்தின் அங்கத்தினராகலாம்.

| | | |
|---|---|---|
| ஆண் சந்தா : | | ரூ. 2 0 0 |
| பிரவேசக்கட்டணம் | | ரூ. 5 0 0 |
| "திவ்ய ஜீவியம்" | ஆண்டு சந்தா | ரூ. 3 0 0 |
| "ஞான ஜோதி" | ,, ,, | ரூ. 2 0 0 |
| "அ. ச. வாரப்பதிப்பு" | ,, ,, | ரூ. 6 8 0 |

—o—

